கழக வெளியீடு : கூஉள

உ

திருச்சிற்றம்பலம்

# தேவார ஒளிநெறிக் கட்டுரை

[சம்பந்தர்]

தணிகைமணி

ராவ்பகதூர், வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம்.ஏ.,

எழுதியது.

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி :: சென்னை-1.

First Edition (Author) Dec., 1944
Reprint : (Kazhagam,) Nov., 1958.

# THEVAARA OLINERIK KATTURAI
## [SAMBANDAR]



Published by

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

Head Office :
98, EAST CAR STREET, TIRUNELVELI.

Paari Achakam, 127, Broadway, Madras-1. K-12

ஓம்

# பதிப்புரை

செந்தமிழும் சிவனெறியும் உடலுயிர் போன்று பிரிவின்றித் தொன்றுதொட்டு ஒன்றுபட்டு வரும் அழிவிலா மெய்ப்பொருள்களாகும். சிவன் என்னும் சிறப்புப் பெயரானன்றித் தெய்வம் என்னும் பொதுப் பெயராற் கூறினும் ஒன்றே. செம்பொருள் எனினும் சிவம் எனினும் ஒன்றே. செம்பொருளும் சிவமும் செம்மை என்னும் பண்படியாகத் தோன்றியனவே. செம்மை நிறத்தானும் பண்பானும் உறப்பெறும். சிவபெருமான் ஒளி வண்ணன், அவன் திருவடியினை அடைதற்காம் நெறி "ஒளிநெறி" இவ்வுண்மை ஆளுடைய பிள்ளையாரருளிய திருவெழுகூற்றிருக்கையுள்,

> "ஓரா னீழ லொண்கழ லிரண்டும்
> முப்பொழு தேத்திய நால்வர்க்கு **ஒளிநெறி**
> காட்டினை நாட்டமூன் றுடைக் கோட்டினை."
>
> —க. கஉ அ-வரி-கூ.

என்று வருவனவற்றுள் காண்க.

ஏறத்தாழ ஆயிரத்து முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் "தேவாரத் தெய்வச் செந்தமிழ்த் திருமறை" தோன்றியுள்ளன. அவை ஏழு திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஏழாந்திருமுறை மற்றவற்றிற்கு நூற்றைம்பது ஆண்டுகள் பிற்பட்டது. முதல் ஆறு திருமுறைகளும் ஒரு காலத்தன. இவற்றுள் முதல் மூன்று திருமுறைகள் ஆளுடைய பிள்ளையாராலும் ஏனைய மூன்றும் ஆளுடைய அரசராலும் அருளிச் செய்யப்பட்டன. இவ்வேழும் "**தேவாரம்**" எனவும் "செந்தமிழ் மறை" எனவும் பேசப்பெறும். இவற்றைச் சமயநோக்கமன்றித் தமிழ் நோக்கமொடு பார்க்கின் தமிழ்நாட்டு உண்மை வரலாற்றுப் பேரிலக்கியமாகத் திகழ்வன என்பது நடுநிலையாளர்க்கு எண்மையிற் புலனாகும். "சிலப்பதிகாரம்" செந்தமிழ்

நாட்டுச் சீரிய இலக்கிய மேனும் தேவாரம் போன்று அகநாட்டு வளங்கள் மிகுதியாகக் காண்பதரிது. தேவாரத்தின்கண் நூற்றுக்கணக்கான திருவூர்களின் பெயர்கள், ஆங்காங்குள்ள திருக்கோயில்கள், வளங்கள், யாறுகள், குளங்கள், ஆள்வோர் ஆளப்படுவோர் வாழ்க்கை வரலாறு முதலிய பலவும் விளக்க முறக் காணலாம். எனவே, தேவாரம் தென்றமிழ் நாட்டுத் தெய்வ இலக்கியமெனல் தகும்.

ஆகவே கற்பாரும் கற்பிப்பாரும் இம் மெய்ந் நோக்குடன் கற்றல் வேண்டும். தேவாரத் தெய்வச் செழும்பாடல்கள் ஏறத் தாழ எண்ணாயிரம் திருப்பாடல்களாகும். இவற்றை ஓதினும் செவ்விதாக விளங்கிக் கொள்ளவும் விளக்கவும் தனிக்குறிப் புக்கள் அமைந்த பெருநூல் வேண்டும். அவ்வரிய பெரிய திருத் தொண்டினைத் திருவருட் பெரியார் திருவாளர், தணிகைமணி ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராயபிள்ளை, எம். ஏ., அவர்கள் திருவருளால் நிறைவேற்றித் தந்துள்ளார்கள். அது, "தேவார ஒளிநெறி" என்னும் திருப்பெயருடன் மூன்று பகுதிகளாகக் கழகவழி அச்சாகி வந்துள்ளன. அவற்றின்கண் நானூற் றறுபத்தாறு பெருந்தலைப்புக்களும் அளவிறந்த உட்டலைப்புக் களும் காணப்படும். அவற்றின் விரிவனைத்தும் அவ்வந் நூற் பதிப்புரைக்கண் விளக்கமுறக் காணலாம். அம்மூன்று பகுதி களும் ஆளுடைய பிள்ளையாரருளிய மூன்று திருமுறைகளுக்கு மட்டுமே ஆகும். இவை அகர வரிசையில் தொகுக்கப்பட் டுள்ளன. இவை தேவார அகராதியெனவும், தொல்காப்பியம் போன்று தேவார இலக்கண மெனவுஞ் சொல்லும் சிறப்பின.

இவற்றிற்கு இலக்கியமாகத் "தேவார ஒளிநெறிக் கட்டுரை" என்னும் திருப்பெயருடன் ஒரு மெய்ப்பொருள் நூல் நம் திருவருட் பெரியாரால் முன்னமே அச்சாகி வெளி வந்துள்ளது. அந்நூலின் இரண்டாம் பதிப்பினை இப்பொ ழுது கழகம் உரிமை பெற்று வெளியிடுகின்றது. இதன்கண்ணும் ஏறத்தாழ ஒருநூற்றெண்பத்தொன்றுக்கு மேற்பட்ட பெருந் தலைப்புக்களும், அளவிறந்த உட்டலைப்புக்களும் காணப்படும்.

இதுவும் அகர வரிசையிலேயே தொகுக்கப்பட்டுள்ளது. இந் நூல் தமிழக வரலாற்று நூல் போல் கற்கத் தக்கது.

இதன்கண் "அகப்பொருள், இலக்கணப் பகுதி, ஈதற் சிறப்பு, சமணர், புத்தர், சாக்கியர், தேரர் முதலிய சமயத்தார் அக்காலத்துக் கொண்டிருந்த கொள்கையும் கையாண்ட பழக்க வழக்கங்களும், எண்பத்திரண்டாவது பெருந்தலைப்பின்கண் இருநூற்றிருபது திருவூர்கள் (தலங்கள்) அகர வரிசையில் அமைந்துள்ளமையும், அவ்வத் திருப்பதிகங்களின் பொருட் டொகுப்பும், அவ்வத் திருவூர்களில் வழிபட்டுப் பேறு பெற்றோர் வரலாறுகளும், சம்பந்தப் பெருமானார் திருவூர் களுக்குச் சென்றருளிய வழிமுறைகள், தொண்டு வகை, திருப் பெயர்ச் சிறப்பு, நாயன்மார், ஐம்பெரும் பூதங்களின் இயல்பு, ஐந்திணை வளம், பூசைச்சிறப்பு, சோலை, மரஞ் செடி கொடிகள், கடல், மலை, யாறு இவற்றின் வளங்கள், அணியியல்புகள், உவம உருபுகள், சிற்றுயிர்களின் நற்றிறங்கள், வீரட்டானம் என்னும் தலைப்பில் புறப்பொருள்கள், மக்களின் பழக்க வழக்கங்கள், நாகரிகங்கள், கையாண்ட ஆடை அணி வகைகள், மாட மாளிகைகள், கூடகோபுரங்கள் முதலிய பலவும் அகச் சான்று புறச்சான்றுகளுடன் நன்கு விளக்கப்பட்டுள்ளன. அம்மட்டு மன்றி பல பதிகங்களின் பிழிவாக முதற்கண் விதந்தெடுத் தமைத்த தொகுப்புக்கள் மிகவும் சிறந்தன.

திருக்கோவில் வழிபாடுகள், திருவிழாக்கள் இயல் இசை நாடகங்கள், இசைக்கருவிகள், இயங்கள் மாதர் மைந்தர் வாழ்க்கைச் சிறப்புக்கள் முதலிய பலவும் தொகுக்கப்பட் டுள்ளன. அரிதற்கரிய பல நுண் பொருள்கள் விளக்கப்பட் டுள்ளன.

இவ்வரும் பெரும் திருத்தொண்டினைச் செய்ய மிக்க பொறு மையும், பல்லாண்டுகளின் பயனார் உழைப்பும், தவநிலையும், பன்மொழிப் புலமையும் ஒருங்கமைந்த நம் சிவத்திருவினர் அவர்களே அனைத்துவகையினும் அமைந்த நல்லாராவர். இது போல் அப்பரடிகளின் "தேவார ஒளிநெறியும்" "தேவார ஒளி

நெறிக் கட்டுரையும்" அச்சாகிக் கொண்டிருக்கின்றன. விரைவில் வெளிவரும்.

இதுபோல் நம்பியாரூரர் திருமுறையும் விரைவில் வெளிவரத் திருவருள் துணைபுரியுமாக. இவ்வரும் பெரும் திருத்தொண்டினையியற்றி யளித்த தவப்பெரியார்க்குக் கழகத்தார் நன்றி என்றும் உரித்தாகுக. அவர்கள் எல்லா நலங்களுடன் நீடுவாழ இறைவனைப் பணிகின்றோம்.

இந்நூலினைப் பொதுவாகச் செந்தமிழன்பர்களும், சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் வாங்கியும் வாங்குவித்தும், கற்றும் கற்பித்தும் பெரும்பயன் எய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முகவுரை

திருத்தணிகேசன் துணே.

"........தமிழ்விர கனதுரை ஒருபதும்
மனமகிழ் வொடுபயில் பவரெழில் மலர்மகள்
கலேமகள் சயமகள்
இனமலி புகழ்மகள் இசைதர இருநில னிடையினி
தமர்வரே.''

—தேவாரம் (சம்பந்தர் 20)

திருத்தணிகேசனது திருவருளேயே துணேயாகக் கொண்டு "தேவார ஒளி நெறி'' என்னும் பெயரொடு தேவாரத்துக்குப் பெரியதொரு ஆராய்ச்சி எழுத விரும்பினேன். தேவாரத்தில் உள்ள பல பொருள் களேயும் அவ்வப் பொருளின் வழியே அகராதி முறை யாகத் தொகுத்து விளக்கிக் காட்டும் ஆராய்ச்சியே எனது சிற்றறிவுக்குத் தக்கதொரு தொண்டு எனக் கருதினேன். அத்தகைய கருத்துடன் முதலாவதாகத் திருஞான சம்பந்தப் பெருமானது தேவாரத்தை ஆய்ந்து நானூற்று அறுபத்து ஆறு தலேப்புக்களின் கீழ் விரிந்ததொரு ஆராய்ச்சி அகராதி எழுதி முடித் தேன். அந்நூல் மிக விரிந்த அளவினதான காரணத் தால் அதன் வெளியீட்டுக்கு வேண்டிய பொருள் வசதி யில்லாது போயிற்று; அதனுல் அந்நூலேப் பகுதி பகுதியாக வெளியிடலாம் எனத் தோன்றி ஒரு சிறு பகுதியை இப்பொழுது அச்சிட்டு வருகி

றேன். அப்பகுதி வெளிவர இன்னும் சில மாதங்களாகும். அதற்குள் அவ்விரிந்த ஆராய்ச்சி முழுமைக்கும் சாராம்சமான விஷயங்களை வசன ரூபமாக ஒரு தனி நூலாக வெளியிடின், ஸ்ரீசம்பந்தப் பெருமானது தேவாரத்தில் உள்ள விஷயங்கள் யாவும் எளிதில் ஓரிடத்திற் கண்டு களிக்கப் பயன்படுமென்னும் ஆசையுடன் இத் "தேவார ஒளிநெறிக் கட்டுரையை" எழுதி அதற்கு மூலமாகிய, "தேவார ஒளிநெறி"க்கு முன்னதாகவே வெளியிடுகின்றேன். இக் கட்டுரையில் உள்ள விஷயங்கள் யாவும் ஸ்ரீ சம்பந்தப் பெருமானது தேவாரத்தில் உள்ளவையே. அவ்விஷயங்களுக்கு மூலாதாரமான தேவாரப் பகுதிகளைத் தேவார ஒளி நெறியில் மிக எளிதிற் காணலாகும்.

ஒளிநெறி ஆராய்ச்சி "பண்முறைத் தேவாரத்"தையே பின்பற்றித் 'தோடுடைய' முதல் 'கல்லூர்ப் பெருமணம்' வரை ஒன்று முதல் முந்நூற்று எண்பத்து மூன்றுவரைப் பதிகங்களுக்கும் வரிசையாக எண்ணிட்டுத் திருவிடைவாய்ப் பதிகத்துக்கு எண் 384 அமைத்துக் கொண்டு எழுதப்பட்டது.

இக் கட்டுரையில் முதலாவது 'கணபதி'யைப் பற்றிக் கூறிப் பிற விஷயங்களை அகராதி முறையில் 'அகப்பொருள்' முதலாக 'ஜெபம்' ஈருக 181 தலைப்புக்களில் விளங்க வைத்துள்ளேன். ஒவ்வொரு விஷயத் தலைப்பின் பக்கத்தில் [ ] இக் குறிக்குள் அடங்கிய எண் தேவார ஒளிநெறியில் ஷெ விஷயத் தலைப்பைக் குறிக்கும். உதாரணமாக, 2-அகப்

பொருள் [3] என்னும் இக்கட்டுரைத் தலைப்பில் 2-என்பது இக்கட்டுரையின் தலைப்பு எண்ணேயும், [3] என்பது தேவார ஒளி நெறியில் அகப்பொருளைப் பற்றியுள்ள தலைப்பின் எண்ணேயும் குறிக்கும். தேவார ஒளிநெறியே பிரதம நூலாகவும் இக்கட்டுரை அதன் சாரமாய் அந்நூலுக்கு ஓர் அநுபந்தமாய் அமைய வேண்டும் என்பது எனது முதல் எண்ணம். 'ஒன்றை நினைக்கில் அது ஒழிந்திட்டொன்ருகும்'—என்னும் வாக்கின்படி கட்டுரை முதலில் வெளிவரவும் ஒளிநெறி பின்னர் வெளிவரவும் சிவபிரானது திருவுள்ளமாயிற்று. ஒளிநெறியே முதனூலாதலின் அதன் முகவுரையில் இந்த ஆராய்ச்சியைப் பற்றிக் கூற வேண்டுவன எல்லாம் விரிவாகக் கூறப்படும். பிறிதொரு துணையின்றி எழுதப்பட்டதாதலின் இக் கட்டுரையிற் பலவகைப் பிழைகள் இருக்கலாம். பத்தி மிக்க அடியார் அவைதமைப் பாராட்டாது பொருளேயே பாராட்டி இந் நன் முயற்சியைக் கண்டு மகிழுமாறு வேண்டுகின்றேன்.

இக் கஷ்டகாலத்தில் இந்நூலை அச்சிட அன்புடன் ஏற்றுக்கொண்டு கூடிய விரைவில் அச்சிட்டு உதவிய "லிபர்ட்டி" அச்சுக்கூடத் தலைவரவர்களுக்கு என் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகின்றேன்.

அன்பொழு கடியா ரவரொடுங் கூடேன்
அண்ணல்நின் திருப்புகழ் பாடேன்
பொன்பொருள் கவலை பற்றிய அதனல்
போற்றிலேன் உன்னைநான் எனினும்

என்பொழு தெல்லாம் ஞானசம்
பந்தர் இன்னிசைப் பாடலை ஆய்ந்தே
நன்பொழு தாக நயந்தருள் செய்தாய்
நல்லனீ ! தணிகை நாயகனே !

—தணிகை நாயகன் மாலை 87.

சென்னை,
292, லிங்க செட்டித் தெரு.
16—12—1944

வ. சு. செங்கல்வராய பிள்ளை.

# பொருளடக்கம்

பொருளுக்கு முன்பு தலைப்பின் எண்—பின்பு பக்க எண்

2629

உ
திருச்சிற்றம்பலம்

# தேவார ஒளிநெறிக் கட்டுரை

## 1. கணபதி [1]

உமையம்மையார் பெண் யானையின் உருவத்தைக் கொள்ளத் தாம் ஆண் யானையின உருவத்தை எடுத்துத் துக்கமும் நோயும் இவ்வுலகைப் பீடியாதிருக்கும் பொருட்டுச் சிவபிரான் கணபதியைத் தோற்றுவித்தருளினர். யானையின் புகர்முகமும், தந்தமும், மதமும் உடையவர் கணபதி. ஒற்றைக்கொம்பர், முக்கண்ணர், தடக் கையர், தனது அடியை வழிபடும் அடியாருடைய இடர்களைக் களைபவர்.

## 2. அகப்பொருள் [3]

சுவாமிகள் அருளிய பதிகங்களுள் பதின்மூன்று பதிகங்கள் தெளிவாக அகப்பொருள் இலக்கணத்தன. இவை தம்முள் இரண்டு பதிகங்கள் பறவைவிடு தூது. அன்றில், அன்னம், கபோதகம் (புறு), கிளி, குயில், குருகு, தாரா, நாரை, பறவைகள் (பொதுவாக), பூவை, வண்டு, வாரணம் இவை தூதுப் பறவைகளாக விளிக்கப்பட்டுள. தலைவனிடத்தில் எனது நிலைமையை, எனது அல்லலை எடுத்து விளம்பு என்பதும், தலைவன் திருநாமத்தை எனக்கு ஒருமுறை கூறுக என்பதும், தலைவனை என்னிடத்தே வரும்படி கூவு என்பதும் தூது செல்லும் பறவையிடத்திற் சொல்லப்படும் விஷயங்களாம். தலைவன் கவர்ந்ததாகச் சொல்லப்படுவன:—கலை, துயில், நலம், வளை, உள்ளம், எழில், நாண், சாயல், கோல நீர்மை. தலைவனை உள்கி உருகுவதாற் சோர்வன:—குழல், மேகலை, வளை, சோர்வுறும் பெண்ணின் கூற்றுக்களாவன :—

(1) எனக்கு மாலையைக் கொடுத்து 'அஞ்சல்' என மொழிவாரோ?

(2) பெருமானுடைய திருவருள் யான் பெறலாகுமோ?

(3) என்னைப் பிரிந்து எனக்கு நீங்காத நோயைத் தந்துவிட்டாரே!

(4) அவர் திருநாமத்தையே பிதற்றி, என் பெருநலத்தை இழக்கவா!

## 3. அங்கங்களின் பயன் [4]

கண் அன்புடன் கடவுளைப் பார்க்க, கை அவரை மலர் தூவித் தொழ, செவி அவர் புகழைக் கேட்க, தலை அவருக்குப் பூச் சுமக்க, அவரை வணங்க, நா அவரைப் பாட, அவர் நாமத்தை ஓத, நெஞ்சம் ஒன்றுபட்டு அவர் திருவடியையே எப்போதும் நினைந்துருக, வாய் அவர் சீரையே சொல்ல—இங்ஙனம் அங்கங்கள் வழிப்பட வேண்டும்; அங்ஙனம் வழிப்படா அங்கங்கள் பயனற்றனவாம்:

## 4. அடியார் [5, 6, 314]

ஆண் பெண் இருபாலார்களுள்ளும் அடியாருண்டு.

2. அடியார் பத்திநிலை, மெய்ப்பாடு [314]:—கண் - முத்தரும்பும் (நீர் சொரியும்); கை - தலைக்கேறும்; தலை - சாய்ந்து வணங்கும்; தோள்கள், மேனி - நீறு விளங்கும்; நா - பாடும் நகையே பூணும்; பேச்சு - இறைவன் பெருமையைப்பற்றியே பேச்சு: குணம் - குற்றமிலாக் குணம். உள்ளம் - சீலம் மிக்கிருக்கும், பற்றற்று நிற்கும்; இறைவனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கும்; மனம் - நிரம்பி யிருக்கும்; எனை ஆண்டருள் என இறைவன் திருவடி நீழலிலேயே தங்கி யிருக்கும்; அத்திருவடியையே விரும்பிப் பரவி வழிபடும். திருவருட் சிந்தனை யன்றி வேறொன்றையும் அறியாது, இறைவனையே அபயமெனக் கொண்டு அவனையே உள்கும், உணரும், பகரும், பணியும், பரவும், பற்றும், பாடும்.

3. அடியார் தன்மை [5] :—இறைவனைப் பத்தியுடன் போற்றுதலே அடியாருடைய இலக்கணம். அடியார் மறத் துறைகளை நீக்கி, இறைவனை உள்ளத்திற் சிக்கெனப் பிடித்து, இரவும் பகலும் நல்ல வாய்மொழிகளால் இறைவனை ஏத்திப் பொய்யிலா அடிமை புரிவார். இறைவன் நம்மை ஆள்வான் என்னும் உறுதியுடன் பன்னாள் பணிவார்.

4. அடியார் கூட்டம்:—வட்டம் வட்டமாகச் சூழ்ந்து நின்று இறைவன் திருவடியைப் பரவும். தலங்கள் தோறும் சென்று சென்று பரவித் திரியும் அடியாரும் உண்டு; பித்தர் போன்ற பத்தர்களும் உண்டு.

5. அடியார் அடையும் பயன் :—சதா பத்தி செய்வதால் அடியார் தீப மனத்தினராய் (மன விளக்கம் உடையவராய்)த் தீயன அறியாராய்த் திகழ்வர். இத்தகைய பத்தர்களுடைய மார்பைவிட்டு இலக்குமிதேவி பிரியாள்.

6. அடியார் செய்ய வேண்டுவது [5 (2)] :—ஐம்புலன்களையும் முனிந்து அவைகளை அடக்கவேண்டும்.

7. அடியார்க்கு அடியார் [5 (3)] :—அடியார்க்கு அடியாரைத் தொழுது பணிபவருக்குத் தூயநெறி எளிதிற் கைகூடும்; அவரை நோய், தீவினை அடையா; அவரைக் கண்டாற் கடிய கூற்றுவனும் அகலுவான்; அவர் இறைவன் ஒருவனே நமக்குப் பெருந்துணை எனக் கொண்டு வாழ்பவர்; அடியர் கூட்டமாய் வரினும் தனித்து வரினும் அவரைப் பணிதலே குணமெனக் கொண்டார் குலச்சிறை நாயனார்.

8. அடியார்க்கு அமுதளித்தல் [5, (4, 8)] :—அடியார் பசித்திருக்கலாகாது. திருஞான சம்பந்த சுவாமிகள் காலத்தில் அடியார்க்கு அன்னம் அளித்தல் ஒரு திருவிழாப் போன்ற உயர் தருமமாகக் கொள்ளப்பட்டது போலும்.

9. அடியார்க்குத் துணை, கதி [5 (5)] :—இறைவன் திருவடி அல்லது வேறு சரண் அடியாருக்குக் கிடையாது.

அடியார்க்கு இறைவனே பற்று, புகல், செல்வம், நிழல். இறைவனே அடியாருக்கு உற்ற தலைவர், நம்பர்.

10. அடியார் இன்னர், அவர் நிலை, குணம் இத் தன்மைய என்பது [5 (6) - (7)] :—அடியார்க்கும் சிவபெருமானைப் போலச் சிவசாரூபம் விளங்கும். அடியார் மனந் தளரார், சிரிப்பார், களிப்பார், குனிப்பார். இறைவன் பேச்சையே பேசி இன்புறுவார். இறைவன் பெருமையைப் பற்றிய பேச்சுக்களுக்கன்றி வேறு பேச்சுக்களுக்குத் தமது செவி கொடார். இத்தகைய அடியார் ஞானிகளாயும், தம்மை அடைந்தார்க்கு அருள் தரவல்ல ஆற்றலுடையவர்களாயும் விளங்குவார்.

குலச்சிறை நாயனர் ஐந்தெழுத்து ஓதும் நல்லோர்களையும், கோவணம், பூதி சாதனம் கொண்ட பெரியோர்களையும் கண்டால் தொழுதெழுவர்.

சிவபூசை செய்யும் அடியார்களுக்குக் கருதிய பொருள்கள் யாவும் தாமே கைகூடுமாதலின், அவர்கள் சுவர்க்கத்தையும் ஒரு பொருளாக மதிக்க மாட்டார்கள். அவர்களிடம் ஈகைக் குணம் தலை சிறந்து விளங்கும். மழையின்றி வளம் குன்றினும் அவர்கள் இரப்போர்க்கு இல்லை என மாட்டார்கள்.

11. அடியாரும் பிற சமயங்களும் [5 (9)] :—அடியார்கள் சைவ சமயமே மெய்ச் சமயம் எனக் கொண்டு அமணர், சாக்கியர் முதலியோரின் சமயங்களைப் போற்ருர்கள்; பொருட்படுத்த மாட்டார்கள்.

12. அடியார் இறைவனைப் போற்றும் வேளை [5 (10)] :—அடியார்கள் இறைவனை இரவும் பகலும் காலையும் மாலையும் (இருபோதும்) அன்புடன் போற்றிப் பணிவார்கள். சிவநாமங்கள், சிவத்தலங்கள், சிவனது திருவருட் செல்வம் என்னும் விஷயங்களைப் பற்றி நண்பகலிலும் மாலையிலும் கூட்டங்கூடிப் பேசி மகிழ்வார்கள். "பெம்மான்" என இறைவனை வாழ்த்தி ஏத்துவாகள். விடியற் காலையில் திருநீறுபூசிப் பெருங்கூட்டமாகக் கூடி இறைவனைத் தொழுதேத்துவார்கள். வேளை தவருது

இறைவனை நறுமணத் தூபமிட்டும், பூ இட்டும் வழிபடுவார்கள்.

13. அடியார்கள் வேடம் [5 (11)] :—அடியார்களுக்குச் சிவஒளி உள்ளும் புறமும் விளங்கும். அவர் மேனியிற் சிவநீறு பொலியும்.

14. அடியாரும் யமதூதரும் [5 (12)] :—அடியார் ஐந்தெழுத்தோதுங் காரணத்தால் இயமன் தூதரும் அவரிடம் அணுக அஞ்சுவார். நிரம்பிய பத்தியுடன் துதிக்க முயலும் அன்பர்களிடம் கொடிய காலன் முடுகான். என்றைக்கு மார்க்கண்டர் பொருட்டுத் தனது உயிரையே நமன் இழந்தானோ அன்று முதல் 'சிவனடியார்' என்றால் நமன்தூதர் நணுக அஞ்சுவர். சிவனடியாரையே அன்றிச் சிவனடியார்களின் அடியாரைக் கண்டாலுங்கூடக் கடிய கூற்றுவன் அகலுவான்.

15. சிவனடியார் ஊன் உண்ணுதலைப்பற்றித் தருக்கம் [5 (13)] :—ஊன் உண்ணுதல் நன்றெனச் சில அடியாரும் தீதெனச் சில அடியாரும் வாக்கு வாதம் செய்து வந்தனர். [இதனால் சிவனடியார் என்று அக்காலத்துப் பாராட்டப் படுவதற்குச் சிவன் மாட்டுள்ள அன்பே பிரதானமாகக் கொள்ளப்பட்டது போலும்.]

16. சிவனடியாரும் கள்ளுண்டலும் [5 (4)] :—சிவனடியார்கள் கள்ளைக் குடித்து ஊர் ஊராகத் திரிவார்களாயினும் அவர்களை இகழ்பவர்கள் அறிவினர்களே எனக் கூறப்பட்டுளது.

17. அடியாரும் ஆண்டவனும் [5 (15)] :—அடியவரையும் ஆண்டவனையும் ஒக்க நினைத்துத் தியானிக்க நமது வினை தொலையும்.

18. அடியாரோ டிணக்கம் [5 (16)]:—தொண்டர் கூட்டத்திடையே இனிதிருக்க நம் வல்வினைகள் நம்மை விட்டொழியும். திருநீறுடன் விளங்கும் சிவனடியாரே நமக்கு உற்ற கதி; உற்ற சார்பு; ஆதலால் அடியாருடைய அடியே நமக்குப் பொருத்தமெனக் கொண்டு அதனையே அடைவோமாக.

19. அழுது தொழும் அடியார் [5 (17)] :—அடியார் இறைவன் திருவடியில் வீழ்வார்; உளங்கசிவர்; கண்ணீர் மல்குவர், இறைவன் திருநாமங்களைச் சொல்லி அழைப்பர், அரற்றுவர், இசைபாடுவர், இரவும் பகலும் நினைப்பார், ஏத்துவார், விம்முவார், வெருவுவார், இங்ஙனம் அழுதெழும் அன்பர்தம் சிந்தைத் திறத்தினன் இறைவன்.

20. ஆடல் பாடல் செயும் அடியார் [5 (18)] :— அடியார்கள் இறைவன் சந்நிதியில் நிருத்த கீதஞ் செய்வார்கள் [வண்ணங்கள் பாடுவார்கள்; ஆடுவார்கள்.]

21. சிவநாமம் பசிப்பவரும் சிவத்யானம் செய்பவரும் [5 (19)] :—சிவனடியார் சிவபெருமானையே உள்கி நிற்பார்; அரனே என உன்னி நைவார். சிவபெருமானைத் தியானிப்பவருடைய சிந்தை தேவர்கள் வாசஞ் செய்யத் தக்கதாகின்றது. சிவநாமங்களைச் சொல்லிச் செபித்தும், பாடியும், அரற்றியும், பிதற்றியும், இருபோதும் பணிவார்களைத் துயரங்களும் வினைகளும் நலியா. அவர்களுக்குச் சிவனருள் நிரம்பக் கிடைக்கும். அவர்களுக்கு அரிய ஞானத்தை இறைவன் அளிப்பான். நிதியே, மணியே என்று சித்தம் உருகி நைபவர்க்கே இறைவன் திருவருள் கூடும்; பிறருக்குக் கூடாது. எத்தொழிலில் ஈடுபட்டிருப்பினும் நினைப்பு சிவன் மாட்டிருத்தல் வேண்டும்.

22. தேவார அடியார் [5 (21)] :—திருஞான சம்பந்தப் பெருமான் சொன்ன பதிகங்களை இரவும் பகலும் நினைந்தேத்தி நின்று, விம்மி, வெருவி, விரும்பும் அடியாரும் அப்பதிகங்களை இசையுடன் இனிது சொல்லவல்ல தொண்டர்களும், அப்பதிகங்களைப் பாடி யாடும் அடியார்களும், அப்பதிகங்களே தமக்குத் தஞ்சமெனக் கொண்டு இசைமொழிந்த அடியார்களும் தடுமாற்றம் இலராகிச் சிவன் சேவடியை அண்மி வாழ்வார்கள். சம்பந்தப் பெருமானின் பத்துப் பாட்டுக்களையும் கற்று வல்லவர் "அடியவர்" ஆம் என்க.

23. திருநீறிடும் அடியார் [5 (20)] :—சிவனடியார் ஒளி வீசும் தூய வெண்ணீ றணிவார். திருவிழாக் காலங்களிற்

சிவனடியார் திருக்கூட்டம் திருநீறு பொலியச் சுவாமியின் பின் செல்லும்.

24. பாடும் அடியார்; இசை பாடும் அடியார் [5 (22)]:—அடியார் இன்னிசை பாடி இறைவன் குணங்களைப் பரவி ஏத்துவார். திருவிழாக்களில் தொண்டர் கூட்டங்கள் வந்து இசையுடன் இறைவன் திருப்புகழைப் பாடி வலம் வரும். கோழை மிரம்பிய மிடற்றினராயும், கவிகோள் இலராயும் தமக்கு வந்தவாறு இசைகூட்டி ஏழை யடியாரவர்கள் யாது சொனனபோதிலும் இறைவன் அதற்கும் மகிழ்வான். இறைவனைப் பண்ணின் இசையாற் பகர்வாரை நோய் அணுகாது; வினை தொடராது; பாவம் பற்றாது. தம்மைப் பாடிப்பரவும் அடியார்க்கு இறைவன விண்ணுலக வாழ்வை அளிப்பான்.

25. சிவபூசை செய்யும் அடியார்; அவர் அடையும் பேறு [5 (23, 24) ]:—அபிஷேகத்துக்கு *ஆனைந்து அளிப்பவர் அருள்வேந்த ராவார். அடியார் பூவும் நீருங்கொண்டு இரவும் பகலும் வழிபாடு செய்வார். காலையும் மாலையும் அலங்கல் சூட்டுவார். மலர்கொண்டு இண்டை மாலை கட்டித் தொண்டு செய்வார். குருந்தம், குரா, கொன்றை, மத்தம், வன்னி முதலிய நல்ல மலர்கொண்டும், மாலை வகைகள், அகில், சாந்து, தீபம், தூபம், பலிகொண்டும் பூசை நடைபெறும். அடியார்கள் நிலைகொண்ட மனத்தராய் நாளுமிகு பாடலோடு நல்ல மலரால் தோளுங் கையுங் குளிரத் தொழுவார்கள்.

26. சேபஞ் செயும் அடியார் [5 (25) ]:—அடியார்கள் ருத்ராக்க மாலை கொண்டு செபஞ் செய்து மந்திரங்கள் கூறி வணங்குவார்கள்.

27. மறையோதும் அடியார் [5 (26)] :—அடியார் நாலு வேதங்களை ஓதி இறைவனை வணங்குவார்.

---

*ஆன் ஐந்து—நெய், பால், தயிர், கோமயம், கோசலம் (பஞ்சகவ்வியம்) நெய், பால், தயிர், வெண்ணெய், திருநீறு எனலும் ஆம். தலைப்பு 39. பார்க்க.

28. அடியார்க்கு இறைவன் அருளுவது [6 (1)] :—அன்பொடு வழிபடும் அடியார்க்கு இறைவன் நிழல்போல் இருப்பான், அருநெறி காட்டுவான், பக்தியைத் தருவான், அவர்கள் இடுமலரை அன்புடன் ஏற்றுக் கொள்ளுவான், அவர்களை உயர்நிலைக்குக் கொண்டு வருவான், அவர்களுக்குத் தமது திருவடி நிழலைத் தருவான், மங்கை ஒரு பாகமாகத் தோன்றி வந்து அருள்புரிவான். இறைவன் திருவடிகள் தாம் அடியார்களைக் காத்தருளுகின்றன. எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன் அடியார்க்கு முக்கட்பெருமானார் அருள்புரிவார்.

1. விண்ணுலகம் அளித்தல் [6 (2)] :—சிவபெருமானார் தம் அடியவர்க்கு விண்ணுலகம் எளிதில் அளிப்பார்.

2. அன்னம் அளித்தல் [6 (3)] :—தம் அடியவருக்கு அன்னநிதி யாவார்.

3. ஆசைதீர அளித்தல் [6 (4)] :—அடியார்களுக்கு ஆசைதீரக் கொடுப்பார்.

4. ஆட்கொள்ளுதல் [5 (5)] :—பலவிதமாக அடியாரை ஆட்கொண் டருளுவர்.

5. இன்பம் அளித்தல் [6 (6)] :—தம்மைச் சார்ந்தவருக்கு வேண்டிய இன்பங்கள் தருவார்.

6. கோள், நாள் முதலிய நலியா வகை அருளுவர் [6 (7)] :—நாள்கள், கோள்கள், அவுணர், இடி, மின், பூதம், கடல், நமன், நமன்தூதர், காலன், அரி, உழுவை, யானை, கேழல், நாகம், கரடி, அக்கினி, வினை, சிறு தெய்வங்கள், மால், பிரமன், மறை, தேவர்கள், காலம், மலை, வெப்பு, குளிர், வாதம், பித்தம் இவையெல்லாம் சிவனடியார்களுக்கு நல்லனவே செய்யும்.

7. தவநெறி அருளுவர் [6 (8)] :—அடியார்க்கு இறைவர் தவநெறியைத் தந்து அருளுவர்.

8. துயர் முதலிய தீர்த்தருளுவர் [6 (9)] :—அவலம், குற்றம், இடும்பை, இடர், இடுக்கண், துக்கம், துயரம், ஏதம், நடலை, அல்லல், ஊனம் என்பன அடியாரைப் பீடியா வண்ணம் அருளுவார்.

9. ஞானம், புகழ், வீடு அருளுவர் ; பிணி, வினை முதலிய நீக்குவார் [6 (10, 11, 17)] :—இறைவர் தம் அடியவருக்கு நற்குணம், ஞானம், செல்வம், உயர்நிலை, பெருமை, புகழ் இவைகளை அருளுவார். வானவரின் மேம்பட்ட நிலையை அருளுவார். சிவகதி, சிவசாரூபம், வீட்டின்பந் தருவார் : "தாமே தானாகச்" செய்வார்.

பிணி, நோய், பழி, பாவம், பிறப்பு, இறப்பு, மலம், மாசு, பாசம், வினை இவைதமை நீக்கி அருளுவார்.

10. சிவபிரானது அருமை, எளிமை [6 (20-23)] :—அயனும் மாலுங் காணா அருமையர் சிவபிரான் ; அன்புடைய அடியவருக்கு அணியர், எளியர் ; மாலும் பிரமனும் அஞ்ச அழலாய் நின்றவர் ; அடியார்க்கு அருள் பயக்கும் நிழலாய் நிற்கின்றவர். அமரர்க்கு அரியவர். 'எங்கள் பெருமான்' என்பார்க்கு உரியவர். அன்பு செய்பவருக்கும் ஐம்புலன் வென்றவருக்கும் எளியவர் ; மற்றவர்க்கு அரியவர் ; பத்தி செய்வோர் பக்கல் வெளிப்படுவார் ; பத்தி செய்யாதவரிடம் ஒளிப்பார் ; அடியாரிடம் இணங்குவார், மற்றவரிடம் பிணங்குவார். பத்தர் கூட்டத்தில் இச்சையுடன் அமர்வார் ; பத்தியிலாதார்பால் கரப்பார்.

11. சிவபிரானும் அடிய ரல்லாதாரும் [6 (23)] :—அடிய ரல்லாதார்க்கு இறைவன் திருவருள் கிட்டாது. ஆதலின், இறைவனை நினைந்து உருகாதவர் உணர்வை என்னென் றுரைப்பது ?

## 5. அரக்கர் - அசுரர் - அவுணர் [8]

இவர்கள் வன்மை வாய்ந்தவர்கள் ; மாயம் வல்லவர்கள் ; கருநிறத்தவர்கள் ; பெருங் கோபத்தினர்கள் ; இரவில் திரிவார்கள்: நீரிலும் வானிலும் இயங்கும் ஆற்றல் கொண்டவர்கள்.

(i) அந்தகாசுரன் :—அறைகழல் அணிந்தவன் ; சிவபிரான் அடியைப் பணிய நீரும், மலரும், தீபமும், தூபமும் நிறைந்திருந்த மலையகத்தே புக்குத் தீதுசெய வந்தணைந்த

இந்த அந்தகாசுரனைச் சிவபிரான் தேவர்கள் போற்ற மூவிலைச் சூலாயுதத்தாற் குத்தித் தூக்கினர்.

(ii) இடும்பன் :—திறல்வாய்ந்த சினமிக்க அரக்கன்.

(iii) இரணியாக்கன் :—மதமிக்க நெடுமுகன்.

(iv) இராவணன் :—தலைப்பு 161-பார்க்க.

(v) சலந்தரன் :—தவத்திற் பெரியான்; கருவமிக்கவன்; தன் வலிக்கு எதிர் ஒருவர் இல்லாதவன்; மண்ணுலகையும் விண்ணுலகையும் நலிந்தவன்; நெருப்பை உமிழும் சக்கரப் படையாற் சிவபிரான் இவன் உடலத்தைப் பிளந்தார்; தலை அறுந்துருளச் செய்தார்.

(vi) சூர் (சூரபத்மா) :—மாயம் வல்லவன்; முருகரால் அழிவுண்டான்.

(vii) தாரகன் :—தேவர்களுக்குத் துயர் செய்தவன்; போரில் வல்லவன்; வெற்றி நிரம்பியவன்; காளியாற் கொல்லப்பட்டான்.

(viii) மகிடன் (மகிடாசுரன்) :—போரில் நீலி (துர்க்கை)யாற் கொல்லப்பட்டான்.

(ix) வாணசுரன் :—(சிவசந்நிதியில்) முழவங் கொட்டும் பேறு பெற்றவன்.

## 6. அரசர்கள், பிற பெரியார்கள் [9]

அரசர்களுக்கு இலக்கணமாவன—அணி, அருள், கழல், குடை, முடி, யானை, சிவிகை, அந்தளகம், ஈச்சோப்பி, வட்டில் முதலியன. அரசர் பட்டணப் பிரவேசம் செய்யும்போது மணியொலி, சங்கொலி, முரசொலி ஒலிக்கும்.

2. அனுமான், அருச்சுனன், இமவான், இராமர், இலக்குமணன், கோச்செங்கட்சோழன், சாம்புவான், சிபி, சிலம்பன், சுக்கிரீவன்: சேரர், சோழர்கள், தென்னர், தருமன், நந்தன், நளன், நாகராசன், பகீரதன், பஞ்சவர், புரூரவா, மாவலி, வாலி என்பவர்களைப்பற்றிச் சுவாமிகள் கூறியுள்ளார்கள். இவர் தம்முள் :—

(i) அருச்சுனன்-இவனுக்குப் பதினொரு பெயர்கள் உண்டு. அப்பெயர்களுள் அருச்சுனன், தனஞ்சயன், பார்த்தன், விசயன் என்னும் பெயர்கள் சொல்லப்பட்டுள. "பத்தொரு பெயருடை விசயன்" எனப்பட்டுள்ளான். இவன் வில்லின் வல்லான், வேளுக்கு நிகரானவன், பஞ்சவரில் ஒருவன், அழகன்; பிற விஷயங்கள் "சிவனும் விசயனும்" [தலைப்பு 75] என்பதன் கீழ்ப் பார்க்க.

(ii) தென்னர், சேரர், சோழர்கள்:—முடிசேர் மன்னர்கள்; சோழன் தலைநகர் - கோழி; பாண்டியன் தலைநகர் - மதுரை; சேரன் தலைநகர் - வஞ்சி; வஞ்சி அழகுள்ள ஊர்; சோழன்கொடி - புலி; பாண்டியன் கொடி - மீன்; சேரன் கொடி - வில்; ஆனை - சேரனது மலைநாட்டைக் குறிக்கும். சோழனுக்குச் செம்பியன், நேரியன், கிள்ளி, கோழிமன், வளவர்கோன் எனவும்; பாண்டியனுக்குத் தென்னன், தென்னவன், பஞ்சவன், வழுதி எனவும்; சேரனுக்குப் பூழியன், வில்லவன் எனவும் பிற பெயர்கள் உண்டு. சோழன் - வேல் மிகவல்லான், மிக்க அழகுடையான், மண்ணெல்லாம் பரவ மிக்க பிரதாபத்துடன் மணிமுடி சூடி வாழ்ந்தான். பாண்டியன் - சிருடன் பொலிந்தான், பண்ணியல் தமிழ்க்கு உரியான்; சேரன் - நீடு புகழான்; மூவரும் மிக்க அன்போடு திருப்பூவணம், மூக்கீச்சுரம் முதலிய தலங்களை வழிபட்டார்கள்.

(iii) இமவான்:—பொன்னியல் மலையான்; விண்ணுலா மால்வரைக்கு அரசன்.

(iv) இராமர்:—கடலை அடைத்து வழி செய்தவர்; வில்வலார், ஈனமிலாப் புகழார், இராவணனைச் செற்றவர், விட்ணு அம்சத்தினர்.

(v) இலக்குமணன்:—இராமர் தம்பி.

(vi) சிபி:—புறவுக்காக உடல்நிறை அருளினவர்.

(vii) சிலம்பன் (கேது?)—தலையாய்க் கிடந்து சொழியில் ஆண்டவன்:

(viii) சுக்கிரீவன்:—போருடையான்.

(ix) தருமன் (யமன்?) :—பல்லுயிர்களின் செய்வினை தெரிந்து செங்கோல் செலுத்தினவன்.

(x) நளன் :—நள்ளாற்றிற் பூசித்தவன்.

(xi) பகீரதன் :—அருந்தவம் புரிந்து இறைவனது சடைமுடிக் கங்கையைப் பூதலத்துக்கு வரவழைத்தவன்.

(xii) புரூரவா :—திருவீழிமிழலையிற் பூசித்தான்.

(xiii) வாலி :—ராவணனை வாலினாற் கட்டினான்; திருக்குரங்காடுதுறையில் இறைவனை வழிபட்டான்.

## 7. அருவி [10]

அருவி மலையினின்று பெருகும்; பளிங்கு போன்ற வெண்ணிறத்துடன் திண்ணென வீழும்; முழவொலி போல முழங்கும்; பறைபோல ஒலிக்கும்; முரவம் என்னும் வாத்தியம்போல ஒலிசெயும். வழியில் உள்ள சுனைகளை நிரப்பிப் பரவும், ததும்; சலசல என நுரையுடன் ததும்பும்; தந்தத் திந்தத்தென்று பாய்ந்து செல்லும்; பனைத் திரள் போலப் புரண்டு பாயும்; யானையும் அஞ்சும்படி விரைவிற் பெருகும்; அகில், சந்தனம், நாகம், பளிங்கு, பொன், மரவம், மலர், மணி, முத்து, வயிரம் முதலிய பல பொருள்களை உந்திக் கொழித்து இழியும்.

## 8, (1) ஆறு [17]

அரிசோலாறு - அரிசில் [17 (1)] :—எப்பொழுதும் நீருள்ளது. மாதர்கள் இந்நதியில் நீராடுவார்கள். பொன், மணி, கனி, பீலி, ஏலம் இந்நதியின் வெள்ளத்தில் உந்தப் பட்டு வந்தன.

கங்கை [27 (2)] :—ஆழ்கடல் போன்றது; பெயர் பெற்றது; ஒலிக்கும் வெள்ளத்தது; தெய்வநதி.

கம்பை [17 (4)] :—கச்சியில் ஏகம்பத்தில் உள்ளது. தேவி தவஞ் செய்தபொழுது பெருவெள்ளமாய் வந்தது.

காவிரி - பழங்காவிரி [17 (5)] :—அழகிய நதி; நீண்ட நதி; ஒலிக்கும் வெள்ளத்தது; கங்கையை நிகர்த்தது;

கடல் போன்றது; அழகிய கரையது. கரைகளில் மலர்ப் பொழில் நிறைந்தது; கொங்கு நாட்டிற் பொலிவது; பூச நாள் முழுக்குக்கு விசேடமானது; தன்னிற் படிவோரது இடர் தொலைப்பது; என்றும் நீர் உள்ளது; பெருமை வாய்ந்தது; மலையினின்று இழிவது; செந்நெல் விளைய வளப்பந் தருவது; அகில், இஞ்சி, இலவம், இலவங்கம், இலை, ஈஞ்சு, ஏலம், கனிவகைகள், கழை, காட்டுப் பண்டங்கள், குருந்து, சந்தனம், சாதிப்பழம், சுரபுன்னை, செண்பகம், செருந்தி, ஞாழல், திமில், தேக்கு, தேன், பூகக்குலை, பொன், மஞ்சள், மணிகள், மயிற் பீலிகள், மருது, மலர்கள், மலைப்பண்டங்கள், மிளகு, முத்துக்கள், யானை மருப்பு, மல்லிகை, மாதவி, முல்லை, வயிரத்திரள், விளவு தேன், வேங்கை இவைகளை உந்திவரும் வெள்ளத்தது.

கெடிலம் [17 (7)] :—அகில், சந்தனம், மலர்கள் இவைகளை அடித்துக் கொண்டுவரும் தெண்ணீர் நதி.

கோட்டாறு [17 (8)] :—நீண்ட கோணிய நதி; மாதர்கள் குடைந்தாடும் ஆறு; இலவம், ஏலம், களிற்றின் மருப்பு, கனிகள் பீலி, பொன், மலர்கள், மிளகு இவைகளை வெள்ளத்தில் அடித்து வரும்.

நிவாநதி [17 (9)] பொன், மணி, மலர் இவைகளை வெள்ளத்தில் உந்திவரும் நதி. குளிர் புனலது.

பம்பை [17 (10)] :—அகில், சந்தனம், பொன், மணி இவைகளைக் கொழிக்கும் நதி.

பெண்ணை [17 (13)] :—இடையிடை வரைகளைக் (கற்பாறைகளைக்) கொண்டது. வளப்பங் கொண்டது.

மண்ணி [17 (14)] :—அகில், சந்தனம், முத்தம் கொழிக்கும் தெண்ணீரது.

மணிமுத்தாநதி [17 (15)] :—விசேடநதி; முழங்கொலி வெள்ளத்தது; குங்குமம், குரவு, சந்தனம், மணி, மலைப் பண்டங்கள், முத்து, மூங்கில் முத்து இவைகளை வீசி வருவது.

முகலி (பொன்முகலி நதி) [17 (16)] :—அகில், கரும்பு, கனிகள், சந்தனம், சாதி, தேக்கமரம், மணி, மருது, முத்து, வேங்கை இவைகளை வெள்ளத்தில் உந்தி வருவது.

வைகை [17 (17)] :—மதுரை நகர் வழியாக வருவது; செடிகள் கரைகளில் நிரம்பியது; தென்றற் காற்று மலிந்தது; அகில், கோடு, சந்தனம், பொன், மணி, இவைகள் கடல்சேர உந்தி வருவது.

குறிப்பு :—ஆற்றங்கரைத்தலங்கள் :—தலைப்பு85-பார்க்க.

## 8. (2) பொய்கை, குளம், மடை, வாவி [348]

எருமைகள் படிந்து குளிக்கும் ஓடைகள், ஆவிகள் (நீர்நிலைகள்) இருந்தன. மாதர்கள் பொய்கைகளில் குடைந்து விளையாடுவர். மடைகளில் வாளையுங் கயலும் விளையாடும்; பொய்கைகளில் நெய்தல், கருங்குவளை, தாமரை மலரும். வாவிகளில், காவி, கருநீலம், கமலம் மலரும்; தாமரை, நெய்தல், கழுநீர், ஆம்பல், நீலம், புட்கள் இவை நிறைந்து பொய்கைகள் பொலிந்தன. திருவெண்காட்டு முக்குளங்கள் வினை துரக்கவல்லன; நினைத்த காரியத்தைக் கைகூட்டி வைப்பன. கோகர்ணத்தில் "ஹர (ஹர) தீர்த்தம்" விடநோயைத் தீர்த்த புகழ் பெற்றது.

## 9. இசையும் பண்ணும் [19, 312]

1. இசை :—இன்னிசையாற் பாட வல்லவரும், கீதத்தை மிகப் பாடும் அடியார்களும், பண்ணிய நடத்தொடும் இசைபாடும் அடியார்களும், வண்ணம் மூன்றுந் தமிழில் தெரிந்து இசை பாடுபவரும், வேற்றுத் திசை இசைகளைக் கேட்டுத் தேர்ந்து ஆயும் பெரியோர்களும், இசை பாடும்பொழுது விம்மி யழும் பெரியோர்களும் இருந்தார்கள். செந்தமிழ்க் கீதம் பொலிவுற் றிருந்தது. கீதம் வல்ல வாய்மையால் இறைவனை உணர்ந்துரைக்கலாமே யன்றி, ஓதினுல் மாத்திரம் அவரை உணர்ந்துரைக்க லாகாது.

2. பண் [312] :—இளி, தாரம், துத்தம், பாலை, மருள், வாய்மூரி, காந்தாரம், காமரம், பஞ்சுரம், செந்து, செவ்வழி, நேரிசை என்னும் பண்வகைகள் கூறப்பட்டுள.

3. இசைக் கருவிகள் [19 (5)] :—யாழ், வீணை, குழல் மொந்தை, முழவு இவை; கீதம் பொலிதலுக்கு முக்கிய மானவை என ஏற்படுகின்றது.

3-A. இசையும் சிவனும் தலைப்பு 67-பார்க்க.

4. தோண்டர் கூட்டமும் இசையும் [19 (3)] :—இசைபாடும் அடியார்கள் கூட்டம் கூட்டமாய்க் கூடித் துதிப்பர் ; பாடுவர் ; ஆடுவர். திருவிழாக் காலங்களிலே வந்து கூடிப் பண்ணிசை பாடுவர்.

5. மறையும் (வேதமும்) இசையும் [360] :—‘உள்ளங் கலந்து இசையால் எழுந்த வேதம்’, ‘வேதத்தின் இசை பாடி’, ‘பண்ணமரும் நான்மறை’, ‘மறைகொள் கீதம்’, என வருதலால் மறை(வேதம்) இசையுடன் பாடப் பெறும் எனத் தெரிகின்றது.

6. குயிலும் இசையும் [19 (2)] :—குளிர்ந்த இன் னிசைப் பாடல்களைக் குயில் பாடும்.

6-A. பண்வகைகள் தலைப்பு 121 பார்க்க.

7. மாதர்களும் இசையும் [372 (3), 373 (2)] :—திருவையாற்றில் மடந்தையர் பண் காந்தாரத்திற் பாடல் கள் பாடினதும், திருவாரூரில் மாதர்கள் பாடுங் கீத ஓசை தேவலோகத்தை ஊடறுத்ததும், திருக்களரில் மங்கை யர் பண் பொலிய யாழ் வாசித்ததும், திருவாமாத்தூரில் மங்கையர் நடமாடி யின்னிசை பாடினதும், திருமாணி குழியில் மடந்தையர்கள் தத்தம் மாளிகையில் ஊசலில் வீற்றிருந்து இனிதாக இசை பாடினதும், காவிரிப்பூம்பட் டினத்தில் மாதரும் மைந்தரும் பாரெலாம் மகிழ இசை பாடினதும், கோட்டாற்றில் மாதரார் இசைபாடினதும், வேதாரணியத்தில் மாதர்களின் இசை பாடல் ஒலித்ததும், சீகாழியில் மாதர்கள் இசைபாடி ஊசலை ஆட விட்டதும் சொல்லப்பட்டுள.

8. வண்டும் இசையும் [391-397]:—கோடல், முல்லை, மாதவி, தாமரை முதலிய மலர்மேலிருந்து வண்டு இசை முரலும், இசை பயிலும். மலர்களை மோந்து வண்டு பாடும். தேன் தோயும் பொழில்களில் வண்டினங்கள் இசை முரலும். வண்டுகள் தென்னென இசை செயும், மும்மென்று ஒலிக்கும், தெத்தே என முரலும், பொழில் நிழலில் தேனும் வண்டும் இன்னிசை பாடும். குரவம், கோங்கம், பிண்டி, ஞாழல், சுரபுன்னை யாதிய மரங்களில் இருந்து வண்டுகள் நாடோறும் தேன் உண்ட களிப்பாற் கிரமமாகப் பண் செய்யும். தாமரை, நெய்தல், செங்கழுநீர். குவளை ஆதிய மலர்களிற் கிடைக்கும் மதுவை உண்டு வண்டுகள் பல பண்களிற்பாடும். காமரம், செந்து, செவ்வழி, துத்தம், நேரிசை, பஞ்சுரம், மருள் ஆதிய பண்களை வண்டுகள் பாடும். வண்டுகள் பாடக் குவளை, சண்பகம், கொன்றை யாதிய போதுகள் மலர்ந்து தாதவிழும்; வண்டுகள் ஏறக் கள் அவிழும்.

9. குழலும், யாழும், பறையும் வண்டு வாசிப்பது [395-397]:—குரவமேறி வண்டினங்கள் குழல் போலவும் யாழ்போலவும் பாடும். பல வண்டுகள் கூடி ஒலிக்கும் ஒலி, பறையும் அதிர் குழலும் போன்றிருக்கும். நீல வண்டுகள் குழல்போலப் பண் செய்யும். வண்டினங்கள் நீலோற்பலத்தின் மதுவுண்டு நேரிசைப் பாணில் யாழ் வாசிப்பது போல ஒலிக்கும். பஞ்சுரப் பண்பாடி யாழொலியை எழுப்பும்; குருந்தம், கொன்றை, வேங்கை ஆகிய மரங்களில் இருந்து வண்டு யாழ் செய்யும். யாழையும் சீ என்னும்படியாக ஏழிசைகளையும் வண்டுகள் முரலும.

மாலையில் வண்டினங்கள் மதுவுண்டு இசை முரலும். அது பாலை யாழ்ப்பாட்டை ஒக்கும். அதைக் கேட்டும் ஈசன் மகிழ்வான்.

10. வண்டுங் குயிலும் [462 (6-xiii)]:—குயில் பாடக் கேட்ட பெடை வண்டு தானும் முரலும்; வண்டு பாடக் கேட்ட குயில் தானும் இசை பயிலும்: பொழில்களில் வண்டு இன்னிசை பாடக் குயிலும் உடன் பாடும்;

11· வண்டும் மந்தியும் [463 (11-viii)] :—
வண்டினங்கள் கீதம் பாடினால் மந்திகள் அது கேட்டுக் குதித்து விளையாடும்.

12. வண்டும் மயிலும் [462 (22-xii)] :—
சோலைகளில் மதுவுண்ட வண்டு இழிவிலாத வகையில் பண்பாடுதலைக் கேட்டுப் பொழில் நிழலில் மயில் நடனம் செய்யும்; ஒலிக்கும்.

## 10. இந்திரன் [20]

இவன் அமரர்களுக்கு இறைவன். கற்பகப் பூமாலை யணிந்தவன். முனிவரால் சாபம் அடைந்தவன். கண்ணார் கோயில் என்னுந் தலத்தில் ஈசனை விண்ணவர்கள் வழி பட்டேத்த அந்தச் சாபம் நீங்கப் பெற்று இவன் ஆயிரங் கண்கள் பெற்றனன். சீகாழியில் வழிபட்டு இன்பம் உற்றனன். இவன் நகரம் அழகிய நகரம். திருவெண் காடு முதலிய வேறு தலங்களிலும் வழிபட்டுள்ளான்.

## 11. இலக்கணப் பகுதி [25]

இலக்கணச் சூத்திரங்களுக்கு உதாரணமாக எடுத்துக் காட்டக்கூடிய பல அருமைப் பிரயோகங்கள் உள்ளன. இசைத் தமிழுக்கு வேண்டிப் பதங்கள் புணர்ச்சியின்றி நிற்பன, மரூஉ மொழி, முதற்குறை, இடைக்குறை, கடைக் குறை, குறுக்கல், நீட்டல், சிங்கநோக்கு, அன்மொழித் தொகை, ஆகுபெயர், வேற்றுமை உருபு மயக்கம், அசைச் சொற்கள், சாரியைச் சொற்கள், திணைபால் வழுவமைதி, பூட்டுவிற் பொருள்கோள், ஒருமை பன்மை விகுதிகள் விரவி வருவன, துணைச் சொற்கள் முதலிய பல பிரயோ கங்கள் எடுத்தாளக் கூடியன கிடைக்கின்றன.

1. அணியிலக்கணம் [25 (2)] : உயர்வு நவிற்சி :—
(i) கச்சிமாநகரில் மாடங்கள் மலையை நிகர்க்கும்: மாடத்தின் மீதுள்ள கொடிகள் மேகங்களை அளாவும்.

(ii) (திருவீழிமிழலையில்) பண் நிரம்பிய மடவார் பாலகரைப் பாராட்டும் ஓசை கேட்டு விண்ணவர்கள் வியப்புடன் விமானத்தில் இறங்கிவந்து கேட்பார்கள்.

2. எடுத்துக்காட்டுவமை :—மேழி பிடித்து உழுவது போலப் பன்றிகள் புழுதியைக் கிளைக்கும்.

3. தற்குறிப்பேற்ற அணி :—(i) இறைவனை இறைஞ்ச வாரீர் என விண்ணோர்களை அழைப்பதுபோலக் கொடிகள் ஓங்கி அசைந்தன.

(ii) தாமரைத் தடாக நீர்மணித் தலத்திற் சங்குவர்க்கஞ் சூழவுள்ள செந்தாமரைத் தீயிற் பொரியிடுவது போலப் புன்குமரம் மலர்களைச் சொரிய, அவைகளின் தோற்றம் திருமணச் சாலையை ஒக்கும்.

## 12. இலங்கை [26]

இலங்கை தென் திசையில் உள்ளது. இலங்கைக்குக் கடலே வேலியா யமைந்து விளங்கிற்று. இலங்கை நகர் மணம் வீசும் பொழில் சூழ்ந்தது; நீண்ட கொடி மதிலாற் சூழப்பெற்றது. பெருமை வாய்ந்தது. நீடு கொடி யமைந்த மாடங்களும், இடி தாங்கிகளும், மாட வீதிகளும் பொலிவுற்ற பழைய நகரம் இலங்கை. அந்நகர் அதன் எல்லைக்குட் சூரியன் இயங்கா வண்ணம் ராவணனால் ஆளப்பட்டது.

## 13. உபதேசம் [30]

1. நெஞ்சுக்கு உபதேசம் [30 (3)] :—

நெஞ்சமே! அஞ்சுதல் வேண்டாம்.

ஆரூர், கொச்சை (சீகாழி), திருப்பருப்பதம், திருக்கோவல் வீரட்டம் முதலிய தலங்களைத் தொழுது நீ உய்யலாம். ஈசன் திருநாமத்தைச் சிந்தை செய்; இறைவன் திருவடியையே தியானித்துக் கொண்டு இரு; நமது துயர் கெடும்; வினையெலாம் ஒழியும்.

2. தொண்டர்களுக்கு உபதேசம் [30 (2)] :—

அடியீராயினீர்! திருச்சோற்றுத் துறையைச் சிந்தை

செய்ம்மின்! திருவையாற்று ஈசர்க்கு ஆளாமின்! கள்ளம் ஒழிமின்! உள்ளத்து இச்சையுடன் இறைவனை உகந்து தொழுமின்! ஈசனைப் புதுமலரிட்டுத் தொழுது உய்ம்மின்.

3. உலகுக்கு உபதேசங்கள் [30]:—

(1) இரப்பது புன்மை.

(2) இழிவுக் கிடமாய வாழ்க்கை ஒழியவேண்டித் தவஞ்செயக் கருதில் பெண்ணுகடத்துத் தூங்கானை மாடம் தொழுமின்கள்; சிவபுரத்தில் வழிபடுமின்கள்.

(3) இறைவன் திருவடியைத் தொழும் அறிவன்றி வேறு அறிவு வேண்டாம்.

(4) ஈசனுக்கு ஆட்செய அல்லல் அறும்.

(5) 'மங்கை பாகா! மான்மறி யேந்திய கையா! எங்கள் ஈசா!' என்று சொல்லி எழுபவர்களுடைய இடர்வினைகளை இறைவர் ஒழிப்பார்.

(6) காலையில் ஈசனை ஏத்திப் பணிமின்.

(7) சிற்றம்பலத்தை நித்தல் ஏத்துபவர்து தீரா நோய் எல்லாம் தீர்தல் திண்ணம்.

(8) திருவெண்காட்டான் என்று ஈசனை ஓதினவர் தீதிலராவர்.

(9) துறவியானல் தான் துன்பம் நீங்கும் என நினைத்து அஞ்சுதல் வேண்டாம்; திருவாரூர் தொழுதால் நமது அல்லல் நீங்கி நாம் உய்யலாம்.

(10) மலர் தூவி ஈசனை வழிபட்டால் கூற்றுவன் நம்மிடம் வர அஞ்சுவான்.

4. அறியவேண்டிய உண்மைகள் [30]:—

(1) அடியார் அவலம் அறியார்.

(2) அளவிலா வழிகளில் அடியார்களுக்கு இறைவர் அருள்புரிவார்.

(3) ஆக்கம் உறினும் ஏக்கம் வரினும் இறைவன் திறத்தையே நாம் பாராட்டுதல் வேண்டும்.

(4) இரப்பவர்க்கு எந்நாளும் பெரியோர் காலம் பகரார்.

(5) இறைவர் இன்னரெனச் சுட்டிக் காட்ட அரியவர்; ஏத்தித் துதித்தால் சற்று எளியராவார்.

(6) இறைவனைப் போற்றுதல் கற்றறிவோர்கள் தம் கடன்.

(7) ஈசன் பெருமையை உணராத திருவிலிகளைத் தெருட்டுதல் ஆகாது.

(8) ஈசா என்றால் இடரில்லை.

(9) எங்கே பிறந்தாலும் யாதாகிப் பிறந்தாலும் அடியார்க்கு அருள்புரிய இறைவன் தயாராக இருக்கின்றான்.

(10) ஓதுவதால் மாத்திரம் அறிவு கைகூடாது.

(11) சாநாளும் வாழ்நாளும் யாராலும் அறிய முடியாது.

(12) பெரியோர் அறிவு தம்மை ஆண்ட கழலைத் தொழல் அல்லது பிறிதொன்றும் அறியாது.

(13) தமது செவித் தொளைகளால் இறைவன் பெருமையன்றி வேறு விஷயங்களை அடியார் கேட்க விரும்பார்.

(14) நாள் கோள் நலியாமை வேண்டின், ஈசனது தாள்களை வணங்குவீராக.

(15) பிறைசூடி தன் திருநாமங்களையும் வாசஸ்தானங்களின் பேர்களையும் கூறிப் பிதற்றுவீராக.

(16) புன்பேச்சுக் கேளாதீர்கள்.

(17) பேசிப் பேசிப் பொழுதைப் போக்கவேண்டாம்.

(18) மலர்கொண்டு இறைவனைப் பூசித்தல் மனத்தின் சேட்டையைப் பாழ்படுத்தும்.

(19) மார்க்கண்டேயர் பொருட்டுக் காலன் உயிரிழந்த பின் ஆலமுண்ட பெருமானது அடியார்களிடம் யமதூதர் நெருங்கி யடர அஞ்சுவர்.

(20) யார் இறைவனைச் சதா சிந்தனை செய்கின்றார்களோ அவர்களது மார்பினின்றும் ஸ்ரீ லட்சுமி பிரிந்து நில்லாள்.

## 14. உலகங்கள் [32]

1. மண்ணுலகம் :—அகல நீளம் உள்ளது. கடலாற் சூழப்பெற்றது. ஊழி கண்டது; ஊர்கள் நிறைந்தது; நரர்கள் வாழ்வது; சூரியன் இயங்குவது; துயர் நிறைந்தது.

2. விண்ணுலகம் :—அகல நீளம் உள்ளது; பொன்னுலகம், மேலுலகம் என்னும் பெயர்களைக் கொண்டது; அந்தரத்துள்ளது; அமரர் வாழ்வது; மேன்மை பொருந்தியது, நல்ல உலகு; குற்றம், நடுக்கம் இல்லாத உலகு; இதன்புகழ் கீழுலகத்திலும் பரவியுள்ளது.

3. உலகுகள் :—பூமி முதலிய ஏழுலகுகள் உண்டு. மூவுலகுகள் என்றும் சொல்லுவதுண்டு. பரலோகம், புவலோகம், மாலோகம் என்பன லோக வகைகள்.

4. சிவலோகம் :—இஃது ஈசன் இருக்கும் உலகு. இங்கு துஞ்சுதல் (இறத்தல்) கிடையாது. சித்திர விமானம் உள்ள செல்வம் நிறைந்த உலகு.

## 15. ஊழி, ஊழி முதல்வர் [60-61]

உலகிலே பல ஊழிகள் தோன்றும். உக முடிவில் ஓருயிரும் வாழமுடியாத வண்ணம் கடல்நீர் பொங்கிப் பரவிப் பாய்ந்து ஊர்களை அழித்து உலகை மூடும். அப்போது அமரர்கள் 'எந்தாய்' என இறைவனைச் சரண் புகுவர். இறைவர் (பிரளய கால மூர்த்தி) இருவருடைய (மால் - பிரமன் உடைய) உடற்பொறையுடன் திரிவர். பின்பு, பண்டுபோல எல்லாம் பண்ணுவர். ஊழிக்காலத்தும் வாழும் பெருமான் நமது பெருமான்.

## 16. எண்கள் [39]

ஒன்று முதல் பத்து வரையும், பன்னிரண்டு, பதினாறு, பதினெட்டு, இருபது, இருபத்திரண்டு, எண்பத்துநான்கு, நூறு, ஆயிரம், நூறாயிரம், பல்லாயிரம், கோடி, முக்கோடி, பல்கோடி, தோழம் என்னும் எண்கள் கூறப்பட்டுள.

## 17. ஐந்தெழுத்து [42]

'நமச்சிவாயத் திருப்பதிகம்' என்றும், 'பஞ்சாக்கரத் திருப்பதிகம்' என்றும் இரண்டு திருப்பதிகங்கள் உள. ஐந்தெழுத்தைப்பற்றி வேறு மூன்று பாடல்களிலும் சொல்லப்பட்டுள. ஐந்தெழுத்தை ஓதியும் போற்றியும் உய்ந்தவர்:—பிரமன், மால், ராவணன், வண்டோதரி, குலச்சிறை நாயனர். பிற விவரங்களுக்குத் தலைப்பு 48-பார்க்க.

## 18. ஐம்புலன். பொறி, ஐவர்சேஷ்டை, ஐம்புலனை அடக்குதல் [43]

ஐம்புலன்களாகிய ஐவரும் நமது காயத்தில் நின்று நம்மை ஒருவழிப் போக ஒட்டாமற் செய்கின்றார். பத்தி வழியினின்றும் நம்மைப் பேர்த்து விடுகின்றனர்; இந்த ஐவர் ஆட்டத்தை அடக்கியாள்வதே பெரியோர்களின் இலக்கணம். ஐம்புலன்களும் ஐந்து களிறு (யானை); தொண்டர்கள் இறைவனுக்குப் பூமாலை கட்டும்பொழுது இந்த ஐந்து களிறுகளையும் அடக்கி மாலை கட்டுவர்.

## 19. ஒற்றுமை [சொல் பொருள் - திரும்பி வந்துள்ள] அடிகள் முதலிய [49]

சிற்சில இடங்களில் ஒரே சொற் பிரயோகம் திரும்பி வந்துள்ளது. 88-ஆம் பதிகம் (திருவாப்பனூர்) இரண்டாவது மூன்ருவது பாடல்களில் இரண்டு அடிகள் அப்படியே திரும்பி வந்துள்ளன.

## 20. கடல், கடல் சார்ந்தன [53]

கடலின் பிற பெயர்கள் :—அலை, அளக்கர், ஆர்கலி, ஆழி, உவரி, ஓதம், கலி, சாகரம், திரை, நீர், பரவை, புணரி, பௌவம், முந்நீர், வாரி, வாரீசம், வேலை.

கடல் வர்ணனை :—கடல் ஆழமுடையது, கருநிறத்தது, அழகியது, ஒலிப்பது, நீண்டது, பரவியது, பழமையானது, பெரியது, பொங்குந் தன்மையது, கற்களை

உடையது, திரை வீசுவது, மேகம் படிவது, கப்பல்கள் தன்மீது தவழப்பெற்றது. மகரம், மீன், சுறவம் முதலிய கடலுள் வாழ்வன, ஏழ்கடல், பாற்கடல் என்பன கூறப் பட்டுள.

கடலிற் கிடைப்பன :—இப்பி, சங்கு, பவளம், முத்து, பொன், மணி, வயிரம், (ஆறுகளின் சந்திப்பால் அகிற் பிளவு, சந்து, கரியின் மருப்புங் கிடைக்கும்.)

கடல் சார்ந்தவை :—ஓதம், கழி, கானல்.

திரை வர்ணனை :—போர்புரிவன போலவும், மலை போலவும், விண்ணளாவி, இரைந்து, நுரைபெருகிக் கரை பொருது பெருகி வருவன திரைகள்.

கடலொலி :—மண முரசுபோல முழங்கும்.

கானல் :—கானலில் கலைமான்கள் விளையாடும்.

கடற்புறத்துத் தலங்கள் :—தலைப்பு 86 பார்க்க.

கடற்புறத்து மரங்கள் :—தலைப்பு 143 பார்க்க.

## 21. கலி [55]

கலியின் வன்மையால் நல்லன அழியும் ; நல்லொழுக்கம் நிலைத்தல் அரிது ; கலைஞானத்தாலும், கற்றுங்கு எரியோம்பு ஒழுக்கத்தாலும், ஈதற் குணத்தாலும் கொடிய கலியையும் வென்றுநின்ற பெரியோரும், மறையோரும் தமது காலத்தில் விளங்கினர்கள் என்று ஞானசம்பந்த சுவாமிகள் கூறுகின்றார்.

## 22. கலை [56]

கலைகள் அறுபத்து நான்கு. சுவாமிகள் காலத்தில் கலையின் மேவு மனத்தார் பலர் இருந்தனர். கலை கற்கின்ற ஒலி ஊர்களில் நிரம்பி இருந்தது. மாதர்களும் கலை கற்று வந்தனர். கலைகள் பொழில்களிற் கற்பிக்கப்படும்.

## 23. கலைமகள் (சரஸ்வதி) [57]

நாமகள், நாவினுள் என்னும் பெயரினள் கலைமகள், சீகாழியிற் பிரமன் நாமகளொடு ஈசனை வழிபட்டான்.

நாமகளின் மூக்கை நம்பர் (தக்க யாகத்தில்) அரிவித்தார். சம்பந்தப் பெருமானது பாடல் பத்தும் மனமகிழ்வொடு பயில்பவர் கலைமகளது அருள்பெற்றுப் புகழொடு உலகினில் அமர்வர்.

## 24. கற்ருேர் - புலவர் - நிலை

தலைப்பு 91-பார்க்க.

## 25. காமன்

தலைப்பு 56 (2) பார்க்க.

## 26. காலம், பொழுது, நாள் [60, 62]

திதிகளில் அட்டமியும், நட்சத்திரங்களில் திருவாதிரை, உத்திரம், திருவோணம், கார்த்திகை, பூசம் என்பனவும், பயணத்துக்காகாத நட்சத்திரங்கள் (நாள்கள்) இவை யென்பனவும், கிரகங்கள் ஒன்பதும், பஞ்சகாலம் வரும் வகையும் கூறப்பட்டுள.

## 27. காளி—நீலி [63]

காளி :—தேவ போகத்தைத் துன்புறுத்திய தாருகனைக் கொல்வதற்காக இறைவனால் விரைவிற் சிருஷ்டிக்கப்பட்டவள் காளி. காளி சண்டத் தீப்போலக் கோபித்துத் தாருகனைத் தொடர்ந்து அவனை வெட்டிப் பலியிட்டாள். காளியின் பெருங் கோபத்தை அடக்க வேண்டிச் சிவபிரான் நடனமாடினர். காளிக்குக் கோபம் அடங்கவும் குணம் பெருகவும் செய்து சிவபிரான் உலகத் துயரை ஒழித்தார். அம்பர்மாகாளம் என்னும் தலத்திற் காளி சிவபிரானைப் பூசித்தனள்.

நீலி :—மகிடனைச் (மகிடாசுரனைச்) சங்கரித்து இறைவன் அடியிணையைப் பூசித்தாள்.

## 28. கொடை, கொடையாளிகள், ஈதற் சிறப்பு [65]

இரப்போர்க்குக் கரப்பு இலாமலும் - பின்னர் வா - ஏன் அகால வேளையில் வந்தாய் எனக் கூறிக் காலம் பக

ராமலும் - இல்லையென்று சொல்லாமலும் ஈந்து மகிழ்ந்த பெரியோர்களும், கற்பக விருக்ஷம் போலவும் - மாரி போலவும் கேட்டதை வரையின்றி அளித்த செல்வர்களும், பக்தர்களும் - திருநீறு அணிந்தவர்களும். யாது விரும்பினார்களோ அதை ஒளித்தலின்றி அளித்த மேன்மையாளர்களும், பலபல அறங்களைப் பயிற்றிவந்த அறிஞர்களும், மழையின்றி வளமின்றிப் பஞ்சம் புகுந்து வருத்துங் காலத்தும் தமதுவண்மை குன்றாத வள்ளல்களும், யாது காரணத்தாலும் புலவர் மாட்டு வெய்யமொழி கூறாத பெருங்குணச் செல்வர்களும் சுவாமிகள் காலத்தில் இருந்தார்கள். புலவர்களும் கற்றோர்களும் நன்கு ஆதரிக்கப்பட்டார்கள். அத்தகைய பெரியோர்கள் இருந்த காரணத்தால் கலியின் கொடுமை அடங்கி இருந்தது; ஐயம் என்போர்க்குச் சதா சோறளிக்கப்படும் மனைகள் வாய்ந்த தலங்களும் இருந்தன.

## 29. சங்கு, சங்கம் [66]

சங்கங்கள் கடலிற் பொலிவன; வெண்ணிறத்தன; ஒளியோடு கூடியன; விலையுயர்ந்தன: நுனை மூக்குடையன; முத்தம் ஈனுவன; திரையால் மோதப்பட்டு இரவில் கரையிலும் திடலிலுஞ் சேர்வன. திரையால் உதையுண்டு சரிந்து, இரிந்து, ஒசிந்து, அசைந்து, இசைந்து கரையில் வெண்மணற் குவையிற் சேர்வன. திரையால் அலைப்புண்டு கடற்கரையிற் புன்னைமர நிழலில் வந்து கிடப்பன. உருவத்தில் மிக்கனவாய் வன்மையுள்ளனவாய் ஒளிரும் சங்குகள் உண்டு. தோடுகளும், வளையல்களும், சங்குகளாற் செய்யப்பட்டு அணியப்பட்டன.

## 30. சந்திரன் [246]

கலைகளை உடையவன்; வெண்ணிறத்தவன்; இயக்கம் உடையவன்; குளிர்ந்த கிரணங்களை வீசுபவன்; மாதர்கள் முகத்துக்கு உபமானம் கூறப்படுபவன். கூனலையும் முயல் போன்ற கறையையும் உடையவன்; வானிற் படகுபோலத் தோன்றுபவன்; கடல் கடைந்த காலத்தே கடலினின்றும்

தோன்றியவன்; தக்கனது வேள்வியில் இறைவனது காலால் தேய்க்கப்பட்டுத் தண்டனை பெற்றவன். சிவனது அட்ட மூர்த்தங்களுள் ஒருவன்.

சந்திரனுடைய பெயர்கள் :—அம்புலி, இந்து, இரவன், உடுபதி, எல்லி, சசி, சந்திரன், சோமன், திங்கள், நிலா, பிறை, மதி, மதியம்.

சந்திரன் வழிபட்ட தலங்கள் :—அனேகதங்காவதம், திருநாகேச்சுரம், மயேந்திரப்பள்ளி, மாந்துறை, மாற்பேறு.

## 31. (1) சமணர் (அக்காலத்திருந்த நிலை) [67]

ஆனைமலை முதலிய இடங்களை இருப்பிடமாகக் கொண்டவர் சமணர். 'சேனன்,' 'நந்தி' என முடியும் பெயர்களைப் பூண்டவர். பிண்டி மரத்தை - அசோகவிருக்ஷத்தை - பேணுவோர்; அதனால் பிண்டியர் எனப்படுவர். கரிய நிறத்தினர்; உறி தூக்கு கையர்; குண்டிகைக் கையர்; சுரையோட்டை ஏந்திச் செல்பவர்; மயிலின் தழைப்பீலிகளால் ஆய பெரிய குடைகளையும், மயிற் பீலிகளையும் கையிற் கொண்டவர்; வேர்வை உறவெயிலில் திரிபவர்; ஊத்தை வாயினர்: மாசு மெய்யினர்; உடல் கழுவாதவர்: அரையில் உடையின்றித் தெருவில் திரிபவர்; அறவழி கூறுபவர்; குளியாது உண்பவர்; கையில் உண்பவர்; கண் கழுவா முன்னே கஞ்சி உண்பவர்; அம்மணமாய் நின்று உண்பவர்; இளம்பெண்கள் எதிரில் நிற்கத் தமது தலைமயிரைப் பறித்துக் கையில் அப்பெண்கள் இடும் சோற்றுத் திரளை உண்பவர்; கடுக்காய், சுக்கு தின்பவர்; கடுக்காய்ப் பொடியை உடலிற் பூசுபவர்; பனை ஓலையால் ஆய தடுக்கு, பாய் இவை தமை இடுக்கித் திரிபவர்; அவை தமை உடுப்பவர் மரணாவஸ்தை படுபவர்போலத் தலை பறிசெய்து தவம் புரிவோர்; புற்றேறிக் கடுந்தவம் புரிவோர்; பொய் மிகுந்தவர்; பொய்த் தவத்தை மெய்த்தவமெனக் கொண்டு நிற்பவர்; மொட்டையர்; மௌனம் சாதித்தல் முதலிய கடுநோன்பினர்; மதுநீக்கித் தவமுயல்வோர்; அமண் அழிப்பர் (சிலர்) கழிக்கரை யருகிலுள்ள

தமது பள்ளிகளில் இருந்துகொண்டு மீன் கவர்வார்; பொல்லா மனத்தினர்; விருது பகர்பவர்; வெஞ்சொலாளர்; எலித்தொழிற் பாட்டு, கிளிவிருத்தம் ஆதிய நூல்களை இயற்றினவர். இவர்களுள் 'சாவகர்' (சைனர்களில் இல்லறத்தார்) சாவும் தருணத்தும் வாது செய்யும் இயல்பினர். சமணர்கள் 'அருகர்' எனவும் சொல்லப்படுவர்.

## (2) புத்தர், சாக்கியர், தேரர் [68, 70]

புத்தர் [70] :—போதி விருக்ஷத்தை (அரச மரத்தைப்) பேணுவோர்; போதியர் எனப்படுவர். பிடகர் எனவும் சொல்லப்படுவர். துகில் அணிபவர். போர்த்த மெய்யினர். மருதம்பூவைப் 'புட்டத்தே அட்டிட்டுப் புதை'க்கு மெய்யினர்.

சாக்கியர் [68] :—உடை (சீவரம்) போர்ப்பவர்; பட்டாடை புனைவர்; கருநிறத்தவர்: கஞ்சி யுண்பவர்; கொடியர்; புறங்கூறுவோர்; வஞ்சகர்.

தேரர் [69] :—அறுவகையர்; இருந்து உண்பவர். மண்டையில் (ஒருவகை மட்கலத்தில்) கஞ்சிகொண்டு உண்பவர்; குணமிலார்; மருதம் துவரூட்டிய உடையினர்; தீய கருமம் சொல்லுபவர்; கையில் மண்டை கொண்டு உழல்பவர்.

இவர்கள் உடுக்கக் கடுக்காய், மருதம் துவரூட்டிய (சிவந்த) உடையும் உண்டு. பொன்னிறத்த (மஞ்சள் நிறத்த) சீவரமும் (உடையும்) உண்டு.

குறிப்பு :—சமணர், அருகர், சாவகர், பிண்டியர் என வருவன ஒரு சாராரைக் குறிக்கும்; இவர்கள் உடையிலார். புத்தர், பிடகர், போதியர், சாக்கியர், தேரர் இவர்கள் வேறொரு சாரார்; உடையுளோர்; புத்தர், தேரர், சமணர் என வருதலால் புத்தருக்குள் தேரர் வேறு ஆவார். குண்டர் சாக்கியர், சமண் குண்டர் என வருதலால் குண்டர் என்னுஞ் சொல் சமணர், சாக்கியரைக் குறிக்கும் பொதுச் சொல்.

## (3) சமணர், புத்தர் இவர்தம் குறைபாடுகள், சாஸ்திரங்கள், பழக்க வழக்கங்கள் [72, 74]

சமணரும் புத்தரும் புறங்கூறுஞ் செயலினர். அலர் தூற்றுங் குணத்தர், நல்லது அறியார். வேதம், அங்கம், வேள்வி இவைகளை நிந்தனை செய்தனர். வைதிக வழி அறியார். ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயன் அறிகிலார். அவர் உரைகள் நஞ்சினுங் கொடிய. அவர் கொண்ட நெறி பழமையதாயினும் துளங்கும் நெறி. அவர்கூறி வைத்த குறி பிழையது. அவர் நயமுக உரையினர், வேடிக்கைக் கதைகள் உண்டுபண்ணித் திரிவர். நீதிகள் பல சொல்லுவர். ஆனால் அந்நீதிகளைத் தம் நினைவிற் கொள்ளும் ஆற்றல் இலாதவர். அமணராயினோர் சைவர் தம் மேலுற்ற காற்றுக் கொள்ளவும் நில்லார். ஊன் நன்று என்பர் ஒரு சாரார்; தீது என்பர் ஒரு சாரார்; வேளை தவருது உண்பார்; மூடிய சீவரத்தர் முன் கூறுண்டேற, சமணர் பின் கூறுண்டு காடி தொடுவர். புத்தர் பிக்ஷுக்கள் உச்சிப்போதின் முன்பே உண்ணுவர். உலகிற் பெரியோர்கள் உரைத்த மொழிகளைத் திருடி நீதிநூல் செய்பவர். எங்குமில்லாததொரு தெய்வம் உளதென்று உளறிச் சமயங்கள் கண்டவர். பல தருமங்களைச் சனங்களுக்குக் காட்டி அவர் மனத்தைக் கவர்பவர். போதியார், பிண்டியார் இருவர் நூலும் பொய்ந்நூல். இவர்கள் ஓதியுங் கேட்டும உணர்வினை யிலாதார், நல்வினை நீக்கிய வல்வினையாளர்.

## (4) சமணர், புத்தர் சொல் பயனிலது என்னும் உபதேசம் [73]

சமணரும் சாக்கியரும் உலகின் அவலத்தை மாற்ற இல்லார். அவர் சொற்கள் அவத்தமாவன, இந்திர ஞாலம் போல்வன, பயனற்றன, வீறிலாதன, நஞ்சினும் கொடியன, மெய்யிலாதன, பிழையுள்ளன; அவைதமை நினைக்கவும் வேண்டா. சமணரும் சாக்கியரும் அலர் தூற்றுங் குணமுடையோர், புறங்கூறுவர்; ஆதலால்

அவர் சொல்லைக் குறிக்கொள்ளன்மின்; அவர் திறம் விட்டகலுமின்.

## (5) சமணும் சிவனும் [78]

1. சிவபிரானது உள்ளக்கிடை :—அமணர், சாக்கியர், தேரர், புத்தர் இவர்களைச் சிவபெருமான் காய்ந்தார், அடக்கினர், அழித்தார். தம்மைச் சேர ஒண்ணாது அவர்களை மயக்குவித்தார். அவர்கள் உரைகளைப் பொய்யாக்கினர். அவர்கள் பெருமையை ஒழித்தார்.

2. சிவபிரானது அருமை :—அமணர், சாக்கியர், தேரர், புத்தர் அவர்கள் அறியா நெறியார் இறைவர். அவர்களால் என்றும் அறியப்படாத வேடத்தவர் அவர். அவர்கள் உணர்வுக்கு அரியவர், அவர்களுக்கு அயலார், அவர்களுக்கு வெளிப்படாதவர்.

3. சிவபிரானது தன்மை :—சமணர், தேரர் முதலானோர் உரைக்கும் புன்மொழிகளைச் சிவபிரான் பொருட்படுத்தார். வேடிக்கையாக விரும்புவார். அவர்கள் இழிவுபடக் கூறினும் தம் பெருமை குன்றாதவர். அவர்கள் சித்தத்தில் அணையார். அவர்களுக்கு அருள் செய்யார். அவர்கள் உரையை விலக்கித் தம்மைச் சரணென அடைந்தவர்களை வலிய ஆட்கொண்டு அவர் தம் உணர்வினுள் நிற்பார்.

4. சிவபிரானது பெருமை :—அமணர், சீவரத்தர் வாழ்ந்த இடமெல்லாம் சிவனதே. அவர்கள் தேடி வணங்கிய தேவர்கள் எல்லாம இறைஞ்சும் பிரான் சிவபிரான்.

5. சமணர் முதலானோர் சிவபிரான் மாட்டிருந்த வகை :—சமணர் சாக்கியர் முதலானோர் சிவபிரானை இறைவன் எனக் கொள்ளார், பேணார், போற்றார், ஓயாது இழிவுரை கூறுவர், நித்தம் பரிகசிப்பர். இறைவனது ஐந்தெழுத்தை நாடார்; இறைவனைப் புகழ்ந்து புண்ணியங் கொள்ளார்: மனத்தை வருத்தும் பொய்க் கதைகள் கூறிச் சிவபிரானை இழித்துப் பேசுவர்.

6. சிவ ரகசியம் :—சமண் சாக்கியர் முதலானோ ரிடம் பொய்க் குவையை வைத்து அக்கள்ளத்தார்களை இறைவர் ஏன் ஆக்கினர்? அவர்கள் ஏன் இறைவரை அலர் தூற்றுதல் வேண்டும்?

## 32. சமயங்கள்; சிவனும், சமயங்களும் [79, 124 (82)]

இறைவரே ஆறு சமயங்களை வகுத்தனர், வேதம், ஆகமம், அறத்தொகுதி இவைதமை ஆறு சமயங்களும் தழுவி நிற்கும். திருநீறு சமயத்தாற் போற்றப்படுவது. அமண் சமயமும், புத்த சமயமும் உளறுவோரால் உண் டாக்கப்பட்டன, தழுவப்பட்டன.

## 33. சரித்திரங்கள் [80]

1. கடல் கடைந்தது [80 (1)] :— பெரிய மலையை மத்தாக நிறுவி, நெருப்பை உமிழ்வதும், சினத்தையும் விடத்தையும் பொறிகளையும் உடையதுமான பெரிய பாம்பைக் கயிறாகச் சுற்றி, அசுரரும் அமரர்களும் சலசல என்று அலைகடலைக் கலங்கக் கடைந்தனர். அப்பொழுது (ஐம்)பூதமுங் கலங்க கொலைமலி வேக விஷம் எழுந்தது. அதைக் கண்டு தேவரும் அசுரரும் பயந்து சிதறுண்டு ஓடினர். சிவபிரான் அவர்களுக்கு நிழல் அளித்தனர்.

2. ராகு, கேதுக்கள் :—அமுதுண்ண வந்த அரவின் சிரத்தை அரி (திருமால்) அரிந்தனர். அறுபட்ட சிரங்கள் சிவனே சரணம் எனப் பரவ இறைவன் அவை தமைக் கிரகங்கள் (ராகு, கேது) ஆக்கினர். சிரங்கள் பரவின தலம் சிரபுரம் (சீகாழி.)

3. (1) காவிரித்துறை காட்டிய திருவிளையாடல், (2) புறவின் பொருட்டு உணவளித்த சிபிச் சக்ரவர்த்தி யின் சரித்திரம், (3) வஞ்சகத்தால் உயிர் கவர்ந்த ஒருத்தி யின் பொருட்டுப் பழையனூரார் அஞ்சிய கதை (திரு வாலங்காட்டு நீலி கதை], (4) பாலனுக்கு (உபமன்யுவுக்கு)

இறைவன் பாற்கடல் ஈந்தது, (5) மச்சகந்தியைப்பற்றிய கதை-ஆகிய சரித்திரங்கள் குறிப்பிக்கப்பட்டுள.

## 34. சாதிகள், சாதி வழக்கங்கள் [82]

1. ஆயன்:—ஆயன் தன் கையில் உள்ள குழலை ஊதிக் காணாதுபோன எருமையை ஏனைய எருமைக் கூட்டத்துடன் கூடும்படி வரவழைப்பான்.

2. கடைசியர் (வயலில் வேலை செய்வோர்):—கழனியிற் கடைசியர் பாடுவர், விளையாடுவர்.

3. குறவர்:—வேடர் என்பதைப் பார்க்க.

4. பரதர் (வலைவாணர்):—கடற்கரை யோரத்தில் இவர்கள் மனையிருக்கும். ஆதலால் இவர்களுடைய மனையருகில் சங்கு ஏறி முத்தம் ஈனும்; கடற் பொருள்களைச் சேகரித்து வலைவாணர் விலை பேசுவர். பரதர் வலையிட்டு மீன்வாரிப் பூமியிற் பல இடங்களிற் கொண்டுபோய் விற்பர். கடற்கரையில் வாழும் மாதர்கள் தாழை மடல் கொய்து களிகூருவார்.

5. வேடர், குறவர்:—எயினர், கானவர், குறவர் புனவர், மறவர், மறவாளர், வேடுவர் இவை வேடர்களைக் குறிக்கும். இவர் வேடர் வகையினர் எனவுங் கொள்ளலாம். வேடர்கள் மலையிலும் காட்டிலும் வசிப்பவர்கள், கருநிறத்தவர்கள். பெரிய வில்லும் அம்புங் கொண்டுள்ளவர்கள், வெஞ்சொற் பேசுபவர்கள், போருக்குத் தயாராயிருப்பவர்கள்: இந்தச் சில வேடுவர்கள் மலை வழிகளூடு வருவார்களாதலால், யானையும், புலியும், சிங்கமும் இவர்கள் வரும் வழிகளில் வருதற்கு அஞ்சும். பன்றிகள் பூமியை உழுது கிளைத்த இடங்களிற் கிடைக்கும் மணிகளை வேடர்கள் சேர்த்துக் குவித்து வைப்பார்கள். வேடர்கள் கூட்டமாய்க் கூடிக் கடவுளைத் தொழுவார்கள். சந்தன மரத்தின் வலிய சிறகால் தினையை விதைத்து விளைப்பார்கள். பன்றி, மான், கிளி, இவை தினைப்புனத்தில் தினையை உண்ணவர வேடமகளிர் மலைச்சாரலிற் கிடைத்த கனக மணிகளை வாரிக் கவணென அவைமேல் வீசி அவைகளை

வெருட்டி ஓட்டித் தினைப்புனத்தைக் காப்பர். வேடர் மடவார், பரண் மீதிருந்து ஆயோ எனக் கூவிக் கிளிகளை ஓட்டுவர். வேடர்கள் மலையிற் புனத்திற் காரகிற் கட்டையை விறகாக உபயோகிப்பார். அதன் புகை எங்கும் நிரம்பி மணம் கமழும். மலையில் ஆண் குரங்கு நீண்ட மூங்கிலைப் பற்றி நிருத்தஞ் செய்ய அங்குக் கூடிய வேடுவர்கள் கூச்ச லிட்டுக் கைம்மறிப்பர்.

குறச் சிறுமிகள் அழகியர், சங்குவளை தரித்திருப் பார். குறப்பெண்கள் மலைச்சாரலிற் கூடி மூங்கில் உகுத்த முத்துக்களைக் குவித்து முத்து வாங்குங்கள் என்று ஆடி யும் பாடியும் விலைகூறி அளந்தளிப்பார். மணிகளையும் முத்துக்களையும் குறச்சிறுமியர் கூட்டி முறத்திற் கொழித்து மணிகளை விலக்கி முத்துக்களை உலையில் இடுவார். குறவர் புனத்திற் குவித்து வைத்த பருமணி முத்துக்களை அருவித் திரள்கள் அடித்துக் கொண்டிழியும். குறவர் மயிர் உலர்த்த (இடும் புகை) வாசனை வீசும். வேங்கைமரம் மலருங் காலம் புனவர் மணஞ்செய்துகொள் ளுங் காலமாம். சங்குவளை பூண்ட குறமாதர்கள் கையில் ஏந்திய குழந்தைகள் இரவில் நிலாவைத் தாவிப்பிடிக்கும்.

கோகர்ணம் என்னுந் தலத்தில் மறவாணரும் வேட ரும் நெருங்கிக் கூடி நதியிற் படிந்து மூழ்க அவர்கள் தத்தம் பழிதீர அருள்பெற்றனர்.

6. வேளாளர் :—ஆக்கூரில் இருந்த வேளாளர் ஈதலிற் சிறந்தவராய் விளங்கினர்.

## 35. சாரல் (மலைச்சாரல்) [83]

மலைச்சாரல் அழகு வாய்ந்தது. காலத்துக்கேற்ப வெம்மையுங் குளிர்ச்சியுங் கொண்டது. சாரலில் மேகங்கள் படிந்து தவழும். குருந்தம், குவளை, கோங்கம், கோடல், மல்லிகை, மாதவி மலரச் சாரல் குளிர்பூஞ் சாரலாகத் திகழும். சாரலிற் பலா, வாழை, மூங்கில்

வளரும். மூங்கில்கள் முத்தங்களைச் சொரியும். குருந்தம், கோடல், இலவங்கம், ஏலம் மணம் வீசும். ஆனை, கரடி, குரங்கு, கூகை, சிங்கம், பன்றி, மயில் உலவும். பாம்புகள் இரவில் சஞ்சரிக்கும். கூகைக்குலம் ஓடித் திரியும். ஆனையும், ஏனமும் (பன்றியும்) திரள் திரளாக அணைந்து செல்லும்; இரவில் வழி திகைத்த ஆண் யானை சாரல்வழி ஓடிப் பெண் யானையுடனும் கன்றுடனும் அடிவாரஞ் சேரும். வழி தவறின பெண் யானையைக் காணாது ஓடித் தேடிய ஆண் யானை அதைக் கண்டு அழைத்துச் சென்று அதனுடன் சாரலில் உறங்கும்.

ஆண் குரங்கோடு பெண் குரங்கு திரியும். மயில் பெடையுடன் ஆடும், ஆலும்; பசுக்கூட்டங்கள் மேயும். கனைத்த எருமை காணாதுபோக ஆயன் புல்லாங் குழல் ஊதுவான். அந்த நாதத்தைக் கேட்டு எருமைகள் யாவும் ஒன்று சேரும். குறமகளிர் ஆடியும் பாடியும் முத்தங்களை விலைக்கு அளந்து கொடுப்பார்.

சாரலில், பொன்னும் மணியும் கொழித்து அருவிகள் இழியும். சாரல் அருவிகளில் யானைகளும் இடறும். மழைக்கு அஞ்சின பசுவானது பசுக்கூட்டங்களுடன் வந்து சேரும்.

## 36. சிவபிரான் பூண்பன, அணிவன

1. ஆமை [189]:—இது சிவபிரான் கண்டத்தில் அணியப்பட்டு அவர் திருமார்பில் விளங்கும். அவர் ஆமையைப் பூணெனக் கொண்டுள்ளார். ஆமையை அணிந்து நடனம் செய்வர். அவர் அணிந்துள்ள ஆமை அழகாமை, இள ஆமை, எழிலாமை, ஏர்கொள் ஆமை, குறளாமை, பேரெழிலாமை, பொன்திகழ் ஆமை, முற்றலாமை, வரியாமை, வற்றலாமை, வாள் வரி யாமை என வர்ணிக்கப்பட்டுளது.

2. ஏன மருப்பு [191]:—ஏனத்தின் வெண்கொம்பு, ஏனத்தின் எயிறு, ஏனத்தின் முள் இவைதமைத் தமது மார்பில் இறைவர் பூணாக அணிந்துள்ளார்.

3. அக்கும் எலும்பும் [184, 190] :—சிவபிரான் அக்குவடம் அரையில் அணிந்துள்ளார். பிரமன், மால் இவர்களின் எலும்பை ஆபரணமாகக் கொண்டுள்ளார். தலைமாலை பூண்டுள்ளார்.

4. பாம்பு [188] :—யாரும் விரும்பாப் பாம்பே சிவபிரானுக்கு அணிகலம். பாம்புகளை அவர் ஆரமாகக் கொண்டுள்ளார். நாகம் உடலில் தொங்கும். சிரசிற் பாம்பு, காதிற் குழையாகப் பாம்பு, உடலிற் பாம்பு, கையிற் பாம்பு, அரையிற் பாம்பு, அரைநாண் பாம்பு, காலிற் கழலாகப் பாம்பு— இங்ஙனம் எங்கும் அரவாபரணமே, "நாகம்பூண், நாண், ஆரம் ஆகப் பூண்டார்" தேவாரம்-I-68-9.

இவர் பூண்டுள்ள பாம்பின் வர்ணனை :—அழல்வாய் நாகம், இளநாகம், கதநாகம், துத்திநாகம், பேழ்வாய் நாகம், பைம்மா நாகம், மாமணிய நாகம் ; ஆடரவம், பெருங்காட்டிலரவம், பொங்கரவம், பொறிகொளரவம், மிளிரும் அரவம், வாளரவம், வளையெயிற் றரவம், கடு விஷ அரவு, கவர்தலை யரவு, நச்சரவு, பட அரவு, பை கொள் அரவு, பொன்னென மிளிரும் அரவு, வரியரவு, விரிதுத்தி யரவு, கண் வாளரவு.

சிவபிரான் அரையில் அணிந்துள்ள பாம்பின் வர்ணனை [97 (2)] :—ஆடரவம், ஐந்தலை ஆடரவம், கோளரவம், பையரவம், ஐவாயரவு, கடிகட்டரவு, கிளரிளமணியரவு, சூறைநல்லரவு, நச்சரவு, படங்கொள் அரவு, பொங்கரவு, பொறிகொளரவு, பொன் மிளிரும் அரவு, மிளிரும் அரவு, வரியரா, விட அரா, அழல்நாகம், அழல் ஐந்தலை நாகம், அழலார் விழிக்கண் நஞ்சுமிழ் நாகம் (திட்டிவிடம் என்னும் பாம்பு), அளைவளர் நாகம், ஆடல் நாகம், எழிலார் நாகம், கவ்வழல்வாய்க் கதநாகம், சுடுமணி யுமிழ்நாகம், சுழல்வாயதோர் படமலி நாகம், பணங்கொள் நாகம், பல்லபட நாகம், பல்வளரு நாகம், புற்றில் நாகம், வேக நாகம், அழல்வாயதோர் பாம்பு, அளைபயில் பாம்பு, ஆடிளம் பாம்பு, படமல்கு பாம்பு, பை மிகுத்த பாம்பு, பொறிகிளர் பாம்பு, ஆடல் மாசுணம், நஞ்சுமிழ் மாசுணம்.

சிவபிரான் தமது கோவண ஆடையின் மேலும், புலித்தோல் ஆடையின் மேலும் பாம்பைக் கச்சாகக் கட்டியுள்ளார்.

5. திருநீறு [193, 197] :—இறைவனுக்கு விருப்புள்ள சாந்தம் திருநீறே. அவர் அணிவது சுடலை நீறு. தமது திருமேனியில் எல்லா இடமும் திருநீறணிந்துள்ளார். அவர் அணிந்துள்ள திருநீறு வெந்த சாம்பல்; ஒளிநீறு, கோதில் நீறு, கோலநீறு, சுடுநீறு, சுண்ண வெண்ணீறு, சோதிநீறு, தவளநீறு, தூவணநீறு, பால் புரைநீறு, பொன்திகழ் சுண்ண வெண்ணீறு, கொழும்பொடி, சால நல்ல பொடி, மாசில் பொடி, வண்ணவெண்பொடி, வெள்ளைப்பொடி எனப்பட்டுளது.

6. நூல் [200] :—இறைவன் திருமார்பில் அணிந்துள்ள வெண்ணூல் - நீறு துதைந்திலங்கு நூல், பொறிகிளர் பூணநூல், மின்போலும் புரிநூல், மின்னு பொன் புரிநூல், முப்புரிநூல், மூவிரு தொன்னூல்,-எனப்பட்டுளது.

7. அணிவன (போது) [184-202] :—அக்குவடம், எலும்புமாலை, பாம்பு, ஏன எயிறு, ஆமை, தோல், புரிநூல், மனவு (சங்குமணி), திருநீறு, கண்டிகை, தாழ்வடம், கொன்றைமாலை. சிவபிரான் அரையிற் கச்சும், வாளும் உண்டு.

8. அணிகள் [186] :—ஆரம், கழல், கிண்கிணி, குண்டலம், குழை, சிலம்பு, தோடு, நூபுரம்.

குழை :—அரவக்குழை, கனங்குழை, சங்கணி குழை, சங்கார்குழை, சுரிசங்க வெண்குழை, தாழ்குழை, தூய குழை, தோடார்குழை, வார்குழை, வெண்குழை.

தோடு :—சங்க வெண்தோடு, விரிதோடு, வெண்தோடு, வெள்ளைத்தோடு எனப்பட்டுளது.

## 37, சிவபெருமான் சடையிற் சூடுவன [113-122]

சிவபெருமான் தமது சடையிற் சூடியுள்ளன :—கங்கை, கொக்கிறகு, தாளம், திங்கள், பாம்பு, மலர்கள், மேகம், வெண்டலைமாலை ; இவை தம்முள் :—

1. கங்கை [113, 114]:—இது ஆழ்கடல் போன்றது; தெய்வநதி, புகழ்பெற்ற நதி, முதுநதி, வற்ருநதி, நீந்தலாகா வெள்ளத்தது. இதன் வெள்ளத்தைச் சிவபிரான் ஒரே சடையில் அடக்கி வைத்துள்ளார். கங்காதேவியின்மேனி மின்னற்கொடிக்கு உவமிக்கப் பட்டுளது. உமாதேவிக்குக் கோபம் வரும்படி கங்கை நங்கையைச் சடையிடைக் கரந்த கள்வர் சிவபெருமான். தவஞ்செய்த பகீரதன் பொருட்டுச் சிவபிரான் கங்கையைப் பூமிக்கு இழியச் செய்தார். தமது சடையினுந் தாங்கினுர். திங்களுக்கு அருகிற் கங்கையைச் சூடியுள்ளார். தீ நிறத்ததான சடையின் அழலை அவிக்கவந்த புனல்போலக் கங்கை விளங்கும்.

2. பிறை [117]:—இது சிவபிரானது குழற்சடைமுடிமேல் நெற்றிக்கண்ணுக்கு நேரருகிற் சூடப்பட்டுளது. இது இளம்பிறை, பிள்ளைப்பிறை, கூன்மதி எனப்படும். இறைவர் இதனைத் தன் சடைமீது மலராகவும் கண்ணி (மாலை)யாகவும் அணிந்துள்ளார். இறைவர் காலாற் பிறை உதைபட்டது: பின்னர் அவர் அருள்பெற்று அவர்தம் சடைமிசை விளங்கும் பாக்கியம் பெற்றது.

3. பாம்பு [118]:—சிவபிரான் சடையிலுள்ள அரவங்கள் இள அரவம். விட அரவம், படஅரவம், ஆடரவம், புள்ளியுடைய அரவம், செங்கண் அரவம், வெய்ய அரவம் என வருணிக்கப்பட்டுள்ளன. சடையில் மலைப்பாம்பும் உளது. இளந்திங்கள் முதிரும்படியாகவும், அச்சமுறும் படியும் பார்க்கும் அரவங்களைச் சிவபிரான் பூண்டுள்ளார்: அவர் சடையில் அரவும் மதியும் விளையாடுதலும் உண்டு. (நேர்மையற்றுச் சாபமுற்ற) திங்கள், (கொல்ல வந்த) பாம்புகள், (ஆங்காரத்துடன் பொங்கிவந்த) கங்கை இவை யாவும் தூநெறி பெறவேண்டி அவை தமைச் சடையிற் சூடினுர் சிவபெருமான்.

4. வெண்டலைமாலை [121]:—உடைந்த வெண்டலை, வாடிய வெண்டலை, பல்லார் தலை (நகுதலை), விழியிலாத் தலை இவைதமைச் சிரமாலையாகச் சிவபிரான் அணிந்துள்ளார்.

## 38. சிவபிரானது ஆடை, உடை, போர்வை

1. தோலுடை [97 (12)] :—இறைவனுக்கு உடை - தோலுடை, புலித் தோலுடை, சிங்கவுரி, மானுரி; ஆடை - கல்லாடை, கோவண ஆடை, துன்னவண்ண ஆடை, புள்ளித் தோலாடை; உடை - கிறிபடும் உடை, கீளுடை, துணியாருடை; போர்வை - கரித்தோல் போர்வை, வண்ணப் போர்வை.

2. கோவணம் [97 (9)] :—ஈரிரு கோவணம், நால்விரற் கோவண ஆடை, ஐவிரற் கோவண ஆடை, சரிகோவணம், விரிகோவணம், வெண்கோவணம், துணிபடு கோவணம், துன்னம்பெய் கோவணம், வெள்ளிய கோவணம் எனச் சொல்லப்பட்டுளது.

3. மானுரி [97 (16)] :—இறைவர் உரித்த மான் - உழைமான், கருமான், கலைபுனைமான், புள்ளிமான், புனத் திளமான், மாகாயம் பெரியதோர்மான், மைஞ்ஞிறமான் - எனப்பட்டுளது.

4. புலித்தோலாடை [97 (13)] :—சிவபிரான் அரை யிற் புலித்தோல். அந்தப் புலி - உரவன்புலி, ஒளி றாபுலி, கானவரி, நீடுழுவை, கொடுவரி, கொல்புலி, பாய்புலி, பொறியுலாம் அடுபுலி, வரிதருபுலி, வரியுறுபுலி, வல்லியம், வலிமிகுபுலி, வாள்வரி, வேங்கை எனப்பட்டுளது.

5. யானைத்தோல் போர்வை [92 (1,5)] :—சிவபிரான் கரியின் உரி போர்த்துள்ளார். அவர் உரித்த கரி—அடர் செவி வேழம், உரவெங்கரி, கடங்கொல் மால்களிறு, கட மணிமா, கருங்கையானை, காட்டுமா, காடமர்மா, கானமார் கரி, கானார் களிறு, குஞ்சரம், கைம்மா, கொல்லானை, கொல்லியல் வேழம், துங்கமால் களிறு, தொல்லானை, தொளைக்கையானை, பரிய கைம்மா, பனைக்கைப் பகடு, பிளிறாகுரல் மதவாரணம், பொங்குநற்கரி, பொருகரி, போதகம், போரார் மதமா, மத்த யானை, மருப்புநல் ஆனை, மாகரஞ்சேர் அத்தி, மா, மும்மத யானை, மூரிநாகம், மூரிவல் லானை, வஞ்சமத யானை, வருமாகரி, வாரணம், வெங்கண்

ஆனை, வெங்கண்மால் வரைக்கரி, வெம்முகவேழம் என விளக்கப்பட்டுளது.

## 39. சிவபிரானின் அபிடேகப் பொருள்கள் [95]

இளநீர், கரும்பின் சாறு, தயிர், தேன், நீர், நீறு, பசு நெய், பழம், பால், வெண்ணெய் - இவையே சிவபிரானுக்கு உகந்த அபிடேகப் பொருள்கள். முக்கியமாய் "ஆனிடை ஐந்து" அவருக்கு மகிழ்ச்சி சிவத்யானராய் அபிடேகத் துக்கு "ஆனைந்து" உதவுபவர் "அருள்வேந்தர்" ஆவார். அன்பர்களின் விழிநீர் அருவியும் தீயும் (ஊழித்தீயும்) அவருக்கு மஞ்சனமாம்.

குறிப்பு :—ஆனிடை ஐந்து – பால், தயிர், வெண்ணெய், நெய், திருநீறு எனத் தோன்றுகின்றது. "ஆன்முறையாலேற்ற வெண்ணீருடி" என வருவது கவனிக்கற்பாலது. திருநீறு என் பதற்குப் பதிலாக "மோர்" எனபாரும் உளர். பால், தயிர், நெய், கோசலம், கோமயம் எனக் கொள்வதே ஆரூரர் கொள்கை.

## 40. சிவபிரான் அட்ட மூர்த்தி [84]

மண், நீர், அனல், கால், ஆகாயம், மதி, இரவி, இய மானன் எனப்படும் எட்டிலும் இசைந்துள்ள மூர்த்தி யாதலின் சிவபிரான் "அட்டமூர்த்தி" எனப்படுவர்.

## 41. அர்த்தநாரீசுர மூர்த்தி [96]

இறைவர் தேவியொடு என்றும் பிரியா வகைக்குத் தனது ஒரு பாகம் பெண்ணானார். அவர் அங்ஙனம் தேவி யோடும் ஈரெழிற் கோலமாய் நிற்கின்ற மதி சொல்லலாந் தகைத்தன்று, அவ் வற்புதமும் செப்பரிது. அது தேவி செய்த தவப்பேறு என்க. ஈரெழிற் கோலமாய் இறைவர் நிற்பதால் அவருக்கு ஒரு காலிற் கழல், ஒரு காலிற் சிலம்பு; ஒரு காதிற் குழை, ஒரு காதில் தோடு; ஒருபாற் கூந்தல், ஒருபாற் சடைமுடி; வஞ்சி நுண்ணிடையும் உண்டு; அரையில் மேகலையும் உண்டு. அடியார்க்கு அருள் செயும்பொழுது மங்கை பாகராக வந்தே இறைவர் அருளு வார். "தோடுலாவிய காதுளாய்! சங்கவெண் குழையாய்"

என்று அர்த்தநாரீசுர மூர்த்தியின் திருக்கோலத்தைத் தியானிக்க வினை நீங்கலுறும்.

## 42. சிவபிரான் திருவுருவம் [102]

1. அடி (கால், சேவடி, சரணம், தாள், பாதம்) :— சிவனார் திருவடி, அடியார் சிரத்திற் கொள்ளும் பூ. அது கழலொலிப்பது; கேடிலாதது; அடியாரைக் காப்பது; இமையோர் ஏத்துவது; பத்தி செய்யிற் கிடைப்பது; பிணி நோய்க்கு மருந்தாவது; மந்திரமாவது; தோற்றத்துக்கு ஆதரவானது; பிரமன், மால் போற்றுவது; காலனை வீட்டியது; திரிபுரம் எரித்தது.

நெஞ்சே! நீ உய்ய வேண்டினால் பெருமான் திருவடியைத் தியானித்துக் கொண்டிரு. நாளும் அத்திருவடிகளை ஏத்தி ஆடிப் பாடினால் கூற்றுவன் நலியான்.

கால் (சரணம், சேவடி) :—அரிய நடஞ்செய்வது, கழலணிந்தது, கூற்றை உதைத்தது, வழிபடப் பெறுவது, இமையோர் பரவுவது, புறச்சமயிகள் தரிக்க ஒண்ணாதது, பஞ்சின் நுண் துகில் போன்றது, மலர் போன்றது, (வீரத்துக்கு) அறிகுறியாயுள்ள கழலணிந்தது.

தாள் :—தொண்டர்கள் போற்றுவது.

பாதம் :—வானவர் போற்றுவது, தாமரைப்பூப் போன்றது, குறைவிலாதது, சீர்கொண்டது, கழல் சூழ்வது, தேசுமிக்கது, நலமார்ந்தது, நிகரிலாதது, மறையோர் ஏத்துவது, கசிவு தருவது, கவர்வது, மதி போன்றது, வலிகொண்டது, விதியாவது, வினையாவது, கதியாவது.

2. அரை :—எலும்பாபரணம் பூண்டது. புலித் தோலும் அரவமும் கட்டியது.

3. அல்குல் :—கோவணம் அணிந்தது.

4. ஆகம் (உடல்) :—மலை போன்றது, எரி உருவத்தது, உமையம்மை பாகத்தது, செந்நிறத்தது.

5. உரு, உருவம் :—அடிமுடி அறிய முடியாதது, எரி போன்றது, அரியின் உருவம் கலந்தது, அரிவையின் உருவமும் சேர்ந்ததால் இரண்டு உருவம் கலந்தது,

இன்ன உரு என்று அறிய ஒண்ணாதது, எங்கும் ஆடரவங்கள் அமைந்தது, அழகியது, வெண்ணீறு பொலிவது, ஓரியல்பில்லாதது, சடை, பிறை, சாம்பற் பூச்சு விளங்குவது, கண்ணிறைவது, தேவார்ந்தது, பலவாயது, நீதி பலவுமே ஒன்றாயது, மறைதொடர் வரியது, ஐந்து பூதங்கள் - ஐம்புலன்கள் - ஐந்து நிலங்கள் - நான்கு கரணங்கள் ஆகிய இவை தம் பயனதாயும் அல்லதாயும் அமைந்தது. பெண்ணுருவமும் அல்ல, ஆணுருவமும் அல்ல, புள்ளிமான் தோல் பொலிவது, வெண்டலை பூண்டது, இருவர் உடற்பொறையுடன் திரிவது, யாவரும் அறியாததோர் அமைதியது, விண்ணிற் பொலிவது, பொன்னொப்பது, மின்னொப்பது, பளிங்கொப்பது, வயிரமொப்பது, பவளமொப்பது, பாலொப்பது, நலமளிப்பது, ஒருவனே பல வுருவாய் நிற்பது, திக்குகளே உடையாக அமைந்தது, உலகத்தைப் படைத்தளிப்ப மூன்றுருவாயது, பஞ்சபூதங்களுமாயது.

6. ஒளி:—இறைவன் ஒளியானது கதிரொளி, சுடரொளி, அந்தியன்ன பேரொளி, பவளத் திரள்போல் ஒளி; மிகு தேசு கொண்டது, அழகியது.

7. கண் (விழி):—கதிரொளி வாய்ந்தது, எரி காலுவது, காமதேவனை எரித்தது, இமையாதது, மூன்று கண்களும் முச்சுடர்கள், கண்மேற்கண், நெற்றியிலொரு கண், கண் மூன்று, கண் ஆயிரம்.

8. கண்டம், களம், மிடறு:—இறைவன் கண்டம் அழல்போல விளங்குவது, அழகிய நீல நிறத்தது, நஞ்சுண்டு கனிவுற்றது, களங்கமுள்ளது, மாசிலாமணி போன்றது, கரியது, கருமேகம் போன்றது, இருண்ட (கரிய) தூய மணியன்னது, விடங்கொண்டது, நீலமணி போன்றது.

9. கரம், கை, பாணி:—கரம் எட்டு; அரவம், மான், மழு, பரசு, பறை, எரி, கபாலம், கொடுகொட்டி, சுத்தி, சூலம், படை, ஏந்துவது; கரியை உரித்தது, நலமார்ந்தது, மழு வலத்தும் மான் இடத்தும் கொண்டது.

10. கழல் :—அழகியது. அடி புல்குவது, அதிர்வது, ஒலிப்பது, பழையது, இமையோர் தொழுவது, சீர் அமைந்தது, துயரகற்றுவது, நலம் மலிவது, தொண்டர் பணியாற்றுவது, வீரம் வாய்ந்தது, கொடுத்தற்கரிய வரங்களைக் கொடுப்பது, நாகமே கட்டுங் கழலாயது.

11. காது (செவி) :—அழகியது, அரவத்தோடு சங்கக் குழை, பளிங்கின் குழை, குண்டலம், தோடு திகழ்வது.

12. சென்னி :—ஆனஞ்சு ஆடுவது, ஆறு அணிவது, வேட்டுவப் பட்டங் கட்டியது, கொன்றை, மத்தம், வன்னி, மதியம், கங்கை, கொக்கிறகு, தலைமாலை திகழ்வது.

13. சோதி :—இள ஞாயிறன்ன சோதி, பொன்னொத்த சோதி, சுடர்ச் சோதி.

14. தோள், புயம் :—எண்டோள்கள்; மலை திரண்டன்ன தோள்கள், காண அழகியன, தூயன, நீண்டன, மல்லுக்கு உரியன, வில்லுடன் பொலிவன.

15. நடை :—விடையார்நடை, தேவி போற்றுநடை.

16. நா :—மறை நிறைந்தது, மறை வளர்வது.

17. நிறம் :—காய கதிர் நிறம், எரியுறு நிறம், தாதுறு நிறம், தீவெண் திங்களின் நிறம். பசுமை - செம்மை கலந்த நிறம், கடற் பவள நிறம், தேவி பாகங் கலந்தும் செந்நிறமே.

18. நுதல், நெற்றி :—அழகியது: பிறை பொலிவது, அனற்கண் அமர்ந்தது, கோவமிக்கது, திலகஞ் சேர்ந்தது, பட்டம் அமைந்தது.

19. மார்பு (அகலம்) :—அழகியது, செங்கதிர் நிறத்தது, பொன் நிறத்தது, விளங்குவது, விசாலமானது, உமை பங்கு சேர்வது, பவளமலை போன்றது; திருநீறு, கொன்றைமாலை, எலும்புமாலை, இளநாகம், ஆமை, ஏன மருப்பு, தோல், புரிநூல், சாந்து, திருநீறு பூண்பது.

20. முடி :—அழகியது; அயனும் மாலும் முயன்றும் எட்டமுடியாதது; பூக்கொண்டது; ஆனஞ்சாடுவது; இண்டை யணிந்தது; ஒளி சிறந்தது; கொன்றை, தாமரை, கோங்கு, கோடல், அரவம், கங்கை, மதிபூண்டது; மலர்

வாசனை கொண்டது; 'படர்ந்த சடை நெடுமுடி', 'தாமரைப் பொன்முடி', 'மணி நீண்முடி', 'முடியும் ஆயிரம்' எனப் பட்டுளது.

21. முண்டம் :—திருநீறு பொலிவது.

22. மூரல் :—வெண்ணகை ஒளி வீசுவது.

23. மெய் :—அனல் வடிவது, யானை உரி போர்த்தது, வெண்டலை மாலை பூண்டது, வெண்பொடி யாடியது.

24. மேனி :—அந்தி போன்றது, அரவார்ந்தது, அனலாடுவது, ஒளி கொண்டது, முற்றும் திருநீறு விளங்குவது, உரைவந்த பொன்னின் உருவினது, அழகு பொலிவது, என் பணிந்தது, ஒப்பிலாத ஒளிகொண்டது, ஒருவராலும் உவமிப்பது அரியது, கனல் போன்றது, கூறு பட்டது, ஒருபாகம் மாது இயங்குவது, ஒருபால் 'அரி' அமைந்தது. நக்க உருவது, மாலயன் காணகில்லாத் தன்மையது. கரித்தோல் பூண்டது, சிவந்தது, செம்பவள நிறத்தது, சங்கொத்தது, பொன் ஒத்தது, பாலொத்தது, சோதியது; பச்சை நிறத்தது, மெய் வாய்ந்தது, மூவாதது, விண்ணோர் விரவுவது, வெள்ளி மால்வரை யன்னது. "விடையார் மேனி" எனப்பட்டுள்ளது.

25. மொழி :—சுருதி மொழி, தூமொழி, மறைமொழி, செஞ்சொல்.

26. வடிவு :—உமையுறு வடிவு, பெண் - ஆண் எனத் தெரிதற்கரிய வடிவு, தழலும் வானும் போலும் வடிவு, கோல வடிவு, சித்த வடிவு, பித்த வடிவு, பொடியணி வடிவு, வஞ்சனை வடிவு, ஆயிரம் வடிவு, வையகம் வணங்க நிற்பதோர் வடிவு.

27. வாய் :—பவளவாய், மணிவாய்.

28. விரல் :—அழகியது, அலங்கல் பூண்டது, அணி கொண்டது, கலை மலிந்தது, மெல்லியது, தொல்லையது, நிருத்தம் புரிவது, பவள நுனை போன்றது, பாதத்திற் பொலிவது.

# 43. சிவபிரான் உறையும் இடங்கள் [103]

இறைவர் தம்மைக் காதலினால் நினைப்பவர்தம் அகத் திருப்பார், ஆகத்திருப்பார், உச்சியில் இருப்பார், உடலுள் இருப்பார், சென்னியில் இருப்பார், நாவில் இருப் பார், நெஞ்சிலிருப்பார், மனத்திருப்பார், வாயில் இருப்பார்; அன்பு பூண்டு அறுபகையுஞ் செற்று ஐம்புலன்களை அடக்கிய ஞானிகளின் இதய தாமரையில் இருப்பர்; இண்டை மாலை கட்டித் திருநாமங்களை எப்பொழுதும் ஏத் தும் திருநீற்றுத் தொண்டர் வாயினிலிருப்பர். தோத் திரஞ் செய்யும் வாயிடை யிருப்பர். அன்பர்தம் சிந்தை யிலும், நாவிலும், சென்னியிலும் இருப்பர். அறநெறியைக் கைப்பற்றித் தமது அருளுக்குப் பாத்திரமானவர் திறத்து இருப்பர், இன்னிசை பாடுவார்பால் இருப்பர். பாடல் பாடும் இடத்திருப்பார். தமிழின் இனிமையைப் பேசி இன்னிசை முழக்குவார் தம் இடத்தைவிட்டு அகலார், தம்மை, விரும்பி வழிபடுவார்தம் ஆவியைவிட்டு நீங்கார். ஆவியில் நின்றே அருளுவர். தமது கழலைத் தொழும் பெரியோர் சிந்தையுணின்றும் நீங்கார். புறச்சமயிகளின் சொற்களைப் பாராட்டாதவருடைய உணர்வினுள் நிற்பார். உருகும் அன்பர் உள்ளத்து ஒண்சுடர் அவர்; அழுதெழும் அன்பர் தம் சிந்தையினர்; மதித்து நினைப்பவர் தம் உண் ணின்று மகிழுபவர்; தம்மைப் போற்றும் தொண்டர் உள்ளமெல்லாந் தெரிந்து விளையாடுங் கள்வர்; போற்று வார் தம் சிந்தையே கோயிலாகக் கொண்டு திகழ்பவர்; தெளிந்த சிந்தையில் தேனுமாய் அமுதுமாய் நிற்பவர்; தம்மைப் போற்றிப் பாடுவோர்தம் வாயிலும் மனத்திலும் நிற்பவர்; பொய்யை நீக்கி மெய்யரான புநிதர்தம் சிந்தை யர், யோகியர் உணர்வில் எழுகின்ற பொருள், வாழ்த்து வார் மனத்துளார், தவத்தினர் உளத்தவர், ஏத்தும் தொண்டர் கழகத்தினர். பாடிப் பரவுவார் தம் உளத் தவர்; பத்தர் சித்தம் பற்று விடாதவர்; பரவிப் பணியுந் தொண்டர்தம் சித்தத்தவர்; மலரும் புனலும் கொண்டு தேடும் அடியார் சித்தத்திருப்பவர். நிதியே, மணியே,

சிவனே என்பார்தம் சிந்தையினர்; குற்றமற்றவர் தம் மனத்திலிருப்பவர்; தம்மைத் தியானிப்பவர் தம் மனத்தில் உலாவி நிற்பவர். மறை, அங்கம் வல்லாரிடம் இருப்பவர்; பேய்சூழ் சுடலையை வாசஸ்தலமாகக் கொண்டுள்ளவர்; பேயுடன் குடிவாழ்க்கை கொண்டுள்ளவர். தேவியின் மார்பகத் துறைபவர், அண்ணாமலை ஆதிய தலங்களையும் தம்மை நாடோறும் ஏத்தும் ஊர்களையும் தமது இடமாகக் கொண்டுள்ளவர்; வெள்ளை எருத்தின் மிசை இருப்பவர்; கல்லால் நீழலில் இருப்பார்; தாமரை மலரிலிருப்பார்; கடலுளார், காட்டுளார், நாட்டுளார், கழியுளார், வழியுளார், மலையுளார், மண்ணுளார், நீருளார், தீயுளார், காற்றுளார், விண்ணுளார்.

## 44. சிவபிரானது ஊர்தி [206]

சிவபிரானது வாகனம் பசுவும், விடையும். இடபம், எருது, ஏறு, சே, புல்லம், பெற்றம், பெற்று என்பன விடையைக் குறிப்பன. தேர், யானை, குதிரை இவை ஒன்றிலும் ஏறுமல் எருதொன்றையே என்றும் எம்பெருமான் ஏறுவர். ஏறொன்றே அவருக்கு உகந்த வாகனம். அவர் உத்தமப் பசுவின்மேல் ஏறுவதால் "பசுபதி யதன் மிசை வரு பசுபதி" எனப் பாராட்டப்பட்டார். சிவபிரான் ஏறும் ஏறு—அழகியது, கடியது, தூயது, பெரியது, வலியது, இணையில்லாதது, கொம்புடையது, சினமிக்கது, செண்டாடுவது, செங்கண்ணது, தறுகண்ணது, புகருடையது, பைங்கண்ணது, வெங்கண்ணது, பொலிவுடையது, போர்க்குற்றது, மாசில்லாதது, வீரங்கொண்டது, விளையாடுவது, வெண்ணிறத்தது, ஆடல்புரியவல்லது, இடிபோன்ற குரலை உடையது, இளமை கொண்டது, கடுநடையது, தொலையாப் பீடுடையது, மணி - அரசிலை மாலை இவை தமை அணிந்துள்ளது, வெள்ளிமலை போன்றது, வேகமாய்ப் பாயவல்லது.

## 45. சிவபிரானது கொடி [110]

சிவபிரானுக்கு எது ஊர்தியோ அதுவே கொடி. எனவே, அவர் கொடி "இடபக் கொடி" "பெற்றேன் றுயர்த்த பெருமான்" என அழைக்கப்பட்டுள்ளார்.

## 46. சிவபிரான் கையில் உள்ளன [109]

[சிவபிரான் ஏந்தியுள்ள படைகள் தலைப்பு 120-பார்க்க]

சிவபிரான் தமது திருக்கையில் ஏந்தியுள்ளன :— *அங்குசம், சுத்தி, சூலம், தண்டு, பாசம், அக்கு, அங்குசம், எரி, (வடவா முகாக்கினி), கங்கணம், கல்லவடம், கொடு கொட்டி, சிரந்தை, சுந்தி, (தமருகம்), சூலம், தண்டு, பறை, பாசம், பாம்பு, பேரி, பொக்கணம், மான், யாழ், வீணை வெண்டலையோடு; மான் இடது கையிலும், மழுவும் எரியும் வலக்கையிலும் கொண்டுள்ளார்.

அவர் ஏந்திய எரி :— திருநடனம் ஆடும்பொழுது எரி வீசி யாடுவர்.

அவர் ஏந்திய வெண்டலை—பிரமனது படுதலை; அயனது வெண்டலையை இறைவர் அருவராது கையிற் பிடித்து அதிலேதான் பலியேற்று உண்பர்.

அவர் கையில் அணிந்துள்ள பாம்பு :—ஆடரவம், ஐந்தலை அரவம், காரரவம் (கரிய பாம்பு), பட அரவம், அனலுமிழும் நாகம், வெங்கண் மாசுணக் குட்டி என விளக்கப்பட்டுளது.

அவர் ஏந்திய மான் :—இளமான், கலைமான், துள்ளு மான், மான் கன்று. இதனைத் தமது இடது கைவிரலின் நுனிமேல் நிலையாகத் தரித்துள்ளார்.

அவரது யாழ் :—இனிய இசை தருவது.

அவரது வீணை :—'மழலை வீணை' எனப்பட்டுள்ளது, ஒலி மல்கியது, கீதம் நிறைந்தது, பண்பொலிந்தது. இவ் வீணையை இறைவன் தடவி இசைதரப் பயில்வர்.

---

* சுத்தி-திருநீற் றுக்கலம்

## 47. சிவபிரான் எரியாடுதல் [138 (1)]

சிவபிரான் அங்கையில் அனலேந்தி, சுடலையில், நள்ளிருளில், கொள்ளித் தீ விளக்காகப், பாரிடமும் பேய்களும் சூழ, முழவம் - குழல் - மொந்தை முழங்கச், சடை சுழலப், பார்வதியுடன் எரியாடுவர். சிவபிரான் ஆடிருளும் திருமஞ்சனம் அக்கினி (யுகாந்தாக்கினி).

## 48. ஐந்தெழுத்து [42]

[நமசிவாய]

அம்மையினும், இம்மையில் வினையடர்த்தும் பொழுதும், வெய்ய நரகம் விளைந்தபொழுதும் துணையாய் நிற்பது அஞ்செழுத்து. அஞ்செழுத்து வேதியர்க்கு அந்தியுள் மந்திரம்; பத்தர்க்கு நிறைபொருள்; தன்னை விரும்பி ஓதினவர்க்கு இன்பம் அளிக்கும், பிறப்பை அறுக்கும், அண்டம் அளிக்கும், சிவமுத்தி காட்டும், மாடு (செல்வம்) அளிக்கும், பீடையைக் கெடுக்கும், இடரைக் கெடுக்கும், நமன்தமர் செய்யும் அல்லலைக் கெடுக்கும்; அஞ்செழுத்து இறைவனுக்கு உகந்தது, தீண்டற்கரிய தன்மையது, நீறணிவார்தம் வினைப்பகைக்கு அத்திரம் ஆயது, மறையாகி-மந்திரமாகி-வானவர் சிந்தையுள் நின்று ஆளுவது, யமனை அச்சுறுத்தி உதைத்தது, நமசிவாய என்னும் நாமத்தை இன்சொலால் நயமாக ஓதினல் எல்லாத் தீங்கும் நீங்கும், நன்னெறி கூடும், செல்வம் மல்கும், வல்வினை சிந்தும், வானவராந் தகுதி கிடைக்கும், இயமன் தூதரும் அஞ்சுவர், உருத்திரலோகம் கிடைக்கும், வெஞ்சொலார் அணுகார். நமசிவாய என்னுந் திருநாமம் செம்பொற்றிலகம் போன்றது, மணங்கொள் நறுமலர் ஒப்பது, வேத நான்கினும் மெய்ப்பொருளாவது; ஐந்தெழுத்து வண்டோதரி விரும்பி ஓதிய மந்திரம், பிரமனும் மாலும் ஓதிய மந்திரம், இராவணன் ஓதி உய்ந்த மந்திரம், ஐந்தெழுத்தை ஓதிய பயனய் ராவணன் இறைவனால் வாள் ஒன்று அளிக்கப் பெற்றான். அஞ்செழுத்தை ஓதி நல்லராய் நீறணிந்தவரை வணங்கின பெருமான் குலச்சிறை நாயனர். ஐந்தெழுத்தைக் காதலுடன் நெஞ்சு நைந்து கசியக்

கண்ணீர் மல்க நினைந்து நாடோறும் ஓதவேண்டும்; உருத்திராக்க மாலைகொண்டு செபிக்கவேண்டும். சுகத்தினும், துக்கத்தினும், தும்மல், இருமல் தொடர்ந்தபொழுதும், வினையடரும் பொழுதும், ஐந்தெழுத்தே துணை.

## 49. சிவனது அழகு, கோலம், சரிதை, வண்ணம், வர்ணனை, வேடம்
[98, 111, 123, 204, 205, 209]

1. கோலம் [111]:—அர்த்தநாரீசுரர் கோலம், அரவணி கோலம், அலங்கார கோலம், ஆடுங் கோலம், உமாமகேசுர கோலம், கயிலைக் கோலம், செஞ்சடைக் கோலம், திரிதருகோலம், திருநீற்றுக்கோலம், பலிக்கெழு கோலம், பூசை யலங்கார கோலம், மயானத் துறைதரு கோலம், மாலயனறியாக் கோலம், வருகைக் கோலம், விடைமேற் பொலிகோலம் முதலிய பற்பல கோலங்கள் விவரிக்கப்பட்டுள. அர்த்தநாரீசுர கோலத்தைக் கூறக்குணமாம். மாலயனறியாக் கோலத்தை ஏத்தி நின்றுடிப் பாடினுல் கூற்றுவன் நலியான்.

2. சரிதை [123]:—சிவபிரான் விருது இலங்கும் சரிதைத் தொழிலர். அவர் சரிதைகள் பலப்பல. அவர் பெண்ணோர் கூறினர், பேயொடாடுவர், இசைபாடுவர். முக்கண்ணர்; வளையினரது (மாதரது) மனைதொறும் திரிதரு சரிதையர், அரவம் ஆட்டுவர், புலித்தோலுடுப்பர், அனலேந்துவர், இரவிலாடுவர்.

3. வண்ணம் [304]:—சிவபிரான் வண்ணம் - அணி வண்ணம், அந்திவண்ணம், அழல்வண்ணம், அளக்கவொண்ணு வண்ணம், ஆண் இணை பிணைந்த வண்ணம், எரிவண்ணம், ஒருவனுமே பலவாகி நின்றவண்ணம், கனல் வண்ணம், காணெண வண்ணம், சங்கொளி வண்ணம், சுடர் வண்ணம், செஞ்சுடர் வண்ணம், தூ வண்ணம், பண்ண வண்ணம், பவள வண்ணம், பாகம் பெண்ண வண்ணம், பால் வண்ணம், மூவா வண்ணம், வான் வண்ணம், விண்ண வண்ணம், - இங்ஙனம் வண்ணம் ஆயிரம் உடையான் சிவன்.

4. வேடங்கள் [209] :—ஆடும்வேடம், உமையோடு கூடிய வேடம், கடுப்படுத்த மேனியர் (சமணர்) தவம் வெறித்த வேடம், கரி கதறப் போர்த்தவேடம், கானிடை யாடு வேடம், சுடலையில் நடநவில் வேடம்; சைவவேடம், பண்டங்கவேடம், பலியூண் கொள் வேடம், பிறைசூடு வேடம், பெண் விரவிய வேடம், மறைபாடியாடு வேடம், வினையை வென்ற வேடம், விசயற்கருளிய வேடம் ஆகப் பலபல வேடமுடையார் இறைவன். இவ்வேடங்களைத் தியானித்துப் போற்றி செய்தால் ஓதி யுணர்ந்தார்க்கும் அகப்படாத அரும் பொருள்களெல்லாம் விளங்கும்; கண் குளிரும், சிந்தை குளிரும். செவிகள் நிரம்பும், கவிகள் பாடலாம், துளக்கம் நீங்கும், தூய்மை வரும், பங்கம் ஒழியும், பழி நீங்கும், புகழ் உண்டாகும், புண்ணியம் சேரும், மந்திரமெனப் பலன்தரும், மயக்கந்தீரும், மருந்து போலுதவும், மாசு நீங்கும், மானங் காக்கும், வான்வழி காட்டும், விதியழியும், விளக்கம் பெறலாம், வினைவிடும், வீடு கூடும்.

5. வர்ணனை [205] :—சிவபிரான் குழலார் சடையர், கொக்கின் இறகர், தவளநீற்றர், கோவணக் கீளர், தழலார் மேனியர், அவரது பூண் - நாகம், தார் - கொன்றை, பாகம்-பெண், அவர் ஏற்பது பலி, ஏறுவது ஏறு, பாடுவது மறை, பூசுவது நீறு; அவர் புற்றரவர், நெற்றிக் கண்ணர், ஒற்றை விடையர், புரிநூலர், பொடியணி மார்பினர், புலியதளாடையர், பூதப்படையினர், வெடிதரு தலையினர், அவருக்குப் பொன்னியல் மேனி, மின்னியல் சடை, வேழவுரி.

6. அழகு [98] :—சிவபிரான் அண்டமும் எண்டிசையும் நிறைந்து நின்ற அழகர்; அரக்கன் ஆற்றல் அழித்த அழகர்; அரவரை அழகர்; அனலாடிய அழகர்; ஆலநீழ லழகர்; அறஞ்சொன்ன அழகர்; ஆவியுள் நின்றருள் அழகர்: காளியேத்தும அழகர்; நடங்குறையா அழகர்; பாடலோ டாடலழகர்; பார்வதி பாகராய் விடையேறழகர்; புனல் செஞ்சடையில் வைத்த அழகர், மதிக்

கண்ணி யழகர்; மாலையழகர், மேனியழகர்; முப்புரஞ் செற்ற அழகர்.

## 50. சிவபிரான் சடை [112]

சடை - அழகியது, நீண்டது, குளிர்ந்தது, சிவந்தது, திண்ணியது, நெடியது, பின்னியது, புல்லியது, முதிர்ந்தது, வளர்ந்துள்ளது, தீப்போன்றது, ஈரமாயது, ஏலங் கமழ்வது, ஒளி மிகுத்தது, மணங் கமழ்வது, கற்றை திகழ்ந் திலங்குவது, குழலுடன் விளங்குவது, தாழ்ந்து விளங்குவது, சுரும்பும் தும்பியும் சூழ்வது, சுற்றிவைக்கப் பட்டுளது, தழைத்துள்ளது, நிமிர்ந்த தோற்றத்தது, பொன்னிறத்தது, பொன் நீர்மையது, நிறைந்துள்ளது, வரிசையாயுள்ளது, விரிந்துள்ளது, படர்ந்துள்ளது, பவள நிறத்தது, பலவாயது, பள்ளமாயது, கட்டப்பட்டது, பின் புறந் தாழ்வது, புரிகொண்டது, பெருமை வாய்ந்தது, மின் போல விளங்குவது, கங்கை பாய்வதால் நனைந்துள்ளது, முடியப்பட்டது, வட்டமாய் அமைந்தது, மகிழ்ச்சி தருவது, புனல் ஒடுங்க இளம்பிறை தோன்றப் பொலிவது, கங்கை பாய்வதாற் பள்ளம் ஏற்பட்டுப் பொலிவது; அரவு, இண்டை, இளம்பிறை, கங்கை, கடப்பமாலை (மராம் கோதை), கரந்தை, கொன்றை, தலை (தலைமாலை) மலர்கள், மேகங்கள் இவை பொருந்தப் பொலிவது, பின்னிய நீண்ட தமது தாழ்ந்த சடையை இறைவர் ஏற முடிப்பர்.

## 51. சிவனது தன்மை, பெருமை, குணங்கள் [124]

1. அகம், புறம் உள்ளார் [124 (1)]:—சிவபிரான் அகத்தும் புறத்தும் உள்ளவர்.

2. அடியாரும் சிவனும் [6, 124 (2)]:—இறைவர் தம்மைக் கைதொழுதேத்தும் அடியார்கள் ஆகத்தும் மனத்தும் இருப்பர். அடியார்கள் புகழ மகிழ்வர்; அடியார்கள் உள்ளம் உருக அவர்களுடன் இருப்பர். தம்மை மதித்து நினைப்பவர் உள்ளத்திருந்து மகிழ்வர். தம்மை எப்போதும் ஏத்தும் அடியார்தம் மனத்தும் வாயிடையும்

அகலா திருப்பர். திருநீறு பூசும் அடியாரிடம் இருப்பர். போற்றியென அழுது தொழும் அன்பர்தம் சிந்தையிற் குடிகொள்ளுவர். விரும்பி வழிபடுவோர்தம் ஆவியை விட்டு நீங்கார். மலர் பறித்து இண்டை மாலை கட்டும் தொண்டரிடத்து இருப்பர். தம தடியார்களுடைய பாவந் தீர்ப்பார். பழி போக்குவார். நல்லடியார் இறைவரைத் தம் செல்வம் எனப் பாராட்டுவர்.

3. அடையாளம் [124 (3)] :—ஒருவரால் உவமை கூற இயலாத அரிய மேனியை உடையார். இரு மாதர்களை ஆதரிப்பார். பல பூதமும் பேய்களும் அவரைச் சூழ்ந் திருக்கும். வெண்டலை கையிற் பிடித்து மனைதோறும் பலிக்கு என்று வருவார். இவையே இறைவர்தம் அடையாளம்.

4. அந்தணரும் (மறையோரும்) சிவனும் [124, (5) (6) (88)] :—இறைவரே அந்தணர், அந்தணர்தம் தந்தை, அந்தணர்தம் அல்லல் தீர்ப்பவர், அந்தணர் சிந்தை செய்ய அவரை விரும்புகின்றவர், அந்தணர்தம் பாவனையை விரும்பும் முதல்வர்.

5. அரியர் [124 (7)] :—இறைவர்தம் அந்தம், ஆதி, அயனுக்கும் மாலுக்கும் தேவர்க்கும் எவர்க்கும் அறிய முடியாதவை. இறைவர் அரிய காட்சியர். அவர் இன்ன உருவினர், இன்ன நிறத்தினர் என அறிய முடியாது. உள்ளே நிலவும் ஆவியாய் ஓங்கும் அவர் தன்மையைத் தேவரும் அறிகிலார். இறைவர் வேத வேதாந்தர் கீழுல கும் மேலுலகும் ஓங்கும் அவர் தோற்றம் காண அரியது. அவர் உணர்ந்தார்க்கும் உணர்வு அரியார். ஓதியாரும் அவரை அறிந்தாரில்லை. ஒருடம்பில் இரண்டு உருவினர். அவரைக் கிட்டுதல் யார்க்கும் மிக அரிது. அவர் செய் வன யாராலும் அறிய ஒண்ணு. அவரை யாரும் தேடுவர். அவரை நினைக்கப் பிறவி நாசமாம். மதிலெரித்த அவர் திறத்தைக் கருதினுல் அவர் இன்னரென்னக் கூறுதல் யெரிதும் அரிது. அவரை நண்ணுதல் யார்க்கும் அரிது.

6. அருத்தம் [124 (8)] :—இறைவரே பொருள். இறைவரே இன்பம்.

7. அருமை [124 (9)] :—இறைவர் அருமை அளப்பரியது.

8. அருள் பாலித்தல் [124 (10)] :—இறைவர் அடியார்க்கு அருள் பயக்கும் நிழலாவர்; அவர் தேவர்கள் உய்ய அருளினவர்; அருள்பவர்; அடியார்கள் தொழ அருளுபவர்; அழுது அரற்றும் அடியார்களைத் தப்பாமே காப்பவர். ஞான மார்க்கத்தில் தம்மை அடைய முயல்பவருக்கு ஞானம் அருள்பவர். அடியாரது ஆசைதீரக் கொடுப்பர். உலகம் செழிக்கவேண்டித் தேவியோடும் பொலிவர். உள்ளே உருகில் உவகை கொடுப்பர். இனியன அல்லாதவற்றையும் இனிமையாக்கித் தரவல்லர். உண்மை அன்புடன் தம்மை நினையவல்ல அடியார்களுக்கு அரிய காட்சிகளை அளிப்பர். எங்கே பிறந்தவராயினும் சரி, யாதாகிப் பிறந்திருந்தாலும் சரி, தமது அடியாரயின் இதோ உள்ளேம் என்று தடையின்றி அருள் புரியும் தயாநிதி. காலையும் மாலையும் மலர்ப் பூசனைத் தொண்டு இயற்றும் அடியார்களுக்கு அருள் செய்யும் பான்மையர். அடியார்தம் ஐயம் அகற்றுபவர். நாற்றிசை அடியார்க்கும் அருள்பவர். ஞான யோகிகளுக்குச் சாரூபம் அளிப்பவர். தம்மைப் பேசிப் பிதற்றப் பெருமை தருபவர். தம்மையே தாயாகவும் தந்தையாகவும் கொண்டவருக்கு அருள் செய்யும் அண்ணல். பாசங்களையும் பந்தங்களையும் நீக்குப்வர். சோர்வுறுங் காலத்து உதவுபவரும் தம்மைத் தொழுவிப்பவரும் அவரே. தொண்டர்களுக்குத் தமது பாதநீழலைத் தரும் அருளாளர். நம்மை நற்றவ வழியில் நிறுத்தி உய்யும்வகை அருள்பவர். தம்மை நாடினவர்க்கு அருள் பாலிப்பவர். தமது மனத்தை ஒருவழிப் படுத்தித் தியானிக்கும் பெரியோர்களுக்குச் சாயுச்சிய பதவியை அளிப்பவர். தொண்டுக்கு உ.கப்பவர். அவரைப் பேசினல் அவர் வந்து உதவுவார். சதா காலமும் பெம்மான் எனத் தம்மை யேத்தும் அடியாருக்கு அருளுபவர். நினைக்கும்

வரமெலாம் அளிக்கும் வள்ளல். வழிபடும் அடியார்களுக்கும் தவத்தினர்க்கும் தமது திருவடி நீழலைத் தருபவர். அடியாரது குறை தவிர்ப்பவர். கங்கைக்கும் பிறைக்கும் தமது சடையில் இடந் தந்த பேரருளாளர். அவர் அருட் ப்ரகாசமே எங்கும் நிறைந்துள்ளது.

9 ஆட்கொள்ளுதல் [124 (15)] :—இறைவர் ஆட்கொள்ளும் வண்ணமும் அவருடைய மாண்பும் அளவற்ற வகையன. அவை சொல்ல முடியா. யார் அவரை நிலையாக விரும்பிச் சரணடைகிறார்களோ அவர் தமை விலையாக ஆட்கொள்ளுவர். கனிந்த அன்புடையவரைக் கலந்து ஆட்கொள்ளுவர். நானாவித உருவாக வந்து நம்மை ஆட்கொள்ளுவர். வஞ்சனை வடிவெடுத்து ஆட்கொள்ளுவதும் அவரது தன்மை.

10. ஆண், பெண், அலி, பேடு [124 (16)] :—இறைவர் ஆணுமல்லர், பெண்ணுமல்லர், பேடுமல்லர். அவர் ஆணுமாவர், பெண்ணுமாவர், அலியும் ஆவர்.

11. ஆதி, அந்தம், நடு ஆவர் [124 (17)] :—இறைவர் ஆதி ஆவர், அந்தம் ஆவர், நடு ஆவர், பிறப்பாவர், இறப்பாவர்; தோற்றமாவர், இறுதியாவர்; வித்து ஆவர், ஊழி ஆவர்.

12. ஆளுதல் [124 (18)] :—இறைவரே உலகாளுடையார், உலகாளவல்லார், முற்றும் ஆள்வர்.

13. இயல்பு [124 (22)] :—இறைவர் இமையவர் தொழும் இயல்பினர். இயல்பு அறியப்படாதவர், என்றுமோரியல்பினர் என நினைத லரியவர்; ஓரியல்பில்லாத உருவினர்; நினைய ஒண்ணா இயல்பினர்; பலி கொள்ளுதலும், நீறு பூசித் திரிதலும் அவர் இயல்பு.

14. உடைமை [124 (34)] :—குன்ற மெலாம் உடையர், ஞாலமெலாம் உடையர், உலகே முடையர், சேடெலாம் உடையார், ஞானவாழ்க்கை உடையார், தானவாழ்க்கை உடையார், மானவாழ்க்கை உடையார், வான வாழ்க்கை

உடையார், தவமுடையார், பாமாலே உடையார், பரவுவாரை யும் உடையார், பழித்திகழ்வாரையும் உடையார்.

15. உண்டில்லே என நிற்பர் [124 (35)] :—அல்லர் - ஆவர் என நிற்பார், உண்டிலே என நிற்பார், உயிர்கட் குயி ராய் உளர் இலர் என நிற்பார்.

16. கோள்கை [124 (77)] :—இறைவர் கொள்கைக்கு அளவில்லே. அவர் உயர்ந்த கொள்கையர், குற்றமிலாத கொள்கையர், குற்றமொழித்தருளும் கொள்கையர்; கேடில் கொள்கையர், நலமலி கொள்கையர்; வேடஞ்சூழ் கொள் கையர் - அதனல் - அரவு அணிவர், ஆனஞ்சாடுவர், எரி யேந்துவர், கங்கை தரிப்பர், கோலவடிவு கொள்வர், கோவ ணம் உகப்பர், சூல மேந்துவர், திங்கள் சூடுவர், நடம் புரிவர், பாமாலே நாடுவர், புலித்தோலுடையர், மங்கையை மணப்பர், மழு ஏந்துவர், விடைக்கொடி ஏந்துவர்.

17. சிவனும் வேதவேள்வியும் [124 (91)] :— வேத வேள்வியாகிய நன் குடையை இறைவர் கொண்டுள்ளார். அவரே வேதவேள்வி யாயினர்.

18. சிவனே அயன் மால் [124 (93)] :— சிவபிரான் தாமரைமலரில் வீற்றிருக்கும் அயனே ஆவர். ஊழியந்தத் தில் மால், அயன் இருவரோடுங் கூடி விளங்குவர். சிவன், மால், அயன் வேறல்ல.

19, சோதி [124 (105)] :—இறைவனது சோதி இள ஞாயிற்றின் சோதி போன்றது, இறைவன் ஈறும் ஆதியு மாகிய சோதி; உருகுவார் உள்ளத்து ஒளிரும் சுடர்; உல கெலாம் நிறைந்த சோதி; உம்பர் உலகும் கடந்த ஒளி; கனகத்தினும் மிக்க சோதி; சுடர்ச் சோதியுட் சோதி; சுத்தமான சுடர்விடு சோதி; தொடர ஒண்ணுச் சோதி; துளக்கிலா விளக்கு; செழுஞ்சோதி, பரஞ்சோதி, நீங்காத சோதி, மன்னு சோதி, மெய்ச்சோதி; விதியாய சோதி, சோதிக்கப்பால் நின்ற சோதி;

20. ஞானமாவர் [124 (107)] :—இறைவன் பெரு ஞானமுடைய பெருமான். அவர் வாழ்க்கை ஞான வாழ்க்கை; அவர் ஞானத்திரள்.

21. தன்மை, செய்கை [124 (115)] :—இறைவர் தன்மை தலையாயது, சாலவும் இனியது; அவர் அயனும் மாலும் அறியாத தன்மையர், ஆருயிராந் தன்மையர், தந்தையாந் தன்மையர்; தாயாந் தன்மையர், தம்மை நினைப்பார்க்குத் தாயென நிறைந்த தன்மையர், ஊன் கலந்து உண்ணல் நன்றென்பாரும் தீதென்பாரும் ஆன தொண்டர்கள் அன்புடன பேச நின்ற தன்மையர். அவர் பஞ்சபூத உறவினராய், ஐம்புலனாய் ஐந்திணை (நிலம்) யாய், நான்கு கரணமாய், அவையவை சேரும் பயனுரு வாய், பிறவுருவாய் விளங்கி நிற்கின்றார்; தனித்தவராய் (ஒருவராய்) நிற்பார்; மால், அயன் என இருவராய் நிற்பார்; மும்மூர்த்திகளாய்ப் பொலிவார்; மூன்று காலமாய், நான் மறையாய், ஐந்து பூதமாய் (புலனாய்), அறுசுவையாய், ஏழோசையாய், எண்குணத்தராய், அட்ட மூர்த்தியாய் விளங்குவார். உயிர்களுக்குள்ளே ஆவியாய் ஓங்கும் அவர் தன்மையை விண்ணுளாரும் அறிகிலார். அவர் தோற்றம் கீழுலகும் மேலுலகும் ஓங்கி யெழுமேனும் அது காண அரியது, ஆயினும், அவர் தன்மையை உரையாதாரில்லை, பரவாதாரில்லை. காரண காரிய நியாய வாத தருக்க இலக் கணங்களால் அவர் தன்மையைச் சோதிக்க இயலாது, (ஆதலால்) சோதிக்க வேண்டாம்.

22. தன்மை, செய்கை அறியப்படாதவர் [124 (116)] —அடிகள் செய்வன யாரால் அறிய முடியும்? எந்தையா ரவர் எவ்வகையினரோ? அவர் தோற்றத்தின் நிலையை யாரறிவார்? அவர் பெரியர். அவர் தன்மையைச் செய்கை யைப், பெற்றியை யாரறிவார்; ஓதியாரும்அவரை அறிவா ரில்லை.

23. துயர் தீர்ப்பவர் [124 (126)] :—இறைவரானவர் அடியார்கள் படுதுயரைக் களைவார்; அவர்களுடைய அல்லலைத் தீர்ப்பார்; இடர்கள் பலவும் தீர்ப்பார்; உலகத்தின் துயரையே களைவார்.

24. இறைவரைத் தொழுபவர் எவரேவர் என்பது [241 (133)] :—அடியார், அண்டர், அதிகுணர், அமணர்

நாடிய தேவரெல்லாம், அமரர்கள், அயன், அரிவை (தேவி), அருந்தவத்தோர், இசையவர், இமையவர், இரவி, உம்பருள்ளார், உலகெலாம், எண்டிசையோர், கணங்கள், கற்றவர், கின்னரர், சித்தர், சிவரத்தர், நாடிய தேவரெல்லாம், சுரர், ஞாலமெல்லாம், தானவர், தேவர்கள், தொண்டர், நரர், நான்மறை, நெறி நீர்மையர், பத்தர் கணம், பல்கணம், பல்கோடி உருத்திரர், பவளவாயார், பாரிடத்தவர், பாவாணர், புரந்தரன், புலவோர், பூதகணங்கள், பெரியவர், மடமான் விழியார், மண்ணினூர், மறையவர், மாதவர், மால், முடியார்மன்னர், முடியுடை அமரர்கள், முனிவர்கள், மூவர், மூவுலகு, மெய்த்தவத்தோர், மேலார், வாய்மையினூர், வானகத்தர், வானவர், விச்சாதரர்கள், விண்ணுலகம், விண்ணோர், விழுமியோர்கள், வேதம்பலவும், வேதியர், வையகத்தரர். இங்ஙனம் யாவரும் (எல்லோரும்—பலரும்) இறைவனை ஏத்துவர். அவரைப் பரவாதா ரில்லை.

25. படைப்பாதிக்குத் தலைவர் [124 (158)] :—ஏழுலகிலும் உயிர்வகைகளைப் பிரித்தவர். தமக்கோர் உருவிலாமலே உருவுசெய்தவர்; தாம் ஒரு கருவிலிருந்து வாராமலே எல்லாக் கருவிலும் தாம் இருப்பவர். எண்பத்து நான்கு லக்ஷவகையான உயிர்வகைகளைப் படைத்து அவ்வுயிர்களுக்கு உயிராய் அங்கங்கே நிற்பவர். உலகத்துள்ள எண்ணிலாப் பொருள்களையும் படைத்தவர். உலகில் உயிர், நீர், நிலம், இவைதமைக் கண்டவர். உலகத்தை உய்விப்பவர், கேடும் பிறவியும் ஆக்கினவர்; தோற்றமுங் கேடும் உயிர்களுக்கு வைப்பவர்; ஊழியந்தத்தில் இருவர் (அயன், மால்) எலும்பைகளை ஆபரணமாகத் தரித்துப் பழைய வண்ணமே எலலாம் படைப்பவர். படைக்கவும், அளிக்கவும், அழிக்கவும் மும்மூர்த்திகளானவர்; பல உலகங்களிலும் உயிர்களின் வாழ்க்கைக்கு ஆதாரமாய் நின்று காண்பவர்; விண், மண், மற்றைகளைத் தோற்றுவித்தவர்; உயிர்களை விழுங்குவர், உமிழ்வர்.

26. பண்பு [124 (159)]:—சமணர், சாக்கியருக்கு அருளாத பண்பினர் இறைவர்; நண்பினர் இறைவரை

நல்லரென் றேத்துவார்; பிறர் (நண்பிலார்) இறைவரைத் தீயர் என்பர். பகலும் இரவும் சேர்ந்த பண்பினர், பரமாய பண்பினர், பாலதாடிய பண்பர், அயனும் மாலும் அறியாத பண்பொடு நின்றவர், சமயத்திலுதவும் பண்பினர், பாடல்களாற் பரவப்படும் பண்பினர்.

27. பயனுவர் [124 (163)] :—நல்வினைப் பயனுவர்; பாடுவார் பாடற் பயனுவர்;

28. பாவம், பழிதீர்ப்பவர் [124 (169)] :—இறைவர் நினைத்துத் தொழுவாரது பாவந் தீர்ப்பார், பாதந் தொழுவாரது பாவம் தீர்ப்பார், பாவநாசர், நம் பழைய பாவங்களைத் தீர்ப்பார், அடியார்க்கு வந்த பழியைப் போக்குவர்.

29. பான்மை [124 (170)] :—காலையு மாலையும் மலர் கொடு மாலை புனைந்து வழிபடும் அடியாருக்கு அருளும் பான்மையர் இறைவர்; அவர் பலி தேர்ந்து உழலும் பான்மையர்; பக்தர் கணங்கள் பணிந்தேத்தும் பான்மையர்; பன்றியின்பின் தேவியோடும் வேடனுய்ச் சென்ற பான்மையர்.

30. பிணி தீர்ப்பவர் [124 (171)] :—அடியாரது நோயையும் பிணியையும் தொலைப்பர்; பிணி தீர்க்கும் மணி ஆவர்.

31. பிணியிலர் [124 (172)] :—இறைவர் நோயிலர், பிணியிலர்.

32. பித்தர் [124 (173)] :—இறைவர் பித்த வடிவினர். வெற்றியாற் பித்தனுப்பார்.

33. பிறப்பிறப்பு இலாதவர் [124 (175)] :—அழிவிலாப் பெற்றியர்; பிறப்பிலார்; இறப்பிலார்; உலகிற் பிறவாதவர்; முடிவிலாதவர்; பிறப்பும் இறப்பும் அவரே.

34. பிறப்பிறப்பு ஒழிப்பார் [124 (176)] :—தம்மை நினைக்கும் அடியார்தம் பிறப்பையும் இறப்பையும் அறுப்பார்.

35. புகழ் [124 (177)] :—இறைவர் அந்தமில் புகழுடையார்; குற்றமிலாப் பெரும்புகழுடையார்; உரையார்

பல்புகழார் ; புகழலது இகழ்பழி யிலாதவர் ; எல்லையில் புகழாளர் ; என்றும் விளங்கும் பலவாய புகழார் ; கீர்த்தி மிக்கவர் ; திக்கெல்லாம் நிறைந்த புகழார் ; அயனும் மாலும் புகழும் பெருமான் ; தேச நிறைந்த செம்மைப் புகழார் ; பரக்குங் கீர்த்தி வாய்ந்தவர் : பல புகழ்ப் பரமர் ; பழியிலாப் புகழார், வைய நிறைந்த புகழாளர்.

36. பெருமை [124 (182)]:—இறைவர் முடிவிலாப் பெருமையர் ; அளவிலாப் பெருமையர் : உம்பர்களைத் தாழ்த்தும் பெருமையர்! உம்பராலும் உலகினராலும் தம் பெருமை அளத்தற்கு அரியவர் ; அயனும் மாலும் அளத்தல் ஒண்ணுப் பெருமையர் ; யானையை உரித்துக் காமனை எரித்த பெருமை யுடையார் ; தம் பெருமை தாம் அறியார் ; தோலுடையைப் பெருமையாக் கொண்ட பெருமையர் ; பரப்புறு புகழ்ப் பெருமையாளர்; தலைக்குத் தலைமாலை யணிந்த பெருமையர் ; பெருமை ஓராயிரம் உடையார் ; அயனும் மாலுந் தேடி நிற்க எரியாய் வளர்ந்து நின்று மேலும் கீழும் காணுவகை நின்ற பெருமையர்; பலி திரிந்துண்ணுதல் அவர்க்கொரு பெருமை; பெருந்திறல் வாய்ந்த காமனை விழித்தெரித்தது இறைவர்க்கு ஒரு பெருமை போலும். நஞ்சம் உண்டு உலகுயிர்களை அளித்த அவர் பெருமையை உலகத்தவர் பேசலாமே ஒழிய அப்பெருமையை அளப்பரிது. இறைவரது பெருமையை உளத்திற் கொள்ளாத திருவிலிகளுக்கு ஞானம் ஊட்ட இயலாது.

37. பெற்றி [124 (183):—உறைவது காட்டிடையாயினும் இறைவர் பெரியர் ; ஆரறிவார் அவர் பெற்றியை? தமது அடியையும் முடியையும் யாரும் காணுத பெற்றியர் அவர். ஆயினும் இறைவர்க்கு இன்ன ஊர், இன்ன பேர் எனத் தொண்டர்கள் பேசநின்ற பெற்றியராவர் ; புத்தரும் சமணரும் தம்மைப் பித்தரெனக் கண்டு உகக்க நின்ற பெற்றியர், பித்தன் போன்ற பெற்றியர். பிரமனும் மாலும் தேடநின்ற இவர்தம் பெற்றிமையைப் பரவ வல்லவர்களுடைய மேல்வினை சிதறிப்போம்.

38. பொருளாவர் [124 (184)] :—வேதம், அங்கம் இவற்றின் பொருளானவர். சொற்பொருளாகி நின்ற ஆதியானவர்; இயலிசைப் பொருளானவர்; உயர்பொருளானவர்; உரையுலாம் பொருளாய் உலகை ஆளுடையார்; ஈருருவப் பொருளா யிருக்கும் இவரை அடைதல் பெரிதும் அரிது; பிறிதின்றி எல்லாம் நானென நிற்கும் பொருளாகி நிற்பவர்; ஏழிசையின் பொருளானவர்; சொல் தெரியாப் பொருளானவர்; பரம்பொருளானவர்; தேடுவார் தேடும் பொருளானவர்; ஞானப் பொருளானவர்; மறையோதும் ஒண்பொருளானவர்; இவரே இருவருமாவர், மூவருமாவர் எனக் கூறவும், அடைதற் கரியதுமான பொருளானவர்; மேலோர் பொருளானவர்; வினைபொருள் தானாகிய தலைவர்.

39. மருந்து ஆவர் [124 (191)] :—தேவி காதலிக்கின்ற மருந்து இறைவர்; தீவினைக்கு மருந்து அவர்; பிணி, நோய்க்கு மருந்து; வானவர்க்கும் தானவர்க்கும் மருந்து.

40. மறக் கருணையின் பாற்பட்ட தன்மைகள் [124 (194)]:—கூற்றை உதைத்து வேதம் பாடுவார் இறைவர்; நாடிப்பார்க்கின் அச்செயல் இறைவன் அருட்டிறத்ததாம். அன்பிலாரை இழிப்பார்; குற்றம் அவர்; கொலையாவர்; திரிபுரத்தைக் கூட்டழித்தார்; துயரவர்-துயரொழிப்பார்; துன்பம் அவர் - துன்பம் ஒழிப்பார்; நல்குரவு, இன்பம் இரண்டும் அவர்; வினையவர்.

41. மெய்யர் [124 (207)] :—இறைவர் மெய்யர்; பொய்ம்மை தீர்ந்த புண்ணியர்; பொய்யிலி; தம்மைப் போற்றிப் பணிவாரை மெய்ந்நெறியில் வைப்பவர்: அடியவர் துயரைக் களையும் வாய்மையர்.

42. யார் மாட்டு இறைவர் இருப்பார், அருளுவார் [124 (208)] :—இறைவர் தமது அருட்குரிய அடியார் திறத்து இருப்பார். அரிய தவம்புரிய முயல்பவர் மாட்டு உதவுவர்; புன்னெறியை விலக்கினர் பால் இருப்பார்.

43. யாருக்கு அரியார், சேயார் [124 (209)]:—அமரர்க்கும், முநிவர்க்கும் சேயவர்; அயன், மால் அறியாவகை

நின்ருர்; அறிவானவர்க்கும் அறியாவகை நின்ருர்; அன்புடன் ஏத்தாதவரிடம் பொருந்தார்; ஈன ஞானிகளுடன் கலவார்; உருகு சிந்தை யில்லார்க்கு அயலார்; அன்பு, பத்தி செய்யாதவரிடம் ஒளிப்பார்; கள்ள மனத்தாரைக் காணுர்; கல்லா நெஞ்சில் நில்லார்; காதலில்லாதவரை இழிப்பார்; கொடியர் மொழியைக் கொள்ளார்; சிறியவர் சிந்தைக்கு எட்டார்; தேவர், அமரர்கள், திசைத் தெய்வங்கள் ஆதிய எவராலும் அறிய ஒண்ணுர்; தேடுவார் தேட நிற்பார்; தேர்ந்தவரையும் தேட வைப்பார்; பணிவு இலாதவருக்கு அரியராய் நிற்பார்; பத்தியிலாத சுமடர் தம் சோதனைக்கு அகப்படார்; பதினெண் கணமும் உணரா வகை நின்ருர்; பொய்யடியா ருள்ளத்தே பொருந்தார்; போற்றி யென்னுதவருக்கு அருளார்; யார்க்கும் நண்ணலரியார்; யாரொடுங் கூடிலர்; வணங்காரிடம் பிணங்குவர்; விண்ணவர் இவரைக் கண்டிலர். திருவடியிணையைக் காணும் சித்தம் இலாதார்க்கு 'இல்லை' எனவே திகழ்வார். ஓதிவந்த வாய்மையரும் அவரை உணர்ந்துரைக்க இயலாது.

44. யாருக்கு எளியர், அணியர் [124 (210)]:—அழுது தொழும் அடியார்களுக்கு இறைவர் எளியவர்; ஐம்புலன் வென்றவர்க்கும், நல்ல அன்பர்களுக்கும், பிரியராம் அடியார்களுக்கும், புகழ்வார்க்கும் அணியர். தம்மைப் போற்றும் ஆசைகொண்ட நாவுடையாரே அவரை அறிதலாகும்; அவரைத் தொழுது சிந்திப்பவர்க்கு அவர் அருளுவர். ஓதி யுணர்வார்க்கு உணர்வு தருவர். கீதம்பாடி அவரை அடைதலாகும். நாற்றிசைக் கண்ணும் உள்ள பற்றற்றவருக்கும் தம்மை ஓதினவர்க்கும் அருளுவர். தொண்டர் மலர்கொண்டு தொழுதேத்த நண்ணுவர்; விரும்பி வழிபட்டால் நமது ஆவியைவிட்டு நீங்கார்; இன்னரெனப் பெரிதும் அரியராயினும் ஏத்தச் சிறிது எளியரே.

45. வரம் தருவார் [124 (214)]:—கொடுக்க அரிய வரங்களைக் கொடுப்பர் இறைவர். இசை பாட வரந்தரு

வார்; ஆயிர வரங்க ளுடையார்; கருதிய வரத்தை அருள வல்லார்.

46. வினை நீக்குவர் [124 (224)]:—அடியாரது மேல் வினை எண்ணில களைவார் இறைவர்; வரும் வினைகளையும் அகல அருளுவர்; ஈசன் எனத் தியானித்து எழுபவருடைய வினைகளுக்கு நாசனுவர்; எத்தொழிலை நாம் செய்திருந்தபோதும் நமது நினைப்பு அவரிடம் இருப்பின் நமது வினைகளுக்குப் பகைவராயிருந்து அவர் உதவுவர். தமது திருவடிகளைச் சிந்திக்கும் அன்பர்தம் வினைகெட அருள் புரிவர்; அவரை ஏத்துவோர் வினை தேய்வது திண்ணம்; காளத்தி என்னுந் தலத்தை உள்ளத்தில் உணர்ந்து தொழுதால் அவர் நம் வினைகளை வாங்குவர். தம்மை மலர்கொண்டு தாள்தொழும் அடியர்தம் வினைகளாம் பகையை அழிப்பர். நம் தீவினைகளை ஒழிக்க அவர் மருந்தாவார். தமது தீவினை தீரத் தேவர்களும் அவரை ஏத்துவர்கள். தீவினை தீர்க்க நின்றவர் அவர். அவர் நாமத்தை நாம் பரவினுல் நம் வினையை அவர் தீர்ப்பார். பசு பாச வேதனை என்னுந் தளைகளைத் தவிர்க்க அருளும் தலைவரவர். நம் பழவினைகளைத் தீர்த்தருளும் பண்பரவர். நம் பந்தங்கள் நீங்க அருளும் பரமரவர். நம் பாசங்களைக் களைபவரவர். புத்தியைத் தம்மிடம் வைத்து நினைப்பவர்தம் வினையைத் தீர்க்கும் பொருளாம் பேரொளியாரவர். வினைகள் சிதறி ஓடச் செயும் நெறி யருள வல்லாரவர். வினைகளைச் செற்று உலகின் தாய் போல உதவ வல்ல தன்மை வாய்ந்த தலைவரவர். வினையினின்றும் விடுதலை காட்டும் தந்தை யவர்.

47. பிற தன்மைகள், குணங்கள் [124]:—இறைவர் அகத்தினர்—புறத்தினர், அகலாத அன்பர், அகலாத செல்வர், அடியார்க்கு இனியர், அடியார் பருகும் ஆரமுது, அந்தணாளர் தம் தந்தை, அமரர்க்கமரர், அமுதர், அருளாய செல்வர், அரையிற் கலையிலாதார், அவனிக்குத் தாயென நின்றவர் அழகியது அறிபவர், அழித்தற் கடவுள், அற்றவர்க்கு அற்றவர், அற்றவர்க்கு

ற்றுணை, அறுசுவையாவர், ஆதிரை நாளர், ஆராத இன்பர்; ஆறுபதமும் தோன்ற நின்றார், இகபரம் ஆவர், இணையிலர், இமையோர் கண்ணவர், இயலிசைப் பொருளானவர், இரக்கமுடையவர், இரவுபகலானவர், இழிவு ஏற்றமானவர், இறுதிநாளிற் புரப்பவர், இன்சொல்லர், இன்பதுன்பங் கடந்தவர், இன்பந் தருபவர், இன்பமுற்றும் அவரே, உடனுவர், உண்ணிலா ஆவி ஆனார், உணர்வாவர், உணர்வருவகையினர், உத்தமர், உம்பர் பெருமான், உயிர்கட்கமுது, உயிர்கட்குயிரானார், உயிராய தன்மையர், உருகில் உவகைதருவார், உலகவர், உலகழியத் தாம் நிற்பார், உலகின் தாயனார், உலகுக்குக் கருத்தானார், உலகுக்குயிரானார்; உலகெலாம் சாய நின்றார், உற்றவரென்றிலர், ஊறுதேனவர், ஊனமில்லார்க்கு ஊறு சுவையாவர், ஊனுயிரானார், எங்கும் உள்ளவர், எங்குமாகி நின்றார், எட்டுத் திசையானார், எண் குணத்தர், எண்ணவர் - எழுத்தாவர், எத்தவத்தோர்க்கும் இலக்காய் நிற்பவர், எல்லாமாயவர், எவ்வுலகிற்கும் கண்ணவர், ஏழோசையர், ஒருவராய் நின்றவர், ஒருவரே பலவாகி நின்றார், ஒளியானார், ஒன்றலர், கண்ணவர், கண்ணும் ஆயிரமுடையார், கதிரோனவர், கதியாவர், கரணமாவர், கருத்தறிவார், கருத்தாவர், கரும்பனையார், கல்வியாய கருத்தர், கலையாவர், கவலையிலார், கள்ளம்வல்லார், கற்பகமாவர், கற்றநூற் கருத்தாவர், கனியனையார், காக்குங்கருணையர், காமமிலர், காலமாவர், காலனடையா வண்ணம் காப்பர், குணமூன்றுடையார், கும்பிடுவார் தமக்கன்பு செய்வார், குருந்தவர், குழகரவர், குற்றம் இல்லாதவர், குற்றம் ஒழிப்பார், குவிவர், குறியர், கூத்தாடுங் குணமுடையார், கேடிலர், கேடும் பிறவியும் ஆனார், கொடிறனார், கோவணங்கொண்டு கூத்தாடுபடிறர், சதுரர், சித்தர், சிறியர், சீதமாவர், சீருடையார் சீலமுடையார், சுற்றமாவர், செஞ்சொல்லார், செம்மை யுடையார், செற்றமில்லாதார், சென்றடையாத் திருவுடையார், சேடெலாம் உடையர், சேயவனவர், தஞ்சமாய தலைவர், தண்ணியர், தத்துவர், தந்தைதாயிலாதவர், தவத்தோர் கடவுள், தவ

வழி அருளுவர், தன்னடைந்தார் தம்பிரான், தன்னேர் பிறரில்லார், தன்னை நினைப்பார்க்கு அமுத நீழலாவர் - இன்பங்கள் தருவார், தன்னொப்பிலாத தூயவர், தன்னொப் பிலாதவர், தாணுவாய் நின்ற பரதத்துவர், தாயுந் தந்தையு மானார், திங்களாவர், திருத்தர், தீங்கரும்பு அனையர், தீய தில்லார், தீயானார், தீர்த்தமெலாம் சடையிற் கொண்ட தேவர், துயர் நோயிலாதவர், துளக்கம் இலாதவர், துறை யவர், துன்பம் அழிப்பவர், தேசமெல்லாம் திரிவர், தேவர்க் குந் தேவர், தேவர் பிரான், தேவியோடும் வேறுவர்—உடனு வர், தேனினுமினியவர், தேனும் அமுதுமானார், தேனொத் தவர், தொழப்படுவார், தொழிலவர், தொழுபவர், நாய கன், தோற்றம் - இறுதி யாக்கியவர், நக்கம் ஏகுபவர், நல்லர், நல்லநெறியார், நல்வினைப் பயனுவர், நலங்களாவர், நன்றுடையார், நன்னெறியாவர் நாணிலராய்ப் பலிபேணு வார், நிகரில்லார், நித்தர், நிலையவர், நிறையவர், நினை வார்க்கு இனியர், நினைவார்க்குத் தாய், நினைவார் வேடத் தவர், நீங்கா அன்பினர், நீங்காத் தவத்தர், நீதி உருவர், நீதி பலவுந் தன்னுருவாய தவன், நீதி பல வோதுவார், நீதி யர், நுண்ணியர், நூற்கருத்தவர், நெடியர், நெடுந்தகையர், நெதியர், நேர்மையர், நொடியுடையார், நோக்கு ஆயிரமுடை யார், பசியிலார், படிறர், பணிசெய்பவர்பால் மகிழ்பவர், பரக்கு மாண்பினர், பரதத்துவர், பரமானார், பருமைகொண் டவர், பலி உண்பதல்லால் வேறுதனமிலார், பலிகொளும் நீர்மையர், பாடி நின்றுடுவர், பாடுவோர்க் கருளுவார், பாமாலை உடையார், பாலர், பிணியில்லவர், பிரான், பிறை யவர், புண்ணியர், புயலவர், புலனைந்தையும் வென்றவர், புலையாயின களைவர், புறத்தினர், பெரியர், பேரருளாளர், பொழிலவர், பொறையவர், பொன்னனவர், போற் றப்படுபவர், மணாளர், மதுரமுடையார், மலம் தீர்ப் பார், மலையவர், மழையவர், மழைமொழி சடையர், மறைகள் முற்றுமாயினர் - வேறுனர் ; மாயமவர், மாயவனவர், முத்தியாய் நின்றவர், முத்து - பவளம்- மாணிக்கம் - முழுவயிரம் ஆவார் ; முதல்வர், முன்பர்,

முங்வர் குழுவொடு சேருபவர், முனிவு இலார், முழுது மாகிய மூர்த்தி, மூப்பிலர், மூலமாய முதல்வர், மூவுலகுக் கும் மூர்த்தி, மூன்று காலமும் தோன்ற நின்றவர், யாரொடுங் கூடிலார், யாவையுமாய ஈசர், வணங்கப்படு பவர், வாழ்க்கையாவர், வாழ்த்தப்படுபவர், வானுளோர்க் குப் பற்றுவர், விதியாவர், விரிவர், விருத்தர், வினைபொருள் களாவர், வினையாவர், வீட்டுநெறி காட்டுபவர், வெம்மை யவர், வெள்ளியவர், வேத வேதாந்தர், வேருவர்.

## 52. தன்மை ஒன்றுக்கொன்று எதிர்மறையாம் பொருளினர் இறைவர் [104]

இறைவர் அணியர் - சேயர்; அந்தமாவர் - ஆதி யாவர்; அரியர் - எளியர்; ஆணுவர் - பெண்ணுவர்; ஆணலார் - பெண்ணலார்; ஈருவர் - முதலானவர்; சீத மாவர் - வெம்மையாவர்; துன்பமாவர் - இன்பமாவர்; தோற்றமாவர் - ஈருவர்; நல்லர் - தீயர்; நெடியர்-குறியர்; பருமையர் - நேர்மையர்; பிரிவார் - புணர்வார்; பிறப் பாவர் - இறப்பாவர்; புறத்தினர் - அகத்துளர்; பெரி தரியர் - சிறிதெளியர்; பெரியர் - சிறியர்; பெருமையர் - சிறுமையர்; மண்ணினர் - விண்ணினர்; விரிந்தவர் - குவிந்தவர்; விருத்தர் - பாலர்; வேருவர் - உடனுவர்.

## 53. சிவபிரான் நடம் - ஆடல் [126 - 170]

சிவபிரானுக்கு ஆடலில் விருப்பம், அவர் மண்ணும் விண்ணும் புடைபட ஆடுவர். ஒத்துக்கு ஒப்பத் துள்ள மிதித்துக் கொட்டுடன் ஆடுவர். வட்டணை ஆடல் ஆடு வர்; மிகச் சுழன்று ஆடுவர். திசைநிறைய ஓங்கி ஆடுவர், ஒப்பிலா நடமாடுவர். சொக்கம், பண்டரங்கம், புயங்க ராகம் என்னும் ஆடல்களை ஆடுவர். நாத ஒலியுடன் ஆடுவர். அவருடைய ஆடலெல்லாம் அருட்காரணம்

பற்றியே. அவர் உமையுடன் ஆடுங்காரணத்தை ஆய்ந்தறிந்தவர் எவரும் இல்லை.

அவர் அரையில் அரவு அசைத்து ஆடுவர், அரவம் பூண்டு ஆடுவர், கையில் ஆடரவு விளங்க ஆடுவர், அஞ்சும்படியான சுடலையில் நாரிபாகமாக அனலேந்தி ஆடுவர்; பாடுவர். பகலிலும், அந்தியிலும், சந்தியிலும், மாலையிலும், இரவிலும், இருளிலும், நள்ளிருளிலும் கையில் எரியேந்தி ஆடுவர். கோவணமும், கீளும், புலித்தோலும் உடையாக ஆடுவர், நீறுபூசி, ஆறுசூடி, பிறைசூடி ஆடுவர்; இசைபாடி ஆடுவர், மறைபாட ஆடுவர், மறைபாடியாடுவர், விடையேறி ஆடுவர், வண்டுபாட ஆடுவர், வன்னி-மத்தம்-கொன்றைசூடி ஆடுவர்; சூலம்-மழு - மான் ஏந்தி ஆடுவர்; தலைமாலை யணிந்து-வெண்டலை ஏந்தி ஆடுவர்; கைவீசி ஆடுவர்; கால்வளைத்து வலனேந்தி ஆடுவர்; கழலும், சிலம்பும் ஒலிக்க ஆடுவர்; குழையுந் தோடும் அசைந்து துள்ள ஆடுவர்; அழல் அதிர வீசி ஆடுவர், மறைமுறைப் படிசுலாவழல் ஆடுவர். பேயின் கொள்ளி கைவிளக்காகத் தீயுகந்து ஆடுவர்; சுடலை விளக்கெரிய ஆடுவர். சடைதாழ, சடைசுழல, சடைபெயர்ந்து இடங்கொள ஆடுவர், பாடலுடன் ஆடுவர், சதிவழியே ஆடுவர், பலபாணிபட ஆடுவர், இலயஞ் சிதையாதபடி ஆடுவர், யானையின் உரியைத் தாம் போர்க்கக்கண்டு உமைபேதுற உமையின் சித்தந் தெளிய ஆடினர். காளியின் கோபத்தை அடக்கி உலகின் துயர் களைய ஆடினர். உச்சியிற் கங்கையும் பாகத்தில் உமையுமாகக் கொட்டுடன் ஆடுவர், இசைபாடி ஆடுவர், உமை யஞ்ச, உமை காண, உமை தாளமிட, உமை பாட, உமை இசைபாட, உமை மகிழ ஆடுவர். குழகராய் ஆடுவர், பூதஞ்சூழ ஆடுவர், பூதங்களும், பல்கணப்பேய்களும், சூழவும், நகைக்கவும், பாடவும், பரவவும், வாத்தியங்கள் ஒலிக்கவும் ஆடுவர். பேய்களுடன் ஆடுவர்; இமையோரும், பலகணங்களும், முனிவரும், மறையவரும், மாதர்களும் தொழுது நிற்க ஆடுவர். நந்தி முழவம் கொட்ட, வாணன் முழவம்கொட்ட, ஆடுவர். அவரது நடனத்தின்போது வாசிக்கப்படும் வாத்தியங்கள் :—

இடக்கை, கத்திரிகை, குழல், சங்கு, சல்லரி, தக்கை, தாளம், துடி, துத்திரி, படகம், பறை, முழவு, மொந்தை, யாழ், வீணை. கரியை உரித்தும், காளியை வென்றும், திரிபுரங்களை எரித்தும், நஞ்சை உண்டும், இராவணனை நெரித்தும் இறைவன் (வீர) நடனம் விருப்புடன் ஆடினர்.

இறைவன் நடஞ்செய்த தலங்கள் :—திருஅதிகை, திருஆலவாய், கச்சிஏகம்பம், திருச்செங்காட்டங்குடி, தில்லை யம்பலம்.

## 54. சிவனைக் குறித்த நிந்தாஸ்துதி [101]

இறைவனே! நீ கள்வன், மங்கை ஒருபங்கிருந்தும் சடைமேற் கங்கையை வாழவைத்த கள்வன்; இருவர் முன் னிலையில் தீத்திரளாக நின்ற கள்வன்; காட்டில் ஆனையை உரித்த கள்வன், கரியுரிபோர்த்த கள்வன்; கானிடை உறையுங் கள்வன்; என் உள்ளங் கவர்ந்த கள்வன்; தொண டர் உள்ளத்தில் ஆடல்வல்ல கள்வன்; நல்லவன் போலி ருக்குங் கள்வன்; கன்னியரைக் கவருங் கள்வன்; கண்டியூர் வீரட்டத்துறை கள்வன்; பிரமனது உச்சித் தலையிற் பலி கொள்ளுங் கருத்துடைய கள்வன்; மனைகள்தோறுங் கையிற் பலியேற்று உண்ணுங் கள்வன்; துக்கங் கடந்தவனு யிருந்தும் தலையோட்டிற் பலிகொள்ளும் படிறன்; பிச் சையையிச்சிக்கும் பிச்சன் (பித்தன்); உனது மற்றையவாழ்வு நன்றுயிருந்தாலும் தலையில் (தலையோட்டில்) பலிகொள்ளு வாய்; யாவரும் பழிக்க நீ பலி திரிந்துண்ணுவாய்; உனக்கு வேறொரு தனமில்லை; நீ சடையிற் புனலைக் கரந்தவன். அமணர் அஞ்ச அணைந்திடும் வஞ்சன்; மதியைச் சடையில் வைத்த படிறன்; அரக்கன் (இராவணன்) வலியை வாட்டிய தியன்; நல்லாரும் தன்னைத் தீயன் (தீயை அங்கையில் ஏந் தினவன் எனப்படுபவன்; நீ நட்டப்பெருமான் (நட்டம்-ஆடல், நஷ்டம்); பாம்பாட்டிய படிறன்; பிறர் பழிக்க உனது முன்னும் பின்னும் பேய்க்கணம் சூழத் திரிபவன்; நீ நாகத் தையும் மதியையும் உடன் வைத்தல் பழிப்புக்கு இடமல் லவா? நீர் மனைதோறும் இரக்கின்றீரே! அங்ஙனம் இரத்

தல் வறுமை காரணமாகவா? உம்மை அயலார் கண்டால் இகழ்வாரே!

## 55. சிவபிரான் பஞ்ச பூதத்திலும் மருவி யுள்ளார் [176]

நிலம், நீர், தீ, கால், விசும்பு-இவ்வைந்து பூதங்களு மாகி நிற்கின்றார் இறைவர்.

## 56. சிவபிரானது அட்டவீரச்செயல்கள்

1. அந்தகாசுரனைச் சங்கரித்தது [85] :—'அரக்கர், அசுரர்'-என்னும் தலைப்பைப்-5-(i) பார்க்க.

2. காமனும் ரதியும்; காமதகனமும் : [59, 86, 385] :- மன்மதன்—அனங்கன், ஐங்கணையோன், கருப்பு வில்லி, காமன், சுறவக்கொடியோன், மதனன், மால்மகன், வேள் என்னும் நாமங்களைக் கொண்டவன்; அழகன்; உருவிலான்; திருமால் புதல்வன்; மீனக்கொடியோன்; மலர்ப்பாணத் தான், கரும்பு வில்லோன்; சிவபிரானைப் பர்வத புத்திரி யாகிய பார்வதியுடன் அணைக்கவேண்டி விண்ணவர்களால் சிவபிரானிடம் அனுப்பப்பட்டவன். சிவபிரான் அற முரைத்து ஞானநிலையில் இருந்தபொழுது தூரத்தில் நின்று அவர்மீது பாணம் எய்திக் களித்தவன், அவர் கோபித்து நெற்றிக்கண்ணை விழிக்க அக்கண்ணினின்று போந்த நெருப்பாற் பொடியாகி உருவழிந்தவன். அவன் தேவி நிகரிலா அழகு வாய்ந்தவள். அவள் சிவபிரானை வேண்ட அவர் அவனை அவளுக்கு அளித்தருளினர். காமனை எரித்தபோது மால், அயன், இந்திரன் அஞ்சினர். உலகு செழிக்கவேண்டிக் காமனை ஈசன் எரித்தார். திரிபுரம் எரித்த பின் காமதகனம் ஆயிற்றுப் போலும்: காமனை உரு வழிய விழித்தது இறைவனுக்கு ஒரு பெருமை.

3. காலனை உதைத்ததும், மார்க்கண்டற் கருளியதும் [87] :—மார்க்கண்டரது சிவபூசைத் தொண்டு கலங்கத் தழலெழுவிழியுடன் கூற்றுவன் போந்தான்; சிவபிரான்

அவர் பூசைக்கு இரங்கிக் காலன் மார்பில் இதயத்தே புறந் தாளால் உதைத்தார்; 'என் அடியான் உயிரை வவ்வேல்' என்று உதைத்தார். பாசத்தோடு விழும்படியாக உதைத் தார். ஒரே உதையில் காலன் உருண்டு வீழ்ந்தான், அல றினன், இரத்தப் ப்ரவாகம் ஓடிற்று. இறைவன் திருவடி சிறிதுபட்டதும் காலன் உயிர்போயிற்று. காலனைச் சிவ பிரான் இங்ஙனம் உதைத்த சரிதத்தை எடுத்தெடுத் துரைப்போமாகில் நன்மை பெருகும்.

4. சலந்தரனைத் தடிந்தது [88] :-'அரக்கர், அசுரர்' என்னும் தலைப்பைப்-5 (V) பார்க்க.

5. தக்கன் வேள்வி தகர்த்தது [89] :—தக்கன் அறி விலான், மதிகெட்டவன், சுற்றமும் மக்களும் நிறைந்தவன், சிவபிரானுக்கு மாமனாரானவன்; தக்கன் உமையை யிகழ்ந் தான். அதனாற் சிவபிரான் உமையின்பொருட்டுத் தக்கன் யாகத்தை ஊமைகண்ட கனாப் போலக் கோலாகலமாக்கிச் சிதற அடித்து அழித்தார். விதிர்விதிர்த்த அத்தக்கன் தலையை அறுத்து முத்தீயில் இட்டார். சந்திரன், இந் திரன், சூரியன், எச்சன், அக்கினி, இமையோர், அமரர்கள், நாமகள், பிரமன், இவர்களையும் விதிவழியே தண்டித்தார். இங்ஙனம் தண்டனைபுரிந்து தக்கனுக்கும் ஏனையோர்க்கும் அவரவர் பாபத்தை யொழித்துப் பின் அருள்புரிந்தார்.

இறைவன் இவ்வண்ணம் வேள்வியை முனிந்து அழித்த பரிசைப் பகர்வோமாக.

6. திரிபுரம் எரித்தது [90] :—i. முப்புரங்கள் :—முத்தர அசுரர்கள் - அரக்கர் குலங்கள் நெருங்கிய அழகிய மா நக ரங்கள்; வானில்-அந்தரத்தில்-திரிவன, ஓடுவன, மதில் களாற் சூழப்பெற்றன; மாடங்கள் நெருங்கியன; காவல் மிக்கன; பழையன; பெரியன; வலியன; வாலியன; எதிரி லாதன; நேரிலாதன; நெடுவிசும்பில் நெருக்கி உலாவுவன; நினைக்கும் அளவில் பிறரை நலிவன; வரத்தால் உர முற்றன; கொடிய போருக்கு உற்றன.

ii. **மும்மதில்கள்** :—இவை விண்ணமர்ந்தன; இணையிலாதன; செம்பினாலாயன; செம்பொனாலாயன; நெடுமாடங்களையும் மலையன்ன மாளிகைகளையும் சூழ்வன; கொடி விளங்குவன; படையுடையன; போருக்கு உற்றன; காவல் பூண்டன; சேணில் (வானில்) உலவுவன; பேர் பெற்றன; அஞ்சாதன; திரிவன; நெடியன்; பழையன; வலியன; பொருவன; வீண் அடைந்தன.

iii. **திரிபுராதிகள்** :—இவர்கள் முத்தராத்தினர்கள்; எண்ணிலோர்கள்; அரக்கர், அசுரர், அவுணர், தானவர், நிசிசரர் எனப்பட்டுள்ளார்கள்; செங்கண்ணர்கள்; மின்னல் போன்ற வெண்பற்களை யுடையவர்கள்; வலிய புயத்தினர்கள்; அரிய திறல் வாய்ந்தவர்கள்; தவத்தினர்கள்; வரம் பெற்றவர்கள்; தேவர்களாலும் எதிர்க்கப்பட முடியாதவர்கள்; இளையாத வென்றி வாய்ந்தவர்கள்; களிபூண்டவர்கள்; அளவுபடாத கொலைத் தொழில் வாய்ந்தவர்கள்; போருக்கு உற்றவர்கள்; தருக்கினர்கள், தீயர்கள்; வினை பெருக்குபவர்கள்; திருந்தார்கள்; வலியர்கள்; மாறு கொண்டவர்கள்; மிக்க வெம்மை கொண்டவர்கள்; வளையாதவர்கள்; தம் பலம் அறியாதவர்கள்.

iv. **திரிபுராதிகள் செய்த கொடுமை, அவர்களின் வீரம், குணம், செய்கை** :—திரிபுராதிகள் எட்டுத்திக்கிலும் உள்ள பல இடங்களுக்குஞ் சென்று போர்செய்து வெற்றிபூண்டு உம்பர்களும் அஞ்சும்படியான வலிமை கொண்டிருந்தார்கள். எரிபோல எழுந்து உலகை நலிந்தார்கள். எமக்கு எதிரிலை என்று மண்ணிலும், விண்ணிலும் அடர்த்துச் சென்றார்கள். தேவருலகையும், மனிதருலகையும் நினைக்குமளவையில் நலிவு செய்தார்கள். தேவர்கள் அச்சுறும்படி வெம்மைப் போர் தேடிப்புரிந்தார்கள். வரம்பெற்று வன்மை புரிந்தார்கள். அவர்கள் வஞ்சகர்கள், நன்மையிலார்கள்; புன்மையுளார்கள்: மகாகோபிகள்; கொலைக் கணக்கு இலாதவர்கள்; இறைவனை நினையாதவர்கள்; தொழாதவர்கள்; இறைவன் பாதத்தை ஓதாதவர்கள்.

v. **திரிபுரம் எரித்த காரணம்** :—வெம்மை மிக்க திரிபுராதிகள் அடாத காரியங்களைச் செய்தார்கள். மண்ணையும் விண்ணையும் நலிவித்தார்கள், விண்ணோர் தமது விறலழிந்தனர். இந்திரன், பிரமன், மால் முதலான தேவர்கள் - "கல்லால் நிழலாய்! - சந்த்ரசேகரா! நீலகண்டா! எங்கள் இடர் களையாய்" என்று எல்லா மொழியாலும் இறைவனைத் தொழுதேத்தினர்கள். இறைவன் இரக்கங்கொண்டு பலகணங்களும் தம்மைத் தொழ, தேவர்கள் பன் மலர் தூவிப் பணிந்தேத்த, பாரோர் வணங்க, உலகை உய்விக்கும் பொருட்டும், உலகு நன்மை பெறவேண்டியும், பாவங்கள் தீர்தரவும், நல்வினை பெருகவும், திரிபுரங்களை முனிந்தார், சிரித்தார், விழித்தார், எரித்தார்.

vi. **போர்க் கோலம்** :—அண்டமளாவும் இரும்பொன் மலையான மந்த்ர மேருமலையே வில்; ஒப்பற்ற பெரிய உருவத்தையும் தழல்வீசுங் கண்களையும் பெற்ற வாசுகி யென்னும் மாநாகமே நாண்; அம்பு—அக்கினி, காற்று, அரி; அம்பின் ஈர்க்கு—காற்று; தேவர்களே தேர், மறைகளே குதிரை; அயனே சாரதி.

vii. **திரிபுரத்தை யழித்த வகை** :—திரிபுராதிகளை வெகுண்டு நோக்கினார், அதிகோப நெற்றியரானார், மலையாகிய சிலையைப் பிடித்தார், வளைத்தார், ஓரம்பை எய்தார், புரமூன்றை எரித்தார்.

அம்பு எய்தவகை :—இமயமெல்லாம் இரிய எய்தார், மான்கொண்ட கையால் (இடது கையால்) தேவியின் திருக்கரத்தால் புரங்களை எரித்தார்.

புரங்கள் அழிபட்ட தன்மை:—எயில்களை அட்டது திருநீறு. மும்மதில்களையும் இறைவர் தமது சிறு முறுவல் (புன்னகை) என்னும் தீயினுக்கு உணவாக்கினர். அவை பொடிபட்டு நீறாயின. புரங்களில் தீ யெழும்படி இறைவர் விழித்தனர், தீ எழுந்தது, புரம் அழிந்தது, புரத்திருந்த முரணர் பலர் மரணமுற்றனர், புரங்கள் எவ்வளவு பொழுதில் அழிபட்டன. எனில், ஒரு நொடி யளவில், இறைமாத்திரையில், நினைக்கு நேரத்தில், இமைப்பளவில்,

கண்ணுடியில் உழுந்து உருளும் அளவையில், உடனே-என்னலாம். மூன்று புரங்களும் ஒருங்கே எரிந்தன, அவிந்தன.

viii. **பேரொலி** :—அரவொலி என்ன, வில்லொலி என்ன, அம்பின் ஒலி என்ன—பேரொலிதான்.

ix. **திரிபுராந்தகரது திருக்கோலம்** :—இறைவர் விடையமர் கோலத்தராய், மாது ஒரு பாகராய், நின்று திரிபுரங்களை எரித்தனர்.

x. **திரிபுரம் எரித்துத் தேவருக்கும் மூவருக்கும் அருளியது**:—இறைவர் இங்ஙனம் அரக்கர்களைச் சாய்த்து வானவரைத் தாங்கினர்; அடியார்க்கு அருள் செய்தார். பகைவர்தம் முப்புரத்தை எரித்து, அடி பணிந்தவர்களுடைய மேலைக் குற்றங்களை ஒழித்தருளினர். முப்புரங்களை எரித்த அன்று தம் அடி பணிந்த மூவர்க்கு இறைவர் வரம் மிக அளித்தனர்.

xi. **திரிபுரம் எரித்த காலம்** :—திரிபுரம் எரித்தபின் காமனை எரித்தது - எனக் கூறப்பட்டுளது.

xii. **சிவனது அருமை பெருமை**:—திரிபுர மெரித்த திறத்தைக் கருதுங்கால் சிவபிரான் பெரிதும் அருமையுடையார் என்பது புலப்படுகின்றது.

7. **பிரமன் சிரத்தை அறுத்தது [91]**:—தேவர்களுடைய வேண்டுகோளுக்கு இரங்கிப் பிரமனுடைய ஐந்து தலைகளில் உச்சியில் இருந்ததும், விதி வழுவினதுமான பொய்த்தலையைச் சிவபிரான் அறுத்தனர். அங்ஙனம் அறுபட்ட தலையில்தான் அவர் பலியேற்பது. அதுவே அவர் உண்கலமாகும்.

8. **யானையைச் சங்கரித்தது [92]**:—எண்டிசையோரும் அஞ்ச யானை வந்தது, கடிதாக வந்தது, வெஞ்சின மருப்புடன் வந்தது. அது மலைபோல் பெரிய யானை. உமாதேவி யானை வந்ததைக் கண்டும் அஞ்சினள், அந்த அச்சத்தை நீக்க யானையைச் சிவபிரான் உரித்ததைக் கண்டும் அஞ்சினள், உரித்த ஈர உரியை அவர் போர்த்ததைக் கண்டும் அஞ்சினள், உமையின் அச்சம் நீங்கச் சிவபிரான் விளையாடி நடனஞ் செய்தனர்.

[வந்த யானையின் வர்ணனை "யானைத்தோல் போர்வை" என்னும் 38-5 ஆவது தலைப்பின் கீழ்ச் சொல்லப்பட்டுள்ளது].

## 57. சிவபிரானது பராக்ரமமும் திருவருட் ப்ரசாதமும் [177]

i. **சிவபிரான் அருளியது** :—அருச்சுனன், ஆனை, இந்திரன், ஐராவதம், கோச்செங்கட்சோழன், சம்பரன், தேவர்கள், தேவி, பாணன், பாலன் (உபமன்யு), மால் ஆதியோர்க்கு அருளினர் இறைவர்; நஞ்சைத் தாம் உண்டு அமரருக்கு அமுதம் அளித்தனர். இந்திரனுடைய சாபத்தை நீக்கி அவனுக்கு ஆயிரங்கண்களை அளித்தார். தேவர்களின் துன்பத்தை விலக்கினார். தேவிக்கு ஒரு பாகம் அளித்தார். (உபமன்யு எனப் பெயரிய) பாலனுக்கு உண்ணப் பாற்கடல் அளித்தார். மாலுக்குச் சக்கரம் அளித்தார்.

ii. **தண்டித்தது** :—கருடன், அந்தகன், காலன், பிரமன், நாமகள், திரிபுரம், தக்கன், சலந்தரன், யானை, காமன், சந்திரன், இந்திரன், சூரியன், எச்சன், அக்கினி: இமையோர் இவர்களை யட்டனர். வானவர் நடுங்கப் பறவையைச் செற்றனர், காளியின் கதத்தை அடக்கினர், தேவர்களை அடக்கினர்.

iii. **வேள்வி தடுத்தது** :—இந்திரன் வேள்வி, தக்கன் வேள்வி, மாதவர் வேள்வி, இம் மூன்றையும் தடுத்தார்.

iv. **பூசிக்க நின்றார்** :—அந்தணர், தேவர், சித்தர், தேவி, மால், பிரமன் இவர்கள் பூசித்துப் போற்ற நின்றனர் இறைவர்.

v. **பிற பெருமை** :—இமவானுக்கு மருமான், குபேரனுக்குத் தோழன் என நின்றார் இறைவர், காளியோடாடினார். தாருகாவனத்து முனிவர்கள் தம்மை இகழ்ந்து அனுப்பிய மானைத் தமது இடதுகையிற் பற்றி யேந்தினர். முனிவர்களுக்கு உற்ற இடரை நீக்கிக் காத்தருளினர்.

ஐம்பொறிகளைக் காய்ந்தார். இமையோர் ஏத்தப் பேருருக் கொண்டார். பிரமனைப படைத்தார். பிரமனாய் நின்று உயிர்களைப் படைக்கின்றார். அரியாய் நின்று உலகங்களை நிலைபெறச் செய்கின்றார். யாவையும் அழிக்கவும் வல்லார்.

## 58. ஆல நீழலில் நால்வர்க்கு அறஞ் சொன்னது [99]

ஆத்த மெனத் தமது திருவடியை நாடித் தவஞ் செய்து, ஐம்புலன்களையும் வென்று, உண்மைப் பொருளைத் தந்தருள் என்று வேண்டிப் பணிந்த முனிவர்கள் நால்வர்க்கும் சகல கலைகள், அறம் பொரு ளின்பம் வீட்டின் இலக்கணங்கள், தோற்றம்-கேடு இவைகளின் வரலாறு, வேதப் பொருள்கள்—ஆகிய எல்லாப் பொருள்களையும், தழைத்து விரிந்த அழகிய கல்லால விருக்ஷத்தின் கீழ்ச், சிவபிரான் உபதேசித்தார். அம் மாதவர்கள் இறைவர் கழலிரண்டையும் முப்பொழுதேத்திய நால்வர்கள், ஐம்புலனும் அழிந்த சிந்தை அந்தணாளர்கள், தவப்பெருஞ் சதுரர்கள், மறை வல்லவர்கள், நூல்களைக் கற்று இறைவனடி கூடுதற்கு விருப்பங்கொண்ட பெரியார்கள்.

## 59. இருவர் தேட அரியராய்ச் சிவபிரான் நின்ற திருவிளையாடல் [100]

இருவர் என்பது அயனும் மாலும்; இவர்கள் "இருந் தவன், கிடந்தவன்", "பூவினன்-தாவினன்" எனப்பட் டார்கள். இவர் தாம் அருந் திறத்தவர், சுருதியார், விண்ணுளார், நிலையிலார்; இவர்கள் மத்தங் கொண் டார்கள், கர்வம் கொண்டார்கள்; தத்தம் பெருமையைப் பேசி வாதுசெய்தார்கள், துள்ளிச் செருச் செய்தார்கள். மற்போர் புரிந்தார்கள், இவர்களுடைய கலாத்தை நீக்கச், செற்றத்தைத் தணிவிக்கத். துன்பத்தை நீக்க இவர்கள் இருவரின் நடுவில் இறைவர், பவளத்திரள் போலத், தீத்

திரளாய் நின்றார். அந்தத் தீத்திரள் யாரும் உணராத வகையில் அண்டமுற எங்கும் பரவித் தனக்கு இணையிலா வகையில் ஓங்கி நின்றது. இருவரும் அதைக் கண்டனர், மிக அஞ்சினர்; அங்காந்தனர், பேதுற்றனர். தள்ளாடினர், நடுங்கினர், ஓலமிட்டனர். அந்த எரி உருவம் பருத்த மலைபோற் பரந்துநிற்கவே அது காணமுடியாத வடிவமாயிருந்தது, அறிய முடியாத சோதியாயிருந்தது; அவ்வடிவை இருவராலும் காணவும் முடியவில்லை, சாரவும் முடியவில்லை. அதன் அடித்தலத்தைத் திருமாலும் முடித்தலத்தைப் பிரமனும் தேடமுயன்றனர். அன்னம், கழுகு, பருந்து முதலிய பல பறவைகளின் வடிவோடு பிரமன் விண்ணெலாம் பறந்து திருமுடியைத் தேடினன். நீலநிறப் பன்றியின் உரு எடுத்துக்கொண்டு திருமால் மண்ணெலாம் கெண்டித் திருவடியைத் தேடினர். இருவரும் பல காலம் தேடினார்கள். அண்ட மண்டலம் எல்லாம் தேடினார்கள். எங்கும் தேடினார்கள். ஊழி காலம் வரைத் தேடியும் அவர்களால் அவ்வுருவை நணுகவும் முடியவில்லை; அளவிடவும் முடியவில்லை. இருவரும் தேடித்தேடி அயர்ந்தார், அலமந்தார், நிலைமை கண்டார், முடிசாய்த்து நின்றார், இவரன்றித் தேவர் பிறரில்லை என நின்ற இறைவரை நாணத்துடன் தொழுது போற்றினார், "ஹர" பாராயணம் செய்தனர், ஆற்றலோம் என்றார்! ஜய ஜய என மிகத் துதித்தார், நாதனே இவன் என்றார். நவசிவாய எனும் ஐந்தெழுத்தை ஓதினார். அங்கணா அருளாய் என்றார். அப்பொழுது அந்தத் தழலெனும் தூண் நடுவிலிருந்து இறைவர் வெளிப்பட்டார். இருவரும் பணிந்தனர், இறைவர் இருவருக்கும் சரண்கொடுத்தார், மகிழ்ந்து அருளினார், அவர்தம் பாவத்தைப் போக்கினார்.

இருவருக்கும் காண்பரியவனாய் நின்றவனே என இறைவரை ஏத்துதல்தான் இன்பம்; அங்ஙனம் ஏத்துபவருடைய வினை விலகும். அக்காரணம் பற்றி அடியார்களே! இருவரும் உணராத வகையில் இறைவர் எரியுருவாய் நின்ற அத்தன்மையையே நீங்கள் பேசுங்கள்.

## 60. இருவரும் சிவனும் [211]

திருமாலும் பிரமனும் போகம் பொலிய அழகாய் வாழ்வதற்கு மூலாதாரம் இறைவன் தேவியோடு பிரியாது அமர்ந்திருத்தலே. அயனும் மாலும் தொழ இறைவன் தேவியை அணைந்து பிரியாதிருப்பன். இருவரும் அறியாத ஒருவன் இறைவன். அவன் இருவருக்கும் வள்ளல். இருவரொடும் ஒருவனாயும் நிற்பன். இருவரையும் தணிவிப்பவன் அவனே. அவன் பெருமை இருவராலும் அளப்பரிது. இருவரும் பரவும் அரசே என்று இறைவனைப் போற்ற வினைபோம். இருவரும் அறியாப் பெருமையது இறைவர் தம் திருநீறு. இறைவர் வேறு மலரோன் மாலோன் வேறு அல்ல. இருவரொடுங் கூடிய இவர் ஊழி முடிவில் அவ்விருவருடைய எலும்பைத் தரிப்பர். பண்டுபோல எல்லாவற்றையும் பண்ணுவர். (ஊழி முடிவில்) அவ்விருவருடைய உடற்பொறையுடன் திரிவர். இருவரும் இறைவனைப் பூசித்த தலங்கள் இராமேசுரம், திருவுசாத்தானம், மழபாடி.

## 61. சிவபிரான் நஞ்சம் உண்டது [125]

மாலும், பிரமனும், தேவர்களும் அமுதுண்ண விரும்பிக் கடலைக் கடைந்தார்கள். மலையை மத்தாக நட்டு, பெரிய பாம்பைக் கயிறுகச் சுற்றித் திருமால் தேவர்களுடனும் அசுரர்களுடனும் சலசல எனக் கடலைக் கலக்கிக் கடைந்தனர். அப்பொழுது உலகில் உள்ள உயிர்களெல்லாம் பயப்படும்படி விஷம் எழுந்தது. அது மண், விண் எங்கும் பரந்தது. வானவரும் தானவரும் பலருங் கலங்கினர்; ஓடினர்; மேனி கருகினர்; திக்கற்றவர்களாய், அஞ்சி, அமரரும் முனிவரும் சிவனிடம் சென்று "தேவா! அரனே! சரண்; எங்களைக் காத்தருள வேண்டும்" எனப் பணிந்தனர்: ஓலமிட்டனர், பல்லுயிரும் படுந்துயரத்தைக் கண்டு சிவபிரான் இரங்கி, முழவு முதலிய வாத்தியங்கள் ஒலிக்கவும், பேய்க்கூட்டங்கள் தம்மைச் சூழவும் எழுந்துபோய்,

வானவர்பொருட்டு முழு நஞ்சையும் "தா" என வாங்கி, அதைத் தினையளவாக்கி அதையே இனிய அமுதாகக் (கங்குற் பொழுதில்) உண்டு அதைத் தமது கண்டத்து அடக்கினர். பல உயிர்களையும் இங்ஙனம் காத்து இமையோர் தொழுது நிற்க நட்டமாடினர். தொண்டர்கள் மலர் தூவி ஏத்தினர். இவ்வண்ணம் உண்ணலாகாப் பெரு விஷத்தைத் தாம் உண்டு இறைவர் தமது பரத்தை நாட்டினர். கரிய நஞ்சைக் கண்டத்து அடக்கியதால் இறைவன் கண்டம் "கரிய கண்டம்"—"நீல கண்டம்" ஆயிற்று. இறைவன் உண்ட நஞ்சு "வஞ்ச நஞ்சு" எனப்பட்டுள்ளது. அது கரு நிறத்தது, அழலைக் கக்குவது, கொல்லுந் தகையது, உண்ணற் கரியது; பரவுந் தன்மைத்தது; பொங்கும் ஆற்றலது. இறைவர் இவ்வண்ணம் தாம் நஞ்சையுண்டு அமுதை அமரர்களுக்கு அருளிக் கருணாகர மூர்த்தியாய் விளங்கினர். நஞ்சைக் கண்டத்தே இறைவர் அடக்கியதும் ஒரு நன்மைப் பொருளதாம். நஞ்சையுண்டு உலகை அளித்த பெருமான் என நிலத்தவராகிய நாம் அவரைப் புகழ்வதல்லால் அவர் அருமையை நாம் அளக்க வல்லமோ?

## 62. சிவபிரான் பலியேற்பது [178—182]

சிவபிரானது உண் கலம் - பிரமன் தலையோடு, அவர் பலியேற்பது அடியவர் பொருட்டு.

அவர் பலியேற்கச் செல்லுங் கோலம் :—

அரவு, ஆமை, எலும்பு, ஏனத்தெயிறு, கங்கை, திங்கள் இவை தமைச்சூடி, சடை தாழ, மானும் மழுவும் ஏந்தி, நீறு பூசி, புலித் தோலாடை புனைந்தும், நக்கராயும் கோவண ஆடைமேல் நாகக்கச்சு அணிந்து, யானைத் தோல் போர்த்து, கொன்றைமாலை சூடி, அனலேந்தி, வீதியிற் குறிகலந்த இசைபாடி, பண்பாடி, மறைபாடி யாடி, ஒலிபாடி யாடி, கழலுஞ் சிலம்பும் ஒலிசெய, கழல் மேல் அரவாடப், பிச்சையேற்கும் பொக்கணப் பையுடன் தேவியும் உடன்வர, எருதேறி, ஊரிடு பிச்சைக்கே இச்

சித்து, மாதரும் இமையோருஞ் சூழ, பூதங்கள் சூழ, இரவும் பகலும் மடவார் மனைதோறும் அரவாட்டி உலகெங்கும் நாளும் வெண்டலையிற் பலியேற்பர்.

## 63. சிவபிரான் பாம்பாட்டுவது [183]

சிவபிரான் பலிவேண்டி மாதர் மனைதோறும் கூழை வாளரவு ஆட்டுவர். தமது அரையிற் கட்டியுள்ள பாம்பை யெடுத்தாட்டுவர். அப்பாம்பு பளபளப்பும், புள்ளிகளும், செங்கண்ணும், விடமும், படமுங் கொண்டுள்ள ஐந்து தலை நாகம்.

## 64. சிவபிரானுக்குரிய மாலைகள் [94]

சிவபிரான் அணியும் மாலைகளாவன:—கடப்பமாலை (மராம்), கூவிள மாலை (வில்வ மாலை), கொன்றை மாலை, கோங்க மாலை, கோடல் மாலை, தாமரை மாலை, மத்த மாலை, வேங்கை மலர் மாலை, பிற நறுமண மாலைகள். கொன்றை மலர் கொண்டு அலங்கல், ஆரம், இண்டை, கண்ணி, கோதை, தாமம், தார், தொங்கல், தொடையல், பிணையல், வடம் எனப் பெயரிய பலவகை மாலைகள் புனைவதுண்டு. வெள்ளெருக்கு, மத்தம், கொன்றை, வன்னி இவைகளைக் கொண்டு இண்டை கட்டுவர். கொன்றை மாலையே இறைவனுக்கு உகந்தது. இறைவன் திருமார்பிற் கொன்றை மாலை இரட்டை வடமாகப் புரளும். மறை வலார் இறைவனுக்கு மாலையணியும் தொண்டு பூணுவர். இண்டையை இறைவன் சடைக்கும் சூட்டுவர், கழலுக்கும் சூட்டுவர் :

மேற்சொன்ன மலர் மாலைகளே யன்றி, எலும்பு மாலை, தலை மாலை, பாமாலை, ருத்ராக்க மாலை ஆதிய மாலைகளையும், பாம்பு ஹாரத்தையும், புனற்கண்ணி, மதிக்கண்ணியையும் இறைவர் புனைவர்.

## 65. சிவபிரான்மூவராயமூர்த்தி [203]

சிவபிரான் இருவரோ டொருவனாய் நிற்பவர்; படைத்து, அளித்து, அழிக்க மும்மூர்த்திகளாயினவர்;

மூவராய முதல்வர், மொய்ம்பர்; மூவரில் முதல்வனுய் நின்ற வர்; மூவரும் இவரே, முதல்வரும் இவரே என மேவுதற் கரிய பொருளாயினுர்; பிரமன், மால், ஈசன் என்னும் மூவ ரும் ஆய முதல்வர்; பிறப்பிலி யென்று மூவரும் முக்கண் மூர்த்தியைத் தொழுவர்.

## 66. சிவபிரான் விரும்புவன, உகந்தன [207]

சிவபிரானுக்கு விருப்பந் தருவன, தந்தன பின் வரு வன எனக் கூறப்பட்டுள :—

i. அக்கு-அரவு அரையில் ஆர்த்தல், விரும்பும் அடியாரை ஆட்கொள்ளுதல், அரவு ஆட்டுதல்-பூணுதல், அரவும் மதியும் உடன் வைத்தல், ஆடல்-இருளில் ஆடல்-கானகத்தாடல், ஆமை (ஓடு) அணிதல், ஆல நீழலிருக்கை, ஆனே உரிபோர்த்தல், ஆனேந்தாடுதல், இசை, உமை யொருபாகம், எரியாடல், எரியாட்டு, எருக்கமலர், எலும்பா பரணம், ஏன வெண் கொம்பு, ஐந்தெழுத்து, கங்கை நங்கை, கல்லவடம், காடு-சுடுகாடு, குழை, கூவிளமாலே, கொன்றைத்தார், கோவணஉடை, தலே மாலே, தலே யோட் டில் ஊண், நஞ்சு ஊண், நாள் ஆதிரை, நீறு, பலி - பிச்சை யூண், பாடல்-இசைபாடல்-பாலேயாழ்ப்பாட்டு, புலித்தோல் உடை, புறச்சமயிகள்-சமணராதியோர்தம் உரை நீத்தல், மத்த மலர், மதி, மலர்கள்-கைதை-நெய்தல்-ஞாழல்-முடப் புன்னே-முல்லேமுகை-கொன்றை ஆதிய, மறைபாடுதல், மறையோர் பாவனே, மால், மான்தோல் போர்வை, யானே உரிப்போர்வை, விடை வாகனம் வேட்டுவக் கோலம்.

ii. சிவபிரான் விரும்பிய தலங்களாகக் கூறப்பட் டவை :—அம்பர், அரதைப் பெரும்பாழி, ஆக்கூர், ஆனேக்கா, இரும்பூளே, இரும்பை மாகாளம், இலம்பையங் கோட்டூர், ஊறல், ஐயாறு, ஓமாம்புலியூர், (கச்சிக்) கம்பம், கண்டியூர், கயிலே, கழுக்குன்றம், கள்ளில், காழி, காளத்தி, கீழ்வேளூர், குடவாயில், குரங்காடுதுறை (வட), கேதீச்சரம், கோகர்ணம், கோடிகா, கோயில் (சிற்றம்பலம்), சக்கரப்

பள்ளி, தலைச்சங்காடு, துருத்தி, நனு, நல்லூர்ப் பெருமணம், பட்டீச்சரம், பந்தணை நல்லூர், பல்லவனீச்சரம், மயிலை, மழபாடி, மாணிகுழி, வாஞ்சியம், வீழிமிழலை, வெண்காடு, வெண்டுறை, வைகா.

iii. அரக்கன் மலையெடுக்க உமை மறுக்கம் எய்தியதைக் கண்டும், இருவருக்கும் அரியராய் நின்றும், காமனைக் காய்ந்தும், கூற்றை உதைத்தும், தக்கனைச் செற்றும், புரமெரித்தும், யானையை உரித்தும், யானைத் தோலைப் போர்த்தும், இராவணனை அடர்த்தும்-பின் அருளியும் சிவபிரான் மகிழ்ந்தார்.

## 67. சிவனும் இசையும் [210]

சிவபிரான் இசைப்பிரியர்; இசைக்கு உருகுபவர்; பண்ணிசைப் பாடலே அவருக்குப் ப்ரீதி; இசைபாடுவோரிடம் மன்னுவர்; அவரை மிக உகப்பர்; எவ்விடத்தில் தாளம், வீணை, முழவம், மொந்தை பாடல் ஒலியுளதோ அவ்விடத்தை விட்டு நீங்கார். சொல்லுதற்கரிய கீதத்தை அருமையாகச் சொன்னல் சிவபிரான் பலவிதமும் மகிழ்ச்சியைக் காட்டுவார். இசை பாடுவோருக்கே அவர் அகப்படுவார். ஏழை யடியார்கள் இசை கூடும் வகையாற் பாடினும் அதுவும் ஈசனுக்கு மகிழ்ச்சியே. அடியார்களது இசைப் பாடலுக்காக அவர்களுக்கு விண்ணுலகு அளிப்பர். இராவணன் தவறு செய்தும் அவன் இசையாழ் பாடிய காரணத்தால் அவனது துயரை நீக்கி அவனுக்கு வாள் அளித்தார். சிவபிரான் தாமும் பாடுவர், குறிகலந்த இசை பாடுவர், ஏழிசைபாடுவர், நான்மறையை (வேதங்களை) இசையுடன் பாடுவர், பூதப் படைபாடத் தாம் ஆடுவர், உமையும் தாமுமாகப் பாடுவர், உமை இசை பாடத் தாம் ஆடுவர், பலிதேரும் பொழுதும் இசைபாடிச் செல்லுவர், அவர் திருக்கரத்திற்பண்ணிற் பொலிந்த வீணை உண்டு, அதை வாசிப்பர்; அவர் திருக்கையிற் பறையும் உண்டு, அவர் தண்டு, தாளம், குழல் ஆதிய பலவித இசைக்கருவிகளை உடையார்-அவைதமைப் பயில்வர், பல கீதங்களும் பாடுவர், யாழிசையிற் ப்ரியர். குழல், தாளம்,

வீணை, மொந்தை, முழவு ஒலிக்கத் தாம் வாய்மூரிப் பண் பாடுவர், பாலையாழ்ப் பாட்டு அவருக்கு உகந்தது. அவர் ஏழிசையை வகுத்தவர்; ஏழிசையின் பொருள் ஆவர். பண்ணிடை ஒன்பதும் உணர்ந்தவர்.

## 68. சிவனும் உமையும் [212]

சிவபிரான் உமையின் கணவர்; உமையோடும் வேரு வார்-உடனுவார்; உமை மாட்டு அவருக்கு அன்பு-மகிழ்ச்சி-விருப்பம்; சிவன் உமையை விட்டுப் பிரியார். உமை சிவன் மார்ட்டு அன்பிற் பிரியாள். உமையின் கழல் இறைவன் கையது. தக்கனைச் சாடினவுடன் இறைவர் உமை நங்கையின் பங்கராகக் (பங்கு உடையவராகக்) கருதினர். நாடு தழைக்கவே, உலகில் உள்ள உயிர்கள் இன்பம் புணர்ந்து சுகமுறவே, இறைவர் உமையோடும் கலந்துள்ளார். இறைவர் தேவியோடிருந்து அருள்புரிவர். திருவீழிமிழலையில் விண்ணிழி விமானத்தில் தேவியோடும் உறைகின்றார். உமையுடன் பகலில் திருத்துருத்தியிலும் இரவில் திருவேள்விக்குடியிலும் புகலிடங் கொண்டுள்ளார். இறைவர் உமையுடன் (இன்புற்று) அமருந் தலங்கள்:—அம்பர்மாகாளம், ஆலவாய், இடைமருது, ஓமாம் புலியூர், கயிலை, காழி, கோணமலை, சேறை, பட்டீசரம், புனவாயில், மழபாடி, முதுகுன்றம், வக்கரை, வலஞ்சுழி, வாய்மூர், வீழிமிழலை, வைகன்மாடக்கோயில்.

## 69. சிவனுந் தமிழும் [213]

இறைவர் பல ஓசைத் தமிழும் அத்தமிழில் உள்ள சுவையும் தாமே ஆனார்; மதுரையிற் சங்கம் நிறுவினர்; தமிழின் பெருமையைப் பேசித் தாளம், வீணை முதலியன கொண்டு பாடுமிடத்தை விட்டு அவர் நீங்கார். அவரது திருவடியே தமிழ்ச்சொலும், வடசொலும் சேரும் இடம்.

## 70. சிவனுந் தாளமும் [214]

சிவபிரான் தாளத் தொலி பலவும் தாமே ஆனார். தமது கையில் தாளம் உடையார். தாளம் ஒலிக்கத் தாம்

வாய்மூரி பாடுவார். தாளம், வீணை கொண்டு பாடும் இடத்தை விட்டு நீங்கார்.

## 71. சிவனும் நாளும் [174]

சிவபிரானுக்கு உரிய நாள் ஆதிரை.

## 72. சிவனும் பாடலும் [215]

இறைவர் ஆடலும் பாடலும் உடையார். அவர் பண்ணிறைந்த பாடல் பயில்வார். அவர் பலிகொள்ளப் புகும்பொழுது நானுவிதமாகப் பாடுவார்; பலிகொள்ளும் வண்ணம் ஒலி பாடுவர், ஆடுவர்; பாடியும் ஆடியும் பலி தேர்வார். அஞ்சிடத் தக்க இடமாய காட்டில் (சுடலையில்) ஆடல் பாடல்களை விரும்புவர். பாலையாழ்ப் பாட்டு அவருக்கு விருப்பம். அவருக்கு உகந்தபாடல் "இருக்கு" (வேதம்). நால் வேதப் பாடல்களும் பாடுவர். இராவணனது பாடலைக் கேட்டு மகிழ்ந்து இறைவர் அவனுக்கு வாள் ஒன்று கொடுத்து அவனை மகிழ்வித்தார். பூதப்படைகள் தம்மைச் சூழ்ந்து பாட இறைவர் ஆடுவர்; வண்ணங்களை மகிழ்ந்து பாடுவர். அவர் பாடும் பண் "தாரம்." அவர் மறை பாடல் பாடும்பொழுது முழவம், குழல், மொந்தை முழங்கும். இறைவர் திருவடியைப் புகழ்ந்து பெரியோர்கள் பாடும் பாடல்களில் இறைவர் அவை தமக்கு உரிய பொருளாய் அமர்வார்.

## 73. சிவனும் பூதப்படையும் [342]

சிவபிரான் பூதகணநாதன், பூத நாயகன், பூத முதல்வன்; பல பூதப்படை யுடையான், அப்பூதங்கள் ஆந்தை போலும் விழியன, ஏதமிலாதன, கிறிகொண்டன, குடவயிற்றின, குறுந்தாளன, குறள் உருவத்தின, புன்தலையன; பூதஞ்சூழச் சிவபிரான் பலிக்கு ஏகுவர்; பூதங்களும் பேய்களும் அவர்க்கு அடையாளம். பூதஞ்சூழ இரவில் புறங்காட்டில் எரியாடுவர்; திரிவர்; பூதகூட்டம் அவரை விட்டுப் பிரியாது, அவரைச் சூழ்ந்து நிற்கும். பூதகணஞ்

சூழ வேட்டுவ உருவுடன் சென்று விசயனுக் கருளினர். பூதகணங்கள் அவர் சந்நிதிவாயிலிற் காத்து நிற்கும். இறைவன் ஆடும்பொழுது பூதங்கள் இசைபாடும், அவர் சரிதங்களை இசை கூறும். அவர் பக்கத்திலிருந்து பணி செய்யும், மறை பாடும், கீதம் பாடும், சொக்கதாண்டவம் ஆடும், பாடும், இறைவனது விடைமுன்] குனித்தாடும். தண்டு, தாளம், தண்ணுமை, கொடுகொட்டி, குடமுழா, பறை, குழல், யாழ், தக்கை, மொந்தை, முழவு முதலிய வாத்தியங்களை ஒலிக்கும். இறைவனைத் துதி செய்யும்; போற்றும். பூதங்கள் காக்கும் ஊர் பிரமபுரம் (காழி). பாரிடம் (பூதங்கள்) பணிசெய்து பூசித்த ஊர் திருப் பைஞ்ஞீலி.

## 74. சிவனும் பேயும் [347]

சிவபிரான் பேய்க்கூட்டங்களுடன் வாழ்வார், பேய்க் கணஞ் சூழத் திரிவார்; ஆடுவார்; பேயோடும் ஆடுவர்; பேய்க்கணம் அவரைத் தொழுது நிற்கும். பேய்கள் நகைக்கப், பேய்கள் பாட அவர் நடம்செய்வார். பேயுயர் கொள்ளி கைவிளக்காக அவர் எரியாடல் செய்வார்.

## 75. சிவனும் விசயனும் [444]

அருச்சுனன் பஞ்சவரில் ஒருவன்; அழகன்; வேள் போன்றவன்; வில்லாளி; பதினொரு பெயர்களுடையவன். வஞ்சமனத்தையும் ஐம்புலன்களையும் ஒடுக்கி, நஞ்சை அமுதாகக் கொண்டருளிய நம்பியை நாள்தோறும் தியானித்துப் பூசனை புரிந்து குற்றமற்ற கடுந்தவத்தை இவன் கானகத்தே செய்துகொண்டிருந்தான். அச்சமயம் சிவ பிரான் அவனுடைய தவநிலையை அறியவேண்டி வேட்டுவக் கோலம்பூண்டுக் கையில் வில்லுடனும், (வேட்டை) நாய்கள் சூழவும், (வேட்டுவப்) பூத கணங்களுடனும் காட்டகத்தே சென்றனர். அருச்சுனனது ஆண்மையைக் காணச் சென்றனர். தேவியையும் (வேட்டுவச்சியாக) உடனழைத்துச் சென்றனர். கண்டவர் அச்சுறும்படியாகச் (சீழ்க்கை) விளியிட்டுக் கடிதோடிச் சென்று அக்காட்டில்

அருந்தவத்திருந்த அருச்சுனனேடு ஒரு பன்றியின் காரண மாக யாருங்காணத் திறலுடன் அமர்செய்து, அருச்சுன னது நிலையை அசையச்செய்து, அவனது (அம்பறுத்) தூணியறவும், அவன் வில்லின் நாண் அறவும், அவன் வில் ஒடியவும், அவன் உடலில் அம்பு தைக்கவும், அவன் நாணங் கொள்ளவும் செய்தனர். இங்ஙனம் அவன் நிலை யையும் பொறையையும் அளந்து மற்போரும் செய்தனர். அவனுடைய மாதவத்துக்கு இரங்கி அவனுக்கு அசை விலா உயர் படைகளையும் அத்திரங்களையும், பாசுபதம் என்னும் படையையும், பொன்னெடுங்கோல் ஒன்றையும் வில்லையும் தந்தருளினர்.

## 76. சுடலை-கான் [216]

ஈமம், கடம், காடு, இடுகாடு, சுடுகாடு, படுகாடு, புறங் காடு, முதுகாடு, கான், எரிகான், கரிகான், சுடுகான், படுகான், முதுகான், முளிகான், சுடலை, சுரம், புறவம், மயானம், வனம்—எனச் சுடலையுங் காடுங் குறிப்பிக்கப் பட்டுள.

இடுகாடு-சுடுகாடுகளில் கழுகு, நரி, பேய், கூகை சேரும். சுடுகாட்டில் வளரும் மரம், கொடி வகைகளுக்குத் தலைப்பு 143-III பார்க்கவும்.

## 77. சுனைகள் [217]

சுனைகள் கண்ணுக்கு அழகிய; குளிர் நீரைக் கொள்வன; சோலைகளாற் சூழப்பெற்றன; சுனைகளின் வழியே அருவிகள் இழிந்து ஓடும்; சுனைகளில் நீலமலரும் (நீலோற்பலமும்) நெய்தலும் மலரும்; கெண்டை மீன்கள் பாய்வதினுற் சுனைகளில் உள்ள நீல மலர்களின் மொட்டு கள் மலரும்.

## 78. சூரியன் [218]

i. **பெயர்கள்:**—அருக்கன், ஆதித்தன், இரவி, என்றூ, கதிரவன், சுடர், ஞாயிறு, பகலோன், பரிதி, வெய்யவன்.

ii. பிற விஷயங்கள் :—சூரியன் - இயக்கம் உடையவன் ; இருள் நீக்குபவன் ; ஊழிவரையும் உலவுபவன் ; உலகுய்ய (உதய) கிரியில் உதிப்பவன் ; ஆயிரங் கதிர் உடையவன் ; பகற்பொழுதை உண்டு பண்ணுபவன், ஒளியும் வெப்பமும் உடையவன், தக்கயாகத்திற் குட்டுண்டு பல்லனைத்தையும் இழந்தவன். சிவன் அட்டமூர்த்தியாதலின் அவர்தம் மூர்த்தங்களுள் சூரியன் ஒன்று. அதனாற் சிவபிரான் 'ஞாயிறாய நம்பன்', 'இரவியுமாய் நின்றார்'. 'இரவி ஆய பேராளன்' எனப்பட்டார். சூரியன் இலங்கையின்மீது இயங்குதல் கூடாது என்பது இராவணனது கட்டளை. சூரியன் மகன் சடாயு.

iii. சூரியன் வழிபட்ட தலங்கள்:—அனேகதங்காபதம், சண்பைநகர் (சீகாழி), திருநாகேச்சுரம், திருமுதுகுன்றம், திருவையாறு, திலதைப்பதி, (மதிமுத்தம்) தேவூர், மயேந்திரப்பள்ளி.

## 79. சொல்லழகு [221]

சொல்லழகு வாய்க்க வழியெதுகை மொழிகளைப் பல இடங்களில் நயம்படச் சுவாமிகள் எடுத்தாண்டுள்ளார்கள். உதாரணமாகச் சில காட்டுவாம்.

'இமையோ ரேத்த உமையோடிருந்தானே', 'எருக்கொடு முருக்கும்', 'எழில் பொழில் குயில் பயில்', 'நதிமதி பொதி சடை', 'மயிலுங் குயிலும் பயிலும்', 'விடமடைதரு மிடறுடையவன்.'

## 80. ஞானம், ஞான பூசை, ஞான நெறி [222]

விரதங்களால் வாடுதலால் ஞானம் வராது; எந்தை வாழும் திருவலஞ்சுழியை நாடிச் சம்பந்தப் பெருமானது செந்தமிழை இசையுடன் பாடும் ஞானம் வல்லாரது அடி சேர்வதே ஞானம். இறைவனை ஞானமாக நினைத்தால் நமது வினை நாசமாகும். ஞான விளக்கினை ஏற்றி இறைவனை வழிபடுவார்கள் மாட்டு இடர் வராமல் அஞ்செழுத்து அவர்களைக் காக்கும்.

## 81. தமிழ் [223-224]

தமிழ்மொழி எழுதுமொழி; தமிழ் தென்சொல், முத்தமிழ், அசைவிலாத் தமிழ், தமிழ் அருமை வாய்ந்தது, அழகு நிறைந்தது; இசை மலிந்தது; இன்பம் பயப்பது; இனிமை கொண்டது; கீதத்துக்கு ஏற்றது; குலவேந்தர் (சேர சோழ பாண்டியர்) போற்றியது; குற்றமில்லாதது; சங்கத்தார் ஆய்ந்தது: சந்தம் பொலிவது; சீர்பெற்றது; செந்நெறி கூட்டுவிப்பது; சொல் நிரம்பியது; தேன் ஒப்பது; நாடத் தக்கது; பண் நிரம்பியது; பயன் பாலிப்பது; பல ஓசைக்கும் இடந்தருவது; பல கலைகளை உடையது; புகழ்மிக்கது; பொருள் ஊறுவது; பெருகுந் தன்மையது, மறைவளர்வது; முடிவிலாதது.

அடியார்கள் நரம்புக் கருவிகளுடன் தமிழ் முதலிய மொழிகளிற் புகழ்பாடித் தமது அஞ்ஞானந் தொலைய இறைவனைத் தொழுவார்கள். தமிழின் தன்மை, பெருமைகளைப் பேசிப் பாடல்கள் பாடுவார்கள். மாதர்களும் தமிழில் ஊறு பொருளைத் தேர்ந்து உணர்ந்திருந்தனர். தமிழ்க்கலை தெரிந்த பெரியோர் (தேவூரில்) இருந்தனர். சம்பந்தர் தம்மை "அருந்தமிழ் சுற்றுமுற்று மாயினன்" என இன்புடன் கூறுகின்றார்.

## 82. தலங்கள்: தலங்களைப்பற்றிய குறிப்புக்கள் [225]

1. அகத்தியான்பள்ளி:—மயில் ஆலுகின்ற பொழிலாற் சூழப் பெற்றது. இத்தலத்தைச் சிந்தித்தாலும் தொழுதாலும் வினை தொலையும். இத்தலத்தைப் பாடிய சிந்தையார்க்குப் பாவம் இல்லை.

2. அச்சிறுபாக்கம்:—சுவாமி பெயர்; ஆட்சி கொண்டார். தேவி பெயர்: இளங்கிளைநாயகி. ஸ்தல விருக்ஷம்: கொன்றை.

3. திரு - அண்ணமலை: அண்ணாமலைச் சாரலில்—(1) அரவம், ஆளி, ஆனைத்திரள், ஏனத்திரள், கரடி, மான், பசு, எருமை இவையெலாம் இயங்கும்; (2) வழி

தப்பிப்போன பெண் யானையை ஆண் யானை அழைத்துத் திரியும்; (3) அருவிகள் முழவோசையுடன் இழியும்; (4) பொழில்களில் மேகம் தவழும்; (5) ஆயர் தமது கையில் உள்ள குழலை ஊதிக் காணாதுபோன எருமையை, எருமைக் கூட்டத்துடன், ஒன்று கூட்டுவர்; (6) குறப்பெண்கள் ஆங்குள்ள பழைய மூங்கில்கள் உகுத்த முத்துக்களை ஒன்று கூட்டிக் குவித்து முத்து வாங்க வாருங்கள் என்று ஆடியும் பாடியும் கூவி அளந்து கொடுப்பார்கள்; (7) வேடப்பெண்கள் பரண்மீதேறியிருந்து "ஆயோ" கூறிக் கிளிகளை ஓட்டுவர்; (8) மழைக்கு அஞ்சிப் பசுக் கூட்டங்கள் ஒன்றுசேரும். இத்தலத்தில் இருவரும் (மாலும் அயனும்) அளவா வண்ணம் இறைவர் அழல் உருவாய் நின்றார். தேவர்களுக்கு அறத்தை உபதேசித்தார். இத்தலத்தைத் தொழுவார் வினை நிச்சயமாக அற்றுப்போகும். அண்ணாமலையார் தம்மை நினைத்துத் தொழுவார் தம் பாவத்தைத் தீர்ப்பார். தேவியார் "உண்ணாமுலை" யம்மை.

4. திரு-அதிகை:—கெடில நதியின் வட பக்கத்தில் உள்ளது. வளங்கொள் வயல், உயர்ந்த மாடம் நிறைந்த ஊர். கழுநீலம் மலரும் ஊர். திரு (லக்ஷ்மி) வாசம் செய்யும் செல்வ நகர். திரிபுர மெரித்த பெருமான் விண்ணோர் பரவ ஆடல் பயின்ற வீரட்டானம் இது.

5. அம்பர்:—அரிசிலாற்றங்கரையில் உள்ளது. புகழ் மலிந்த மாநகர். மரவம் (கடப்பமரம்) நிறைந்த அழகிய நகர், பொழில்வளர் நகர், விழாக்கள் நடைபெறு தலம், அழலோம்பும் மறையவர் வாழ்ந்த ஊர். இறைவர் உவப்புடன் உமையுந் தாமும் தங்குந் தலம். இங்குள்ள கோயில் கோச்செங்கட்சோழன் கட்டியது. [இத்தலத்துப் பதிகத்தில் முதலேழு பாடல்களில் இறையவன் ஆடல் குறிக்கப் பட்டுளது.]

6. அம்பர் மாகாளம்:—அரிசிலாற்றின் வடகரையில் உள்ளது. அழகமர் ஊர், பொழிற் சோலை உடையது. மறையவர் நிறைந்த ஊர். மண்ணில் தனக்கு இணையில்லாத புனல் வரு தலம். இத்தலத்து மேய அண்ண

லைப் போற்ற இன்பம் எய்தும், தவம் சாரும், பயன் தலைப் படும், பெருமை கூடும், நோய் தளரும், அவலம் - கவலை - பிணி நீங்கும், பாவங்கள் பற்றறும், இடர் அடையாது, வினை சாராது: இத்தலத்தைப் போற்றுவிடில் ஊனம் ஒழி யாது; இத்தலம் இறைவருக்கு இறைவியோ டிருப்பிடம். இத்தலத்தை நினைப்பவர் யாவரோ அவர் உயர்வுபெறுவர். இத்தலம் காளி பூசித்த தலம். இத்தலத்து நாதரைப் புதியபூ, சாந்தம், புகைகொண்டு ஏத்தினவர் தாம் கருதிய பொருளைப் பெறுவார்களாதலால் அவர்கள் வேறு எதை யும் பொருட்படுத்தார்கள்.

7. அரசிலி:—அல்லி மலரும் வயல் சூழ்ந்த ஊர்.

8. அரதைப் பெரும்பாழி:—இத்தலத்துத் திருக்கோயி லானது அடியாரோடு இறைவர் பிரியாது உறையுங் கோயில், இறைவரது திருப்பதியெனப் பாரினர் பரவு கோயில், இறைவர் விரும்பி அமர்கின்ற கோயில்.

9. அரிசிற் கரைப்புத்தூர்:—அரிசிலாற்றின் தென் கரையில் உள்ளது. அழகிய மிகப் பழைய ஊர்; கழனி களாற் சூழப்பெற்றது; கழுநீர், தாமரை முதலிய பல பூக்கள் மலர்ந்துள்ளதும், வண்டும் புள்ளும் நாடுவதுமான பொய்கை சூழ்ந்த தலம். புன்கு, கோங்கு முதலிய மரங்கள் உள்ள சோலை வாய்ந்த ஊர். காலையும் மாலையும் வழிபட்டு வந்தவரும் நொந்த நிலையில் இருந்தவருமான அடியார் (புகழ்த்துணை நாயனர்) இறைவரிடம் நித்தம் காசு ஒன்று பெற்ற தலம். இறைவர் திருநாமத்தை ஓதி நாடோறும் பூவாலும் நீராலும் பூசித்துப், பொய்யா மொழியால் மறை யோர் போற்றிய தலம். இத்தலத்து நாதர் அழகியர். இத் தலத்தைக் காணச் செல்வோரது வினைபோம், 'புத்தூரில் ஐயா' எனக் கூறிப் பணிவார்க்கு அழகு கூடும்.

10. அவளி வணல்லூர்:—பாமாலை, பூமாலை சூட்டுந் தொண்டர்களும், அமரரும் தொழுது வழிபடும் தலம்.

11. அழுந்தூர்:—புனல் சூழ்ந்த மாநகர், திருக்கோயில் "மாமடம்" எனப்படும். இத்தலத்து மறையவர் ஞானம்

வல்லவர், இசைபாட விம்மி யழுவார், (பிறவித்) துயர் நீங்க 'எம்மானே' என இறைவரை மறவாது தவருது பணிந்து தொழுது வழிபடுவார்.

12. அறையணி நல்லூர்:—இத் தலத்தைத் தொழுபவரே சிவபிரானுக்கு அன்பினர்; அவரே பெரியோர், உயர்ந்தோர், அவர் தம் தடுமாற்றம் நீங்கும், பாபம் மறையும், வினை மாயும். அடியார்களுக்குச் சார்பு அறையணி நல்லூர்ப் பெருமானன்றி வேறு இல்லை.

13. அன்பிலாலந்துறை:—ஆற்றுநீர் சேரும் வயல்களை உடைய பதி. மயில், குயில், அன்னம் அணையும் பொழில் சார்ந்த பதி. பொழிலில் வேத ஒலியின் இசை கேட்கக் கிளிகள் அடையும். மலரும் புனலும் தூவி அடியார் தொழுவார். பல வேதியர் மறையோதுவர்; முழவம் அதிர மாதர் ஆடல் செய்வர்.

14. அன்னியூர்:—இத் தலத்தை அன்புடன் அடைந்து இறைவனை ஏத்தி வாழ்த்தித் தொண்டு செயப் பந்தம் நீங்கும்; வினை தொலையும். இறைவரது நாமத்தை ஓதிப் பரவ உம்பராகலாம்; அவர் தாளைத் தொழ முத்தராகலாம்.

15. அனேகதங்காவதம்:—இது மலைச்சாரலில் உள்ள தலம். சாரலில் ஆனைகள் ஏறும்; அருவிகள் இழியும். நீர்வீழ்ச்சி பறைபோல ஒலிக்கும். பசும்பொன் பரப்புப் போல பைம்புல்லும் புனலும் ஒளிரும். இத்தலம் சூரிய சந்திரர் வழிபட்ட தலம். அவர்கள் கிரணங்கள் காணுத இடத்தில் கோயில் அமைந்துள்ளது. அனேகதங்காவதத்தைத் தமது இடமாக இறைவர் உகந்துகொண்டுள்ளார். அப்பெருமான் திருக்கழலைச் சிந்தித்தலே நமது கருமம். அதுவே வாய்மையாகும். அவர் நாமத்தைச் சொல்லாத நா - நா ஆகாது. அவர் நாமத்தைச் சொல்ல நல்லன சேரும், துன்பங்கள் விலகும். இத் தலத்தைச் சார்ந்தாலும், நினைத்தாலும், பாடினுலும் வினை நாசமாம். திருஞான சம்பந்தப் பெருமான் இத் தலத்துல் திருப்பதிகத்தை நல்லார்கள் முன்னிலையில் அல்லல் தீர உரை செய்தார்.

16. ஆக்கூர்:—ஆம்பல் மலரும் பொய்கையும், சேல் மீன் - செங்கழுநீர் - குவளை இவைகள் உள்ள குளமும், தாரா மல்கிய நீர்நிலையும் உள்ள பதி. நான்மறை - ஆறங் கம் - பலகலைகள் உணர்ந்த பெரியோர்களும், பொய்யிலா மெய்ந்நெறியில் நின்ற மேன்மையாளர்களும், கொடையிற் சிறந்த வேளாளரும். இன்மையால் இரந்தவர்க்கு இல்லை என்னாது உவந்து ஈந்த கொடையாளர்களும், மறை பயின்று வேள்வி செய்த அந்தணர்களும் வாழ்ந்த பதி. உயர்ந்த வெண் மாடங்கள் விளங்கிய பதி. திருக்கோயில் 'தான்தோன்றி மாடம்' எனப்படும். இது இறைவர் காத லித்துப் புக்கிருக்கும் பழங்கோயில், பூங்கோயில், நாடோ றும் பூவும் நீரும் சுமக்கும் அடியார்களும் வானவரும் இறைஞ்சுங் கோயில்.

17. ஆடானை:—இது மறைவல்லாரும் வானவரும் தொழும் பதி. ஆடானை நாதரை மலர்தூவித் தொழ இடர் ஏகும்; ஊனம் ஒழியும்; நோய், பிணி மாயும்; தீவினை வீடும்; நல்வினை சாரும்.

18. ஆப்பனூர்:—அழகிய ஊர்; வைகையாற்றங் கரையில் உள்ளது, தேவி குரவங் கமழ் குழலாள். இத் தலத்தை நினைப்பவர், பகர்பவர், பணிபவர், பரவுவோர், பற்றுவோர், பாடுவோர் வினை பற்றறுப்பார்.

19. ஆமாத்தூர்:—பம்பை யாற்றங் கரையில் உள்ளது. வண்டு பாட மயிலாடும் சோலையாற் சூழப்பெற்றது. ஆம் பலும் பொய்கையும் அன்னஞ்சேர் கானலும் ஆலை சூழ் கழனியும் இத்தலத்தில் உள்ளன. இத்தலம் மங்கைமார் நடமும் இன்னிசைப் பாடலும் மாட மாளிகைகளும் மல்கிய திருப்பதி. மாளிகைக் கெதிரில் நீண்டு நிற்கும் பனைமரத் தில் அன்றிற் பறவை வந்து அணையும்.

ஆதிரையான் என்று ஆமாத்தூர்ப் பெருமான் தன் திருநாமத்தைக் கூறி அடியார் ஏத்துவார். அண்ட வாணரும் பிறர் யாவரும் ஆமாத்தூரில் பெருமானைத் தொழுவார். ஆமாத்தூர் அம்மானே தேவர் தேவன்; அவரை ஏத்தாதார் பேயரிற் பேயர். அவர்தம் திருநீற்றைப்

பூசும் அடியாரது சார்பல்லாற் சார்பில்லை. அவர் கழலை வாழ்த்தாத வாழ்க்கை வாழ்க்கையன்று. அவர் கழல் பரவாப் பொய் வாழ்வு பொய் வாழ்வே; அவரது வேடநெறியில் நில்லா வேடம் வேடமன்று; அவரைக் காணாத கண் கண் அன்று; கூறாத நா நா அன்று; கேளாத செவி செவியன்று; அவரைநித்தல் நினையாத நெஞ்சு நெஞ்சன்று.

இத்தலத்துத் தேவி திருநாமம் 'முத்தை வென்ற முறுவலாள்'. தலம் "மாதை" எனவும் படும்.

20. திருவாரூர்:—மாட மாளிகைகள் கொண்ட அழகிய ஊர். புனல் சூழ்ந்த ஊர். அல்லி மலர்க் கழனி சூழ்ந்த ஊர். நாரைகள் ஆரல்மீனை வாரியுண்ணும் வயல் சூழ்ந்த ஊர். மேதிகள் (எருமைகள்) வள்ளைக்கொடியையறுத்து வாவியிற் பாயும். செருந்தி, ஞாழல், புன்னை, வள்ளி, செண்பகம், குரா, இவை சோலைகளில் அரும்பும். சோலைகளும் மாடமாளிகைக் கொடிகளும் சூரியமண்டலத்தை அளாவும். தெங்கு, வாழை, மா இவைகளில் மந்திகள் தாவி வாழைக் கொத்துகளை இற்று விழச் செய்யும். செண்பகப்பூ அண்டம் வரையில் வாசனை வீசும். வேள்விச் சாலையின் புகை மேகத்தில் தோயும். மடந்தையர் அரங்கேறி நடம் ஆடுவர். அவரது கீத ஒசை அண்டர் அண்டத்தை ஊடறுத்துச் செல்லும்.

திருவாரூர் பெரிய மதில் சூழ்ந்த ஊர். பாபங்களை நசித்த ஊர். தேசமெல்லாம் பிரசித்திபெற்ற தலம். லட்சுமி வாசஞ்செய்யும் திருப்பதி. 'செல்வத் திருவாரூர்' எனப்படும்.

திருவாரூர் இறைவருக்கு இனிய இடம். ஆரூரைத் தொழத் தடுமாற்றம் அறும், புண்ணியம் சாரும்; நினைக்க-வினைபோம்; ஆரூரை மலர் தூவிப் பணிய நேசம் வளரும், இன்பம் பெருகும்; வையம் நமதாம்; வினைமாயும்; பத்தியுடன் மலர்தூவ முத்தியது கைகூடும்; ஆரூரை வாழ்த்த வேட்கை ஒழியும் (ஆசை அறும்.) ஆரூர் இறைவரைக் காலையும் மாலையும் பாடுதல், கைதொழுதல், பணிதல்

நமக்குக் கருமம் ஆம். இத்தலம் தருமன், வருணன், கின்னரர், வானவர், தானவர் நித்தம் பணிந்து ஏத்தும் திருப்பதி. தேவி திருநாமம் அல்லியங்கோதை.

21. திருவாலங்காடு :—பழையனூர் - ஆலங்காடு என வழங்கும். இது முல்லை நிலத்தைச் சார்ந்த பொழில் சூழ்ந்த ஊர். கொடி முல்லை, குருந்தம் மலர்வன. மான், கலைமான் இவை இரவில் ஊர்ப்புறம் அணையும். ஆண் மயில் பேடையோ டாடி ஆலும். அடியார் நித்தம் ஏத் தும் திருப்பதி. இத்தலத்தை யடைந்து வழிபட வல் லார்க்குத் தீயன அகலும். நட்பைக் காட்டி வஞ்சஞ் செய்த ஒருத்தி (நீலி) ஒருவனைக் கொன்றதைக் கேட்டுப் பழையனூரார் அஞ்சினர் என இவ்வூர் (திருவாலங்காடு - பழையனூர்) நீலி கதை குறிப்பிடப்பட்டுளது. ஸ்ரீ சம்பந் தப்பெருமான் இத்தலத்தைப் பாட மறந்துபோக இறை வனே இத்தலத்தை நினைப்பூட்டிப் பாடச்செய்ததைச் சம்பந்தர் இப்பதிகத்திற் குறிப்பித்துள்ளார்.

22. திருஆலவாய் :—அழகிய ஊர். கூடல் ஆலவாய், மதுரை ஆலவாய் எனவும் படும். புனல், வயல் சூழ்ந்த ஊர். நான்கு மேகங்கள் படிந்து நீடு கூடல்; மாடக்கூடல் எனப்படும். நிலாப்போல வெள்ளிய சுதை மாடங்கள், சிருறு மாளிகைகள் நெருங்கிய நகரம். காவலோடு கூடிய 'கபாலி மதில்' எனப்படும் அழகிய நீண்ட பருமை உடைய மதிலை உடைய நகர். அழகிய கோயிலையும் கோபுரங்களை யுங்கொண்ட பதி. திருவிழாக்கள் அடிக்கடி நடக்கும் ஊர். எத்திசையும் பேர்போன மஹா க்ஷேத்திரம். ஐம்புலன்களை அடக்கிப் புந்தியிற் சிவத்தியானஞ் செய்யும் நல்லார்களும், புண்ணியர்களும், மாதவரும் நாடி நண்ணுந் திருப்பதி. மாதர், பொன்னும் மணியும் கொழித்தெடுத்து ஆவண வீதியில் ஆடுங்கூடல்: மண், விண், மற்றெங்கும் திண் ணகமாம் திருப்பதி. மணியொலி, சங்கொலி, முரசொலி, என்றும் நீங்காத நகர். நிறைசெல்வ வேந்தர்கள் புகும் பதி. இறைவர் (திருவாலவாய்ச் சொக்கர்) உமை (அங்கயற்

கண்ணி)யோடு இன்புறுகின்ற ஊர். அடியார்களும் அண்டத்தவரும் தொழும் பதி. இறைவர் நடனம் ஆடிய நகர். அவர் வேதங்களின் பொருளை அருளிய தலம். பாணனுக்குத் தாரமுய்த்த தலம். தமிழ்ச் சங்கம் ஆக்கிய பதி. மாதர்கள் தோத்திரப்பாக்கள் பாடும் பதி. குலச்சிறை நாயனார் பரவின பதி. பாண்டியன் தேவி மங்கையர்க்கரசி நாடொறும் இறைவனுக்குப் பணிசெய்த பதி. கோயிலில் இடக்கை வாத்தியம் முழங்கிய பதி.

இத்தலத்தில் இறைவனது திருவருளையே துணையாக் கொண்டு சம்பந்தப் பெருமான் (1) பாண்டியன்மீது சுரத்தை ஏவினர். பின்னர் பதிகம் பாடி ஆலவாய் அண்ணல் திருநீற்றைக் கொண்டே அச் சுரத்தைத் தீர்த்தனர். (2) இறைவன் திருப்புகழ் ஞாலத்திற் பெருகவும், அமணர்களைத் தாம் வாதில் வெல்லவும் இறைவரிடம் உத்தரவு பெற்றனர். (3) பாண்டியன் தேவியின் திருமங்கிலியத்தை நிலைக்கச் செய்தனர். (4) ஏடு தண்ணீரிற் பற்றுதலின்றி எதிரேறச் செய்தனர்.

ஆலவாய் அண்ணலை நம்பி வாழ்த்தத் துன்பம் தொலையும், அவரை உரைசெய 'இரக்கம்' என்னும் நற்குணம் வாய்க்கும். ஆலவாயிலான் பாலதாயினர் ஞாலம் ஆள்வர்.

23. ஆவடுதுறை :—புனல் சூழ்ந்த ஊர் : சம்பந்தப் பெருமான் இறைவரிடம் "எமை ஆளுமாறு இதுவோ? ஈவதொன்று எமக்கில்லையோ?" என வேண்டிய திருப்பதி.

24. ஆவூர் :—அழகிய ஊர், பொழிலின் மலர் வாசம் கமழும் ஊர், பொய்கை வாய்ந்த ஊர், கூழைமந்தி வாழைக் கனி யுண்டு தன் இனத்துடன் கலாம்செய்து பாயும் ஊர்; தென்னஞ்சோலை, கரும்பு ஆலை, நெல்வயல்—இவை உள்ள ஊர், லட்சுமி விரும்பும் ஊர், உலகெலாம் போற்ற இறைவன் இருந்த ஊர், விண்ணுயர் மாளிகைகள் உள்ள ஊர்,

பத்திமைப் பாடலும் பண்ணியல் பாடலும் நீங்காத ஊர், மாதரும் மைந்தரும் சுனையில் மூழ்கிப் பத்தியுடன் இறை வனைப் பாடும் ஊர், பக்தர்கள் கதியருள் என்று மலர் கொண்டு பூசிக்கும் ஊர். இத்தலத்தில் திருவிழாவில் வீதியிற் பெண்கள் கூட்டம் கூடுவர்; வாசலிற் கவி பாடுவர்; பொன் பரிசு பெறுவர்: அரங்கேறி மைந்தருடன் இறைவரைத் துதி பாடுவர்.

இறைவர் தேவியோடிருந்த பதி. ஆவூரில் உள்ள திருக்கோயிலாகிய "பசு பதியீச்சுரத்தைப்" பாடுதலே நாவிற்குத் தொழிலாக அமைக.

25. திருஆனைக்கா :—வண்டினமும் அன்னமும் மல்குந் துறையையும் பொய்கையையும் கொண்ட தலம். இத்தலத் தில் வெண்ணாவல் மரத்தடியில் இறைவர் வீற்றிருக் கின்றார். திருவானைக்கா திருவிழா நடைபெறும் தலம், தேவர்கள் வணங்குந் திருப்பதி, திருவானைக்கா அண்ணல் யானைக்கும், கோச்செங்கட் சோழனுக்கும் அருளியவர். (திருமஞ்சன) நீருடன் ஆரத்தை ஏன்றுகொண்ட கருணை யாளர்*. அவரை அபயமாக அடைந்தவர்க்கும் தொழுத வர்க்கும் தீங்கு ஒன்றும் வாராது. அவரை வேத மொழி யாற் கூறினவரும் அவர் திருக்கழலை நினைய வல்லவரும் விண்ணுலகு எய்த வல்லவராவர். அவரை அன்புடன் வணங்கினவருடைய வினைகள் மாயும்.

26. இடும்பாவனம் :—ஏலங்கமழ் பொழில் சூழ்ந்த தலம்; வயல் சூழ்ந்தபதி; கடற்கரைத் தலம்; குன்றளூர் என்னும் நெடுமாட நகரில் கடற்புறத்தில் உள்ளது இடும் பாவனம். இத்தலம் சினமிக்க வாள் எயிற்று அரக்கன் (இடும்பன்) இருந்ததும், புன்னை, மகிழ், குரவம் ஆகிய மலர்கள் மணம் கமழும பொழில் சூழ்ந்ததும், புலவருடைய காவல் பெற்றதும், மடவார் நிறைந்து வாழ்வதுமான குன்

---

* இதன் விவரத்தைச் சிவஸ்தல மஞ்சரியிலும் திருவானைக் காப் புராணத்திலும் காண்க.

றில் உள்ளது. இது மாதவர் நாடுந் திருப்பதி. இடும்பாவனத்து இறைவர் இடுக்கண் பலவும் களைவார்.

குறிப்பு :—சுவாமிகள் காலத்தில் இடும்பாவனம், கடிக்குளம் இவைகளுக்குச் சமீபத்தில் கடல் இருந்ததுபோலும். பின்னிட்டுக் கடல் விலகி யிருக்கலாம்.

27. திருவிடைச்சுரம் :—இலவங்கம், ஏலம் கமழும் பொழில் கொண்டது. திருவிடைச்சுரச் சாரலில்—அரிவையர் உலவுவர் : அரவம் ஊரும்; எரிவளர் மணிகள் விளங்கும்; மஞ்ஞை, ஏனம், மான் இவை உலவும்; மந்திகள் ஆண் குரங்குடன் திரியும்; இள அன்னம் ஆலும்; குயில் ஆலும்; வண்டு இசைபாடும். கோடல், குரவம், மரவம் இவைகளின் புதுமலர் மணங் கமழும்; முல்லைக்கொடி குருந்த மரத்து ஏறும்; வாழைக்கனி தேன் சொரியும்; வாழையும் பலாவும் எழில்பெற வளரும். கத்தூரியின் நறுமணப் புகையின் மணம் கமழும். சுனைகளில் எருமைகள் படிவதால் கயலும் வாளையும் இரியும்; சாரற் பொழிலில் இளமயில் ஆலும். வெள்ளருவிகள் திண்ணென வீழ்ந்து மணமுழவு அதிரும்.

இடைச்சுர நாதரின் வண்ணத்தை என்னென்றுரைப்பது ?

28. திரு-இடைமருதூர் :—காவிரி யாற்றங் கரையது. பொழிலும் வயலுஞ் சூழ்ந்தது, வண்டினங்கள் ஆலுவது, மருதமரம் வளர்வது. புகழ்பெற்ற நிகரற்ற ஊர், சிவனுறை செழுநகர், அந்தணருடைய வேத ஒலி நீங்காத திருப்பதி. இத்தலத்துக் கோயிலானது கனம், சீர், செல்வம், நலம், நிறை வாய்ந்தது, பொழிலுடன் கூடியது, மேகத்தை அளாவுவது. இக்கோயிலே கோயிலாக இறைவர் கலந்து புக்குப் பொலிந்து நயந்து மகிழ்ந்துள்ளார். இத்தலத்திற் பூச ஸ்நாநம் விசேடம்; வானோரும் மாதவத்தோரும் வந்து கூடித் தைப்பூச தினத்தில் காவிரியில் ஆடுவர்.

இடைமருதை அடைய நினைத்தாற் புகழ்வரும்; அடைந்தால் இடர்கெடும், பரவினும் வலம் வரினும் வினை

நீங்கும், மலர்கொண்டு பூசிக்கத் துயர்போம், இடைமருதெனச் சொல்லின் நரை-திரை வாரா, மறு பிறப்பில்லை; மருதரைச் சிந்தை செய்பவர் புந்தி நல்லவர், ஏத்துவோர் பெரியோராவர், மருதரை ஆத்திமாலை சூட்டிப்பணிய ஆசை அறும், நினைக்க இன்பம் பெருகும், தொழ வினை போம், பண்பாட விண் கிடைக்கும், பரவ வாழ்வு பெருகும், இத்தலத்தில் நான்மறையோர் இனிதா ஏத்தி வழிபடுவார்; எல்லாக் கணங்களும் முறையாலேத்தும்; அடியார் குளிர் நீர் சுமந்தாட்டுவர். இத்தலம் முநிவரும் அமரரும் வழிபட்ட திருப்பதி, இத்தலத்தில் இறைவர் தேவியுடன் மகிழ்ந்து வாழ்வர். சுவாமி-மருதர்; தேவி-பெரு நல முலை நாயகி; மருத விருக்ஷம்; காவிரி நதி-தீர்த்தம். சம்பந்தப் பெருமான் இத்தலத்தை வழிபட்டு எல்லியில் பகலில் பாடியருளிய திருப்பதிகம் "பொங்கு நூல்" என்னும் பதிகம்.

29. இந்திரநீல பர்ப்பதம் :—இந்திரன் தொழுத திருப்பதி. இத்தலத்து நாதனை அடைந்து வாழ வேண்டும், ஓதி உய்யவேண்டும், தியானித்து அருள்பெற வேண்டும். இத்தலத்தை வாழ்த்தக் குணமாம், வணங்க இன்பமாம். இத்தலத்தைப் பாவியாதவர்களை வினைகோவிக்கும், கூற்றம் கொல்லும்.

30. இராமனதீச்சுரம் :—மணியினம் விளங்குவது.

31. இராமேச்சுரம் :—கடலோதம் மல்கித் திரை வீசு பதி. கானலில் அன்னம் வைகும், தாழை முகிழ் விரியும், முத்தம் இலங்கும் ஏல நறும் பொழிலில் வண்டு யாழ் முரலும். இங்குள்ள திருக்கோயில் அயனும் மாலும் ஏத்து கோயில். இத்தலம் ஏதமிலாதவரும் நல்லோரும் தொழும் பதி. இராவணனது முடிபத்திறுத்ததனல் வினை மூட ஸ்ரீராமர் அந்தப் பழி நீங்க இத்தலத்திற் சிவ பூசை செய்ய இறைவர் அருளால் பழி நீங்கப் பெற்ருர். இறைவரது அருள்பெற வேண்டின் இத்தலத்தை ஏத்தி வாழ்த்தவும். இராமேச்சுரத்து அண்ணல் பாதம் ஏத்தத் துயர் நீங்கும், அவர் பெயரை ஏத்தப் பிணி நீங்கும். அவரைச் சிந்தை செய்ய வினை அழியும்,

தேவி பெயர் : மலைவளர் காதலி. இறைவர் 'தலை வளர் கோலநன்மாலையன்' எனக் கூறப்பட்டுள்ளார்.

32. இரும்பூளை :—அழகிய ஊர். காஞ்சிபுரத்து (கச்சி) அம்மை "ஏலவார் குழலி"யின் திருநாமங் கொண்ட தேவியுடன் இறைவர் விருப்புடன் அமர்வர்.

33, இரும்பை மாகாளம் :—எண்டிசையும் நிறை புகழ் பெற்ற தலம்: மேகம்வரை ஓங்குவதும், வண்டு கீதம் முரலுவதும், குயில்கள் சேருவதும், பலா-குரா முதலிய மரங்கள் நிறைந்ததும், எழில்கொண்டதுமான பொழிலாற் சூழப் பெற்ற அழகு நிறைந்த ஊர். பலாமரத்திலேறி மந்தி பலாப்பழத்தைக் கொண்டுவந்து உண்டு குதிக்கும். இத் தலம் இறைவர் இட்டமாக இருக்குந் திருப்பதி. துன்பவித்தைத் தீர்க்கும் ஊர். மறை வல்லாரும், மாதவத்தோரும், வானோரும் தொழும் ஊர். மாசில்லாத பெரியோர் இறைவரை மலர்கொண்டு புனையும் ஊர். இத்தலத்தை வலம்வந்து பணியப் பிணிதீரும்; (எனவே இத்தலத்தில் பிரதட்சிணம் செய்வது விசேடமென அறியலாகும்.)

34. இலம்பையங் கோட்டூர் :—ஏல நறும் பொழிலும் மலர்ப் பொய்கையும் சூழும் பதி. சுனை மல்கிய ஊர். முல்லை, வேங்கை இவைகளில் வண்டுந் தேனும் முரலும். பெண் மான் ஆண்மானோடு துயிலும்; ஆண்மயில் பெண் மயிலைப் புல்கி ஆலும். சாரலிலும் பொழிலும் மான் துள்ளித் திரியும்; பன்றி, யானை முதலிய பல மிருகங்கள் திரியும். இரவில் பாம்புகள் ஊரும்; மான் பயப்படும்படி குரங்குகள் குதித்துப் பாயும். அருவிகள் பொன்னும் மணியும் கொழிக்கும். பொழில்களில் ஆடல், பாடல் நடைபெறும்; மேகங்கள் தவழும். இறைவர் தமது இருக்கையாக இலம்பையங் கோட்டூரை விருப்பத்துடன் கொண்டுள்ளார்.

குறிப்பு :—இத்தலத்துப் பதிகத்தில் சம்பந்தப் பெருமான் "எனதுரை தனதுரையாக" எனப் பாடல்தோறுஞ் சொல்லியுள்ளார்.

35. இன்னம்பர் :—அழகிய பொழில் சூழ்ந்த பதி. எண்டிஸ்சையும் புகழ்பெற்றது. எண்ணுதற்கும் ஏத்து தற்கும் அரிய புகழ் வாய்ந்தது. யாழோசை முதலிய இசை முரலும் பதி. இமையோரும் பெரியோர்களும் தொழும் திருப்பதி. இறைவன் தேவியோடு அமரும்பதி.

36. ஈங்கோய்மலை :—அழகிய பொழிலும் சுனையும் வாய்ந்த மலை. சாரலில் ஏலம்-இலவம் இவை மணங் கமழும்; வண்டுபாடும்; கரடி, சிங்கம், பன்றிக்கூட்டங்கள் திரியும். இத்தலத்தில் உமையோடு இறைவர் அமர்வர்.

37. திருவுசாத்தானம் :—கடற்கரைத் தலம், நெருங்கி உயர் பொழிலும், காகம்-குருகு நாடுங் கழனியும் சூழ்ந்த தலம். வான் தோயும் மதில் சூழ்ந்த உயர்ந்த மாளிகை களையுடைய ஊர். இறைவர் சேமமாக உறையும் இடம். பத்தி பூண்ட நற்குணத்தினரும், நெறியில் நின்ற வேதியர் களும் நியமனத்துடன் பணியும் பதி. ஸ்ரீராமர், லக்ஷ்மணர், சாம்புவான். சுக்கிரீவன், அநுமார் தொழுத தொல்பதி. அயன், மால், பல பத்தர்கள் தொண்டுபட்டு மலர் தூவித் தோத்திரஞ் சொல்லும் பதி.

38. திருவூறல் :—வண்டினஞ் செறி பொழிலும், மதி தோய் சோலையும், கயல்பாய் வயலும், நீலமலர் கண்போல் மலருங் கழனியும், குளிர்சேர் பொய்கையும் சூழ்ந்த ஊர். இறைவர் விரும்பும் இடம். அடியார் பலரும் மடவார் பலரும் வந்திறைஞ்சும் திருப்பதி. இத் தலத்தைத் தியானிக்க வேண்டும்.

39. எருக்கத்தம்புலியூர் :—அழகிய பெருமை வாய்ந்த ஊர். இத் தலத்திலேயே இறைவர் தங்கியுள்ளார். எருக் கத்தம்புலியூர் அத்தன் திருவடியையே அடைவோம், எருக்கத்தம்புலியூர்த் தேவே என அவரைத் தொழு தாலும், நினைத்தாலும் வினை மேவாது. அல்லல் தீரும்; திரு சேரும்.

40. ஏடகம் :—வைகையாற்றின் வடகரையில் உள் ளது. பொழிலும், பொய்கையும், தென்றலுங் கொண் டது. மாதவி, சந்தனம், சண்பகம் நிரம்பப் பெற்றது.

மதிதொடு கொடிநெடு மாளிகையையும் கோபுரத்தையுங் கொண்டது. சீலமார்ந்த திருப்பதி.

அடியாருடைய இன்னிசைப் பாடல் நிரம்பப்பெற்றது. ஏடகங் கண்டு கைதொழ கவலை நோய் நீங்கும். ஏடகத் தடிகளை அடிபணிந்து அரற்றப் பிணிகெடும், வினைபோம், வீடு எளிதாம். ஏடகம் - புதுமலர் கொண்டு மறையவர் வழிபடு தலம்; வைகை நீரிலே ஏடு எதிரேறி கரையணைந்த திருப்பதி. தேவி - ஏலவார் குழலாள்.

41. திருஐயாறு:—காவிரியின் வடகரையில் உள்ளது. அழியா வளநகர்; வான் அளாவு நறும் பொழிலும் அலை புனலுஞ் சூழ்ந்த ஊர்; பொழிலில் அன்னங்கள் மலியும், ஆலும்; மான்கள் பாயும், அதைக்கண்டு மரமேறி மந்திகள் பாயும், அதைக்கண்டு மடுக்களில் தேன் பாய மீன்பாயும், அதனால் செழுந்தாமரை மொட்டு அலரும்; கடலின் திரை மோதக் காவிரியில் எதிரேறுஞ் சங்குகள் முத்துக்களை ஈன்றலைக்கும்; தெங்கின் பழம் விழ எருமைகள் பயந்து ஓடி நெற் கதிர்களை உழக்கும்; கரும்பு வளரிடத்துத் தென்றல் வீசும்; சோலையில் மாதவிப்பூ மணம் கமழும்: வெண் குருகு கானலில் இரைதேரும்.

திருவையாறு வட்டமதில் சூழ்ந்த திருப்பதி. கொடி மாடங்களையும் தேரோடும் வீதியையுங் கொண்டது; அத் தலத்தில் மடவார் அரங்கேறி நடம் ஆடுவர்: மடவார்கள் வலம்வந்து நடமாட முழவதிரும்; முழவொலியை இடி யென்று அஞ்சி மந்திகள் கலக்கமுற்று மரமேறி மேகத் தைப் பார்க்கும்.

திருவையாறு கருணையாளரும் கொடையாளரும் பயிலும் ஊர். எண்ணிலி தேவர்கள், இந்திரன், சூரியன், திக்குப் பாலகர்கள், தவராசர்கள், பிரமன்—வழிபட்ட தலம். உமையம்மை சுளிவெய்த அம்மையை இறைவர் திருப்தி செய்த திருப்பதி. நிலைகொண்ட மனத்துப் பெரியோர் நித்தம் மலர்கொண்டு வணங்கும் தலம். இத்தலத் துப் பெருமான் வேதத்தையும் அங்கங்களையும் அருளினவர்; நந்தி முழவங் கொட்டி மகிழ நட்டமாடினவர்; பண்

ணின் நல்ல மொழியார் வண்ணம் பாட அதைக் கேட்டு உகந்தவர்.

42. ஒற்றியூர்:—கடற்கரைத் தலம்: சுவாமி திரு நாமம் - படம்பக்கநாதர்.

43. ஓத்தூர்:—வாழைக்கனி தேன்சொரியும் ஊர். ஓத்தூர்ப் பெருமான் திருவடியைச் சிந்திக்கவேண்டும். ஓத்தூர் என்று சொல்ல வினை ஏகும். இத்தலத்தில் ஆண்பனை குலை யீன்றது.

44. ஓமாம்புலியூர்:—பொழிலில் வண்டு இசை பாடும் பதி; வாளைபாய் கழனியும் பனிமலர்ச் சோலையும் சூழ்ந்த பதி; மலைபோல ஓங்கும் மாளிகையையும் மதிலையுங் கொண்ட ஊர்; மேய்புலத்தில் எருமை இடற பவளம் வெளித் தோன்றும் ஊர்; ஆகுதி வேட்பவரும், எல்லாம் உணர்ந்தவரும், நான்மறை - மூன்றெரி ஓம்புவரும் ஒள்ளி யருமான அழியாப் பெரும் புகழ்பெற்ற மறையோரும் பெரி யோரும் வாழும் பதி; இறைவர் விருப்பொடும் உறைகின்ற தலம்; உம்பர்கள் வழிபடும் பதி. திருக்கோயில் வடதளி, தேவி - பூங்கொடி மடவாள்.

45. கச்சி ஏகம்பம்:—அழகிய மா நகரம். தீதின்றி நலஞ் சிறந்த நகர். கலிக் கச்சி, கருவார் கச்சி, வட கச்சி, வரமார் கச்சி எனப்பட்டுளது. குருந்தம், மல்லிகை, கோங்கு, மாதவி, குரா, மரவம் வளருவதும், ஏல நறு மணம் வீசுவதும், உயர்ந்து ஓங்குவதுமான அழகு நிறை பொழில் சூழ்ந்த பதி. மாமரம் இத்தலத்தில் விசேடங் கொண்டது. வான் தோய்வனவும், குன்று ஒப்பனவுமான மாடங்களின்மீதுள்ள கொடிகள் மேகங்களில் தோயும். முழவம், மொந்தை, குழல், யாழ் இவைகளின் ஒலியொடு சிதைவிலாப் பாடல், ஆடல் நிரம்பும் அழகிய நகரம். ஒளித்தல் என்பதை அறியாத வண்மை வாய்ந்த கையினர் வாழும் பதி. கம்பையாற்றங் கரையில் ஏகம்பம் மதிதோ யும் உயர்மதிலைக்கொண்டது.

ஏகம்பங் காண, ஏகம்பம் சேர, ஏகம்பம் ஏத்த இடர் கெடும். ஏகம்பத்தைக் குலவி ஏத்த வினை கலவாது;

ஏகம்பம் சென்றடையும் சிந்தையரை மேல் வினை சாராது; ஏகம்பத்துடையாய் என்று தொழ வினை அடையாது; ஏகம்பத்தொருவா என்ன வினை மருவாது; ஏகம்பந் தொழுவாரே விழுமியர், வினை துன்னாதவர்; ஏகம்பம் காதல் செய்வோர் நடுக்கமிலராவர்; ஏகம்பம் சிந்தியாதவர் இன்ப நெறி சேரார்; கச்சிப்பதி, கம்பைநதி, ஏகம்பம் மூன்றையும் விதிப்படி ஏத்துவோர் தலைமை அடைவார். இத்தலத்தில் இறைவர் விருப்புடன் அமர்ந்துள்ளார். ஏகம்பத்தை விரும்பி அண்ணல் ஆடல் புரிவர். ஏகம்பத்தின் சீரானது மன்றினை (சிற்றம்பலத்தை) நிகர்க்கும். உமையாளும் கங்கையும் கச்சி நகர்க்குச் சிறப்புத் தருதலால் ஏகம்பம் சீருற்றுப் பொலிகின்றது. உமையாள் முன்பு தவஞ்செய்த காலத்தில் (கம்பை)யாறு அதி வேகத்துடன் அதிர்ந்து வர இறைவர் தேவியால் தழுவப்பட்டுத் தேவியின் முலைச் சுவட்டுடன் விளங்குகின்றார். தேவி 'ஏலவார் குழலி,' 'காமாட்சி'யுடன் இறைவர் வீற்றிருக்கின்றார்.

46. கச்சிநெறிக் காரைக்காடு:—இத்தலம் தேரூரு நெடுவீதிக் காஞ்சி மா நகருள் உள்ளது. ஆழ்கிடங்கும் வயலும் சூழ்ந்தது, மலர்ப் பொய்கை வாய்ந்தது. வண்டினங்கள் தீங்கனியின் தேன் உண்டு மகிழும்.

47. கடம்பூர்:—வயல் சூழ்ந்த ஊர். இவ்வூரில் வயல்தோறும் தாமரைமேல் அன்னம் வைகும்; அழகிய சோலையில் வண்டேறத் தேன் அவிழும்; கலைமானும் பெண்மானும் புல்கிப் பயிலும்; பறையொலி சங்கொலி இயம்பும்; வெண்கொடி பல சேர் நெடுமாடங்கள் விளங்கும்; அம்மாடங்களில் மடவாரின் கலையொலி சேரும்; கடம்பூரானது மடவார்கள் குழல் இசைக்கும் ஊர்; மறையோர் வாழும் ஊர், ஒலிநிறை வீதியை உடைய ஊர், பாடல் ஆடல் அறாத ஊர்.

"கடம்பூரில் எம்மான்" என வாழ்த்தித் தேமலர் தூவித் திசைதொழத் தீயன கெடும். கடம்பூர்ப் பெருமான் தாளைத் தொழ வீடு எளிதாம்; அவர் பாதத்தை இரவும்

பகலும் பணிதலே நமக்கு இன்பம். அவரைப் பாடல் பயில்வார் பழி பாவம் இலராவார்; வானுலகம் பெறுவர்; அவரைப் பேண வல்லார் பெரியாரே. அவரைப் போற்றலே பொருள்.

48. கடவூர் வீரட்டானம்:— அந்தணர் வாழும் ஊர். விரிதரு தொல்புகழ் நிறைந்த ஊர். நறுமணப் பொழில் சூழும் ஊர். கடையுடை மாடங்கள் ஓங்கும் ஊர். விழவொலி மல்கிய ஊர்.

49, கடவூர் மயானம்:—மரவப் (கடப்ப மரப்)பொழில் சூழ்ந்த தலம். பசுவுங் கன்றும் சூழும் புறவில் (முல்லை நிலத்தில்) உள்ள தலம். சுவாமி: 'பெருமான் அடிகள்' எனப்பட்டுள்ளார்.

50. கடிக்குளம்:—கடற்கரை ஊர். நறும் பொழில் சூழ்ந்தது. கரும்பு மலி ஊர். கொடி நெருங்கும் ஊர். கடிக்குளத் துறையுங் கற்பகத்தை ஏத்திப் பணிய நற்குணம் சாரும், வினைகெடும், துன்பம் சாராது. இறைவரைப் பண்ணுடன் பாடப் பழிபோகும், புகழ் ஆகும்; அவரை அன்புடன் ஓத நல்விதி கூடும. இறைவரது தொண்டர் தொண்டரைத் தொழுது அடிபணியத் தூநெறி எளிதாம்.

51. கடைமுடி:—காவிரிக்கு அயலில் உள்ள வள நகர். கொடிமலரைக் கொண்ட சுனை நீர் மணம் வீசு நகர், இறைவர் காதல் செய்யும் தலம்.

52. கண்டியூர்:—வீரட்டத் தலம். காவிரிக்கரையில் உள்ளது. புனலும் வயலும் பொழிலுஞ் சூழ்ந்தது. மங்கையர் பொலியும் ஊர். மடந்தையர் தொழும் பதி. உலகெலாந் தொழுதேத்துந் தலம்.

53. கண்ணார் கோயில்:—மண்ணியாற்றின் வளப்பங் கொண்ட வயல்கள் நிறைந்த ஊர். முல்லை, மல்லிகை, மௌவற் கொடி பின்னிக் கிடக்கும் உயர்ந்த கல் மதில் சூழ்ந்த அழகிய ஊர். சோலையில் வண்டு செந்துப் பண் பாட குரங்குகள் ஆடும் ஊர். கன்னியர் நாளும் நாடிச் செல்லும் ஊர். இறைவன் பிரியாத நகர். இத்தலத்தைத்

தொழ இடர், பாவம் நண்ணு; நல்வினை நணுகும். உள்ளங் கலந்து இத்தலத்தை ஏத்துபவர் அண்டத்து அமர்வார். திருக்கண்ணார் என இறைவனை உரைப்பவர் சிவலோகஞ் சேர்வர். இத்தலத்து நாதரை நண்ண வல்லோருக்கு நமன் செய் துன்பங்கள் இல்லை. இத்தலம் வாமனராய் மாவலிபாற் சென்ற திருமால் திருவுரு அமைத்துப் பூசித்துக் கொண்டாடிய சிவனமர் தலம். இந்திரன் முனிவிடம் சாபம் பெற்ற பிறகு தேவர்களுடைய வேண்டுகோளுக் கிரங்கிய சிவபிரான் அந்த இந்திரனுக்கு ஆயிரங்கண் அளித்தருளிய திருப்பதி.

54. கயிலாயம் :—மணி நிறை உயர்மலை, கற்றவர் களின் சொற்பா முற்றும் பெற்ற புகழ் சேர்ந்த மலை. சமண சமயம் ஆதிய சமயங்களைக் கண்டவர்களும் அச்சமயங்களை மேற்கொண்டவர்களும் அறியாத மலை. அசுரர்கள் போருக்கு வரும்போதெல்லாம் அவர்களுக்கு அஞ்சி ஓடிப் பணிந்து 'இறைவ! காத்தருளுக' எனச் சிவபிரானிடம் தேவர்கள் ஓலமிடும் மலை. காணுதற்கரிய இறைவனைத் தரிசிக்க வேண்டி மாலும் பிரமனும் செல்லும் மலை. முனிவர் களுக்குச் சிவபிரான் அறத்தை உபதேசித்த மலை. தருக்கிய அரக்கனை (இராவணனை) கழுத்தொடிய இறைவன் விரலால் நெரித்த மலை.

இம்மலை கானம் (கீதம்) நிறைந்தது. குளிர்கொண் டது. வலிமை வாய்ந்தது. பாறைகளிற் சுனைகளும் மடுக்களும் கொண்டது. தேவி வீற்றிருப்பது. இம்மலை யில்—ஆளியின் வரவுக்கு அஞ்சித் தூளி யெழ ஓடிக் களிறுகள் விலகும்; இடியின் ஒலிகேட்டு அரவுகள் புற்றில் ஒடுங்கும்; இருட்டில் வழிதப்பித் திகைத்த ஆண் யானை சாரல் வழியே ஓடிப் பிடியையுங் கன்றையும் அடிவாரத்திற் சேர்ப்பிக்கும்: களிறும், பிடியும், கன்றும் உலவும்; குரங்குகள் சுனையிலும் பொழிலிலும் சூழ்ந்து திரியும்; கொன்றை தென்றலொடு கமழும்; பருத்த களிற்றை விழுங்கி மலைப் பாம்புகள் மழுங்கிக் கிடக்கும்; பாறையிடங் களிற் சினங்கொண்ட புலி இரைதேடும்; மந்திகள் மலர்க்

கொத்துக்களைப் பறித்துச் சிந்தும்; விடைகள் இடிபோல முக்காரம் போடும்; மலைச் சாரலில்—மேகங் குடிகொள்ளும்; இடிக்குரலுடன் சிங்கந் திரியும்.

55. கரவீரம் :—கரவீரத்து அண்ணல் பாதத்தை நண்ணிப் பேணி ஏத்த நம் வினை தொலையும்; ஏதங்கள் அடையா; நல்லன வரும். கரவீரத்துத் தொண்டர்களுக்கு அல்லல் இல்லை: துயர் தூரம்: கரவீரத்தைத் தியானிக்க வினை ஓயும்; தொழத் துக்கம் இலதாகும். கரவீரம் எனச் சொல்ல வல்லார்க்கு இடர் இல்லை.

56. கருகாவூர் :—முல்லை மணங் கமழும் ஊர். மௌவலும் கைதையும் மணக்கும் ஊர். மயில் உலவும் ஊர். பழகிய தொண்டர்கள் குழகா எனக் குழைந்து உருகிப் பாமாலை சூட்டும் ஊர். கருகாவூர் ஈசர் வண்ணம் எரியும் எரி வண்ணம்.

57. கருக்குடி :—உயர் பொழில் சூழ்ந்து வளம் மலிந்த ஊர். வையகந் தொழும் தலம். கருக்குடியை அறிவோடு தொழுபவர் நன்மை அடைவார். இத்தலத்தை மனத்திலும் நாவிலும் வரும்படி நினைத்தல் நன்மைக்கிடம். கருக்குடி ஆதியை அடி தொழ அல்லல் இல்லை. பிறவியை அறுக்க வேண்டுவோர் கருக்குடிக் கோயிலை வணங்கி நித்தலும் இறைவன் கழலை வாழ்த்தி வாழுதல் வேண்டும்.

58. கருப்பறியலூர் :—இறைவனிடத்து நெஞ்சங் கலந்தவர் வாழும் பதி. சுவாமி—குற்றம் பொறுத்த நாதர்: திருக்கோயில்—கொகுடிக் கோயில்.

59. கருவூர் :—மெய்ப் பத்தர்கள் சேரும் பதி. திருக்கோயில் "ஆநிலை" எனப்படும்.

60. கலிக்காமூர் :—கடல் ஓதம் முத்தஞ் சொரியும் ஊர். குன்றுபோல வீசும் திரையாற் கொணரப்பட்ட மணியுஞ் சங்கமும் நிறைதரு பதி; கடற் கானலின் நீழலில் கண்டல்கள் வளருங் கழிசூழ் பதி. தாழையின் மணம் கலந்து தென்றல் வீசும் ஊர். நீர்த்திரள் மண்டி வளமார்ந்த ஊர். சோலையும் வயலும் சூழ்ந்த அழகிய ஊர்.

மதிதோய் மாடங்கள் கடற்கரைக்கு அருகில் விளங்கும் ஊர். எருமை தன் கன்றுடன் புல்கி வீடுகளுக்கு அழகு தரும் ஊர். மாதராற் கவின்பெறும் ஊர். மாதரும் மைந்தரும் காலம் வழுவாது மங்கலச் செயல்கள் செய்யும் ஊர். பூவும் நீருங்கொண்டு வையத்தவர் தொழும் பதி. இத்தலத்து ஈசரை ஏத்தி நினைக்க வினைபோம்; அவரை அறிவுடன் தொழுதேத்தத் திரு மருவும், சிதைவு இல்லை. செம்மைத் தேசு உண்டாம், நிறை வளரும், புகழ் எய்துப், வாதைகள் நினையா, இடர்கள் தொடரா, வினைகள் சிந்தும், அருள்கூடும்: அவரை ஏத்தி உணர்வாரை நீசராய நமன் தமர் நினைக்கவும் முடியாது; அவரை விரும்பி வழிபட்டால் அவர் ஐம்புலச் சேட்டைகளை விலக்கி நம்மை ஆண்டருளு வர்-இது நிச்சயம்; மேலும், அவர் நமது ஆவியை விட்டு விலகாது உடனமர்ந்தும் அருளுவர். அவர் கழலை ஏத்தி ஓலமிடாதவர் ஊழிகாலம் வரையில் உணர்வைத் துறந்தவ ராவர்.

61. கழிப்பாலை :—கடற்கரை ஊர், கழி சூழ் பதி, மரக்கலங்கள் வந்து உலவும் ஊர், நறும் பொழிலும் புனலுஞ் சூழ்ந்த பதி, கண் நலம் கவரும் ஊர், குங்குலியப் புகையின் கந்தம் நிறைந்த தலம். கழிப்பாலையைச் சிந்திப் போம். அங்ஙனம் சிந்திப்பவர்க்கு இறைவர் எளியர். கழிப்பாலையைச் சிந்திப்போர் வினை ஓயும்; தொழுவோர் வினை மாயும்; வலங்கொள்வோர் வினை மாயும். கழிப்பாலை நாதரின் அடியாரை அவலம் அடையாது; கழிப்பாலை இறைவருடைய கழலை யேத்த இடர் கெடும். அவரை இரந்தேத்த வினையறும். அவர் திருவடியையே சிந்தை செய்து உய்தல் வேண்டும்.

62. கழுக்குன்றம் :—இறைவன் காதல்செய்கோயில். அழகிய திருமலை. சுவாமி திருநாமங்களுள் ஒன்று— "கள்ளம் வல்லான்". தேவி திருநாமம் "பெண்ணி னல்லாள்".

63. கள்ளில் :—நீரும் நறும்பொழிலும் வளவயலுங் கொண்ட ஊர். நீலமலர் மலரும் ஊர். சோலையில் கூகை

(கோட்டான்) முரலும். வெள்ளிலின் (விளாமரத்தின்) மேல் கொடி படரும். ஊரார்கள் உபசார மொழியையும் நெறியையும் அநுஷ்டிப்பவர்கள். இறைவனுக்கு என்றும் உகந்த ஸ்தலம் கள்ளில். கள்ளிலே ஏத்தப் பேரின்பம் வரும். கள்ளிற் பெருமானுடைய அடியார் கட்குடியராய் இருப்பினும் அவர் பண்பை இகழ்பவர்கள் அறிவிலிகளே. கள்ளிற் பெருமான் திருவடியையே விரும்புங்கள். அவர் கழல்களை நாளும் நினைக்க உயர்வு அடைதல் நிச்சயம். கள்ளிற் பெருமான் மாதவத்தோர்க்கு உள்ள மலத்தினை அறுத்தருளுவர்.

64. களர் :—உயர் பொழிலும், புனலும், வயலும், வாவிகளும் சூழ்ந்த அழகாய ஊர். இத்தலத்திற் சோலையில் மதுவுண்டு வண்டினம் இசைசெய்யும்; மேகஞ் சேர் பொழிலில் மயில் ஆலும்; தெங்கு, கமுகு சூழ்ந்து விளங்கும். குன்றுபோற் பெரிய மாளிகைகள், மாடங்கள், கொடிகள், கோபுரங்கள் வானை அளாவும். மாடமாளிகையில் மடவாருடன் ஆடவர் பயிலுவர்; பண்மொழி மங்கையர் கூடுவர்; யாழ்பயில் மங்கையரின் பாடலொலி பொலியும். தேரோடு வீதியில் திருவிழாக்கள் மல்கும். பாக்கியம் பல செய்த பக்தர்களும், பாடல் முதலிய பலவித தொண்டுகளை விரும்பும் நல்லறி வாளரும் சிறந்து வாழ்வர். திருநீறு பூசிய தொண்டர் போற்ற, பாடவல்ல அன்பர்களொடு, அறிஞர்கள் மலர்கொண்டு போற்றுவர். வானவர் புதுமலரிட்டுத் தொழ பேரம்பலத்தில் இறைவர் கூத்துகந்து மாநடம் ஆடுகின்றார்: இறைவர் திருநாமம்: 'அடைந்தார்க் கருளு நாயனார்'.

65. கற்குடி :—கற்குடி மாமலை அழகிய சோலை சூழ்ந்தது. இம்மலையில்—குறமாதரின் கையில் உள்ள குழந்தைகள் நிலவைப்பற்றும்; கேழல் (பன்றி) கிளைத்த ஒளி மணிகளை வேடர்கள் எடுத்துக் குவிப்பர்; சந்தன மரத்தின் சிறையால் வேடர் தினை விதைத்து விளைவு செய்வர்; பச்சை மூங்கிலின் முளையைவாரி ஆண் யானை பெண் யானையின் வாயில் கொடுக்கும்; பொழிலில் வண்டு இசை

பாட அதைக் கண்டு மயில் ஆடும்; யானைகள் வேயின் (மூங்கிலின்) நுனியை எட்டிப் பற்றித் தாழ்த்தி விட்டுவிட அந்த நுனி விசையிற் சென்று மேகத்தைக் கீறும்; வேடர் விறகிலிட்ட அகிற்புகை புனமெங்கும் மணங்கமழும். இம் மலை இறைவன் காதலித்து வாழும் மலை. நலந்தரு சிந்தையராய்ப் பாமாலை பாடும் அடியார் காதலுடன் வாழும் மலை. இத்தலத்தில், உயர்ந்த பக்தர்களும் சித்தர் களும் தம்மை இறைஞ்சி ஏத்த அவர்களுக்கு உற்ற இடர் களை இறைவர் விலக்கினர்.

66. காட்டுப்பள்ளி-கீழை:—காவிரியின் பக்கத்தில் காவிரிக் காலின் கரையில் உள்ளது வாழைக்கனி தேன் சொரிய மலர்த்தேன் மணங்கமழும். தாமரை, நீலம், நெய் தல் மலரும் பொய்கையில் கன்னியர் குடைவர் (குளிப்பர்). இஃது இறைவன் காதலிக்கும் தலம். இங்கு இறைவனைப் பூவும் நீருங்கொண்டு அடிதொழுந் தொண்டர் அரு வினையைத் துரந்தவராவர். உம்பர்கள் தொழும் விடை யேறும் பெருமானது பேச்சலது வேறு பேச்சு இலோம். அவர் கழலையே கைகூப்பித் தொழுவோம். அவர் கழலையே வாழ்த்துவோம்.

67. காட்டுப்பள்ளி-மேலை:—காவிரிக் கரையில் உள் ளது. கலைமான் உலவு முல்லை (புறவம்) நிலத்தது. பொழில் சூழ்ந்தது. இறைவன் கருதி யமர்கின்ற பதி. கணங்கள் கூடித் தொழுதேத்து பதி. காட்டுப் பள்ளி யைத் தொழ அல்லல் இல்லை; இன்பம் எய்தும்; அத் தலத்தை வணங்கத் தவமது ஆம். காட்டுப்பள்ளியில் அமரும் இறைவனைப் போற்றுதலே பொருள். அவரை நாளு நின் றேத்துக. தேவி-வார்கொண்ட முலையம்மை.

68. காவிரிப்பூம் பட்டினம்:—கடற்கரை ஊர். புகார், பட்டினம் எனப்படும். தாமரைப் பொய்கையையும், படை யார் மதிலையும் உடையது. மல்லிகை, புன்னை, குரவு இவை பந்தல்போலப் படர்ந்து அழகு தரும். வண்டு தேன் உண்டு பண்செய்யும். கடையார் மாடங்கள் நிறைந்து விளங்கின. பக்தர்களும், குற்றமற்றவர்களும், பழியிலாரும்,

பத்திநிறை மாதர்களும், காலஞானிகளாகச் செப தபம் செய்வோரும் நிறைந்து விளங்கினர். மாதரும் ஆடவரும் பாடும் இசை யொலி மல்கியது. தண்டு, உடுக்கை, தாளம், தக்கை முதலிய வாத்தியங்களுடன் நடம் செய்வோரது பழவினை தீர நல்கும் திருக்கோயில். இவ்வூரில் உள்ள பல்லவனீச்சரம். பல்லவனீச்சரத் தடிகள் இத் தலத்தை இச்சித்து இட்டமுடன் அண்ணலாகவும், அரசு பேணியும், அழகராகவும், ஆதியாகவும், இறைவராகவும், எல்லியாட்டுகந்தும் எங்குமாய் இருப்பார். இவர் தன்மையை யாரால் அறிய முடியும்?

69. காழி:—இத்தலம் பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சை, கழுமலம் எனப் பன்னிரு திருநாமங்களைக் கொண்டது. காழி-பத்தாவது திருப்பெயர்.

கடற் சிறப்பு:—கழியுங் கானலுங் கொண்ட கடற் புறத்து ஊர் காழி. சங்கம், பவளம், முத்து இவை கடலின் திரையாற் கரைகளிற் சேரும். முத்தும் மணியும் (சங்கமும், பவளமும்) வியாபாரஞ் செய்கின்ற கப்பல்களின் வரவு போக்கு இருந்தது. தாழை, கண்டல் இவைகளின் மணம் வீசும். மான் கூட்டங்களைக் காணலாகும்.

பொழிற் சிறப்பு, விளைவுச் சிறப்பு:—இவ்வூர் தென்றலும் நறுமணமும் வீசு பொழில்கள் கொண்டது. பொழில்கள் அழகும், விரிவும், நறுமலரும் வாய்ந்தன. வண்டு இசை செய்யும்; பல் இதழ் மாதவியில் வண்டு யாழ்பாடும்; கடம்பு, கமுகு, கரும்பு, கதலி, தெங்கு, மாதவி இவை நெருங்கி வளரும்; ஆலைகளும் நெற்பயிரும் பொலியும்; மயில் உலவும், குயில் ஆலும்; தாமரைக் குளத்தில் அன்னம் இயங்கும்; வாழைப்பழத்தை உண்ண மந்திகள் குதித்துத் திரியும்.

நீர்வளம், வயல்வளம்:—கோட்டாறு என்னும் ஆறு அருகே ஓடுகின்றது. சேலும், வாளையும், கயலும் செந்நெற் கதிரும் செறியும் வயல்கள் பொலியும். கயல்,

கெண்டை, வரால் இவை வயலிற் குதிகொள்ளும். எருமையும், எருமைக்கன்றும் கானலில் வாழும்.

**ஊர்ச் சிறப்பு:**—இவ்வூர் காவலோடு கூடிய மிக உயர்ந்த அழகிய நெடிய கல் மதில்களை உடையது. மதிற்புறத்திற் பேயும் புள்ளும் விலகி நிற்கும். பன்னிரண்டு திருநாமங்களையுடைய பழமையான ஊர். ஊழிக்காலத்தும் அழியாது ஓங்கும் ஊர். ஏழுலகங்களும் வெள்ளத்தில் மறையும்போதும் தான் வெள்ளத்தின்மீது ஏறி விளங்கும் ஊர். திசை நான்கினும் புகழ் பெற்றது. உலகில் உயர்ந்தது. செல்வம் நிறைந்தது. அழகு வாய்ந்தது. விண்ணோங்கு நெடிய மாடங்கள் பல விளங்கு வீதிகளைக் கொண்டது. மலைபோன்ற மாடங்களும், நீடுயர் மதில்களும் விளங்குவன. மாளிகை மீதுள்ள கொடிகள் வானிடை நெருங்கும். வீதியெங்கும் வெண்கொடிகள் விரிந்தன. மாடவீதியில் முரவமும், முழவமும் அதிரும். மங்கையர் பந்து விளையாடல், கழல் விளையாடல் இவைகளின் ஒலி மலியும். மேற் கூறிய சிறப்புக்களால் காழி நகரானது அணிகாழி, உயர்காழி, எழிற்காழி, கடற்காழி, கமழ்காழி, கலிக்காழி, குளிர்காழி, கோலக் காழி, செல்வக் காழி, தமிழ்க்காழி, திருந்துகாழி, தொல்காழி, நளிர்காழி, புகழ்க்காழி, பூங்காழி, பொழிற்காழி, மன்னுகாழி, மாடக் காழி, வயற்காழி, வியன்காழி எனப் புகழப்பட்டுளது.

**தலச் சிறப்பும், தலவாசிகளின் சிறப்பும்:**—நல்ல நியமத்தினராய "கங்கைநாட்டு மறையோர்" வாழ்ந்த பதி. இறைவன் திருவடியைச் சிந்தித்து ஆய்வோரும், கற்று வல்லோரும், கலியை வென்றோரும், மறை பயில்வோரும் ஆகிய அந்தணர் நிறைந்த ஊர், வேத ஒலி அறாத ஊர். மறைகளை ஓதும்போதும் பிழை திருத்தங் கேட்ட கிளிகள் அவ்வாறே தாமும் பிழை திருத்தும் பதி. அறுபத்து நான்கு கலைகளையும் கற்று அதன் பயனை நுகர்வோர் பரவும் பதி. நாடோறும் மலர்கொண்டெழும் பக்தர்கள் வாழும் ஊர். பிற சமயத்தார் காண அறியாத பெருமை சேர் ஊர். இரந்தோர்க்கு எந்நாளும 'பின்னர் வா' எனக்

காலம் பகராத கொடையாளர் வாழும் ஊர். புலவர்க்கு ஒருநாளும் கரத்தல் செய்யாக் கலைநிறை செல்வர்கள் வாழும் ஊர். பரவித்திரியும் (க்ஷேத்திர யாத்திரை சேய்யும்) பக்தர்களுக்கும், திருநீறணிவோர்க்கும் கரத்தல் இலாது கொடுக்கும் சான்றோர்கள் வாழும் ஊர்; கற்றல் கேட்டல் உடையார், நல்லார், கலிகடந்த கையர் வாழும் ஊர். மங்கையர் பண்பாடு பதி. மடவார்களது மங்கல ஓசை நீங்காத பதி. அவர்கள் பாடல் ஆடல் நாடோறுங் கண்ணெதிரே செய்ய விளங்கும் ஊர். அவர்கள் நடனம் ஆடி இறைவன் நாமங்களை ஏத்தித் துதி பல செய்யும் தலம். இலட்சுமி வாசஞ் செய்யும் பதி.

**தலவிசேடம்:**—இத்தலம் பூதங்களின் காவல் மிக்க ஊர். ஐந்தலை நாகராசனது காவல் கொண்ட பதி. மோடி (காடுகாள் - சத்தி) புறங்காக்கும் தலம். மண்ணோரும் விண்ணோரும் நித்தலும் பணிசெயக் கருதி விரும்பும் ஊர். தேவர்கள் நறும் பூமாலையொடு வந்து வணங்கும் பதி. இந்திரனுக்கு இறைவன் அருளிய திருப்பதி. மகிடாசுரனைச் சங்கரித்த நீலி பணிந்து போற்றிய தலம். சித்தரும் அமரரும் மலர் கொண்டு வணங்கும் க்ஷேத்திரம்.

**கோயிற் சிறப்பு:**—இத் திருக்கோயிலில் இறைவர் தேவியுடன் என்றும் நீங்காது இனிதமர்ந் தருளுவர். கோயில் வானமோங்கு கோயில், கொடிமல்கு கோயில், கொடி தயங்குநற் கோயில், வென்றிசேர் வியன் 'கோயில் எனப்பட்டுளது. மறைவல்ல அந்தணர், மாதவர், கலை வல்லுநர், நீறு பூசிய உருவர், நெஞ்சில் வஞ்சமில்லார், பக்தர்கள் இவர்கள் திருக்கோயிலுட் சென்று பணிவர். சிந்தையை அடக்கிய பெரியோர் மலர்தூவிப் பணிவர்; இருக்குவேதங் கூறிப் புகழ்ந்து வாழ்த்துவர்.

**காழித் தலத்தை வழிபட வருபலன்:**—காழி அடியார் அவலம் அறியார். காழியை அடைய வினை ஓடும். குற்றம் உடல் நோய், வினை இவை தொலைய வேண்டில் காழி நாதன் திருவடியைப் போற்றுமின். எண்ணிய எண்ணங்

கைகூட வேண்டில் காழி யொருவன் சேவடியை அடைந்து உய்ம்மின். காழி நாதரைக் கருத நிச்சயமாகத் துயர்போம், இறப்பிலா உலகம் கிடைக்கும் காழி நாதரை நண்ண வினை நாசமாம் ; அவரைப் போற்றிப் பத்தியொடு தொழத் தீவினைநோய் மெலியும், வீடு கூடும் ; கூற்றம் முடுகாது ; அவரை ஏத்திப் பாட வினை பாறும், இடர்போம் ; அவரைத் தொழுவோர் தலைமை பெறுவர். தூநெறியராவர் ; அவரை இசை பாடுவோர் வினைசெற்ற மாந்தர் ஆவர். அவரது ஆயிரம் பேரையும் பிதற்றப் பிணி தானே தீரும் ; இருவர் காண்பரியான் என அவரை ஏத்துதல் இன்பம் ; காழி அரசே என்றால் வினைபோம் : காழி அரையார் அரவா, புரமெரி சரவா என்பார் தத்துவ ஞானத் தலைவராவார். காழி அரனே, உமையாள் பங்கா எனப் பாடும் அடியாரிடம் நோய் சாராது, காழி உழையார் கரவா, உமையாள் கணவா, சங்கக் குழையா எனக் கூறவல்லார் குணவோர். காழி ஐயனே, அரனே என அன்புடன் ஓதுவோர் உலகில் உயர்ந்தாராவர். காழி ஒருவனே என்று அபிஷேகத்துக்கு ஆனஞ்சு அளிப்பவர் வேந்தராவார். காழி 'உமையொடு கூடிய வேடனே.' 'சுடலைப் பொடியாய்' என்றால் அல்லல் அடையாது. காழித் 'தோடுலாவிய காதுளாய், சங்கவெண் குழையாய்' எனத் தியானித்தால் வினை நீக்கம் கிடைக்கும் காழிப் பரனே என்றேத்தி நினைப்போர் செம்மை நீங்கார். காழிப் 'பகட்டீர் உரியாய்,' 'பெரியோய்' என விரும்பி நினைப்போர் நல்லோர் ; காழிப் பித்தா, பரனே என்றால் வினை நணுகாது ; இன்பம் நணுகும். காழி விடையாய் என்று மலர் மாலை சூட்ட அருநோய்கள் அடையா. காழிச் சடையா, விடையா, முதல்வா, மறையோனே, ஐயா என்றால் அல்லல், அவலம் இல்லை ; வினை, நோய், பாவம் அடையா. காழி நகர்க் கடவுள் நாமம் கற்றலே நற்றவம்,

2. பிரமபுரம் :—கடற்கரை ஊர். உலகில் முதல் ஊர் எனப் பெயர் பெற்றது. ஊழிகள் தோன்றும்பொழுதெல்லாம் பெயர் பெற்று விளங்குவது. கடல்கொள்ளும்

பிரளய காலத்தில் நீரில் அழிபடாது மிதந்த பெருமை வாய்ந்தது. வண்டாடு நறும் பொழிலும், புனலும், மலர்ப் பொய்கையும், செந்நெலும் கொண்டு பொலிவது. அன்னம் பெடையோடு முயங்கும். இத்தலம் கன்மதிலும் பீடுமிகு மாடங்களும் பொலியும் செல்வ நிறைந்த ஊர். மாதர் செறி தரும் ஊர். தேவியுடன் இறைவன் விரும்பி நாடோறும் வீற்றிருக்கும் ஊர். இறைவன் (தோணியப்பர்) தேவியோடு மலைமீது வீற்றிருப்பது போல (உயர்நிலையில்) வீற்றிருக்குந் தலம். ஓமென்று மறைபயில்வார் புகழ்ந் தேத்தி வாழும் ஊர். பத்தர் சித்தர்கள் பணியுந் தலம். வேத ஒலி, விழவொலி, வீணையொலி கிளர்ந்தெழும் நகரம். பிரமன் (பிரம தீர்த்தத்தை உண்டுபண்ணி) ஈசன் இணையடியை மகிழ்ந்து பூசித்து அவர்தந் திருவருளைப் பெற்ற ஊர். [பிரமபுரத் தீசரைத்தான் ஞானசம்பந்தனாகிய நான் முதல்முதல் அடைந்து அருள்பெற்றேன்], பிரம புரத்தை உன்னுமின், ஏத்துமின், பேணுமின்: பிரமபுரம் சேர உரியார் ஏழுலகும் ஆள உரியார்; பிரமபுரத்து அண்ணலை அடிபணிந்தால் பெருஞ் செல்வம் பெறலாம், வினை விடும். ஆதலால் அவரை எண்ணுக, ஏத்துக. வாய் அவர் சீரைப் பாடுக; கண் அவரைப் பார்க்க; நா அவர் சீரை நவிலுவதாக: பிரமபுரத்து அரனது நல் நாமங்களைப் பரவுவார்களுடைய சீர் புவியிற் பரவும்.

3. வேணுபுரம்:—அழகிய கடற்கரை ஊர். பாய் கட்டிய மரக்கலங்கள் திரையால் மொத்துண்டு தூரத்தில் விளங்கும். பொழில் மதியைத் தடவும். பொழிலின்மீது மேகந் தவழும். கமுகம் பாளை, புன்னை மலர் இவைகளின் நாற்றம் தென்றலில் மிக்குவரும். வாழைக்கனியை உண்ண மந்திகள் மேல் நோக்கி நிற்கும்; பொழிலில் வண்டுகள் நிறைந்து முரலும், மயில்கள் ஆடும், மேகம் முழவதிரும், மறிமான்கள், தாவி உலவும். புனலின் கயல்கள் வயலில் மிளிரும்; வளப்பமுள்ள வயல்களும், செந்நெலும் பொலிந்து விளங்கும். வயலில் முத்துக்கள் ஒளிரும். வேயி னின்று முத்துக்கள் சிதறிப் பரக்கும். பொய்கையிற் கமல

மலர் சாய வாளை வானளவு, குதிகொள்ளும். திரைகள் கவரிவீச அன்னம் தாமரையில் துயில்கொள்ளும்.

இவ்வேணுபுரம்—அழகிய உயரிய கல்மதிலை உடைய ஊர். விழவொலி, முழவொலி, முரசொலி முழங்கும் ஊர். இங்கு வெண்ணிறமுடைய நெடு மாடங்கள் வானை அளாவும். மாளிகை மீதுள்ள கொடிகள் விண்ணில் திகழும் அழகிய மாதர்கள் நிறைந்து வாழ்வர்.

வேணுபுரம் சிவபிரானுக்கு உகந்த பழைய ஊர். வேணுபுரத்து அழகிய கோயிலையே கோயிலாக இறைவர் விரும்பி அமர்ந்துள்ளார். இவ்வூர் உலகைக் கடல்மூடும் பொழுதும் உயர்ந்து மிதந்த ஊர். கரவாத கொடையினரும், மௌனிகளும், கலை முத்தமிழ் நூல் அறிந்தவர்களும், சுருதித்தொகை கற்றோரும் வாழும் ஊர். மாளிகை மீதிருந்து சேயிழையார் வாழ்த்துரைக்கும் ஊர். மாதர்கள் காலையில் (திருக்கோயிலிற்) புகுந்து இறைஞ்சிக் கைதொழும் ஊர். பாலையாழ் ஒலிக்கும் ஊர். மறையோர்கள் நிறைந்தேத்தும் ஊர். வேத ஒலிமிகும் ஊர். இந்திரன் (வேணு என்பான்) மண் மேல் தங்கி யாண்ட தலம். இலட்சுமி வாசஞ்செய்யும் பதி. கடலொலியென்ன வேதத்தின் இசைபாடி. விரைமலர் சொரிந்து உம்பர் வானவர் புகுந்து ஏத்தும் திருப்பாதமுடைய சிவபிரான் வேணுபுரத்தைப் பதியாகக் கொண்டுள்ளார். அவ்வேணுபுரத்துத் தாணுவின் கழலைப் பேணுகின்றவர் ஆணி போன்றவர்.

4. திருப்புகலி :—கடற்கரை ஊர். மணற்கானல் கொண்டது. கடற்றிரைகளில் சங்கம் வரும்; முத்தம் சிந்தும். நல்ல புனலும், மதியைத் தொடும் உயர்நறும் பொழில்களும் அழகுடன் பொலியும். மா, வாழை, பலா இவைகளின் பழங்களும், கொன்றை மலரும், புன்னை மலர்த்தாதும் பொன்னிறங்காட்டும். மலர்ந்து மணம் வீசும்

மாதவி, குளம், கண்டல்கள், தெங்கு, கமுகு, இவை வளர்ந்தோங்குவன. வண்டினங்கள் ஒலிப்பன. தாமரை மலரும் பொய்கைகளும், நீர்வளந் தரும் தடங்களும் உள்ளன. மடுக்கரையில் கேதகை, மாதவி வளரும். தாமரையின்மீது அன்னங்களும் பறவைகளும் வைகி எழும். மாம்பழம் அகழியில் விழும், அவ்வோசை கேட்டு வாளை மீன் பூம் பொய்கைக்குச் சென்று வைகும். வயல்கள் பொன்னியல் கொண்டன; அங்குக் கரிய எருமையின் இனம் மிக்குப் பொலியும்; செந்நெல் விளையும்; கயல்மீன் வாழும்; நாரைகள் ஆரல்மீன் வாரும்.

புகலி-சிறு நகர்; பழைய ஊர். நெடிய மதிலைக் கொண்டது. மலையன்ன பெரிய மாடங்களிற் கொடிகள் உயர்ந்தோங்கும். கொடிகளின் நெருக்கத்தால் வெயில் தெரியாது. நன்மணி மாடங்கள் பொன்னியல் கொண்டன; மதியத்தைத் தொடுவன. புகலி - இலட்சுமிகரம் கொண்ட ஊர். தனக்கு நிகரில்லாத ஊர். குறைவிலாப் புகழ்கொண்ட ஊர் ஊழி வெள்ளத்தில் மிதந்த ஊர். விண்ணோர் புகழும் பதி. வேதியர் பதியாய் விளங்கும் ஊர். சீருந் திறலும் உடையராய செழுவிய செல்வ மறையோர் நிறைந்து இனிது வாழும் ஊர். உயரிய அம்மறையவர் செய்யும் வேள்வியின் புகைபோய் அண்டர் வானத்தை மூடி நின்று ஊரை இருளாக்கும். புகலி நகர்—தளராத வாய்மையாளரும், அறிஞரும், புண்ணியர்களுமான மறையோர்கள் ஏத்தும் ஊர். வேத கீதம் வல்லவரும், பிரமனைப் போன்றவருமான மறையோர் பயிலும் பதி. நல்லோரும், ஆய்ந்த கலைஞர்களும், இரப்போர்க்குக் கரப்பிலார்களும், ஐம்புலன் களைச் செற்ற பெரியோர்களும் வாழும் பதி. மடந்தையரும், மைந்தரும், புண்ணியரும், விரும்பும் ஊர். நல்லார் பயிலும் மறைகேட்டுச் சோலைக் கிளிகளும் சொற்பயிலும் ஊர். கன்னிமார்கள் கிளிக்குச் சொற் பயிற்றும் ஊர். செந்தமிழ் பரப்புந் திருப்பதி. இங்குத் தெய்விகத் திருவிழா நிரம்ப நடைபெறும்.

திருக்கோயில் மதிலைக் கொண்டது. அழகு, சீர், திரு, தெய்விகம் கொண்டது. ஒளிகொள் கோயில், கண்கவர் கோயில், பெரிய கோயில். இத்திருக்கோயிலில் விருப்பத்துடன் இறைவர் தமது தேவியுடன் அமர்ந்துள்ளார். அடியார்கள் அந்தி மந்திரம் ஓதிப் பரவுந் தலம். இமையோர்கள் பூமிக்கு வந்து துதிசெய்து இறைவனது அடி தொழும் பதி. பிரமன் பூசித்த திருப்பதி. பிரம தீர்த்த முதலிய பூம்பொய்கைகளைக் கொண்ட தலம். வானுளோரும் மறைப்பொருள் வல்லோரும் அடுத்தடுத்துப் புகுந்து நிறையும் பதி. உருத்திரர்கள் கூடித் திருப்பணி செய்யும் தலம். அமரர் புகலிடமாகப் புகுந்த காரணத்தால் புகலி எனப் பெயர் மலிந்த ஊர். அமரர் ஏத்த இறைவர் அருள் புரிந்த ஊர். அடியார்கள் இசைபாடித் தொழும் பதி. தன் குணங்களை அடியவர் பாராட்டிப் பரவ இறைவன் உகந்து இனிதுறையும் ஊர். பாபிகள் தொழுதற்குக் கிட்டாத ஊர். நலம்பெற வேண்டில் புகலியை நண்ணுங்கள்; நண்ணி வாழ்த்துங்கள். புகலிக்குச் சென்று கைதொழச் செல்வமாகும், நேசம் பெருகும், பாபம் போம். புகலியைத் தொழுவோர் அவலம் அறியார். புகலியைப் பேச இன்பம் பெரிதே. புகலி இறைவனே ! இனி உன் மலரடிக்கீழ் உற எனக்கு அருள் நல்கு எனச் சம்பந்தப் பெருமான் இத்தலத்தில் வேண்டினர்.

5. வெங்குரு :—கடற்கரையூர். நறும்பொழில் சூழ்ந்த ஊர். லட்சுமீகரம் வாய்ந்த ஊர். உயர்வும், சீரும், விறலும் வாய்ந்த ஊர். கனக மாடங்கள், வெண்கொடி மாடங்கள் விளங்கும் ஊர். திருவிழா நிறையும் பொழில் கொண்ட ஊர். மறையவர் மிகுந்த ஊர். வித்தக மறையவர், நுண்ணறிவினர், பன்னூல் விரித்தவர், புலன் வென்றோர் வாழும் பதி. மறையவர் ஆகுதியின் வாசனைப் புகை விண்ணினை மறைக்கும் ஊர். பிரளய காலத்தில் விண்ணளவோங்கிப் பினனர் விண்ணினின்று இழிகின்ற கோயிலைக் கொண்ட ஊர். மலையாள் கணவன் மகிழும் ஊர். மதியைத் தொடும் மதிலையும், வேங்கை மலர் மணம்வீசு கோயிலையுங் கொண்ட ஊர்.

வினைப்பயனின் உண்மை, தெரியும்படி பல்லுயிர்களையும் ஆளும் செங்கோலினனாகிய (யம) தருமன் (ராஜன்) விரும்பி யாண்ட பதி. மிக்கவர், மேலவர், விண்ணவர், வேதியர் தொழுதெழும் ஊர். விண்ணிழி விமானம் விரும்பிய இறைவன் வாழும் பதி. விண்ணவர் கைதொழுது ஏத்த எமை (சம்பந்தராகிய தம்மை) விரும்பிய விகிர்தன் வாழுந் தலம். வெங்குரு நாதன் திருவடியைக் கையால் தொழ வினை தங்காது போம்.

6, தோணிபுரம் :—கடற்கரை ஊர். முத்து, பவளம், மணி, இப்பி இவை துறைமுகத்துக்கு வரும் ஊர். பழைய ஊர். செல்வம் பெருகும் ஊர். சண்பகம், கமுகு இவை வளர் பொழில் சூழ்ந்த ஊர். வளமார் சோலையும், நீர் வளமும், விளைவயலும் பொலியும் ஊர். வண்டு மலியவும், தும்பி முரலவும், இயற்கிளவி பாட மயில் ஆடவும், வண்டுகள் துத்த நல்லிசை பாடவும் விளங்கும் பொழிலைக் கொண்ட ஊர். தென்றல் வீசும் ஊர். தேசு மிக்க ஊர். சேண் தகைய மணிமாடங்களும், கனகமணி மாளிகைகளும், வான் தொடு கொடியும் விளங்கும் ஊர். தேரோடு நெடு வீதிகளைக் கொண்ட ஊர். உலகெலாம் கடலில் அழுந்தும் பிரளய காலத்தும், நீரும் தன்னை வணங்கி நிற்கத், தான் மேல் மிதந்த ஊர். ஊழிக் காலத்திற் பறவைகள் சுமந்த ஊர். கற்றோர் புகழும் ஊர். மறைவளரும் ஊர். புலவர்களுக்குப் பொருள் கொடுத்துதவும் கொடையினர் காதல் செய்யும் ஊர். சிறுவர்கள் வேத பத பாடஞ் செய்யும் ஊர். தொண்டர்கள் துதித்து வழிபாடு செய்யும் ஊர். தொண்டர்தம் இசை பாடல் அறாத ஊர். உத்தம மறையோர் (வேதம்) முறையோதி நிறையும் ஊர். தொண்டர் இடரைத் தீர்க்கும் இறைவன் விருப்பத்துடன் உறையும் ஊர். தோணிபுரத்து 'ஆணி' என ஈசனைத் துதிப்பவர் தூமதியினர்.

7. பூந்தராய் :—சிகாழியின் பன்னிரு நாமங்களுள் ஆறுவது பெயர்—பூந்தராய் இது அழகிய ஊர். கடற்கரை ஊர். கடற் றிரையிற் சங்கு, பவளம், முத்து இவை அலை

படும். உயர்பொழில் சூழ்ந்த ஊர்; பொழிலில் வண்டு அமரும், புன்னை கமுகு நிறையும், மீன்களை இரையாகத் தேடும் பகுவாய்ப் புள் (நாரை) சேரும், புள்ளினம் துயிலும், பூமணங் கமழும், மந்தியும் கடுவனும் பழங்களை உண்ணும். தண்புனல் நிறையும்; புனலில் வாளை, கயல் விளையாடும்; வாவிகளில் குவளை, கருநீலமலர் மலரும், வயலிற் செந்நெல், தாமரை, கழுநீர், சங்கு, இப்பி திகழும். வயலருகில் வெண்கிழியிற் பவளம் அமைந்தது போலப் புன்னை பொலியும்.

இவ்வூரிற் காப்புள்ள மதிலும், பொன்னணி மாளிகையும், நீடுயர் மாடமும் பொலியும்; சிகரங் கொண்ட பெருங் கோயில் உண்டு; மங்கையர் ஆடல் உண்டு. பூந்தராய் என்னும் இப்பதி புண்ணியர் உறையும் பதி. புலவர்கள் புகழும் பதி. செல்வமும் புகழுங் கொண்ட பதி. பொய் யிலா மறையோர் பயிலும் பதி. மிக நல்லவர்கள் வாழும் பதி. பூசுரர் தொழுதேத்திய பதி. பிரமனை நிகர் மறையவர் வாழும் பதி. பன்னிரண்டு திருநாமங்களை உடைய பதி. நீரில் மிதந்த பதி. கற்றவரும் பக்தர்களும் நாடியேத்தும் பதி. மேலும் இத்தலம் வராக உருவெடுத்த திருமால் பூசித்த திருப்பதி. இமையோர் தொழும் பதி. வானவர் மலரிட்டிறைஞ்சு பதி. சூரியன் பூசித்த தலம், புள்ளினம் (தாரா, அன்னம், பகன்றில்) பூசித்த பதி. சங்கநிதி பதுமநிதி வாய்ந்த திருநகர். இறைவன் தேவியுடன் காதலித்து அமரும் தலம். பூந்தராயைப் போற்றுவோம். இத்தலத்தை அடைந்து ஈசனைப் போற்றிப் பாட வினை மாயும், சிந்தை நோய் தீரும், இன்பம் பெருகும், மெய்க்கதி கூடும், பாபம் தீரும்.

8. சிரபுரம் :—சிலம்பன் நகர் எனவும் படும். கோட்டாற்றின் புனல் சூழும் ஊர்; நறும்பொழில் சூழ்ந்த அழகிய ஊர்; சோலையில் வண்டு காமரம் (பண்) பாடும், தேனைத் தேடி வண்டுகள் திரியும். மயில் பெடையுடன் பயிலும். தெங்கு, குருந்து, மாதவிக் கொடிகள் நெருங்கும். தென்றல் மன்றினிடைப் புகுந்து வீசும். சிரபுரம் வளவயலைக்

கொண்ட ஊர்; வயலிற் கயல்மீன் மிளிரும், செங்கழுநீர் மலரும், சேல் மீன்மேயும். எருமைகள் கரும்புகளை முறித்துத் தின்று குளத்திற் படிய அங்குள்ள இளவாளைகள் வெறித்துப் பாயும். சிரபுரம் லட்சுமீகரம் உள்ள ஊர், சீலம் மிக்குத் தொல் புகழ் நிறைந்த ஊர், தூநீரைக் கொண்ட ஊர், திண்ணிய பருத்த மதிலைக் காவலாகக் கொண்ட ஊர், மோடி (காடுகாள்) காவல் செய்யும் ஊர். வரபுரம் எனச் சொலத்தக்க சிரபுரம். மாளிகை மேலிருந்து மடவார் தடைபடாது பாட, அப்பாடல் ஒலி விளங்கும் ஊர். மறை, அங்கம், கலைகள் வல்ல பெரியோர்களும், புகழ் பெற்ற மறையோர்களும், கெடாத பண்பினரும், மிக்க பெருமையாளர்களும், தொல்கலை கற்று வல்லவர்களும் வாழும் ஊர். முத்தீ ஓம்பும் பரிசுத்தர்கள் வேள்வி செய்யும் ஊர். நடுநிலை தவறுத சொல்லாளர்களும் சிவத்தியானம் செய்யும் சிறப்பினரும் வீதி தோறும் உள்ள ஊர். சீரும் செல்வமும் நிறைந்த ஊர். நித்திய விழா நடக்கும் ஊர். இறைவன் தேவியோடு இனிது அமர்கின்ற ஊர். மரவுரி உடுத்த மாதவரும், தேவரும் கைகூப்பித் தொழுகின்ற தலம். சித்தர்கள் வழிபடும் பதி. வேதமோதுவோர் இறைஞ்சும் தலம். அமுதை உண்ட நாகங்களின் சிரம் திருமாலால் அறுபட அந்தச் சிரம் சிவபெருமானே சரணம் எனப் பரவச் சிரம் இரண்டும் இரண்டு கிரகங்களாக (ராகு-கேதுவாக) அமைந்த சேத்திரம். அங்ஙனம் தலையாய்க் கிடந்தவைகள் ஆண்டு வழிபட்ட நகர். சிரபுரத்தைத் தொழ வினை அடையாது, சிரபுரத்துளான் என்ன வல்லவர் சித்தி பெற்றவராவர். சிரபுரத்தைத் தொழும் அடியவர் நெஞ்சிற் செருக்குச் சேராது.

9. புறவம் :—கடற்கரை ஊர், அழகிய ஊர், பழைய ஊர், பார்புகழும் ஊர். நிறைபுனலும் நன்னிருங் கொண்டது. அழகிய பொற்றாமரைப் பொய்கையை உடையது. பொழிலில் பூ நிறையும்; புதுமலர் மணம் கமழும்; தென்றல் வீசும், தெய்வதரு (கற்பக விருட்சகம்) வளரும். வண்டு பாட, மயிலாடிப் புன்னை செம்பொன் கொடுக்கும். வயலில்

தாமரை மலரும். கடல் பொங்கி மேல்வந்த காலத்திற் கடல்மேல் உயர்ந்து மிதந்த ஊர் புறவம். ஊரில் மதில்களும், மலையன்ன மாளிகைகளும், பொன்னார் மாடங்களும் விளங்கும்; பொய்யிலாப் பெரியோர், மறைபயில்வோர், பிரமனை நிகர்க்கும் மறையோர், புண்ணிய மறையவர், பொய்யிலா மறையவர், பொன்னார் புரிநூல் அந்தணர், விறல் மாதவர், அற்றவர்க்கு உறவாகிப் பெருநிதி கொடுத்து உதவும் பெரியோர் இவ்வூரில் வாழ்வர். இங்குப் பூசுரர் மறைபயில் ஒலியும், மறைவிரி புகழும் மலிந்து விளங்கும். இத்தலம் மோடி (காடுகாள்) புறங்காக்கும் தலம். இறைவன் விரும்புந் தலம். இமையோர் இரவும் பகலும் ஏத்த உமையுடன் இறைவன் வீற்றிருக்கும் தலம். இராவணனது பத்துத் தோளும் தொலையப் பொருத தேர் வலவன் விரும்பி யாண்ட பதி. ஓமம், வேதம், வாத்திய வகைகள் இவைகளுடன் பிரமன் பூவும் நீரும் கொண்டு வழிபட்ட திருப்பதி. தன்னிடம் முறையிட்டு வந்த புறுவின் எடைக்கு நிகரான மாமிசத்தை அளித்த பொறையன் (சிபிச் சக்கிரவர்த்தி) இழந்த உடலை மீண்டும் பெற இறைவன் அருளிய இன்ப நகர். இறைவன் உறைபதியாகிய புறவத்தை நினையுங்கள்; புறவமாநகர்க்கு இறைவனே எனச்சொல்லின் வினையின் கொடுமை இல்லை.

10. சண்பை:—அழகிய ஊர். கடலின் திரைகள் மணி, முத்தம், பவளங்களை வயல்களிற் புக எறியும்; கடற்கரையில் வாழும் பரதர்களின் மனையிற் சங்கம் முத்துக்களையீனும். அழகிய குளிர்ந்த பொழிலும் சாலிமலி சோலையும் திகழும், பொழிலில்-புன்னை தாழை, வாழை, தென்னை, ஞாழல். மகிழ் - முதலிய மரங்கள் நெருங்குவன. தாழையின் முகிழ் யானைத்தந்தம் போல விளங்கும். தென்னையின் பாளைகள் யானையின் மருப்புப்போலப் பொலியும். பொழிலில் அறுபத்து நான்கு கலைகளையும் வாய்மை வழுவாத மொழியார் சொல்லக்கேட்டுக் கிளிகள் அவைதமைப் பயிலும்; குயில், கிளி, சாதகம் முதலிய புட்கள் சோலையிற் பயிலும். நீர் நிறை வயலிற் சேல் மீன் உகளும். ஊரிற்

பொய்கைகளும் தடங்களும் பொலியும். குவளைப் பூவின் கள்ளை அருந்தித் தாமரைத் தாதின்மேல் வண்டு பண் பாடும். தாமரையில் அன்னம் வீற்றிருக்கும். மதியைத் தொடும் மதில்களும், கொடி விளங்கு மாடங்களும் பொலியும். சண்பை செல்வ நிறையும் பதி. நிறை புகழ்ப் பதி. சாந்தம் கமழ் தெருக்களை உடைய பதி. அழியாது நீடித்திருக்கும் பதி. மழை விழாது வளங்குன்றி பஞ்ச முறுங் காலத்தும் தமது கொடைக் குணம் மாறாது, உண்பதை ஒளியாது தானஞ் செய்யும் தரும சிந்தையர் நிலையாக வாழும் பதி. குற்றமிலாப் பதி. பெரியோர் இறைஞ்சு ப்தி. வந்தனை, பூசை செய்யும் நேரம் ஒழிய மற்ற நேரங் களில் மறைபேசியும், சந்திப்போதிற் சமாதி செய்தும் வாழும் பெரியோர் உள்ள திருப்பதி. அணிமாதி அட்ட சித்தி வல்ல சித்தர்கள், மறைநூல் வல்லவர்கள், சாதிகீத வர்த்தமானர்கள் வாழும் பதி. இறைவன் தேவியோடும் பிரியாது வாழும் ஊர். ஊழி பலவற்றினும் அழியாது நிலைத்திருக்கும் பழைய ஊர். சண்பை முனிவர்க்குப் பழி தோஷத்தை நீக்கிய தலம். தாரா, அன்னம், பகன்றில் முதலிய பறவைகள் வழிபட்ட தலம். காதலுடன் சைவர், பாசுபதர்கள் வணங்கும் தலம். பூசுரர் தொழும் பதி. பொழிலில் நடைபெறும் ஏழுநாள் விழவினில் அருக்கன் முதலிய இமையோர் கூடும் பதி. எந்தம் சிந்தை பிரியாத பெருமான் என்று இறைஞ்சி இமையோர் வந்து துதி செய்யவும், தூபத்தோடும் தீபத்தோடும் மெய்மையுடன் அந்தி சந்திகளில் அருச்சனைகள் செய்யவும் மகிழ்ந்து ஈசன் அமரும் திருப்பதி. வேலேந்து சண்டன் (தருமன்—யமன்) ஆண்ட ஊர். சண்பைப் பெருமானைத் தொழுபவரை வினை பீடிக்காது.

11. கோச்சைவயம்:—கடற்றிரைகள் கரையில் மணிகளைச் சிந்தும் ஊர். மேகத்தை அளாவும் நறும் பொழில் சூழ்ந்த ஊர். பொழிலில் மயில் பேடையோடு ஆடும். மயில் நடமிட வண்டு மதுவுண்டு பாடும். மழை மேகம் (இருண்டு) வர, மந்தி மூங்கிலின் மேல் ஏறி மேகத்தைப்

பற்றி நிற்கும். மடலிடைப் பவளமும் முத்தும் கொண்ட புன்னைக்கு அருகே குருகு பெடையுடன் மல்கும். மாதர்கள் இசைபாடி யாட விடும் ஊசல் போன்ற கமுகின் குழை தரு கண்ணிகள் விண்ணில் வருவோர்களுடைய அடி தேடுவதுபோல உயர்ந்து பொலியும்; கோடல் அரவுபோல அரும்பும்; பாம்பின் எயிறுபோலக் குரவம் மலரும். நீர் வளப்பங் கொண்ட ஊர் கொச்சை. கோணிய கோட்டாறு அருகிற் பாயும். கோட்டாற்று நீர் வயல்களை நிரப்பும். வாளைகள் குழுமி அகழியிற் பாயும் ஓசை படையோசையை நிகர்க்கும். வயலில் நீல மலரின் மொட்டு விரிதலால் மணம் வீசும். குமுதங்கள் தாமரையுடன் மலரும். அன்னங்கள் நிறைந்து தாமரையில் வைகும். நண்டுண்ண வேண்டி நாரை செந்நெலின் நடுவே இருந்து இரை தேரும்.

மாடவீதியிற் கொடிகள் பறக்கும். மாளிகைகள், கொடிக ளோங்கிய மாடங்கள், மேகத்தையும் வானையும் அளாவு மாடங்கள், மலையன்ன பொன் மாடங்கள், ஒளிரும் மண்டபங்கள், விளங்கும் மதில்கள்—இவைகள் பொலியும். மாட கூடத்தின் மேலேறிப் பூவையானது தான் கேட்ட மறையை ஓதும். குற்றமிலா அடியவர் வீதியிற் கூடுவர். கலையொலி, சங்கொலி, கடலொலி போல மறையொலி, மாதர்கள் விளையாடும் ஓசை, திருவிழா ஓசை, இவை நிரம்பும். முனிவர்களும் மறையோரும் செய்யும் ஆகுதிப் புகை, ஓமப்புகை அண்டத்தை மிண்டும், மதியை மூடும், வானை மறைக்கும். கொச்சைப்பதி இறைவனுக்கு உகந்த அழகிய ஊர். கலியைக் கெடுக்கவல்ல அந்தணர், குறைவிலா அந்தணர், எரியோம்பும் அந்தணர், கலைமேவு சிந்தையுடையார், கேடிலா எண்ணத்தார், கேள்வி யருதவர், கொடையுடைய வண்கையாளர், நல்வேள்வி யருதவர் வாழுந் திருப்பதி, மந்திரவேள்வி யருத ஊர். மெய்த் தவம் வளரும் ஊர். தேவர்கள் விரும்பி நெருங்கும் பதி. மச்சகந்தியைப் பரிமள கந்தியாகச் செய்த பரமன வாழுந் தலம். நட்டார் நடுவில் நந்தன் ஆண்ட திருப்பதி. அட்டதிக்

குப் பாலகர்களும் தூபதீபமொடு இறைவனைப் பணியும் ஊர்.

கொச்சை யிறையவன் திருவடியை நினைய உய்யலாம். கொச்சை யண்ணலைக் கூடாதார் மூடரே: நெஞ்சமே! அஞ்சாதே! நீ கொச்சை என்னும் தலத்தைக் கருதுக! பேணுக! கொச்சை இறைவனையே உள்ளுக! கொச்சையை மேவிப் பொருந்தினவருடைய அடியைப் போற்றி வாழுக! கொச்சையை விரும்புவோர் தம் குணங்களைக் கூறிப் பாராட்டுக. கொச்சையை விரும்பி அடைந்து, தவநெறி அருளும் நம்பனை, நாளும் நம்புக. நெஞ்சமே! அஞ்சற்க! நீ நாளும் கொச்சையை மருவினால் பழநோய் தொடராது.

12. கழுமலம்:—கடற்கரை ஊர்; அழகிய ஊர்; பழைய ஊர்; முத்தங்களை கடல் கரையிற் சொரியும். திரைகள் ஒன்றோடொன்று மோதிக் கரையை எற்றும், ஊர்ப் புறத்திற் கழியும் கானலும் விளங்கும். கானல் நீழலில் கலைமான் இனங்கள் களித்து விளையாடும். கடற்புறத்திற் கண்டல், கைதை, நெய்தல் பொலியும். கன்னியர் கடல் நீராடுவர். சங்கமும் வங்கமும் கரைக்கு வரும், மலையினும் மிகப்பெரிய மரக்கலங்கள் சரக்கொடுவரும்.

பொழில்:—நறும் பொழில் சூழ்ந்த ஊர்; பொழில் மேகத்தை அளாவுவது. சந்தனக்காடும் மலர்களும் நிறைந்தது. பூமணங் கமழுவது. தாமரையில் உள்ள தேனை உண்டு வண்டுகள் களித்துச் சண்பகக் கானிற் போராடும். குருந்து, கோங்கு, கொடிமுல்லை, மல்லிகை, சண்பகம், வேங்கை இவைகளின் மலர்களை மாதர்கள் கொய்வர்: தவமுயல் பெரியோர் மலர்பறிக்கத் தாழ்த்தும் கொம்பு அவர் பறித்து விட்டவுடன் மேலெழும்பி மாமரத்தில் மோத மாங்காய்கள் கவண்வீசு கல்லைப்போல சுனைக் கரையில் விழ அதைக் கண்டு கரையில் உள்ள பறவைகள் இரிந்து ஓடும். பொழிலில் விழவொலி மலியும்.

ஊர்வளம்:—கழுமலத்துக்கு அருகில் காவிரியின் வாய்க்கால் ஓடுகின்றது; ஊரில் வாவிகளில் மாதர் முகம்

போலத் தாமரையும், வாய் போலக் குமுதமும், கண்போலக் காவியுங் குவளையும் நெய்தலும் மலரும். கழுமலம் கழனி சூழ்ந்த ஊர்: கழனிகள் அழகியன. வயலிற் கயல்கள் குதிகொள்ளும், தடங்களில் வண்டு மல்கும். தாமரை யானது தேனை உகுப்ப வாளைகள் அத் தேனைக் குடித்துக் களித்துக் கரும்பு இரியப் பாயும். வயலில் நடுதற்கு உழவர் செல்ல, அங்கு நடமுடியாதபடி, பரல்போல முத்துக்கள் வயற்கரையிற் குவிந்து கிடக்கும். வயலில் வெண் செந்நெல் விளையும்.

நகரச் சிறப்பு :—இருள் கடியும் ஒளி வீசும் நகர். மதில்-கன்மதில், பொன் வேய்ந்தது, வானளாவுவது, காப்புடையது. வீதி-பெரியது, கடலொலி கொண்டது, கொடி யாடுவது, கடையார் மாடங்கள், கொடியாடு மாடங்கள், வெள்ளிமலைபோல விளங்கும் வெண்மாடங்கள், கன்மாடங்கள் இவைகளைக் கொண்டு விளங்குவது; யானையின் மதநீராற் சேறுபட்டது. மாடங்கள் மேகத்தை அளாவும்; கன்றுகள் முன்றிலில் நிறையும். கழுமலம் வையகத்தோர் ஏத்தும் ஊர்: பெரியோர்கள், மாதர்கள், மைந்தர்கள் யாவரும் இன்பத்துடன் வாழும் ஊர்; ஒளித்தல் என்பது அறியாத கொடையாளர்கள், பரந்த புகழாளர்கள், பலபல அறங்களைப் பயின்றோர்கள் வாழும் ஊர். பாரில் யாவரும் பிரியப்படும் ஊர். அந்தணர் வேதம் அருத ஊர். விழவொலி, மணவொலி இவைகளினும் மறையொலி மேற்பட்டு விளங்கும் ஊர். மறைபல கற்ற வேதியர் வாழும் ஊர். மந்திரங்கள், ஆறு அங்கங்கள் இவை தேர்ந்தோர் மேவும் ஊர். கலைபல பயிலும் புலவர்களுடைய புகழ் விளங்கும் ஊர். முற்றக் கற்றவர் தொழும் ஊர், கலை ஞானம் இல்லார் சேரா ஊர். நான்மறை, அறங்கம் கற்றவரும், வேள்வி செய்வோரும், ஞானங் கருதும் பெரியோர்களும் சேரும் ஊர், மழையின்றிப் பஞ்சம் பெருகிய காலத்தும் கலங்காத மனத்தராய்க் கொடையாளராய் விளங்கும் மெய்ம்மையாளர்கள் வாழும்பதி.

மடவார்கள் :—மடவார் மாளிகையின் சூளிகைமேல் குழந்தைகளை லாலிக்கும் இசையின் இனிமையைக் கேட்டு ஆகாயத்திற் செல்லுங் கணங்கள் மகிழ்ச்சி அடையும். அந்தணர்கள் மனையில் உள்ள மாதர்கள் இறைவனது தன்மையைக் கூறும் பாடல்களைப் பாடிக் கழல், பந்து, அம்மானை ஆடுவர். நறுமலர், புனல், தூபம், சாந்தம், ஏந்திய கையராகிக் கன்னியர் நாடோறும் இறைவன் திருவேடத்தைப் பரவுவார்.

தலப்பெருமை :—கழுமலம் இறைவனுக்கு உகந்த ஊர், திருவிழாவொலி மலிகின்ற ஊர், பன்னிரண்டு பெயர் கொண்ட பதி, லட்சுமீகரம் வளரும் தலம், இறைவன் தேவியுடன் மகிழ்ந்து அன்பொடு இனிது உறையும் பதி; ஊர்களும் உயிர்களும் ஒன்றும் எஞ்சாதபடி பிரளயத்தில் அழியுங் காலத்தில் தான் அங்ஙனம் அழியாது கடலில் மிதந்த பெருமை வாய்ந்த தலம், கற்றவர்கள் பணிந்தேத்தும் ஊர்; மனைகள் பூரித்துக் களிகூரக் கலைப் புலவோர் மலர்கொண்டு பூசித்த திருப்பதி. அமரர் தொழ இறைவன் அமர்ந்துள்ள ஊர்; விண்ணவர் தொழுதெழும் ஊர், வேணு (இந்திரன்) பூசித்த வேணு மன்றம் பொருந்தியது. நாமகளும் பிரமனும் வழிபட்ட நலங்கொள் கோயில்.

வழிபாட்டின் பயன் :—கழுமலத்தமரும் இறைவன் அடியிணையைத் தொழுபவர் எழுபிறப்பும் வினையிலராய் இமையவர் உலகை எளிதில் அடைவர். கழுமலத்தை நினைக்க வினை, தீமை அறும்.

(சம்பந்தர்) தம் சரித்திரங் கூறுவது :—கழுமலம் யான் அமரும் ஊர். என்னை யீன்றளித்த ஐயன் அம்மையுடன் வீற்றிருக்கும் ஊர். பொற்கிண்ணத்திருந்த ஞான உணவைப் பொல்லாதெனக் கூறி (என்) தந்தையார் கோபங்கொள்ள, என்னை யாண்ட பெருந்தகை தேவியொடும் வாழுந் திருப்பதி.

70. காளத்தி :—முகலியாற்றின் கரையில் உள்ள மலை. பொழில் வாய்ந்தது. இம்மலையில், சுனைகள் வழியாக அருவி யிழிய வயல் நிறையும்; பன்றி, மான், கிளி இவை

தினை கொள்ள அவைகளை வெருட்டும் வேடமகளிர் எறி கின்ற கவணெறி மணிகள் ஒளிவீசும்; பன்றி உழுத இடத் தில் வெளித்தோன்றிய கதிர்மணிகள் இருள் விலக ஒளி வீசும்; ஒளிவீசு மணிகளை உமிழ்ந்து பாம்புகள் உலவி வருதலால் இருளின்றிப் பொன்னொளி விளங்கும்; குளிர்ந்த சந்தன மரத்துத் தளிர்களைப் பெண் யானை தின்று, தன் கன்றினொடு குலவி விளையாடும்; பலவகைப் பழங்களைப் பறித்து உண்டு கருமந்திகள் கல் அதிர விளையாடும்; புனவர் மணஞ் செய்யும் பருவத்து வேங்கை மரங்கள் கனக நிற மலர்களொடு பொலியும்; பழ மூங்கில்கள் ஒளிவீசு முத்துக்களைக் கலகலெனச் சிந்தும்; சில வேடுவர்கள் மலையூடு வருவார்களென யானையும், புலியும், சிங்கமும் அஞ்சும்; குறவர் எரித்த விறகில் காரகிற்புகை விசும்பிற் கமழும்.

சிவபிரான் உகந்து வீற்றிருக்கும் மலை காளத்தி. இங்கு, முகலி யாற்றங்கரையில் இறைவர் உமையோடும் வீற்றிருப்பர். அட்டமா சித்திகளும் இத்தலத்தை அணை யும். வாயே கலசமாக வழிபட்ட வேடன் (கண்ணப்பர்) தனது கண்மலரை அம்பினால் இடந்தெடுத்து (அப்பி) ஈசன் அடி கூடிய திருமலை காளத்தி. காளத்தியை அணை வது நமது கடமை. அத்தலத்தை அணைந்து உய்யுங்கள். காளத்தியை உள்ளமோ டுணர்ந்தால் இறைவர் நமது வினையை ஒழிப்பார். காளத்தி அடிகளை அடிதொழுதால் துயர்கெடும், வீடு எளிதாம். காளத்திநாதனை விரும்பு வார் விண்ணுலகாள்வர். காளத்தி நீலகண்டனை நினைக் கின்ற நினைப்பே நினைப்பு. காளத்திநாதன் கழலிணையை நித்தலும் நினைமின்.

71. காறாயில் :—கடிபொழிலும் நீர்வயலுஞ் சூழ்ந்த ஊர். சீரும் அழகும் திகழும் ஊர். காறாயில் ஈசன் அய னும் வேதியரும் தொழும் சீரான்; அப்பெருமான் தன்னை ஏத்திய முநிவர் தம் இடரைக் கெடுத்து அம்முநிவரைக் காத்தான். காறாயில் அடுத்தானே, ஆர்த்தானே, உறை வானே, ஊரானே, எண்ணானே, நிலையானே, நீற்றானே,

பதியானே, மேயானே என்பவர் ஊனம், ஏதம், பாவம் இலாதார்; அவர் மேல்வினை நில்லாது ஓடும். காருயிலிற் குடியாருங் கொள்கையினூர்க்குக் குற்றம் இல்லை.

72. கானப்பேர் :—நறும் பொழில் சூழ்ந்தது. வாவியிற் காவி மலரிலிருந்து வண்டினம் பண் செய்யும். கலைமான் உலவும் புறவு நிலத்தில் தேன் மணக்கும், பெண் யானை இளங்கொழுங் கொடிகளைக் கறித்து உண்ணும். இறைவன் நாடி யமர்ந்துள்ள தலம் கானப்பேர். இது நீடித் திருக்கும் தலம். அங்குப் புழுகு, சாந்தம், பூ, நீர் கொண்டு தொண்டர்கள் இறைவனுக்கு அபிஷேகம் செய்து பூசிப் பர். தேவர்கள் நாடோறும் இத்தலத்தைச் சேர்வர். பெண் யானைகள் பின்வரக் காலையில் தடத்தில் முழுகித் தனது பெருங்கையில் மலர்களைத் தழுவி ஆண் யானை விதிப்படி வழிபடும். பெருமையும் சிறப்புங் கொண்ட பெண் யானை தனது கையால் (திருக்கோயிலை) அலகிடக் காட்டானை வழிபடும். கானப்பேர் அண்ணலின் திருவடி யல்லால் அடியார்களுக்கு வேறு புகல் கிடையாது. உடம் பின் பிணி கெட வேண்டில் ஞானமா மலருடன் இறைவனை நணுகுதல் நன்மை. கானப் பேரைத் தலையினால் வணங்கு வார் தவமுடையராய், நாளுநாள் உயர்வதாய நன்மையைப் பெறுவர். விண்ணுலக வாழ்வை விரும்பினோர் கானப் பேரை விரும்புதல் வேண்டும். கானப்பேரைத் தொழக் காதலிப்போர் தீதிலர், வானவர் ஊரிற் புக வல்லவராவர். கானப்பேரைக் கைதொழுதல் நமது கடமை: தலம் "கானை" எனவும் வழங்கும்.

73. கானூர் :—நறுமணம் வீசும் அழகிய, இருண்ட, உயர்ந்த பொழில் வரய்ந்த தலம். காந்தள் நிரம்பிய பொழில், தெய்விகம் நிரம்பிய பொழில், தேன் நிறை பூவில் (தேனுண்டு)களி கொண்ட வண்டு யாழிசை செய்யும். சுவாமி, பவளவண்ணச் செம்மேனியார். தமிழின் நீர்மை பேசி இன்னியங்களுடன் இசைபாடும் இடத்தைவிட்டுக் கானூர்ப் பெருமான் நீங்கார்.

74. கீழ்வேளூர் :—அழகிய ஊர்; வண்டமர் ஊர்; நலம், புகழ், மணம் மிகும் ஊர்; தேவியுடன் இறைவன் இனிதமரும் ஊர்; அவர் காதலிக்கும் ஊர்; மறையவர் திரண்டுவந்து மகிழ்ந்து தியானித்துத் தொழும் தலம்; செஞ்சொலார் பலர் அன்பொடும் பரவிய புகழ்மல்கிய ஊர். இத்தலத்துக் கோயில் ‘பெருந் திருக்கோயில்’ எனப் படும். பித்தேறிய பத்தர்கள் பேணிய திருக்கோயில். மறை வல்ல அந்தணர் மலிதரு திருக்கோயில். கலைவல்ல நாவலர் காதலிக்கும் திருக்கோயில். இப்பெருந் திருக் கோயிலைப் பிரியாது இறைவர் வீற்றிருப்பார். தேவி திருநாமம் ‘வனமுலை நாயகி’. கீழ்வேளூரைச் சிந்தை செய் பவருடைய வினை வீடும், சிந்தித்து அத்தலத்தை அணை பவருடைய பிணி போம்; வினை போம்; கீழ்வேளூர் இறை வரை நண்ண வினை நணுகாது! அவரை ஏத்த வினை தேயும், இடர்போம்; அவரைப் பணிய நிலை மிக வரும். அவரைப் பேணத் தவம் ஆம். அவரை நேசிக்க வினை போம்.

75. குடந்தைக்காரோணம் :—காவேரியின் கரையில் உள்ள தலம். கூவும் குயில்கள், ஆலும் மயில்கள், இன் சொல் பேசுங் கிளிகள் நிறைந்த பொழில் சூழ்ந்த அழகிய தலம், செல்வ நிறைந்த தலம். தாமரை, செங்கழுநீர் ஆகிய பூநிறை பொய்கைகள் நறுமணம் வீசும். செல்வம் நிறைந்த மாடவீதியில் மதிதோயும் மாடங்கள் விளங்குவன. குடமூக்கில் அமைந்த காரோணம் என்னும் இத்தல மானது மாதர்கள் தீர்த்தமாடித் திளைக்குந் தலம். தெய்வ பக்தி நிறைந்த அந்தணாளர் போற்றுந் தலம். முடிசேர் மன்னர், மான்விழியார், மூவுலகும் ஏத்தும் தகையினர், கலையார் மொழியார், பலரும் விரும்பிப் பரவிப் பணியும் தலம். உடல்நோய், அவலம், வினைகள் இவை நமை நலியாத வண்ணம் காத்துக் காலன் அடையாத வண்ண முங் காத்தருளுவார் காரோணப் பெருமான்.

76. குடமூக்கு :—காவிரியாற்றங் கரையில் அழகிய புறவில் (முல்லை நிலத்தில்) உள்ள தலம். சூழ்ந்துள்ள

பொழில் நறும் பொழில், அழகிய பொழில்; பொழிலில் மௌவல், மல்லிகை, குரா மலரும்; மாம்பழம், பலாப் பழம், குலை நிறைந்த தென்னை, குளிர்கொண்ட வாழை - இவை பொலியும்; பலாப்பழமும் தெங்கின் பழமும் விழும். கூவுங் குயில்களும், ஆலும் மயில்களும், இன்சொற் கிளிப் பிள்ளைகளும் வாழும்; குயில் தன் பெடையோடு பாடும். குட மூக்கு செல்வந் திகழும் ஊர். ஊரில் மாடவீதிகள் விளங்கும். நெடுமாடங்களில் கொடிகள் விளங்கும். மாதர்கள் (காவிரி யில்) ஆடித் திளைப்பர். காவிரியின் ஆர்ப்பொலி, வேத ஒலி, புகைகொண்டு அடியார் போற்றும் பூசனையிற் கூத் தொலி இவை நீங்காது திகழும். இக் குடமூக்கைத் தனது இடமாகக்கொண்டு இறைவர், வானோரும் ஏனோரும் ஏத்த, ஏத்தொலி முழங்கத், தேவியுடன் வீற்றிருக்கின்றார்.

77. குடவாயில் :—கடுவாய் நதியின் கரையில் உள்ளது. பைம்பொழிலும் வயலுஞ் சூழ்ந்த ஊர். பொழிலிற் குராமலர் வாசம் வீசும். குழலொலிக் கீதத்தை வண்டினங்கள் இனிமையாக எழுப்பும். கோடல் மலரில் உள்ள தும்பி வண்டுகள் இசை மிழற்றும். வாழை பொன் போலப் பழுக்கும். கமுகு பவளம்போலப் பழுக்கும். மலை போலும் மதில் சூழும். குடவாயிற் கோயிலானது பெருங் கோயில், மாடக்கோயில் எனப்படும். கோயில் உயர்ந்த நிலை களைக் கொண்ட மலை போன்ற அழகிய நெடிய பெருங் கோயில்; திருவும் தேசுங் கொண்டது. இத்தலம் திரு விழா நிரம்பியது. இங்கு ஆசார மறையோர் அளவு குன்றாது குலவிப் போற்றுவர். குடவாயிற் கோயிலையே கோயிலாகக் கொண்டு இறைவர் அங்கு மகிழ்ந்து திகழ்ந் துள்ளார். இறைவர் "குடவாயிற் குழகன்" எனப்பட் டுள்ளார்.

78. குரங்கணின்முட்டம் :—காட்டிடைப் புனல் மல்கும் ஊர்; நீர் நிறைவயல் சூழ்ந்த ஊர்; அழகிய பொழில் சூழ்ந்தது; பொழிலில் மயில் பேடையோடாடிக் குலவும்; கழுநீர், குவளை மலரக் கயல்மீன் பாயும். இத்தலத் தில் விளங்கிய உயர் மாடங்கள் உள்ளன. தேவி பெயர்

"இறையார் வளையாள்." குரங்கணின் முட்டம் கை தொழு வார் துன்பம் இலர், வினை இலர். குரங்கணின் முட்டத் துப் பெருமான் திருவடியை நித்தல் நினைக்கப் பயன் கூடினோம்; பற்று ஒழிந்தோம்.

79. குரங்காடுதுறை [வட]:—காவிரியின் வடகரையில் உள்ளது. இறைவன் விருப்புடன் வீற்றிருக்குந் தலம். சுவாமி சடைமுடி யடிகள். அவரை இமையவர் தொழு தெழுவர். மலர், தூபம், சாந்தம் கொண்டு வாலி வழிபட்டு ஏத்திய தலம். குரங்காடுதுறை நாதரை அடிதொழுபவரும் தியானிப்பவரும் சிவகதி பெறுதல் திண்ணம். அவரை நினைக்க வினை அழியும். அவரது திருவடி மலரைத் தொழ விரும்பும் உள்ளக் குறியினர் வானுலகு கூடுவர்.

80. குரங்காடுதுறை [தென்]:—அழகிய குரவப்பொழில் சூழ்ந்த தலம். காவிரியின் அழகிய கரையில் உள்ள தலம். இங்கு மணி, பொன், அகில், சந்தனம் இவை காவிரியாற் கரையில் உந்தப்படும். இது குளிர்புனல் சூழ்ந்த தலம்; மறையொலி(யொடு) வானவரும், தானவரும், ஏத்துங் குறைவில் பெருமானுடைய ஊர்.

81. குருகாவூர்:—உயர்ந்த, பசிய, நறும் பொழில் சூழ்ந்த தலம். திருக்கோயில் 'வெள்ளடை' எனப்பட்டுளது. தேவி திருநாமம் "காவியங்கண்ணி".

82. குற்றாலம்:—இத்தலத்தின் இயற்கை யழகில் ஈடுபட்ட ஸ்ரீ சம்பந்தப் பெருமான் அவ்வழகையே மிகுதி யாக இத்தலத்துப் பதிகங்களில் எடுத்துப் பாராட்டி யுள் ளார் என்பது கவனிக்கற்பாலது. இத்தலம் "நன்னகர்"* எனப்பட்டுள்ளது. இங்குள்ள மலை மணம்வீசு மலை. இத் தலத்து அருவி போதும் பொன்னும் மணியும் வயிரமும் கொழித்து உந்தும். குளிர் மழை நுண் துளி சிதறும். பழ மூங்

---

* 'நன்னகர்' இத்தலத்துத் திருநாமங்களுள் ஒன்று. திருக் குற்றாலச்சிலேடை வெண்பா-3.

இல் உள்ள மலைச்சாரலில் புல்தரையானது பசும்பொன் பரப்பு என விளங்கும். வாழைக்கனியும் மாங்கனியும் தேன் பிலிற்றும். வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி தொங்கிப் பொலியும். குரவம் பாவை மலர் மணம் வீசும்; மரவம்,(கடப்பு) மல்லிகை, சண்பகம் இவை மலர்ந்து வாடுவதைக் கண்டு குராமலர் முறுவல் செய்யும்; கோடல்மலர் கொழுமுனை கூம்பும், மணங் கமழும்; செண்பகம், வேங்கை என்னும் மரங்களில் ஏறிக் கொடிமுல்லை அரும்பு ஈனும்; சுனைகளில் நீலமும், நெய்தலும் மலரும். பாடற்பெடை வண்டு மலர்ப் போதலர்த்தத் தாதவிழும்; ஏலங்கமழ் சோலையில் வண்டு இருந்து யாழ் செய்யும். குருந்தமலர் மணங்கமழும். வண்டு பெடையைப் புல்கிக் குருந்த மாத்திலிருந்து செவ்வழிப் பண் (யதுகுல காம்போதி ராகம்) பாடும். வேங்கைக் கொம்பிலிருந்து வண்டு யாழ்செய்யும்; வண்டு இசைமுரல அதைக் கேட்டுக் குயில் அந்த இசையைத் தானும் பயிலும். குவளை மலரும்படி வண்டு அரற்றும். மயில் பேடையோடு ஆடும். மந்தி (பெண் குரங்கு) கிளை கிளை யாய்ப் பாய்ந்து கீண்டு உண்டுவிட்ட பலாப்பழங்களைக் கடுவன் (ஆண் குரங்கு) உண்டு குதிக்கும். மலைச்சாரலில் குட்டியுடன் வந்த பெண் குரங்கு குலைவாழைக் கனி உண்ணும். உயர் மூங்கில் .வளையப்பாயும் ஆண் குரங்கு நீண்ட மூங்கிலின் மேலிருந்து நிருத்தம் செய்யும். அக் கூத்தைப் பார்க்க வேடுவர்கள் கூவித் தம்மவரைக் கையா லழைப்பார்கள். சாரலிற் பன்றிக் கூட்டங்கள் திரியும். மாதர்கள் சாரலில் உள்ள மணியை வாரித் தினையுண்ணும் கிளியை ஓட்டுவர். மன்றத்தில் மண் முழவம் அதிரும்.

தலச்சிறப்பு :—தலமரம் - குறும்பலா. பெண் யானை யும் ஆண் யானையும் வேங்கைமலர்க் கொத்தைத் தலைமேற் சுமந்து சென்று வணங்கி (வழிபட்ட) தலம். திருநீறு பூசியும் புகழ்பாடியும் தொண்டர்கள் பின்வரக் கொடிக ளுடன் நித்திய விழா நடைபெறும் தலம்.

83. கேதாரம்:—இத்தலத்தில் குரவம், கோங்கம், சுரபுன்னை, ஞாழல், பிண்டி எனப்படும் மரங்களின்மீது

வண்டு ஒழுங்காகப் பண்பாடும். தன் பிள்ளை துள்ளிக் கிளை பயில்வதைக் கேட்டுப் பிரிய மனம் வராமற்போய்க் கிளியானது தினைக்கதிரைக் கொண்டுவந்து அதன் வாயில் ஊட்டும். குரங்கு பாய்வதாற் கிளைகள் முரிந்து உதிர்ந்த பூக்கள் மணம் வீசும். மாமரங்களிலும், பலாமரங்களிலும் ஏறி மாம்பழங்களையும், பலாப்பழத்தினின்று கீறி எடுக்கப் பட்ட பெருஞ் சுளைகளையும் முசு (குரங்கு) தன் கூட்டத் துடன் உண்டு குதிக்கும். பகைத்து வீழ்ந்த யானையின் வெண்மருப்பினைச் சிங்கம் பிளந்து அம்மருப்பிலுள்ள குருத்தை உண்ணும். இரைதேரும் பன்றி - கலப்பையால் உழுவதைப்போலப் புழுதியைக் கிளைக்க அங்கு மணிகள் சிந்தும். வீசும் பெருங்காற்றால் உயர் வேங்கையின் பூ வுதிர, பாறையின்மேற் கிடந்த வேங்கை (புலி) அந்த வேங்கை மரத்துக்குத் தனது கோபமுகத்தைக் காட்டும். வண்டினங்கள் மலர்த்தேனை உண்டு கீதம்பாட அதைக் கேட்டு மடமந்திகள் கூத்தாடும். வண்டு பாட, மயில் ஆல, மான் கன்று துள்ள, கெண்டைமீன் பாயச் சுனையில் நீல மொட்டு மலரும்.

தேவியைத் தனது இடப்பாகத்தே இறைவர் அடக் கிய இடம் கேதாரம்; இத்தலம் மறைகள் ஓதி வானோர் தொழும் இடம்; நீர்க்கோட் டிமையோர் உறைகின்ற இடம்; ஒரு காலர்கள், குதிரை முகத்தார், இமையோர் சேரும் இடம்; ஊழி யுணர்ந்த பெரியோர் இறைவனை இறைஞ்சும் இடம்; நீறு பூசியும், தரையில் உண்டும், நீரில் மூழ்கியும், மலையில் வசிக்கும் தெளிந்த சிந்தையுடையவர்கள் சேரும் இடம்; முனிவர்கள் பலர் அதிகாலையில் வந்து நீரில் மூழ்கி இறைவனை இறைஞ்சும் இடம்: தொண்டர்கள் தமது ஐம்புலக் களிற்றை அடக்கி, இறைவனுக்கு மலர்கொண்டு இண்டைகட்டி வழிபாடு செய்யும் இடம்; மாசு உடம்பினர், மீன் கவர்வார், இடுக்கண்வழி காட்டுவோர் எய்த ஒண்ணுத இடம்.

84. கேதீச்சரம் :—கடற்கரையில் உள்ள அழகிய நகரம் மாதோட்டம் என்பது; இங்குக் கடல் முத்தும் மணி

யும் கிடைக்கும். இந்நகரில் உள்ள கோயில் கேதீச்சரம்; பாலாவி என்னும் நதியின் கரையில் உள்ளது. நறும் பொழில் சூழ்ந்தது. பொழிலில் மா, கமுகு, வாழை நெருங் கும். மலர்ப்பொழிலில் வண்டு பண் செய்ய மயில் நட மிடும். வாழைப் பொழிலில் மந்திகள் களிப்புற மருவும். கேடில்லாத தலம் கேதீச்சரம். இறைவன் தேவியோடு விருப்புடன் எந்நாளும குடி வாழ்க்கையாய் அமருந் தலம். தொண்டர்கள் நாள்தோறும் துதிசெய அருளுந் தானம். அடியார்கள் அன்பொடுந் தியானித்துத் தொழுந் தலம். இதை அடைதல் வேண்டும்; அடைந்து அன்பொடு தொழுது தலை வணங்கினால் இடரும், வினையும் சாரா. இர வும் பகலும் நினைந்து ஏத்தினால் துன்பமும் குற்றமும் நீங்கும்.

85. கைச்சினம் :—தேவி திருநாமம் வெள்வளை யம்மை; இறைவன் விரும்பி உறையும் தலம் கைச்சினம்.

86. கொடிமாடச்செங்குன்றூர் :—கோடல் மலர் விளங் கும் புறவில் (முல்லை நிலத்தில்) உள்ள ஊர்; பொழில் சூழ்ந்த தலம்; பொழிலில் மலைவாழைக் குலை மலியும் ஊர்; குன்றன்ன மாளிகைகளைக் கொண்ட ஊர்; சீர் உறும் அந் தணர் வாழும் ஊர்; கொடிமாடச் செங்குன்றூர் நம்பனது தாளைத் தொழுவோர் அவலம், தடுமாற்றம், வினை இவைகளை அறுப்பார். (ஆதலால்) அப்பெருமான் கழலை ஏத்துதலே நீதி, அதுவே மெய்ப்பொருள். சுவாமி அர்த்த நாரீசுரர்; தேவியை ஒருபாகத்து அடக்கியுள்ளார்.

87. கொடுங்குன்றம் :—சோலை சூழ்ந்த மலை. சோலை யில் மரவம், மணமாதவி, மௌவல், குரவம் இவை விர வும்; மயில் பெடையுடன் ஆடும். குயில் இன்னிசை பாடும். குளிர் புனல் பாயும் குளிர்ச் சாரலில் கூன்பிறை சேரும், பொன்னும் மணியும் கொழித்திழியும் அருவிகள் பாயும், மதகரியும் சிங்கமும் திரியும், இடியோசைக்கு அஞ்சி கோட் டான்கள் மலையினின் றிழிந்து ஓடித் திரியும், மலையினுஞ் சாரலிலும் அறையும் சிங்கத்தின் குரலோசைக்கு அஞ்சி

யானை மனம் உடைந்து குகைக்குள் தங்கும். இடி அதிரக் கேட்ட யானைக் கூட்டங்கள் சோலைகளில் மண்டிப்புகும்; ஆளி வர, மதகளிறு அஞ்சி மலையைக் குத்திப் பெருங் குகைகளுள் தங்கும்; வயது சென்ற யானைகள் பழ மூங்கில் களைக் கோபித்தொடித்துச் சுனைகளிற் கூட்டமாய் நெருங்கி ஆடும். தேவி திருநாமம் - தேனிற்பொலி மொழியாள்.

88. கோள்ளம்பூதூர் :—ஆற்றங்கரைத் தலம். ஊரிற் குரக்கினம் பயிலும்; தெங்கு சூழும், குவளை மலரும், கொட்டம் கமழும், கொன்றை பொன் சொரியும். நீர் நிறை உயர் கழனியில் பருவரால் உகளும். ஸ்ரீசம்பந்தப் பெருமான் "செல்ல உந்துக" எனவரும் பதிகத்தைப் பாடக் கொள் ளம்பூதூர் நம்பன் திருவருளால் ஓடம் கரைக்குத் தானே வந்து அணைந்த தலம்.

89. கோள்ளிக்காடு :—சுவாமி குற்றமில் பெரும் புகழ்க் கொள்ளிக்காடர் எனப்பட்டுள்ளார். தேவி-பஞ்சு தோய் மெல்லடிப் பாவை.

90. கோகரணம் :—பொழில் விளங்கு குன்றுகள் நெருங்கும் இடம். கோடலின் அரும்பு அரவுபோல விரியும் சாரல் நெருங்கு மலையிடம். வண்டு கீதம் முரலும் பொழி லிடம். அருவி இரைச்சல் இட்டு வேகமாய் வரக் கரி இடறு சாரல் மலி தலம். மலைக் குகைகள் தோறும் மான், சிங்கம், பன்றி, களிறு பிடி, இவை கூடி விளையாடும் இடம். கொல்லையில் இளங்குறவர் வாசம் உருவ மயிர் புலர்த்தும் இடம். கடல் வட்டத்தார் இறைஞ்சு தலம். மாதரும் ஆட வரும் மலர்தூவி அடி யிறைஞ்சு தலம். அடியார்களும் இமையோர்களும் பரவும் பேரொலி நிரம்புந் தலம். ஆறு சமயங்களையும் விரும்பி இறைவன் திருவடியைப் பேணி ஆகமங்களைக் கூறும் அடியார்கள் மனம் நெகிழுந் தலம். நல்ல மாதர்கள் "ஹர" என்னும் பெயருடைய தீர்த்தத்தில் முழுக அவர்களுக்கு உற்ற விஷநோய் நீங்கும்படியாக அவர்களுக்குப் புகல் அளித்த தலம். மறவர், வேடர் கூடிக் குடைத்தலை நதியிற் படிய அவர்தம் பழிதீர அருளிய

தலம். பாசத்தை அறுத்துப் பெயர்கள் பத்து உடைய மன்னனை (அருச்சுனனை ?) முன்னர்க் கூசும்படியாகச் செய்து பின்னர் அவனுக்கு அருள்கள் நல்கிய தலம். குற்றங் களைந்த முனிவர்கள் தத்தம் வினை நீங்கித் தாம் பொலிவடையச் செய்யும் ஓமப்புகை மேலிடுந் தலம்.

91. கோட்டாறு :—அழகிய பொழில் சூழ்ந்து அழகு விளங்கும் ஊர். பொழிலில்-குருந்தம், மாதவி கமழும்; குரவம், கோங்கு நிறையும்; கிளி கோதும்; மலரில் வண்டு கெண்டும்; மணம்வீசும் நீர்வயல் சூழ்ந்தது. வண்டல் நிறைவயலில் நெல், ஆலை வளம் பொலிந்திடும். மங்கைமார் பலர் வாழும் பொன்னூர் மாட மாளிகையிற் கொம்பில் துகிற் கொடியாடும்; மங்கைமார் இசைபாடுவர்.

இத்தலம் சிவபிரானைக் கண்டு கண்ணீருகுத்து இசை பாட வல்லார் குடிகொண்ட ஊர்; கொடைமிலா மனத்தார் இல்லாத ஊர்; மாதர், ஆடவர், பத்தர்கள், சித்தர்கள் நித்தம் இன்மொழியாற் போற்றிப் பணி யியற்றும் தலம்; தொண்டரெல்லாம் துதிக்குந் தலம்; பழைய அடியார்கள் துதிசெய்யப், பாருளோரும் விண்ணுளோரும் தொழக், குழல் மொந்தை ஒலிக்கத் திருவிழா நடைபெறும் தலம். திருவிழாவில் தொண்டர்கள் வந்து இறைவனை வியந்து பண்செய்யும் தலம். பூசனைக்காக நீரும் மலரும் வேண்டி யானை மேகத்தைக் குத்திப் பணிசெய்து வழிபட்ட தலம். தேவி-வண்டமருங்குழலாள்.

கோட்டாற்றிற் பெருமான் என்றும் மன்னி, அடியார்க்கு அருளுவார். கோட்டாற்று இறைவனை நினைந்து ஏத்த வல்லார்க்கு அல்லல் இல்லை. அவரை நினைந்து ஆதரித்து அன்பு செய்து அடிபரவ வல்லவர் பழியும் பற்றும் அறுப்பார்.

92. கோட்டூர் :—குளிர்பூம் பொழில் சூழ்ந்த ஊர்; பொழிலில் நறுமணங் கமழும்; கொன்றை பொன் சொரியும்; பலாப்பழம், மாம்பழம் நெருங்கும்; மயில், கிளி, அன்னம் பயிலும். வயலிற் கயல் உகளும், குருகு வாழும்.

மாடம், மாளிகை, கோபுரம், கூடம், அரங்கு, சாலை, வேலைப் பாடு அமைந்த மதில், பைம்பொன் மண்டபம், இவை பொலியும்; மயில், குயில், கிளி என மிழற்றும் மங்கையர் குழாம் குணலை (ஆரவாரக் கூத்து) செய்வர்; மாதரும், ஆடவரும் கைதொழுவர்; செல்வ நிறை மாதர் தொழுது ஆடுவர். தேவி - தேன் மொழிப் பாவை. 'கோட்டூர் நற் கொழுந்தே' என்றெழுவார்கள் இடரிலர், கேடிலர், ஏத மிலர், சங்கையிலர், வினையிலர்; தவமும் பெருமையும் உடையராவர்; நீடு செல்வத்தராவர்; புகழ் மிகத் தாங்குவர்; பொன்னுலகில் அமரரோடு இனிது இருப்பர்; இறைவனது திருவருள் பெறுவர்.

93. கோடிகா:—நறும்பொழில் சூழ்ந்தது. இறைவ னுக்கு உகந்த ஊர். இத்தலத்தைச் சேர்மின்கள்.

94. கோணமலை:—முத்து, பொன், இப்பி இவை களைக் கடல் தனது திரைகளாற் கரையிற் சேர்க்கும் தலம். மௌவல், மாதவி, புன்னை, வேங்கை, செருந்தி, செண் பகம், குருந்தம், கொடிமுல்லை இவை நெருங்கிய பொழில் சூழ்ந்த தலம். மௌவலின் மணம் குன்றிலும் கானலிலும் வீசும் தலம். கோயிலுஞ் சுனையுங் கொண்ட தலம். குடி கள் நெருங்கிப் பெருக்கத்துடன் வாழும் பதி. தனது கழல் வணங்குந் திருமாலுக்கு இறைவன் குருமூர்த்தியாய் நின்ற தலம்.

95. கோயில்:—(தில்லை-சிதம்பரம்) கழி சூழ்ந்தது. மதி தவழும் பொழில் வான் அளாவும். பொழிலில் வண்டு ஒலிக்கும். முன்றிலில் மலர் மணம் கமழும். இத்தலம் முல்லை நிலத்துப் பழைய ஊர். லட்சுமீகரம் நிறைந்த ஊர்; மணங் கமழும் ஊர்; மாட நெடுவீதிகள் உள்ள ஊர். விண் ணளாவு நெடு மாடங்களை உடைய செல்வர்கள் வாழும் ஊர். நல்ல தேரோடு வீதிகளைக் கொண்ட ஊர். மட வார்கள் மாட நெடுவீதியிற் கையாற் பந்து ஓச்சும் ஊர். திருவிழா நடைபெறும் ஊர். நிறை வெண் கொடி மாடங் களைத் தீண்டும் பிறையானது பேரம்பலத்தைத் தாக்கும்

நகர். இனிமையூறுந் தமிழில் உயர்ந்தோர் உறையும் ஊர். கற்றவர் தொழுதேத்து சிற்றம்பலம் விளங்குந் தலம். சீல முள்ள பெரியோர் வாழும் ஊர். சீருடன் செயப்படும் வழி பாடு ஒழியாத செம்மை வாய்ந்த தலம். தொல் புகழ் வாய்ந்த தலம். தில்லைவாழ் அந்தணர் பிரியாத தலம். கற்றுள்ளபடி எரியோம்பிக் கலியைத் தடுத்த அந்தணர் வாழும் ஊர். நீலகண்டம், நெற்றிக்கண், சூலக் கை, சுடலை நீறு, நீள் சடை கொண்ட சிவரூபத்தினராம் சீலத்தார் தொழுது வழிபடும் தலம். வேள்வி செய்து எரியோம்பும் சிறப்பினர் வாழுந் தலம். தேவர்கள் வாழுந் தலம். மறை யவர் தொழுதெழப் பொதுவினில் ஐயன் நடமதாடும் ஊர். உலகேத்த இறைவன் உறை கோயில். காதல் கொண்ட காளையர் சேவடிபோற்ற இறைவன் அம்பலத் துறையுங் கோயில். சிற்றம்பலத்தைத் தமக்கு இடமாக நாடி இறைவர் இட்டமாக அங்கு உறைவர். இமையவர் துதிக்க விருப்புடன் தில்லை மன்றில் இறைவர் ஆடல் உடையார்.

சிற்றம்பலம் காதலால் தொழுவோர் உறுதிகொள்ள வல்லவர். அம்பலத்துறைவானது அடியாரை வினை அடையாது. சிற்றம்பலத்தைத் தலையால் வணங்குவார் தலையானர்கள் (சிரேஷ்டரானவர்கள்); அங்கையால் தொழ வல்லார் தீவினை நீங்கப்பெறுவர். சிற்றம்பலத்தை ஏத்த-நோய் மாயும்; சேர - வினைபோம்; சிற்றம்பலம் மேய நாதனர் கழலேத்தும் இன்பமே இன்பம்; அவர் கழலேத் தும் செல்வமே செல்வம். நடராசப் பெருமானை நாளுந் தொழுவோம். அவரை நித்தலும் ஏத்துபவருடைய தீரா நோயெல்லாம் தீர்தல் திண்ணம். அவர் பாதமே பற்றென நின்றாரைப் பாவம் பற்றாது. சிற்றம்பலத்து ஈசா! உன் கழலைத் தொழுது மேலுலகம் எய்துவோம்.

96. கோலக்கா:—சிறந்த ஊர்; சோலையிற் குயில் பயிலும், வண்டு குழல் ஊதிப் பண் செய்யும்; மாதர்கள் பொய்கையிற் குடைவர்; அதனால், வாளைகள் மடையிற் பாயும்; இறைவனைக் குறித்த பண்கள் பாடப்படும் ஊர்.

கோலக்கா; அங்குக் கொடிகளுடன் விழா நடைபெறும். கோலக்காவைப் பற்றிப் பரவித் தொழுது பாடப் பாவம் போம், வினை விலகும்; கோலக்கா ஈசருடைய பாதத்தை ஏத்தி வாழுங்கள்; அங்ஙனம் ஏத்தித் தொழுபவரிடம் துயர் சாராது, பிணி விலகும். பாவந் தளர வேண்டினும், வினை யொழிய வேண்டினும் கோலக்காவை முறையால் ஏத்தி அத்தலத்து நாதர் பாதத்தை அடைந்து வாழுங்கள்.

97. கோவலூர்:—பெண்ணையாற்றங் கரைத் தலம். பழனம் (வயல்கள்) சூழ்ந்த ஊர். பைம்பொழிலில் பனைகள் விளங்கும். வண்டினம் குரவத்திலிருந்து குழலும் யாழும் ஒலிக்கும், பூவிலிருந்து பண் செய்யும். தலம் "கோவலூர் வீரட்டானம்," எனவும், சுவாமியின் திருநாமம் "கோவலூர்க் குழகன்" எனவும் கூறப்பட்டுள்ளன. இனியது வேண்டில் வீரட்டானம் சேருக. உறுதியாவது இன்னதென அறிந்துள்ளாயாயின் வீரட்டானஞ் சேருக. பல நோய்களும் மூப்பும் வந்து நலியுமுன் வீரட்டானஞ் சேருக.

98. கோழம்பம்:—செறிந்து உயர்ந்த குளிர் நறும் பொழில் சூழ்ந்த தலம். சீரும் பீடும் திகழுவது. தேவி-அழகமர் மென்முலையாள். கோழம்பம் கோயிலாக் கொண்டாரை உள்ளங் குளிர நினையுங்கள்; கூறுமின்கள். அவரைப் பற்றினவரை மேல்வினைகள் பற்றா. அவரை ஏத்த அல்லல் அறும், இடர் ஒடுங்கி நையும், வினை மேவாது.

99. கோளிலி:—அழகிய ஊர்; பொழிலில் கொஞ்சு கிளி மேகத்தை எட்டும்; கொன்றை மலர் பொன்னொளி வீசும்; கோளிலி நாதர் அழிவு படாத திறத்தை அருளிக் கோள்களின் சேஷ்டையை விலக்குவார்; பெறற்கரிய வரங்களைத் தருவார்; பணிந்தெழுபவருடைய மனோ துக்கங்களைத் தீர்ப்பார்.

100. சக்கரப்பள்ளி:—காவிரி மணி கொழிக்குந் தலம். புனலும் வயலுஞ் சூழ்ந்த வளநகர். இறைவனது உறை

விடமாகிய ஊர். திருமால் திடபக்தியுடன் அடிபோற்ற இறைவன் அவருக்குச் சக்கரங் கொடுத்த தலம். மலரும் புனலுங் கொண்டு சக்கரப்பள்ளியை நித்தலும் வணங் குங்கள்.

101. சாத்தமங்கை:—மதியும் மேகமும் தவழும் நறும் பொழில் சூழ்ந்தது. நீலநக்க அடிகள் பரவுந்தலம். "நிறைமிக்க நீலநக்கன் நெடுமாநகர்" என்று தொண் டர்கள் பாராட்டும் ஊர். கற்றவரும், கைதொழுது பாவம் அற்றவரும், நாளும் ஏத்தும் தலம். சங்கையில்லா மறை யோர் தொழும் தலம். சந்தம், ஆறங்கம், சமயம், வேதம் கற்றவர் தொழும் தலம். சாதியும் சீரும் மிக்கவர் தொழும் பதி, தேவி-மலர்க்கண்ணம்மை. ஆலயம்-அயவந்தி எனப் படும்.

102. சாய்க்காடு:—புகார் எனப்படும் காவிரிப்பூம் பட்டினத்து அருகில் உள்ள ஊர் சாய்க்காடு. இது காவிரி கடலுடன் சங்கமம் ஆகும் தானம். இரங்கல் ஓசை கொண்ட கடல் அலைமோது கரைகொண்ட தலம். சங்கு கள் கரையிற் பொரத் திரை புலம்பும் ஊர். இப்பி, முத்து, மணி, சங்கு இவை கடலிற் கப்பலிற் கொண்டு போகப் படும் ஊர். மாங்கனி ஓங்கிய சாலையும் தாறு கொண்ட கதலிக்காடும் சார்ந்த ஊர். நெய்தல் நிலப் பெண்கள் தாழை மடற் கொய்யும் ஊர். பொன்னிதழ்ச் செருந்தி, கோங்கு, மணம் வீசு மல்லிகை, சண்பகம், மணம் வீசு தாழை இவை விளங்கும பொழில் சூழ்ந்த ஊர். மேகம் போலப் பேரி முழங்கச் சோலையில் மயில் ஆடும். மயிலாலச் செருந்தி காலையில் பொன்னென மலரும். தன் காதல் வண்டு ஆடிய புன்னைத் தாதைப் பார்த்து மாதர் வண்டு ஊடிப் பொழிலில் மறையும். மலர்ப் பொய்கைகள், வெண் மாட நெடுவீதிகள், மேகம் அளாவு மணி மாடங்கள், மதியைத் தீண்டும் நெடுவீதிகள், மாளிகைகள் பொலியும் ஊர் சாய்க்காடு. அது யாவரும் புகழ்ந்தேத்திய திருப்பதி. மாதர்களுடைய பாட்டொலி நீங்காத தலம். இறைவன் உகந்துறையும் தானம். சாய்க்

காட்டீசனுடைய அடியார்க்குச் சுவர்க்கங்கள் ஒரு பொருள் அல்ல. சாய்க்காட்டான் தாள் நீழலைப் பற்றினவரே ஓங்குவர் என உலகம் உரைக்கும். சாய்க்காட்டெம்பெரு மாற்கு நாளும் நமது தலை பூ சுமப்பதாக, செவி புகழ் நாமம் கேட்பதாக, நா ஏத்துவதாக இருந்தால் நாம் நல்வினை பெறலாம். சாய்க்காட்டீசனைத் தெய்வமாப் பேணாதவ ருடைய தெளிவுடைமை யாம் அறியோம். சாய்க்காட்டை இடமாகக் கொண்டிருப்போம் என எண்ணுவார்க்கு இடர் இல்லை. சாய்க்காட்டை அடையுங்கள். சாய்க்காட்டெந் தலைவன் தாள் சேர்ந்தவர்கள் மண்ணிற் பிறவார், வான் புகுவர், மனம் சோர்வு படார், பசி - பிணி அறியார்.

103. சிக்கல் :—பொழிலில்-வண்டு உலவும், செந்துப் பண் பாடும்; தாழை மணம் வீசும்; வயல்கள் - நிறைநீர் வயல்கள்; செந்நெல் பொலியும், சேல்மீன் உகளும்; சுனை களில்-நீலம் நெய்தல் மலரும். மலர்ப்பொய்கையில்-மணம் வீசும், தேன் (மது) விம்மும். வண்டு இரைக்கும், வாளை குதிகொள்ளும். மறையோர் வாழும் மாடங்களில் மேகம் தங்கும். அம்மாடங்களுக்கு அயலில் தென்னம் பொழில் நிறைந்து செல்வம் ஓங்கும். மதி உலவும்படி உயர்ந்த மாளிகைகள் விளங்கும். திடங்கொண்ட மறையவர் வாழ்வர். சுவாமி - வெண்ணெய்ப் பெருமான். தேவி - வேனெடுங் கண்ணி. சிக்கற்பெருமான்பாற் பன்மலர் தூவப் பாவம் பறையும். அவர் திருவடியைத் தியானிக்க வினை தேயும், வினை ஓயும்; அவர் திருவடியைப் பணியவும் ஏத்தவும் பிணி போம்; மதியுங் கதியும் கூடும்; அவர் திருவடியை விரும்ப அல்லல் அறும்; லட்சுமி நம்மிடம் தங்கியிருப்பாள்.

104. சிராப்பள்ளி :—மலைத்தலம். துறை மல்கு சாரலிற் சுனையில் மல்கு நீல மலரிலிருந்து வண்டுந் தும்பி யும் பாடும். மலையடி வாரத்திற் புனமும் சுனையும் சூழும்; சாரலில் வேங்கைப் பூ பொன் சொரியும். மூங்கில்கள் உயர்ந்தோங்கு சாரலிற் கருங்குரங்குகள் விளையாடும். ஆண்

குரங்குடன் ஊடிய பெண் குரங்கு கைம் மகவை ஏந்தி மூங்கிலிற் பாய மலைமீது ஏறும். முழவம் வந்த ஒலியுடன் ஒலிக்கும். உயரத்தில் மலை உச்சியில் திருக்கோயில் பொலியும். சிராப்பள்ளியைச் சென்றடையுங்கள். சிராப்பள்ளி அடிகளின் அடியார்களுக்கு அல்லல் இல்லை.

105. சிவபுரம்:—பழங் காவிரியின் தென்கரையில் (அரிசிலாற்றின் அயலில்) உள்ளது. புனல் சூழ்ந்தது. திடமலி பொழிலில் - கமுகிற் செங்கனிகளைப் பறவைகள் இரவிலும் உண்ணும். மணம் வீசு குராமலரில் வண்டு தேன் உண்டெழும். பண்பாடும் வண்டு கிண்டச் செண்பகம் மலரும். பொய்கையில் அன்னச் சேவல் பெடையினைப் புல்கும். சிவபுரம் நீர்நிறை வயல்கள் சூழ்ந்த தலம். கனத்த சிலை மதிலைக் கொண்ட தலம். இறைவன் உறைதரும் தலம். நல்ல திறத்தை உடையவர்களும் உள்ளத் தணிவு கொண்டவர்களும் பயிலுந் தலம். புகழ் வீறு தலம். லட்சுமீகரம் தரும் தலம். திருவிழாவில் எடுத்த வெண் கொடிகள் நெருங்கி மேகத்தை அளாவுந் தலம். அடியவர் பணிதரு தலம். நல்ல கணங்கள் மருவிய தலம். தேவர் பணிசெய்யும் தலம். வராகாவதாரத்தில் தனது கொம்பின் நுனியில் பூமியை நிறுத்திய திருமால் (வெள்ளைப்பன்றி) வழிபட்டு அருள்பெற்ற தலம்.

சிவபுர நகரைத் தொழ வினைபோம், இருமையும் இடர்கெடும், புகழ்மிகும். சிவபுரம் என்று இருபொழுதும் வழிபடத் துயர்போம்; புகழ் கூடும். சிவபுரத்தை அடைய இடர்கெடும், வினைபோம், உயர்கதி பெறுதல் திடம்; சிவபுரத்தை நினைபவர் எழில் உருப் பெறுவர்; கலைமகள் அருளும், திருமகள் அருளும், செயமகள் அருளும் பெற்றுத் திகழ்வர்; உலகில் நிலைபெறுவர்; அவர் சந்ததிகள் விளங்கும். சிவபுரத்தை வழிபடுதலே குணம். சிவபுரத் திறைவன் திருவடியைத் தொழுவோர் துணிவு அடைவர், பிணி அடையார், பிறவி வேரை அறுத்தெறிவார்.

106. சிற்றேமம் :—அழகிய ஊர். தளிரும் கொம்பும் மலரும், புள்ளினமும் (பொழிலில்) பொலியும். பொழிலில் மேகம் படியும்; வண்டு தேன் உண்டு பண் செய்யும்; யாழ் பாடும்; இத்தலம் தாழ்ந்த வயல்கள் கொண்ட ஊர். சுவாமி முனியும் மூப்பும் நீக்கியவர். திங்கள் போன்ற முக முடைய மாதர் (உமையம்மை) பாடத் திங்களைச் சூடி ஆடல் புரிவர் சிற்றேமத்து இறைவர்.

107. சிறுகுடி :—பொழில் நெருங்கியது, வண்டுகள் விரும்புவது. புனல் - கயல் மீன்கள் கொண்ட தெள்ளிய புனல் வயல் - நீர் கொண்டது, செந்நெல் விளைவது; இத் தலம் திடமான மதில் விளங்கும் ஊர். திசையோ ரெலாம் தொழுதெழும் ஊர். தேவியுடன் இறைவன் வீற்றிருக்குந் தலம். சிறுகுடிப் பெருமானே! உமது கழலை நினைக்க நலம் உறும்; சொன்னலமும் தொண்டும் கைகூடும். உமது கழலை உற்றவர் பிணியிலர். உம்மை யேத்த வினை யும் துயரும் ஒழியும். உம்மைச் சார்பவர் வசை நீங்கப் பெறுவர்; உம்மைப் பணிந்தால் அமருலகம் கிட்டும். உம்மை விரும்பித் தீயன விட்டால் அருவினை மாளும். உம்மைப் போற்றுதலே பத்தர்கள் தம் பரிசு; உம்மை வாழ்த்தச் சங்கை ஒழியும்; தவம் சாரும்; உம்மை விரும்பி மெய்ந்நெறி உணர்ந்தோர் உயர்ந்தோர்.

108. செங்காட்டங்குடி :—பூம்பொழிற் சோலை சூழ்ந்த ஊர். பொழிலில் வண்டு ஒலிக்கும் ஊர். புனற் செல்வம் உள்ள ஊர். நீர் நிறைவயலில் மீன் வகைகள் பாயும் ஊர். மாசில்லாத ஊர். மாதர்கள் வாழும் ஊர். நாடோறும் தவறாது அடியார்கள் பணி செய்யும் ஊர். செந்தமிழோர் களும் நான்மறையோர்களும் பரவி யேத்தும் ஊர். பறை யொலியும், சங்கொலியும் முழங்க ஊர்ச் செல்வம் விளங்கத் திருவிழா எப்போதும் நடைபெறும் சீரேற்றத்தை உடைய ஊர். கந்தமும் அகிற் புகையும் கமழும் தலம். திருக் கோயில் "கணபதீச்சரம்" எனப்படும். இக்கோயில் இறை வனுக்கு உகந்த கோயில். சிறுத்தொண்ட நாயனாருடைய திருப்பணியைக் கொண்டது. அவருக்கு அருட் செய்யும்

பொருட்டாக இறைவன் இத்தலத்தில் கணபதீச்சரத்தில் வீற்றிருக்கின்றார். கழலார்க்க ஆடுகின்றார்.

109. செம்பொன்பள்ளி :—காவிரிக்கரைத் தலம். சீரும், தேசும், திருவுங் கொண்ட தலம். வயல்கள் விளங்கும் ஊர். தேவி - மருவார் குழலி. செம்பொன் பள்ளி இறைவனைப் பூசித்துத் தொழத் துன்பம் இல தாகும்; வினை நில்லாதுபோம்; செம்பொன்பள்ளி ஈசர் கழலையே அடைந்து வாழுங்கள். அவர் கழலைச் சிந்தித்து உரைத்து மருவாதவரிடம் பாவம் நிலைத்திருக்கும், வினை சேரும், ஊனம் ஒழியாது. செம்பொன்பள்ளி ஈசா எனக் கூறில், இடர் நில்லாது.

110. சேய்நலூர் :—பைம்பொழிலில் மயிலாட வண்டு பண்பாடும். வயலிற் சேறும், மீனும் காணலாம். தேரோடு வீதி திகழும். விண்ணளாவு மாடங்கள் விளங்கும். பெருமை வாய்ந்த செல்வர் பொலிவர். கோயில் சீர்பெற்ற கோயில்; இங்கு இறைவர் கோச்செங்கணாற்கு அருளியவர். இத்தலம் சண்டேசுரநாயனாரை இறைவன் ஆட்கொண்டு தலைமை அருளிய தலம். பிரமனை யொத்த மறையோர் வழிபட்டுப் போற்றி செய்யும் தலம். நான்மறை, ஆறங்கம், ஐவேள்வி வல்ல முத்தீயாளர் (மறையோர்) பூசை செய்யும் தலம். சேய் (முருகர்) தங்கிய தலம்.

111. சேறை :—அழகிய வளநகர். பொழில் தழுவிய நகர். மறைபயில் அடியவர் தொழுந் தலம். தேவியோடும் இறைவன் உறையுந் தலம்.

112. சோபுரம் :—சோலையும் வயலுஞ் சூழ்ந்த தலம்: தேவி—வேனெடுங்கண்ணி.

113. சோற்றுத்துறை :—காவிரிக் கரைத்தலம். பொழி லழகு வாய்ந்த தலம். சோலையில் மயில் ஆடும். வீதியில் திருவிழா முறைப்படி நடைபெறும் அழகு நிறையும். நாம் சோற்றுத்துறை சென்றடைவோம்.

114, தண்டலை நீணெறி :—இத்தலத்தில் கரும்பு, செந்நெல், கமுகு—இவை வளம்பெற நெருங்கும். சலந் தரும் இப்பி, முத்து, சங்கம் இவைகளை நிலந்தரும். செம் பொன்னும் முத்தும் மிக்கு விளங்கும். பால் சுரந்து ஓடையில் துறையில் எருமை படியும். இத்தலம் மதிலும் சுதைமாடமும் நிலவும் ஊர். செருவில் வல்ல கோச்செங்கட் சோழனது ஊர் புகழுந் திருவுங்கொண்ட மறையோர் வாழும் ஊர். சுவாமி: தண்டலை நீணெறி நாதர். தண்டலை நீணெறியைக் காண்மின்கள்.

115. தருமபுரம் :—கடலுங் கடற் கழியும் அருகில் உள்ள தலம். கடற்கரையில் வெண்மணலில் முத்துக்கள் ஒளி விசி அழகு தரும். கானலில் - கண்டகம், தாழை, ஞாழல், முண்டகம் மலரும்; நீர் நிலையில் - வயலில் - தாமரை, குவளை, கழுநீர் மணம்தரும். கானற்சேற்றிற் புள்ளினம் துயிலும். அழகிய பொழிலில் குயில் பயிலும். வண்டு ஒலிக்கும்; புன்னை, மணந்தரு செடிகள், முல்லை, மௌவல் மலரும். வண்டு முரல மலர்கள் மணம் விரியும். பொழிலிற் கடலோதம் தாக்கும். தழை பொழிலில் மழை (மேக) நுழையும். இத்தலம் இறைவன் தங்கும் இடம்.

116. தலைச்சங்காடு:—கானலில் அன்னம் மன்னும். குளிர்ந்த கமுகஞ் சோலையில் குயில் ஆலும். இத்தலம் நால்வேதம் வல்ல அந்தணாளர், தீ யோம்பு மறையோர், திருநீறணிந்த மறையோர், நூல் மார்பராம் மறையோர், தக்கோர், சலமிலார், பெரியோர் வாழுந் தலம். நீறும் பூவுங்கொண்டு பூசை செய்யும் தொண்டர் நீங்காத தலம். தலைச்சங்கைக் கோயிலானது கூடம், மண்டபம், வாசல், கொடி மாடம் சூழ்ந்து தோன்றும் கோயில்; அணி, ஏர், உயர்ச்சி, கடி, கோலம், செம்மை, நலம், நிரை, நிலை விளங்கு கோயில். இக்கோயிலையே கோயிலாக இறைவர் நயந்து கொண்டு மகிழ்ந்து அமர்ந்துள்ளார்.

117. திருந்துதேவன்குடி :—மதிதோயும் பொழிலில் வண்டுகள் திளைக்கும். தேனும் வண்டும் இசைபாடும். புனல் வளம் நிரம்பும். இது தீதில்லாத தலம். அழகிய

பொய்கையால் சூழப்பட்ட தலம். திருந்து தேவன்குடி அடிகளின் வேடங்கள் ஆதி அந்தம் இல்லாதன, அருமருந் தாவன, சகல பெருமைகளும் வாய்ந்தன. தேவிபெயர்- அருமருந்தம்மை.

118. திலதைப்பதி :—அரிசிலாறு சூழ்ந்த அழகிய பதி. கழனி சூழ்ந்தது. பொழிலானது மேகத்தையும் மதியையும் தீண்டித் தேன் பிலிற்றும். பொழிலில்—ஞாழல், கோங்கு, வேங்கை, சுரபுன்னை, மரவம், மவ்வல் மலரும்; தென்றல் வீசும்; மலர் மணம் கமழும், வண்டு இசை பயிலும். கமுகிளம் பாளையில் உள்ள தேனை உண்டு மந்தி கூத்தாடும். வாழைக்கனி தேன் பிலிற்றும். திலதைப் பதி கொடிகள் ஓங்கிக் குலவுந் திருவிழா நடைபெறும் தலம். தொண்டர்கள் திடங்கொண்ட நாவுடன் இசை பாடும் பதி. தொண்டர்கள் நெருங்கிப் புகை, சாந்தம், மாலை முதலியன கொண்டு பணிசெய்து இறைவனது அருளைப் பெறுந் தலம். திருநீற்றைப் பூசிப் பல தொண்டர்கள் கூடி அதிகாலையில் தொழுதேத்தும் தலம். மண்ணுளார் வந்து அருள் நாடி நிற்கும் இடம். பத்தரும் சித்தரும் இறைஞ்சும் பதி. சூரியன், மடங்கல், மத்தயானை—வழிபட்ட தலம். திலதைப்பதி கோயில்—மதி முத்தம் எனப்பட்டுளது. சுவாமி—மதிமுத்தர். தேவி—பொற்கொடியம்மை.

119. துருத்தி ;—காவிரிக்கரைத் தலம். மணல் செறியும் வியனகர். பைம்பொழிலும் நிறை நீரும் கொண்ட ஊர். இங்கு வண்டினம் துத்தப் பண்பாடும். பொழில்- மணம் வீசும், விண்ணளாவும். வெயிலுக்கு இடங் கொடாது உள்ளே குளிர்ச்சி தரும் பொழிலில் துயிலும் புள்ளினங்கள் மல்கும். இத்தலம் இறைவன் தேவியோடு பகற்பொழுதில் புகலிடமாகக் கொண்ட பதி. இறைவனுக்கு உகந்த திருப்பதி. "ஒருத்தியைப் பாகம் வைத்தே இறைவன் துருத்தி புக்கு யோகியாய் இருப்பது என்ன மாயம். எங்கும் தமதிடமாக இருக்க இறைவன்

திருத்தி புக்கு அடங்கி வாழ்வது என்ன காரணமோ?"—எனச் சம்பந்தப் பெருமான் வியந்து கூறுகின்றார்.

120. தெளிச்சேரி :—கடலானது இப்பியையும் முத்தையும் கரையிற் சொரியும் பொழில்—மதி தோயும், மணம் நாறும். பொழிலில் குயில் கூவும். வயலிற் சேல் உகளும். இத்தலம் செங்கிற மதிலைக் கொண்ட ஊர். தேருலா நெடு வீதி, மாமணி மாடம், அழகிய சித்திரக் கொடி சேர் மாளிகை கொண்ட தலம். மந்திரம் வல்ல மறையோர்கள், தவத்தவர், மாதர்கள் சேரும் பதி. பார்வதி யேத்தித் துதித்த தலம். முப்போதும் பூக்கொண்டு தேவர் வணங்கும் பதி. விண்ணவரும் மண்ணவரும் துதித்து ஆடுந் தீர்த்தத்தைக் கொண்ட திருப்பதி.

121. தென்குடித் திட்டை :—வண்டிரைக்கும் பொழிலும் தண்புனலும் சூழ்ந்தது. காவிரி நீராற் செந்நெல் வயல் பொலிவுறும். வயலிற் பொன்மூக்குக் கயல், சேல், வரால் பாயும்; தாமரையின் தேன் வயலில் அலைபடும். செருந்தி, மாதவிப் பந்தர், செண்பகம் பொழிலில் விளங்கும். ஊரில், அலங்கரிக்கப்பட்ட சிகர மாளிகைகள் விளங்கும். அழகிய கனக மாளிகைகளில் நிலவொளி விரியும். இத்தலம் மறையோர் வேதங் கூறி அடிதொழும் புகழ் வாய்ந்த தலம், மெய்ஞ்ஞானிகள் வழிபடும் கோயிலைக் கொண்ட தலம், பருவ நாள் திருவிழாவும் பாடலும் ஆடலும் செல்வமும் மிக்க புகழ் விளங்குந் தலம், நான்மறை வழிபட்ட தலம்.

122. தேங்கூர் :—பொழில் சூழ்ந்தது. உயர் பொழில்-நறுமணம் வீசு பொழில், அழகுவாய்ந்த பொழில் வண்டு மலர் ஊது பொழில், தாழ்ந்தபொழில். திருக்கோயில் "வெள்ளியங்குன்று" எனப்படும.

123. தேவூர் :—நெருங்கிய பொழிலில் மதிதவழும், மணம் வீசும், தேன் பிலிற்றும். வான் அளாவு மாமரம், வாழை, மகிழமரம், மாதவி, பலா இவைகளில் தேனை உண்டு வண்டு மருள் பாடும். வண்டுகள் செந்துப் பண் பாடும். அன்னம் பேடையோ டாடும் மயில் நாடகம்

ஆட, வண்டு பாடும், கோடல் கை மறிக்கும். முன்றிலில் உள்ள புலாப் பழத்தைத் தின்று கறவைக் கன்றுகள் விளையாடும். மலர்த்தேன் ஒழுகி நன்கு விளையும். கழனிச் சேற்றில் கயல்மீன் விளிப்ப இளவாளை வந்து உலவும். நீர் நிலைகளில் வாளையும் சேலும் பொரும். மாதர் முகம் போலத் தாமரை மலரும். தேனும், அரவும், தென்றலும் தெருவு எங்கும் ஒன்றிவரும். மாடங்கள் நெருங்கும்; மாட மாளிகைகள் வான் அளாவும். இலட்சுமீகரம் பொருந்தும். மதி தவழும். குயிலின் குரலும், மாதர் தம் பூவைமொழியும் தேச ஒலி வீணையொடு கீதமும், வீதிகளில் நிறையும். மாதர்கள் நடனமாட முரவ வாத்தியம் வல்லவர் அதைக் கைக்கொண்டு கொட்டுவர். மாதர்கள் மாளிகையில்இருந்து இசையாழ் வாசிப்பர். மாதர்தங் குங்குமம் மணம் வீசும்.

தேவூர் எல்லையிலாப் புகழ் மல்கி அழகு வளர் ஊர், தக்க தமிழ்க்கலை தெரிந்தவர்கள் வாழ்ந்த ஊர், சூரியன் வழிபட்ட தலம். இறைவனுக்குகந்த ஊர். தேவி—பண்ணிலாவிய மொழியுமை. தேவூர் அண்ணல் சேவடியை நாம் அடைந்தோம். அல்லல் ஒன்றும் இலதானோம்.

124. திருநணா :—கானில் அருவி விசை காட்டும்; வரும் வழியில் ரத்தத்தைச் சிங்கம் பெருக்குவதால் யானை அஞ்சி ஒளித்துக் கொள்ளும். சாரற்பொழிலில் மந்தி கூத்தாட வண்டு பாடும்; திரைகள் குன்றுபோல ஓங்கி மோதும்; மயில் ஆலும்; தேன் ஒளிரும்; மாங்கனி உதிரும்: தாமரை தேன் பிலிற்றும்; வண்டும் தும்பியும் முரலும். முத்தையும் அகிலையும் கரையில் ஆறு சேர்க்கும்.

திருநணா இறைவருக்கு உகந்த கோயில். இறைவர் தம் அடியார்க்கு அருநெறி காட்டி அருள்புரிவர். நானாவிதத்தால் விரதிகள் எங்கும் இறைவர் திருநாமத்தையே ஏத்தி வாழ்த்துவர். அடியார் மலர்கொண்டு அடிவணங்குவர். பெரியோர் சிறப்புடன் ஏத்துவர். புலியும் மானும் பிறவும் கழல்மேற் கைகூப்பும். பிரமனும் மாலும் தாம் போற்ற இருந்த எரி யுருவத்தை வணங்குவர். வானவர்கள் ஏத்தி அடிபணிவர்.

125. நல்லம் :—வயலும் நறும்பொழிலுஞ் சூழ்ந்த தலம். நலஞ்சிறந்த மறையோர் வாழுந் தலம். இத்தலத்து நாதர் நமையாள்வார். பொல்லா வினை தீர்ப்பார். தேவி - அங்கோல்வளையம்மை.

126. நல்லூர் :—காவிரி விளங்கும் ஊர். திரைகள் முத்தம் வீசும். அருவி சேறு சாரும் வழியிற் பெருகும். கயல் வதிந்து குதிகொள்ளும் தண்புனலும் தாமரை நீடு வயலும் சூழும். பொழில் தேன் தோய் பொழில். பொழிலில் வண்டுபாடும், மலர் மணம் கமழும், மயில் ஆலும், கோபங்கொண்ட மந்தி மரமேறிக் கனி சிந்தத் தேன் பெருகும் ; மலர்ப்பொய்கை மணம் வீசும். நண்டு ஓட நாரை இரை தேரும். தேர் மருவு நெடுவீதியிற் கொடிகள் ஆடும். இத்தலம் அடியார்தம் போற்றுதல் நீங்காத ஊர். இறைவனைத் துதிக்கும் அடியார்கள் இசைபாடி வலம் வரு தலம். திருவிழாக் காலங்களில் இடிபோல முழவோசையைத் தொழில் வல்லார் எழுப்பத் திருவிழாவைத் தரிசனஞ் செய்ய விரும்புவோர் தத்தம் பாபவினை தீரக் கூடுந் தலம். மடவார்கள் இசைபாடி நடமாட மறையோர்கள் முறைப்படி ஏத்தும் பதி. தீதிலா அந்தணர்கள் தீமூன்றோம்பிப் பரவி யேத்தும் பதி. மனத்தில் அன்பு உடையவர்கள் குடிகொண்ட ஊர். நல்லார்கள் அந்தணர்கள் நாளும் ஏத்தும் ஊர். நான்மறை, ஆறங்கம், எரிமூன்று ஓம்பும் சீலத்தவர்கள் வாழும் நெடுமாடங்கள் விளங்கும் ஊர். இத்தலத்தில் இறைவர் நட்டம் பயின்றுடுவர். திருநல்லூர்க் கோயிலையே கோயிலாக இறைவர் மகிழ்ந்துள்ளார். கோயில் - அழகு, மணம், வளம் வாய்ந்த கோயில். மலைமேல் அமைந்துள்ள கோயில். வான் தோயுங் கோயில். மறை பேசிய கோயில். இறைவன் தேவியோடு மன்னுங் கோயில் ; நல்லூர்ப் பெருமானைக் கைகூப்பி ஏத்தும் அடியவர்கட்கு இடர் இல்லை. அப்பெருமானிடத்து அன்பு நிறை மனத்தர் விளக்கம்பெற்ற மனத்தராய்த் தீயன அறியார். அப்பெருமானைக் கூறும் அடியாரைக் குற்றம் அடையாது. அவனைச் சிந்திப்பவரும்

ஓதுவோரும் துக்கம்அறியார். மலர் தூவித் தொழுதேத்தி அவரை எண்ணும் அடியார்க்கு இடுக்கண் இல்லை. அவரைத் தாகத்தோடும் அண்மித் தொழுந் தொண்டர் நல்ல போகமுள்ள மனத்தராய்ப் புகழ் பெற்றுத் திரிவர். அவரைப் பாடும் அடியார்களைப் பாவம் அடையாது. அவரை இருபொழுதும் முட்டில்லாமல் அன்பு பாராட்டும் அடியார்கள் பாவம் அறியார். நல்லூரைப் பிரியாது அங்கை தலைக்கு ஏற்றி ஆண்டருள் என்று இறைவன் திருவடி நீழலில் தங்கு மனத்தவர் தடுமாற்றம் அறுப்பார்.

127. நல்லூர்ப் பெருமணம் :—கடல் முத்தை மணலாகக் கொண்டு பாவையர் மணல் கூட்டி (பொம்மைக்) கலியாணம் செய்யும் ஊர். நல்லியலார் தொழும் பதி. அன்புறு சிந்தை கொண்ட அடியவர் நன்மை அடையும் பதி. இறைவனது நட்டக் கொட்டு ஓயாத பதி. தேவி வெண்ணீற்று உமை : ஞான சம்பந்தர் இறைவன் திருவடியைப் பெற விரும்பி “எம்மைப் போக்கருளீர்” என வேண்டிய தலம். இறைவன் இட்டப்பட்டு இன்புடன் உறையும் பதி. பெருமணத்து ஈசன் இணையடி ஏத்துவோர் துன்பிலாத் தொண்டர். பெருமணத்து ஈசனது தாளைத் தொழ வீடு எளிதாம்.

128. நள்ளாறு :—ஞாழல், குரா, சுரபுன்னை மணம் வீசும்ஊர். நறுமணத்தை நாடி வண்டுகள் பாடும் ஊர். வயலும் குளிர் புனலுஞ் சூழ்ந்த ஊர். தேவி திருநாமம். போகமார்த்த பூண் முலையாள். இறைவன் உலகுய்யத் தேவியோடும் இருக்குந் தலம்; செம்பொன் மாலை, வாசிகை, புகை, அவி, பாட்டு இவை விளங்கும் பெருமை வாய்ந்த ஊர். பூவில் மணமும், நீரில் அழகும், சந்தனத்தில் நறுமணமும், நாவிற் பாடலும் பொலியும் தலம். மலரும் நீர்க்குடமும் எடுத்து மறையவர் நான்மறை வழியே விரும்பிப் ப்ணிசெய்யுந் தலம். நடனத்துடன் இசைபாடும் அடியார்கள் மனது ஒருமையுடன் வ்ழிபாடு செய்யுந் திருப்பதி. மந்தமாக ஒலிக்கும் முழவொலியுடன் நடைபெறும் விழா

வொலியும், வேதச் சந்த ஒலியும் பொழிலில் விரவி முழங்கும் தலம். அமரர் வியந்து மெச்ச மலர் நிறை பொழில் எங்கும் வேதவொலி நிறைந்து நயம் தரும் பதி. வேள்வியை என்றும் நடத்தி, நான்மறைகளையும் ஓதி அரன் திருநாமத்தை வேதியர்கள் உணர்த்திடும் தலம். தீப தூபத்துடன் மலர்தூவி நளன் வந்து நாளும் வழிபாடு செய்யுந் தலம். அங்குள்ள தடத்தில் (தீர்த்தத்தில்) முழுகி விஞ்சையரும் விண்ணவரும் இறைவன் திருநாமத்தை நினைத்திருந்த பதி. "தேவியின் திருமுலையிணையோடு குலவலின் நள்ளாறர் தம் திருநாமத்தைக் கூறும் இந்த ஏடு எரியினில் இடில் பழுது படாது" என்று ஞானசம்பந்தர் கூறி அரசன் முன்னிலையிற் பாடிய திருப்பதிகத்தில் ஓதப்பட்ட தலம்.

129. நறையூர் :—பொழில் - அழகியது, மதி தீண்டுவது ; மணம் வீசுவது ; குயில் சேர் மாதவி, குளிர் சேர் சுரபுன்னை, கொன்றை, செருந்தி, புன்னை, செண்பகம் இவை மருவியது. பொழிலில் வண்டு தேன் உண்ணும், பாடல் வண்டு பயிலும், மயில் ஆலும், குயில் கூவும், வேதமும் வேள்வியும் பொலியும் ; மடுவில் கயல்பாயும் ; குளிர்பொய்கையில் அன்னமும் பெடையும் சேரும்; சூழ்ந்துள்ள வயலில் செந்நெல் திகழும் : நதியில் வந்த வாளை பாயும். ஊர் - புனல் சூழ்ந்த ஊர். பாலுண் கன்றுகள் நிறை செல்வமுள்ள ஊர். அழகிய ஊர். செல்வம் நிறைந்த ஊர். தேர் செல் வீதியிற் பொழிலின் மலர் சிந்த வீதி மணம் நாறும். நெருங்கியுள்ள மாடங்கள் மதியைத் தீண்டும். பொன் செய் மாடங்கள் கொடி கொண்டு பொலிவன. தேரோடு வீதியில் முழவொலியுடன் நடைபெறும் திருவிழாவின் ஒலி திசையெலாஞ் செல்லச் சீருங் கோலமும் பொலியும். மதி தீண்டு மாடத்தில் மடவார்கள் நிறைவர். நாடகமாக ஆடிப் பாடுவர்.

இறைவன் விரும்பும் ஊர் திருநறையூர். சுவாமி நறையூரில் சித்தன், நறையூரில் நம்பன் எனப்பட்டுள்ளார். இத் தலம் சீரும், நண்பும், மெய்யும் கொண்டவரும், வீட்

டின்பம் நாடுபவருமாகிய மறையோர் விரும்பி வாழும் ஊர். பரக்குங் கீர்த்தி உடையவர் வாழும் ஊர். தொண்டர்கள் இறைவன் பெருமையைப் பேசும் ஊர். தொண்டர்கள் கூடி மலர் தூவி யேத்தும் ஊர். மறைகொள் கீதம் பாட அறிஞர்கள் மகிழ்வுடன் இருக்கும் மனைகளைக் கொண்ட ஊர். இத்தலத்துக் கோயில் சித்தீச்சரம் எனப்படும். இது நவமணி சேர்ந்த கோயில்; செம்பொற் கோயில்; லட்சுமீ கரம் நிறைந்த கோயில்; தவமலி பத்தர், சித்தர், மறை யோர் பேண மாதர் பாடி மருவுங் கோயில். கோபுரம்— விளங்கு கோபுரம், மதியைத் தீண்டும். திருவிழாவில் மறை நிறை நாவர், பத்தர், சித்தர் பாடி யாடுவர். உய்ய விரும்பின் சித்தீச்சரத்தில் செய்யும் தவமே தவம் ஆம்; நெஞ்சே! சித்தீச்சரத்தையே தெளிவுபெற்று நினைப்பா யாக.

130. நனிபள்ளி:—புனல் அலைக்கும் ஊர். முத்திலங்கு மணற் பரப்பைக் கொண்ட ஊர். சோலை சூழ் நகர். சோலையில் குயில் பாடக் கேட்ட பெடை வண்டு தானும் முரலும் நறுமலரின் இதழைப் புல்லி ஒலிவண்டு உறங்கும். முல்லை, மௌவல், பிண்டி, புன்னை, கொன்றை நெருங்கும். புதுமலர் மணம் வீசும், மந்தி கருங்குரங்குடன் குதிக்கும், வயலில் மேதி (எருமை) வைகும். மடையில் வாளை பாய நீலமலர் வாய் நெரிந்து மலரும். ஆரை சாயத் தேரை மிதிக்கும்; வள்ளைக் கொடி துவள வாளை குதிகொள்ளும்; ஆரல் மீன்களை நாரைகள் வாரி யுண்ணும். புனற்கொல்லை யில் அன்னம் வைகும். இத்தலம் உமை பாகனுக்கு உகந்த நகர். தொண்டர்கள் நாளும் அடி பரவும் ஊர். நறு மண மாலை இறைவனுக்குப் புனைந்து தொண்டு செய்பவருடைய பாடல் பெருகுந் தலம். வீட்டின்பம் விரும்பும் பெரியோர் வழிபடும் செம்மைப் புகழ் மல்குந் தலம். திருநனிபள்ளியை உள்க வினை கெடும். இது சம்பந்தரது ஆணை. இத் தலத்து இந்தப் பதிகத்தை அவர் தமது தந்தையின் தோள்மேலிருந்து பறைமுழக்கம் போல இன்னிசையுடன் உரைத்தருளினர்.

131. நாகேச்சரம்:—(பழங்) காவிரியின் தென் கரையில் உள்ளது. பொழில்-உயர்ந்த நறும் பொழில். தேன் நிறைபொழில். பொழிலில் முல்லை அரும்பும். வயலில் காவிரியின் நன்னீர் பாயும். நடுதல் செய்வர். நாகேச்சரம் இறைவன் நாளும் அமர்கின்ற தலம். நலம் நிறைதலம். பேர்போன திருக்கோயிலைக் கொண்ட தலம். பொய், வினை, குற்றங்கள் இவைதமை நாசமாக்கும் மனத்தார்கள் வந்து வழிபடு தலம். நல்லவர் தொழுந் தலம். மண்ணுளார் நாளும் வந்து தொழுது வழிபட்டு நன்மை பெறு தலம். நலங்கொள் சிந்தையர் நாடோறும் நண்ணுந் தலம். வாயார வழுத்துபவர் வாழுந் தலம். வானோர் தொழுது சீர் நிரம்பப் பெறு தலம். ஞாயிறுந் திங்களும் கூடி வந்து வழிபட்ட தலம்.

நாகேச்சரத்து அழகர் பாதம் தொழுதேத்த அழகாம் - இடர்போம்: நாகேச்சரத் தாயே, அரசே, அறவா, சடையா, சிலம்பா, செல்வா, தலைவா, பகவா, மன்னே என வினை அறும், துயர் நீங்கும், இன்பம் உறும். நாகேச்சரத்தைக் கண்கொண்டு காணவல்லவரே கண்ணுடையார்கள், நாகேச்சரச் செல்வன் கழல் நேசிப்போர் அறநெறிப் பாலர். 'நாகேச்சரத் தீசன் அடிபோற்றி' என்பவருடைய வினை வீடும். நாகேச்சரத்தை வலஞ் செய்யுஞ் சிந்தையுடையவருடைய இடர்மாயும். நாகேச்சரத்தைத் தேன் மலரிட்டு அடிவீழ்வது சத்தியநெறி, நாகேச்சுரம் நண்ணுவார் உம்பர் வானோரால் தொழப்பட்டு அவருடன் சேர்ந்து வாழ்வர் என்பது உண்மை. நாகேச்சரம் நண்ணுவாருடைய நாளுங் கோளுந் தீய ஆயினும் நன்மையாய் முடியும். இதைக் குறிக்கொள்ளுங்கள். நாகேச்சரம் பிரியாத அடியார்கள் வான்பிரியார்கள்.

132. நாகை:—கடற்கரைத் தலம். மலைபோலும் பெரிய கப்பல்கள் கரையில் நிற்கும் ஊர். செல்வம் விளங்கும் ஊர். தலம் காரோணத் தலம். முழவு எப்போதும் முழங்கும் மாடவீதிகளைக் கொண்ட தலம். தேர் விழவு (ரதோற்சவம்) தவறாது நடக்கும் நகர். மங்கை நல்லார்

மகிழ்ந்தேத்தும் பதி. வழிபாடு எப்பொழுதும் விரும்பிச் செய்யும் தொண்டர்கள் கண்டு தொழும் பதி. பழியிலாப் பத்தர்கள், ஞானமொழி வல்லவர்கள், வினையிலா அடியார்கள் பணிந்தேத்தும் பதி.

133. நாரையூர்:—சோலை சூழ்ந்த ஊர். வண்டு யாழ் முரல மலரில் அன்னம் வைகும். மறுகில் வண்டு ஒலிக்கும். இத்தலம் தேம்புனல் நிறை மடுவும், அண்ணலின் கோயிலும் கொண்ட செல்வ நிறை ஊர். புகழும், தேசம் புகழும் செம்மையுங் கொண்ட ஊர். நலமோங்கு பழைய ஊர். தேவர்கள் தொண்டு செய்து இறைவன் திருவருளை விரும்பும் ஊர். பாடவல்ல குணத்தோர் நெருங்கிப் பல பணி செய்யும் ஊர். அடியார்தந் துன்ப வினைத் தொகையை இறைவன் தீர்க்கும் ஊர். திருநாரையூரைக் கைதொழுதால் பாவம், நோய், பிணி, தீங்கு, குற்றம், குறை, பிறப்பிறப்புத் துன்பம், ஐம்புலச் சேட்டை, வசை, அபராதம், இடையூறு, வினை, துக்கமிக்க பகை, இவை நீங்கும். தனம், நன்மை, தவநிலை சாரும். நேசம் வளரும். இறைவன் நாமம் நிலையாகச் சிந்தனையில் நிற்கும். நல்லுணர்வு கூடும். இன்ப துன்பங்களுக்கு இடமாகும் உள்ளத்தின் உண்மை நிலை வெளிப்படும். சிந்தையின் தெளிவு, வாய்மை இவைதமைத் தெளிவிக்காது மறைக்கும்மறைப்பு விலகும்.

நாரையூர்ச் சிவனுருக்கு அடிமைப்படுவார்க்கு ஏதம் இல்லை. நாரையூரைத் தியானிக்க வினைபோம். நாரையூர் நாதனை நாம் குறுகினல் கொடுவினைகள் நம்மிடங் குறுகா. திருநாரையூரைத் தொழுதால் வினைகெடும். திருநாரையூரான் திருநீறணிவாரே விழுமியோர். திருநாரையூரை அடைந்து அமரும் மனத்தார்க்குப் புகல் கிடைக்கும். திருநாரையூர் இறைவர் தீவினை தீர்ப்பார். திருநாரையூர் நாதர் அடியையே பரவி அடைவோம், பணிவோம். அவர் கழலைப் பரவ எழுவோம். எழுமின்கள்! திருநாரையூர் போய்ச் சேருவோம். அறிவுடையீர்! திருநாரையூரையே

தெளிந்தடைமின். நாரையூரான் அடியார் அடியே பொருத்தமாம். கூற்றம் அஞ்ச நறுமலர் தூவி வழிபடுமின். பழி போகும் வண்ணம் திருநாரையூரானைப் பாடுமின். நாரையூர் நாதரையும் அவர் அடியார்களையும் எண்ணுமின்; நும்வினை போகும் வண்ணம் இறைஞ்சுமின். முற்றுணர்ச்சி கூடும். நாரையூரில் வாசங் கொள்ளுங்கள். நடலை, கரிசு அறும்.

134. நாலூர் மயானம்:—தேன் நிறைந்த பொழில் சூழ்ந்த ஊர். சங்கொலி ஓவாத ஊர். சிறப்புக்கள் நீங்காத ஊர். ஞாலத்தார் சென்றேத்தும் ஊர். நண்பு நிறை குணத்தோர்கள் வாழும் ஊர். நல்லோர் தொழுதேத்தும் ஊர். நாலுமறைகளும் ஓதும் ஊர். நால் வேதம் ஆறங்கம் பொலியும் ஊர்.

அன்புடன் "சிவாய" எனச் சொல்லி நாலூர் மயானத்தே இன்புடன் வீற்றிருக்கும் இறைவனை ஏத்துவார்க்கு (என்றும்) இன்பமே. நாலூர் மயானத்திற் சூலத்தான் என்பாரைப் பழவினை சூழாது. நாலூர் மயானத்து நம்பன் அடியை நினைந்து அன்புகொள்ளும் சிந்தையருக்கு மறுபிறப்பு வாராது. நாலூர் மயானத்து எம் இறையான் என ஏத்துவாருக்கு இன்பம் எய்தும். நாலூர் மயானத்து இறைவர் பாதம் பணிவோம். அவரை அடி நினைவாரை அல்லல் அடையாது. நாலூர் மயானத்தைச் சிந்திப்போரிடம் இடர் விலகும். அத்தலத்தைச் சொல்லாதவரெல்லாம் தொன்னெறி செல்லாதவரே. அத்தலத்தை நண்ணாதவரெல்லாம் நன்னெறியை நண்ணாதார். அத்தலத்தைப் பாடுஞ் சிறப்பினரைப் பாவம் பற்றாது.

135. நின்றியூர்:—இத்தலத்துப் பொழிலானது அழகிய பொழில், நெருங்கு பொழில், நிழல்மிகு பொழில், மதி தீண்டு பொழில். பொழிலில் குழலின்னிசை, வண்டின்னிசை கேட்டுக் குயில் கூவும். பொய்கையில் மணம் வீசு நீலம் மலரும். வயலானது நீர் நிறை வயல். நெற் பொழில் விளங்கும். கொன்றை விசேடம். நின்றியூரில் இறைவர்

நிலையாய் உறைறவர். அவரை வாழ்த்தும் அதுவே வாழ்த்து. நின்றியூர் இறைவர் பாதம் பணிவோர் அச்சமிலர், பாவம் இலர், கேடிலர், நோயிலர்.

136. நெடுங்களம்:—அடியார் இடர்களையாய் என இறைவனை வேண்டிய பதிகம் இவ்வூர்ப் பதிகம்.

137. நெய்த்தானம்:—காவிரியின் வடகரையில் உள்ள தலம். ஈசனைத் தான் பரவிப் பணிவது போலக் காவிரி யாறு கரையில் மணலிடும் ஊர். வயலும் பொழிலும் நிறைகின்ற ஊர். நல்ல நீள் வயல்கள் உள்ள ஊர். நெடு வாளைகள் குதிகொள்ளும் புனல் பாய் வயல்களுள்ள ஊர். இங்கு மாதர்கள் அணியுடன் விளங்குவர். சுவாமி நெய் யாடிய பெருமான். நெய்த்தானத்துப் பெருமானது கழலை விடலின்றித் தொழுபவர் துயரிலர். அப்பெருமானது அடியேத்தினல் நம்மைத் துன்பங்கள் தொடரா. அப் பெருமானை அடையாதவர் அமருலகம் அடையார். உரிய வேளையில் நீரும் மலரும் தூவித் தொழுதேத்தும் அடி யாரையும், நெய்த்தானத்தை ஏத்தும் சித்தத்தை உடைய அடியாரையும் நோய் நலியாது. நெய்த்தானம் என்று சொல்லுங்கள்; பழி பாவம் போம், துயர் தீரும். நெய்த் தானத்து அமரும் ஈசன் கழலை ஏத்துதலே நமக்குக் கதி.

138. நெல்லிக்கா:—இது தேவருலகுக்கு நிகரான தலம். இங்கு அமர்ந்துள்ள ஈசன் அடியார்க்கு அருள் பயக்கும் நிழல்.

139. நெல்வாயில் (சிவபுரி) :—மடையும் நீரும் விளங் கும் ஊர். விண் விளங்கும் ஊர். ஊரார் தொழ இறை வன் விருப்புடன் அமரும் ஊர். சுவாமி பெயர் உச்சி நாதேசுரர்.

140. நெல்வாயில் அரத்துறை:—நிவாநதியின் கரையில் உள்ள ஊர். புனல் பரந்த ஊர். மணம் வீசும் குரவஞ் சோலை சூழ்ந்த ஊர். நதிக்கரையில் அன்னம் மல்கும். சுவாமி அரத்துறையடிகள். இத்தலத்துப் பதிகத்தில்

அரத்துறையடிகளது அருள் யாருக்குக் கைகூடும் என்பது விளக்கப்பட்டுள்ளது.

141. நெல்வெண்ணெய்:—புவியில் புகழ் நீடிய ஊர். பொழில் - நீடிளம் பொழில், நெருங்கிய பொழில். இத்தலம் நீர் மல்கும் தலம். பெரியாரும் அடியாரும் நித்தமும் தொழும் தலம். நெல்வெண்ணெய் நாதரே! உமைக் காண்பவர் அச்சமும் வினையும் இலராவர்; உமது திருவடிக்கீழ் இருக்கப் பெறுவர். பாக்கியவாளரே உமைச் சார்வார். உம்மை நாடோறும் சொல்லலங்காரம் செய்வதே சொல். உம்மை விரும்புதல் கற்றறிவோர்கள் தம் கடன். உம்மைப் பூசித்துப் புகழ் கூறுவோர் உயர்ந்தோர். உம்மை யன்பு செய்து இருக்கவல்லவர் இடரிலர். உம்மை யன்பொடு பாடும் உள்ளம் உடையவரே பண்பினர். உம்மை அன்புடன் பரவ வல்லவர் பழியிலர். உம்மைத் தியானித்தல் பாரில் புகழ் மிக்கவரின் பண்பாகும்.

142. திருநெல்வேலி:—இங்குப் பொழில் - செடிகள் நிறைந்த பொழில்; நெருங்கிய பொழில். பொழிலில் நுழைந்து தாழையில் அளைந்து தென்றல் வந்து உலவும். வண்டுகள் தேனில் அமரும்; பண் முரலும். மணந்தரு பொழிலில் மந்திகள் பாய்வதால் விழுகின்ற தேனின் திவலைகள் சிந்துவதால் பூந்துறை கமழும். கொன்றை பொன் சொரியச் செருந்தி செம்பொன் மலரும். நெருங்கிய மாடங்கள் மாளிகைமீதுள்ள கொடி மதியைத் தீண்டி அசையும். கொடிமல்கு மாளிகைகளின் சூளிகையில் மயில்கள் ஆலும்; மதி தவழும். மலர் மிசைப் பிரமனை நிகர்க்கும் திருந்திய கல்வியாளராகிய மறையவர் வாழும் ஊர் - திருநெல்வேலி; அது திக்கெலாம் புகழ் பெற்ற ஊர். திங்கள் நாள் விழவில் அரிவையர் ஆடலும் மறையவர் கூட்டமும் திகழும். சிந்துபூந்துறை என்னும் தீர்த்தத் துறை சொல்லப்பட்டுள்ளது. சுவாமி திருநெல்வேலிச் செல்வர் என்பதும், தேவி வடிவுடை மங்கை என்பதும் சொல்லப்பட்டுள.

143. பட்டீச்சரம் :—இங்கே, பொழில் எழிலும் நிழலும் கொண்டது; இருள் நிறைந்தது. மடையின் கயல் வயலிற் பாயும். பருவ மழையால் ஊர் பண்பெறும். கொடி வீதிகள் அழகுடன் விளங்கும். மண்ணில் தனக்கு நிகரில்லாது மாடங்களுடன் விளங்கும் மழபாடி நகரில் பழையாறை யதனுள் உள்ளது பட்டீச்சரம். அதன் வீதி யெலாம் மணம் கமழும். பட்டீச்சரம்-காலையில் மடவார்கள் புனலாடும் ஒலி பெறும் ஊர். பிறவி, பிணி, மூப்பு இவை களை நீக்கி இமையோருலகை விரும்புபவர்களும், துறந்த உள்ளத்தை உடையவர்களும் வாழும் ஊர். முழ வதிர விழவு நடைபெறும் ஊர். இறைவர் காதலித்து உறையும் சீர் மிகும் ஊர். அவர் உமையுடன் உறையுந் தலம். அவர் நட்டமிட்ட தலம். தேவி பல்வளை நாயகி. பட்டீச்சரத்தை ஏத்த வினையும் பற்றும் ஒழியும். இத்தலத்தை ஏத்துவோர் வினையிலராய் இறைவனை நறும் புகையாலும் ஏத்தொலி யாலும் வழிபாடு மறவாது செய்வர்; இவர் விண்ணுலகம் நண்ணல் எளிது, விருத்தியுற்று விண்ணுலகம் ஆள்வர். இத்தலத்து உறைவோர்க்கு விண்மிசை இமையோருடன் மேவுதல் எளிது. பட்டீச்சரப் பெருமானது திருவடிய்யை ஏத்த மேலுலகம் எளிதிற் கிடைக்கும். தீயன விலகும். அப்பெருமானது கழலைத் தொழும் உள்ளம் உடையாரை வினை சாராது. அப்பெருமானது வேடத்தைப் பூண்ட வருக்கு வீட்டு நெறி புலப்பட்டு வினை வீடும்.

144. பந்தணை நல்லூர்:—இது சுவாமி பசுபதியார் காதலித் துறைதரு கோயில். அவர் (அமர்நீதி நாயனர் பொருட்டுக்) கோவணங் கொண்டு நடித்த வஞ்சகர்.

145. பரங்குன்று:—கோங்கம், மாதவி, மல்லிகை வளரும் பொழிற் சாரலில் வண்டு ஒலிக்கும். மயில் பெடையைப் புல்கி மாநடம் ஆடுஞ் சோலையில் பெடை வண்டின் பாடல் ஒலி சதா ஒலிக்கும். இறைவன் இனி தமருந் தலம் பரங்குன்று. பரங்குன்றைத் தியானிக்குஞ் சிந்தை யுடையார்க்கு நோய் இல்லை. பரங்குன்றைச் சித் தத்திருத்தி இறைவன் திருவடியைத் தியானித்துச்

'சிவன்' என்று நித்தலும் ஏத்தினுல் நம் பழவினை நில்லாது. பரங்குன்றைத் தொண்டுபட்டு ஏத்தப் பழவினை நில்லாது.

146. பராய்த்துறை—மாதவி சூழ்ந்த தலம். பறையுஞ் சங்கும் ஒலிக்கும் தலம். நிறை செல்வர்கள் வாழுந் தலம். பராய்த்துறை நாதரை வாழ்த்துங்கள். அவர் வினையை ஒழித்தார்.

147. பரிதி நியமம் :—வண்டு பண் பாடி யாடி யாழ் முரலும் பதி. முல்லை மலருங் கொல்லையை உடைய ஊர். பறையொலி, சங்கொலி முழங்கும் ஊர், தாமரைப் பொய்கையை உடைய ஊர். பைவிரி அரவம் போலக் காந்தள் நிரம்ப மலரும் ஊர். இறைவனுக்கு உகந்த தலம். பாடியாடிப் பக்தர்கள் பணியுந் தலம். பாரில் தொல்புகழொடு விளங்கும் தலம். பரவ வல்லார்தம் வினையைப் பாழ்படுக்குந் தலம்.

148. பருப்பதம் :—மலையமர் தலம். நெடுஞ் சிகரங்களையும் சுடர்வீசு மணியையுங் கொண்ட மலை. அருவி பறை யொலிப்பதுபோல முழங்கிப் பனையின் திரள் போலப் பாயும் மலை. கருங் குரங்கு மரங்களி லேறி மூங்கிலிற் பாயும் மலை. கிளி பயிலும் வண்டின் ஒலி நீங்காத மலை. வானவர்கள் பல தீர்த்தங்களில் மூழ்கி மலர் சுமந்து மறையோதித் துதிக்குந் தலம். பண்ணமை பாடல் பலவற்றின் இசை முரலுந் தலம், பாரில் புகழ் என்றும் நீங்காத தலம். சீர்பெறு தவநெறி வேண்டினும், துயர் தீர வேண்டினும், இனியன வேண்டினும், நெஞ்சே! ஒருமையுடன் பருப்பதம் என்னுந் தலத்தைப் பரவுவோம். நோய், அவலம் விலக வேண்டினும் பருப்பதத்தைப் பரவுவோம். நோய் புல்கு உடம்பின் தோற்றங்களை ஆய்ந்து, நெஞ்சே! வாய்புல்கு தோத்திரத்தால் வலஞ்செய்து தலை வணங்கிப் பருப்பதத்தை நாம் பரவுவோம்.

149. பழனம் :—மாம்பழங்களையும் பலாப்பழங்களையுங் காவிரிநதி திரையில் உந்தி வரும். சோலையில் உள்ள

கமுகம் பழமானது நீர் நிலைகளிலும், தெங்கின் குலைமீதும், வாழையின்மீதும் விழும். வண்டு பண் பாடும், நிரம்ப மதுவுண்டு தாமரை மலர்மீதிருந்து பண்பொருந்த யாழ் வாசிக்கும். மணங் கமழும் தாமரைக் கழனிகள் சூழ்ந்து விளங்கும். மயிலும் குயிலும் பயிலும். திருப் பழனம் பறையுஞ் சங்கும் பலியும் நீங்காத நகர். சங்கொலியும் திருவிழா ஒலியும் எப்பொழுதும் முழங்கும் நகர். இங்கு அடியார் மலர்கொண்டு பரவி ஆடல் பாடல் செய்வர். பொய்யா மொழியார் ஏத்திப் புகழ்வர். நாதா, நக்கா, நம்பா எனக் கூறிப் பாதந் தொழுவாருடைய பாவத்தைத் தீர்ப்பார் பழன நகர் நாதர்.

150. பழுவூர் :—இருண்ட பொழிலின் நறுமணம் வீசும். தெங்கில் இளநீர் பொலியும் கமுகில் பட்டையொடு தாறு விரியும். குரங்குக் கூட்டங்கள் பொழிலில் பழம் உண்டு பரந்த நீர் வயலருகே விளையாடும். மாடங்களின் சூளிகையில் (மேல் தளத்தில்) ஏறி மாதர்கள் பாடல் ஒலி எழுப்புவர். மாதர்கள் பால்போல மிழற்றி நடமாடுவர். அந்தணர்கள் ஆகுதியில் இட்ட அகிற் புகையில் மாதர் சுவடு ஒற்றும். இத்தலம் மலையாள அந்தணர்கள் ஏத்தும் பந்தம் உடைய ஊர். மலையாளர் ஆடித் தொழுதேத்திப் பண்ணொலியுடன் பயிலும் ஊர். கடவுளை ஆய்ந்து நால் வேதங்களையும் ஆறங்கங்களையும் கற்ற பெரியோர்கள் சபைகளில் உடனிருந்து மகிழ்ந்த ஊர். இறைவன் புகழை மடந்தையர்கள் பூவைக்குச் சொல்லிக் கொடுத்துத் தாம் கற்பொடு பொலியும் ஊர். பத்தரும் சித்தரும் பயில்கின்ற ஊர். மறையாளர் வேதமொழி சொல்லி இறைவனது பாதங்களை ஏத்தும் ஊர்,

151. பறியலூர் :—அன்னந் திளைக்கும் நீர்நிலையையும், திரை நிறை புனலையும், மணம் வீசி விரிந்து விளங்கும் மலர்ச் சோலையையும், விளையும் வயலையும், கொடிசூழ் தெருவையுங் கொண்டு விளங்கும் ஊர். தலம் வீரட்டத் தலம். சுவாமி வீரட்டத்தார் தமது தேவி இளங்கொம்ப

ளோடிணைந்து விளங்குந் தலம். சிறப்பாடுள்ளார், திருத்த முடையார், உணர்ந்து தெளிந்து திருந்திய மறையோர் வாழுந் தலம். பயபக்தி உடையோர் தொழும் தலம்.

152. பனந்தாள் :—தண் பொழிலும், தடம் புனலும், தண் வயலுஞ் சூழ்ந்த தலம். போது அவிழ் பொய்கையில் புள் இரியும். பொழிலிடத்தே மலர்த்தாது அவிழும் சுவாமி சடையப்பேசுரர்; செஞ்சடையப்பர், கோயில் தாடகை யீச்சரம் எனப்படும். சூழும் வல்வினையும் உடல் தோன்றிய பல பிணியும் பாழ்பட வேண்டில் பனந்தாள் திருத்தாடகையீச்சரத்தை மிக ஏத்துங்கள்.

153. பனையூர் :—கண் கவர் சோலையில் வண்டு பண்ணொலி செய்யும் ஊர். அடியார் தொழ, மன்னவர் ஏத்த உலகோர் பணியும் தலம். சிலர் அங்கேயே தங்கி என்றும் ஏத்தப் பலர் பரவிச் செல்லும் ஊர். குளிர்ந்த மலர்கொண்டு இருபோதும் பணிபவர் நெருங்கும் ஊர். பல தொண்டர்களும் கூடி நாளும் பரவிப் பயிலும் ஊர். பழியிலார் சேரும் ஊர். மிகு சீர் சிறப்புடன் திருவிழாக்கள் பறையொலி முழங்க நடைபெறும் ஊர். வரம்பெற வேண்டுவீர் ! பனையூரைத் தலை தாழ்த்தி வணங்குமின்.

154. பாச்சிலாச்சிராமம் :—அலை புனலும் பூம்பொழிலுஞ் சூழ்ந்த தலம் பொழிலில் ஆலமரம் மதியைத் தோயும் ஊர். மடங்களும் மேகந் தோய் மாளிகைகளும் விளங்குந் தலம். உள்ளன்போடு தொண்டர் வணங்கும் தலம். யாவரும் பரவும் அழகிய தலம். தேவி - இளமங்கை ‘சேயிழையிவள் வாட்டங் கொள்ளும்படி இவளுக்கு இடர்செய்வதோ மாண்பு” என ஈசனை வேண்டிப் பாடிக் கொல்லி மழவனுடைய மகளின் நோயைச் சம்பந்தப் பெருமான் தீர்த்தருளிய தலம்.

155. பாசூர் :—தேனும் வண்டும் இன்னிசை பாடும் சோலையிற் குயில் பாடும், குரவம்பாவை நெருங்கி மலரும், முல்லை பல்போல அரும்பும், கோடல் பைந்நாகம்போல அரும்பும்: மாதவி பயிலும் ஊரைச் சூழ்ந்து தடமும்

வயலும் உள்ளன. அங்கு நாரை ஆரல் மீனை வாரிக்கவரும். மாடங்கள் மதியைத் தோயும். பாரின் மிசையாரும், பண்ணின் மொழியாரும் பாடும் பாடல் நீங்காத தலம் இது. தேவி தங்காதலியம்மை.

156. பாண்டிக் கொடுமுடி:—காவிரிக்கரையில் (அருகில்) உள்ள தலம். சித்தரும் தேவரும் பக்தர்களும் செழுமலர் கொண்டு பணிந்தேத்தும் ஊர். தேவி (தேன்) மொழி நாயகி.

157. பாதாளீச்சரம் :—மலர் நிறைபொழில் சூழ்ந்த ஊர். கயல் உகளும் நீர்நிலையும், தாமரை மலரும் வயலும் சூழ்ந்த ஊர். வண்டினங்கள் மதுவுண்டு இசை முரலும் ஊர். இறைவன் உறையும் ஊர்.

158. பாதிரிப் புலியூர் :—கானலில் வண்டுகள் ஒலிக்கும் ஊர். புள்ளினங்கள் பயிலும் ஊர். பூக்கமழ் புனல் உள்ள ஊர். பொழிலில் அன்னம் தாவும்; புன்னைகமழும்; பொன்னந்தாது சொரியும். நிலவொளிபோல மணற் கானலிலே முத்தம் திகழும். நல்லார் அமுதாக்க இறைவன் உண்ட தலம். சங்கொலி, பறையொலி சார்ந்தெழும் ஊர். நல்லாரும், போகநல்லாரும், பொருளுடைய நல்லாரும் பயிலும் ஊர். போதாலும் புகையாலும் அடியார் போதறிந்து வழிபாடு செய்யும் ஊர். முடக்கால் முயலுக்கு இறைவன் அருளிய ஊர்.* பாதிரிப் புலியூரை ஏத்துமின்; பாதிரிப் புலியூர் அரனை அடைமின்; பாதிரிப் புலியூரைத் தியானிக்க வினை நைந்து ஒழியும்; பாதிரிப் புலியூர் அரனை வணங்கும் தவமிலிகள் பிணியாக்கையைப் பெறுவார்கள்.

159. பாம்புரம் :—அரிசிலாற்றங் கரையில் உள்ள தலம். கரையிலுள்ள கொல்லைகளில் அரிசிலாறு பருமணிகளைச் சிதறும் ஊர். நன்னகர் எனப் பாராட்டப் பட்டுளது. பாரிற் பிரசித்தி பெற்ற ஊர். பருமதில்

(*இதன் வரலாறு பாதிரிப்புலியூர்ப் புராணத்திலும் சிவஸ்தல மஞ்சரியிலுங் காணலாம்.)

சூழ்ந்த ஊர். மேகந்தோய் சோலையில் மயில் ஆடும். மடவார்கள் அரிசிலின் புனல் ஆடுவர்; மாடமாளிகையின் மேலேறிப் பயில்வர். இத்தலம் நான்மறையாளர் வாழுந் தலம். அமரர், முநிகணத்தவர் தன்னைப் பணியவும், விதி வழுவா வேதியரும் வேள்வியாளரும் ஓதும் ஓத்தொலி நீங்காது பொலியவும் இறைவன் தேவியொடும் அமரும் பதி. தேவி - வண்டுசேர் குழலி. முன்பு நாம் செய்த பாவங்களைப் பாம்புரநகர் நாதர் தீர்ப்பார்.

160. பாற்றுறை:—வண்டுகள் பண்ணும் பாடலும் செய்யும் ஊர். பானல் (கருங்குவளை) நிரம்ப மலரும் ஊர். பைந்தண் மாதவி சூழ்தரும் ஊர். பக்தர்கள் மன்னும் ஊர். இறைவன் பாதத்தைத் தொண்டர்கள் பரவும் ஊர். பாரார் நாளும் பரவும் ஊர். பாபத்தைத் தீர்க்கும் தீர்த்தங்கள் மல்கிய ஊர். இறைவன்—ஆதி முதல்வர் (மூலநாதேசுரர்). அவர் நாளும் பாற்றுறையில் உறைவர். [பாற்றுறை மேவிய ‘பத்து நூறு பெயரன்’ எனப் பதிகத்தில் வருதலால் இத்தலத்தில் சஹஸ்ரநாம அருச்சனை செய்வது உசிதம்.]

161. புகலூர்:—‘பூம் பொய்கை சூழ்ந்த தலம், சூழும் பொழிலருகே புயல் படியும். மலர்ப்பொழில் செழிப்புற்றுத் தேன் நிரம்பும், தேன் மணங் கமழும். (மலர்த்தேன் விரும்பும்) வண்டு சோலையில் இசைபாடும். காஞ்சி (மரம்) பொன்னிறமலர் மலியும். அழகிய நடை வாய்ந்த அன்னம் பெடையைப் புல்கி ஆலும். புட்கள் நிறை வயலின் விளைவால் வளம் மல்கியதாகும். மடையில் நெய்தல், கருங்குவளை, செந்தாமரை மலரும்; அதன் அருகில் செந்நெல் விளையுங் கழனிகள் மல்கும். குழல் இளையர் (மாதர்கள்) நீர்நிலையில் ஆட அங்குள்ள கயல்கள் பாய்ந்தோடும். பொன்னிலங்கு மாளிகைமேல் மதிதோயும். நிறைந்த செம்மையினால் உயர்வெய்தும் ஊர் புகலூர். அது பூமியெல்லாம் புகழும் செல்வ மல்கும் ஊர். இறைவன் திருவருளை விரும்பிப் பொய்யிலா மனத்தராம் பெரியோர் பிரி

யாது பொருந்தும் தலம். அறிவின் மிக்க பெரியோர் ஏத்தும் பதி. திருவிழா வோசையும், விரும்பிவந்த அடியார் நெருக்கமும், கடலும் அயர்வெய்தும் படியாக முழங்கும் முழவோசையும் கொண்டுள்ள தலம். மலரும் புனலும் கொண்டு பக்தர்கள் பூசித்துத் துதித்துத் தவ நிலையில் நின்று உயர்வானுலகை எய்தற்கிடமாம் திருப்பதி. அடியவர் தொண்டு செய்தொழில் மிக்க பதி. பூவும் நீரும் பலியும் சுமந்து அடியார்கள் புகலூரை நாவினுற் புகழ்ந்தேத்துவார்கள். இறைவர் புகலூரிற் பொருளாய் அமைந்துள்ளார்.

நெஞ்சே! நீ உய்ய விரும்பினல், புகலூருக்குப் போதற்கு எழு! புகலூர் அரனுர் பாதத்தைத் தியானிப்பவர் குலத்தவராயினும், குலமிலராயினும் உலகில் நல்ல கதி பெறுவர். "சாமி தாதை சரண்" என்று கூறித் தலை வணங்குமின். புகலூர்ப் பெருமானுர் திருவடியை நாளும் பரவ இடர்கழியும். அவர் பாதத்தைத் தொழுது உய்யுங்கள். அவரை அடைய வல்லவர் அமருலகம் ஆளப் பெறுவார். புகலூரைப் புகழ்ந்தால் பொருள் கைகூடும். புகலூரையே தியானிக்கும் உள்ளம் உடையவர்களே! உங்கள் துயர் தீரும்.

162. புகலூர் வர்த்தமானீச்சரம்:—மலர்ப்பொழிலில் மேகமும் மதியும் தவழும். தளிர்க்கொடி வளரும், புள் தன் பேடையோடாடும். மதுவுண்ட வண்டு பண் செய்யும், சுனைகளில் (மலர்) மலரும்: கழனியில் கயல் நிறையும், கருங்குவளைகள் மலரும். வயலில் வாளையுங் கயலும் குதி கொள்ளும்.

புகலூர்—புனல் சூழ்ந்த ஊர். பொலிவு கொண்ட ஊர். அஞ்ஞானம் நீங்கத் தமிழ்மொழி, வடமொழி, திசை மொழி கொண்டு நரப்புக் கருவிகளை வாசித்து (அடியார்கள்) தொழுதெழும் பழைய ஊர். தொண்டர்கள் போற்றி வலஞ்செய்து அடிபரவும் ஊர். முருக (நாயனர்) கயத்தில் முழுகி மாலை, சாந்தம், புகை இவைகொண்டு முப்போதும் பூசித்து இறைவனுக்கு அலங்காரம் செய்யும் ஊர்.

163. புத்தூர் :—திருப்புத்தூர் திசையெல்லாம் புகழ் பெற்ற அழகிய ஊர். தேன் நிறை பொழிற் சோலையில் மதிதோயும், தேனும் வண்டும் திளைக்கும். மலர்த்தேன் பருகி வண்டு திளைக்கும். தேன்கொள் கொன்றையில் வண்டு இசைபாடி திளைக்கும். மலர் உந்தப்படும் புனல் பாயும். நெய்தல், ஆம்பல், கழுநீர் எங்கும் மலர்ந்த வயல் மல்கும். சோலையிற் செம்மையாகத் திருவிழா நடக்கும். எங்கும் வளரும் மயில்கள் தெருவு தோறும் உலவும். திருப்புத் தூரிற் சேடர் செல்வர் உறைவர். திருப்புத்தூர் ஓங்கு கோயிலில் பெருமான் பெருகி வாழ்வர். திருப்புத்தூரைச் (சிந்தித்துத்) தெளிமின்.

164. புள்ளமங்கை :—காவிரிக்கரை ஊர் : பொழில் சூழ்ந்த ஊர். பொழிலில் வண்டு அறையும். பொந்துகளில் தேன் ஊறும், பொந்திடையில் ஆந்தை பலபாடும். இங்குள்ள திருக்கோயில் 'ஆலந்துறை' எனப்பட்டுள்ளது. இத்தலம் அடியார் தொழுதேத்தும் ஊர். பிரமன் அனைய திறலவர் வாழும் ஊர். கலைமலிந்த மறையோர் கருதித் தொழுதேத்தும் ஊர். வேதம் பயின்றேத்திப் புலன்களை வென்ற புகழாளர் வாழும் ஊர். ஆலந்துறையீசர் கழலைத் துதிசெய்து தொழுமின். அவர் கோயில் ஆலந்துறையைத் தொழுமின் ; வானோர் தொழு தன்மையைப் பெறலாம். ஆலந்துறை தொழுவார்தமை வினைகள் அடையா.

165. புள்ளிருக்கு வேளூர் :—ஆகாயத் தேரிற் சென்ற இராவணனை ஸ்ரீராமர் பொருட்டுத் தடுத்து, அவனை அமரிற் புண்படப் புடைத்துப் பொருது ஈடழித் துப் புறங்கண்டு பொய் சொல்லாது உயிர் போனவனும், ஆதித்தன் (சூரியன்) மகன் என்று சொல்லப்படுபவனும், பத்தியினாற் புத்தி யொன்றப் பலகாலந் தவஞ்செய்து இறைவனுக்கு அடிமை பூண்டு வழிபட்டவனும், நாள் தவறாது யோசனை தூரம்போய்ப் பூக்கொணர்ந்து பூசனை செய்தவனும், வேத மந்திரத்தால் வெண் மணலை சிவமாகப் பாவித்து அறிவுடன் வழிபட்டவனுமான சடாயுவின் ஊர் புள்ளிருக்கு வேளூர். இது சடாயுவுடன்

சம்பாதியும் வழிபட்ட தலம். இறைவன் அவர் இருவரையும் ஆண்டருளிய தலம். பாபங்களுக்கு இடமான உடல் நோயைத் தீர்ப்பவரும், தீவினைக்கு ஒரு மருந்தானவரும், திறங்கொண்ட அடியார் மேல் தீவினை நோய் வாராது காப்பவருமான ஸ்ரீவயித்தியநாதப் பெருமான் அமருந் தலம்.

166. புறம்பயம் :—வண்டு (மலர்) அவிழ்க்குந் தலம். அடியார் வழிபாடு ஒழியாத தலம். (சனகாதி) நால்வருக்கு அறத்தின் பயனை இறைவன் உரைத்தருளிய தலம். தேவி: கரும்பன்ன சொல்லம்மை.

167. புறவார் பனங்காட்டூர் :—நீடிய தேனார் பொழில் சூழ்ந்த ஊர். மாதவி, புன்னை, அசோகம், தாமரை, மல்லிகை, ஞாழல் சூழ்ந்த ஊர். காந்தள் மலரும் ஊர். அன்னம் மல்கும் மலர்ப் பொய்கையில் வண்டு ஒலிக்கும். கோடல் அலர, முல்லை, நீர்மலர்கள் தாது அவிழப் பாடல் வண்டு ஒலிக்கும். வண்டினம் தேன் உண்டு நீல மலரைக் கௌவி நேரிசைப் பண்ணில் யாழ் முரலும். வாளையுங் கயலும் விளங்கும் பொய்கையின் கரையெலாம் வயலும், கமுகும் நிறைந்து பொலியும். கயலும் சேலும் செருச் செய்யும். மேதி (எருமை) மேய்ந்து இளஞ் செந்நெற் கதிரைக் கௌவிக் காலையில் வயலிற் பாயும்.

இத்தலம் பாரினார் நித்தம் பிரியாத தலம். பண்ணொலி விரியும் ஊர். சம்பந்தப் பெருமான் (அடியார்க்கு) "அருளாயே" எனப் பாடல் தோறும் வேண்டிய பதிகம் இவ்வூர்ப் பதிகம்.

168. புன்கூர் :—இத்தலத்தில் மணியும் முத்தமும் திரையில் உலாவும். வயல் சூழும். வயலிற் கழுநீரும் செந்நெலும் பொலியும். தாமரை மலர்கின்ற வயலிற் கயல்மீன் திளைக்கும். வண்டுபாட மலர் விரியும். சேடர் செல்வர் உறைவர். சுவாமி திருப்புன்கூர் அழகர் எனப்பட்டுள்ளார். இங்கு தேரோடும் வீதியில் திருவிழா நடைபெறும். இது தேவரெல்லாம் வணங்குந் தலம். பாரும் விண்ணும் பரவித்

தொழும் தலம். திருப்புன்கூரைக் கண்டு கபாலி வேடத்தைத் தொழுங்கள். நெஞ்சே! முந்தி நின்ற வினைகள் போகச் சிவனார் திருப்புன்கூரைச் சிந்திப்பாயாக.

169. புனவாயில் ;—கடல் திரை எறியும். கண்டலும் ஞாழலும் கானல்வாய் வளரும். தண்பொழில் மல்கும். புன்னை பொன் உதிர்க்கும் கொன்றையொடு கலந்த தென்றல் வீசும். இத்தலம் தாமரைப் பொய்கை சூழ்ந்த ஊர். பழம்புகழ் பெற்றுப் பாடலாடலொடு அழகு விளங்கும் ஊர். பல ஊர்கள் போய்த் தேவியொடு சிவபிரான் சீருஞ் செல்வமும் பெருக வந்து அமர்ந்திருக்கும் ஊர். புனவாயிற் பெருமானரது கழலை ஏத்துவோர்களுக்கு இடர் இல்லை. புனவாயிற் பெருமானை நாடோறும் ஏத்துவோருடைய மேல்வினை அழிந்துபோம்.

170. பூவணம் :—புன்னை, ஞாழல், பொறியரவு பொழிலிற் காணலாகும். வண்டு பாடும். குருந்து, மாதவி, கோங்கு, மல்லிகை வளரும். தாமரை அரும்பும். மலை போலோங்கும் குளிர் பொழிலிற் கலந்துவரு தென்றல் முன்றிலில் வீசும். திருப்பூவணம் செடி நிறைந்த வைகை யாற் சூழப்பெற்ற ஊர். மாடமும் மதிலும் ஓங்கும் ஊர். தேரோடு வீதியில் மாடங்கள் நீடும் ஊர். மலைபோலும் மாளிகைகளுக்கு அயலே கல்மதில் சூழும் ஊர். நெல் ஆலைகள் மல்கி மன்னர்களாற் புரக்கப்பட்ட செல்வ மலிந்த பெரியோர்கள் வாழுந் தலம். ஆராத அன்புடன் பாண்டியர் சேரர், சோழர்கள் போற்றிசைக்குந் தலம். பாடல் ஆடல் ஓங்குந் தலம். மாதரும் மைந்தரும் நெருங்கிப் பாடும் பாடல் (ஒலி) நீங்காத தலம். புண்ணியர் தொழுந் தலம். மண்ணுலகத்தவர் கூடிப் பல் புகழாற் பரவுந் தலம். பிரமன் வழிபட்ட தலம்.

பூவணங் கண்டவர்தம் அடியைத் தொழுதேத்துவது (நமது) கன்மமாம், கடமைத் தொழில். பூவணத்தீசனை அடிதொழ நன்மையாகும்; பீடை தொலையும்; அல்லல்

இல்லை, பாபம் இல்லை. பூவணத்தை அழகிய மலர் புனைந் தேத்தல் இன்பம். துயர், பிணி, வினைதீர விரும்புவோர் பூவணத்தைத் தொழுதெழுவர்.

171. பெண்ணுகடம் :—அகழியும் மதிலுஞ் சூழ்ந்த தலம். விண்தோயும் சோலையையும், நீர்த்துறையையும், மேகந்தோயுங் கொடியையும் கொண்ட தலம். திருநாமங் களைக் கூறி நாளும் ஓய்தலின்றி (அடியார்) பரவுந்தலம். திருக்கோயில் "பெண்ணுகடத்துப் பெருங்கோயில்" எனவும், 'தூங்கானை மாடம்" எனவும் சொல்லப்பட்டுள்ள தலம். இறைவன் காதலியுந் தானுமாகப் பொருந்திப் பிரியாது மகிழ்ந்து வாழுந் தலம். துயர் தீர்க்குந் தலம், குற்றந் தீர்க்குந் தலம்; தூய்மை, சீர், சிறப்பு, பழைமை வாய்ந்த தலம். மனைகள் தோறும் மறையொலி தொடங் குந் தலம்.

திரை தோலொடு நரை தோன்றுமுன் தூங்கானை மாடந் தொழுமின்கள். தோற்றம், மரணம், நோய், பிணி, இழிப்பு, பழிப்பு, சலிப்பு, துயரம் இவைகளுக்கிடமாய வாழ்க்கை யொழிய வேண்டில், பேரின்பத்தொடு மேலுல கம் வேண்டில், வேறொன்றும் வேண்டாம், விமலனுக் கிடமாம் தூங்கானை மாடத்தைத் தொழுமின்கள்.

172. பெரும்புலியூர் :—பெருமான் பிரியாது அமரும் தலம்.

173. பெருவேளூர் :—அழகிய ஊர். பொன், மணி, கனி இவைகள் (நீரால்) உந்தப்படும் ஊர். மடவரலார் அழகு நிறை ஊர். சுவாமி திருநாமம் - பிரியா ஈசுரர்.

174. பேணு பெருந்துறை :—அரிசிலின் கரையில் உள்ள அழகிய ஊர். பொழிலில் வண்டுந் தேனும் மல்கும். அன்னங்கள் கூடும். அன்னம் பேடையோ டாடும். சோலையில் தாழும் மாம்பழங்களை அரிசிலாறு உந்தும். கைபோலத் தொங்கும் வாழைப்பழக் குலையில் கழுகு ஈனுவதால் அதன் பாளை பாய்ந்து தேனிழிந்து

பெருகும். நீலமலரின் தேன் மல்கும். முகம்போல மலருந் தாமரை; கண்போல மலரும் நீலம். பேணு பெருந்துறை நலன் தீங்கு இன்றி, நல்ல சிந்தையராய் மலம் மாசு அற்றவர் வாழும்பதி.

175. பைஞ்ஞீலி :—மதுமாந்தி வண்டு பண் பயிற்றுந் தலம். கோடல், முல்லை இவைகளின் மேல் பாடல் வண்டு இசை முரலும் தலம். பண்பினர், பழியிலார் பரவுந்தலம். நித்தலும் பாரிடம் (பூத கணம்) பணி செய்யுந் தலம். பைஞ்ஞீலியான் கழலடியை நினைத்து வாழ்மின்.

176. மங்கலக்குடி :—காவிரிக்கு வடகரையில் உள்ள தலம். அடர்ந்த நறும் பொழில் அருகே சூழ்ந்துள்ள மணமார் தலம். பொழிலில் மயில் ஆலும் பதி. மாதர்கள் பயின்றேத்தும் ஊர். பறையொலி, பாடல், ஆடல், மறையொலி மல்கும் பதி. ஒப்பிலா மறையோரும் இமையோரும் தொழுதேத்த இறைவன் தேவியோடமருந் தலம். புறச்சமயிகளது பொய்யை விட்டிடும் புண்ணியர் சேரும்பதி. "நீரின் மாமுனிவன்" நீராட்டி அருச்சிக்க இருந்த பழையோன் மங்கலக்குடி ஈசன். மங்கலக்குடி ஈசர் திருவடியே சரணாகும். அவர் திருவடிகளை அடைந்தேத்தக் கோளும், நாளும், குற்றமும், வினையும் அற்றுப்போம்; அழகாம் ஈசரது குணங்களைக் கூறுவதே குணம். 'குறைவிலா நிறைவே! குணமில் குணமே' என்று அவரை முறையொடு வணங்குபவர் செந்நெறி காண்பர். மங்கலக்குடிக் கோனை நாடோறும் ஏத்திக் கூற ஊனம் அறும். அதுவே உய்யும் வகை. மங்கலக்குடித் தேவின் திருவடி யேத்தும் புண்ணியர் வான்புக வல்லர்.

177. மணஞ்சேரி :—தேன் உண்டு வண்டு இசை பாடும் ஊர். சோலையில் மயில் மல்கும் ஊர். பொழிலும், வயலும், வற்றாத வாவிகளும், வைப்பான மாடங்களும் சூழ்ந்த ஊர். கற்றன சொல்லித் தொழவல்லாரும், நன் மாதவரும், வானவரும் ஏத்தும் ஊர். பண்ணிசை பாடப்படும் ஊர். தேவி (குயிலாரு) மென்மொழியாள். மணஞ்

சேரிப் பெருமானுர் கழலே ஏத்துங்கள். அவரை அடைய வல்லார்க்கு அல்லல் இல்லே; இன்பம் எய்தும்; அவரைப் பாட வல்லார் வினை மாயும்: அவரைச் செப்ப வல்லாரை இடர் சேராது: அவரை மேவிப் பற்றி நின்ருர்க்குப் பாவம் இல்லே. வினைபோம்; அவரைப் பற்ருக வாழ்பவரை மேல் வினைகள் அடையா. மணஞ்சேரிப் பெருமானே விரும்பு வோர், பேசுவோர் பெரியோர்களே.

178. மயிலாடுதுறை :—நுரை யுந்திக் கரை பரந் தொழுகி வருங் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர். காவிரி நுரைத்து இருகரையும் மணி சிந்தும் ஊர். வண்டு திளைக்கத் தேனெழுகுஞ் சோலேயிற் குரவம், சுரபுன்னே, வன்னி மருவும். மவ்வல், மாதவி மணநாறும். வரிவண்டு நிரம்பும். மந்தி மலர் சிந்தும். மாங்கனியின் தேன்கிழிய மந்தி குதிகொள்ளும். கெண்டை யிரை கொண்டு கெளி றுடனிருந்து வண்டல் மணல் கெண்டி நாரை விளையாடும். கமுகின் செங்கனி யுதிர வாளை குதிக்க வடல் விரிந்து கமழ்பூ.மணநாறும். மடந்தையர் குடைந்த புனல் வாசம் நாறும். மாதர்கள் அன்பா ரொலியுடன் காவிரியுள் மவ்வல் மலரை வீசுவதால் மணம் கமழும். வேதியர்களின் ஆகுதிப் புகை வானளாவு சோலேமிசை மாசுபட மூசும். தொண்டர்கள் நன்மாமலர் கொண்டுக் கரவின்றி இரவும் பகலும் தொழுவார்கள். தொண்டர்கள் கூடிக் கண்டு இசைபாடித் துதிசெய்வர். மயக்கம் தீர்வர். மறையோர் ஓதி வணங்குவர். மயிலாடுதுறை மணநாறு தலம், வரங் கொண்ட தலம். மயல் தீர்க்குந் தலம்; வானஞ் சேர் தலம். இறைவருக்கு உகந்த தானம், அவர் விரும்பும் இடம், அவரது காணிப்பூமி. இறைவர் பிணி தீர்க்கும் மணி. அஞ்ஞானம் நீங்க வேண்டில் ஞானத்துடன் மயி லாடு துறையை வணங்குங்கள். மயிலாடு துறையை நெஞ்சம் ஒன்றி நினைப்பவரிடம் பிணி அணுகாது.

179. மயிலாப்பூர் :—கடற்கரையூர். நறுஞ் சோலே சூழ்ந்த ஊர். புன்னேக் கானலும், மடல் தெங்கும் நிறைந்த கண் கவர் தலம். மாதர்கள் (மடநல்லார்) பொலியும் ஊர்.

சேரியில் வேல் வல்லார் வேல் விளையாடும் ஊர். மயிலையில் நடந்த திருவிழாக்கள் முதலிய சிறப்புக்கள் :—"அண்ணலா ரடியார்தமை யமுது செய்வித்தல்" (உருத்திர பல் கணத்தார்க்கு அட்டிட்டல்), அட்டமிநாள், ஆதிரைநாள், ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள் துய்ப்பனவும், தையலார் கொண்டாடும் கார்த்திகை விளக்கீடு, நேரிழையார் கொண்டாடும் தைப்பூசம், பங்குனி உத்திரநாள், பெருஞ்சாந்தி, பொற்ருப்பு, மாசிக் கடலாட்டு, பங்குனி உத்திர நாளில் பலியும், பாட்டும். இங்ஙனம் திருவிழாக்கள் நிரம்ப ஆர்ப்புடன் இவ்வூர் வீதியில் நடக்கும். மயிலைத் தெருவில் அமைந்துள்ளது அழிவிலாத் திருக்கோயில். இது "கபாலீச்சரம்" எனப்படும். இக்கோயில் கற்ருர்கள் ஏத்துங் கோயில். மயிலாகப் பூசித்த தேவியின்மீது பெருமான் இட்டங் கொண்ட தலம். இத்தலத்துப் பதிகம் (திருவிழாக்களைக்) 'காணுதே போதியோ பூம் பாவாய்' (எனவரும்) 'பூம்பாவைப் பாட்டு'.

180. மயேந்திரப்பள்ளி :—மரவ மரப்பொழில் சூழ்ந்த ஊர். பொழில் வான் அணையும்; பொழிலில் நறுமணம் வீசும்; வண்டு அணைதரும்; கோங்கு, வேங்கை, புன்னை, கொன்றை, குரவம் அரும்பும்; கண்டலும், கைதையும், தாமரை வாவியும் பொலியும். திரைகளில் வரும் பவளமும் வயிரமும் அகிலும் வளையில் புகுதரும், நிரைமலர் போல முத்துத் தொகைகளைக் கடல் சேர்த்திடும். தூரத்திற் கப்பல் வருவதைக் குறிக்கச் சங்கம் ஒலிக்கும், அகிற்புகை கமழும். இத்தலம் மடைவளர் வயல் சூழ்ந்த ஊர். மேகம் படியுங் கோபுரமும் கோல மாளிகைகளும் விளங்கும் ஊர். சந்திரன், சூரியன், பிரமன், இந்திரன் வழிபட்ட தலம். மந்திரமும் மறையும் வளருந் தலம். முனிவர்கள் வழிபட இறைவன் நடம் புரிந்த இடம். மயேந்திரப்பள்ளியுள் இறைவனைப் பணியுங்கள்; பணிந்து உய்யுங்கள்.

181. மருகல் :—நீர் நிறை ஊர்; மடையிற் குவளை மலரும் ஊர். மாடவீதிகள் கொண்ட ஊர். வீதிகளில்

மணி கெழு மாடங்கள் மலியும் ஊர். மாடங்களில் மேக மும் மதியும் தவழும் ஊர். மாடங்களில் நெடுங்கொடிகள் விண்ணைத் தடவும் ஊர். பாடலும் முழவும் விழவும் நீங் காத பதி. மதில் சூழ்ந்த தலம். புறச் சமயத்தை நீக்கின வர் தொழும் பதி. அங்கமும், வேதமும், மந்திரமும் பயின்ற அந்தணர் நாளும் அடி பரவும் ஊர். மறை யோர்கள் வளர்த்த செந்தியின் கரும் புகை விம்மும் மாட வீதியைக் கொண்ட ஊர். ஞானம் வல்லவர் வாழும் பதி. கோயில் இலட்சுமிகரம் பொருந்திய "மணிக்கோயில்".

குறிப்பு :—"இவளைத் துயராக்கினையே" என ஒரு அடி யாளின் துயர்தீர ஸ்ரீ சம்பந்த சுவாமிகள் பாடிய இவ்வூர்ப் பதிகம் "விடந் தீர்த்த திருப்பதிகம்" எனப்படும்.

182. மழபாடி :—இங்கு சோலை மேகத்தை அளாவும். காலையில் வண்டு கிண்டுஞ் சோலையிற் கிளி சொற்பொருள் பயிலும். குருகு (குருக்கத்தி) மலர் நெருங்கும், நீண்ட பொழிலில் தென்றல் உலவும், பனம்பழம் விழும். மதி தவழும் மாளிகை நெருங்கிச் சூழும். அந்தணர் வேள்வி, மறையொலி, செந்தமிழ்க் கீதம் வளர்தரும் பதி, மழபாடி; அது இறைவனது உறைவிடம்: அடியார்களும் தவத்தார் களும் சாரும் இடம். தேவர்கள், சித்தர்கள் இறைவனைப் பால், நெய் முதலிய ஆனஞ்சு கொண்டு ஆட்டி மலர் கொண்டு பூசிக்கும் பதி. பலி, பாட்டு, முழவு முதலிய பல ஓசைகள் மலியும் பதி. மங்கைமார் நடம் பயிலும் ஊர். மாலும், பிரமனும் வான நாடரும் வழிபட்ட தலம். சுவாமி பெயர் (வஜ்ரஸ்தம்பேசுரராதலின்) சுவாமி கனவயிரத் திரள், காச்சிலாத பொன், ஆச்சிலாத பளிங்கு எனப்பட் டுள்ளார். மருந்து, வள்ளல் எனவும் பாராட்டப்பட் டுள்ளார்.

மழபாடியை வணங்குங்கள், வாழ்த்துங்கள் வினை ஓய மழபாடி மருந்தினை உள்ளத்தில் ஆதரியுங்கள். துயர்தீர, வினைபோக மழமாடியைத் தொழுங்கள். மழபாடியைச் சேர்ந்து ஏத்துங்கள், புகழ் ஆகும். மழபாடி யண்ணல்

வல்வினை களைவார்; பத்தியாற் பாடிப் பரிந்தவர்க்கு அருள் செய்வர்; வரங் கொடுப்பர். அவர் திருப்பாதம் விதியாம், விளைவாம், கதியாம், மதியாம், வலியாம்; அவரைச் சிந்திப் பவர்தம் வினைதேயும். அவர் திறத்தைத் தியானிக்க மேல் வினை மெலியும். அவரை நாடோறுங் கும்பிடக் குறிகூடும். மழபாடியை நினைக்கப் பிணி போகும். மழபாடியைக் கை தொழுவர் தகவாளர். மழபாடியைத் தலையால் வணங் கத் தவமாம். மழபாடியை நாடினார்க்கு நல்குரவு இல்லை. மழபாடியைப் பரவினர் வினை பற்றறுப்பார். மழபாடி யைச் சொன்னவர், இசையுடன் வழிபாடு செய்து தியா தியானித்தவர் இவர்தம் வினை ஓய்ந்துபோம்.

183. மறைக்காடு:—கடற்கரையூர். கடலெறிமணி கள் கரையில் ஒளிமிக வீசும் ஊர். கடலொலிகொண்ட ஊர். சங்கையும் முத்தையும் கடலானது கரைக்கு எற்றும் ஊர். மணற்கானலிற் கடலெறி முத்தம் ஒளிவீசி இரவின் பேரிருளைப் போக்கும். செம்பவளம் கடற்றிரையால் உந் தப்படும். கடற்கரையிற் சேல்மீன் ஒளிரும். சங்கு, கப் பல், சுறவம் இவை கடலிற் காணலாகும். கண்டலும், கழியும், கப்பல்கள் செல்லுங் கடலின் ஓதமும் விளக்க முறும். இத்தலம் தேனார் பொழில், மேகமளாவு பொழில், இருண்ட பொழில் சூழ்ந்த ஊர். பொழிலின் மலர்களி லிருந்து வண்டு இசைமுரலும். சோலையின் மரங்களில் வண்டு மதுவுண்டு இசைபாடும். படர் செம்பவளம், முத்து, பன்மலர், பொழில் இவை காணலாகும். மரவம் (கடப்ப மரம்) நீண்ட சோலையில் மழலை வண்டு யாழ்செய் யும். பொழிலின் மாதவியின்மீது பட்டுத்தென்றல் மணம் வீசும். குரவம், குருக்கத்தி, புன்னை, ஞாழல் - இவை பொழிலில் மருவும். வயலிற் சங்குகள் கிடக்கும்; மடமை யுடைய குருகு தனது இளம்பெடை யெனக் கருதித் தாழையின் வெண்மடலைப் புல்கும். இவ்வூர் மலைபோலும் மதில் சூழ்ந்த ஊர். கடல் கொழித்த மணியைக் கணிகை மார் கவரும் ஊர். கடலிற் கிடைக்கும் காசு, மணி, பொன் இவைகளை வலைவாணர் வலையில் வாரி விலைபேசும் ஊர்.

மாதர்கள் பாடல் பயில இயக்கர், முனிவர் நிறைந்து கூடுந் தலம். நீண்ட மாட வீதியில் தேர்விழவின் ஒலி, சங்கு - படகம் முதலிய வாத்தியங்களின் ஒலி, மாதர்களின் இசை பாடல் ஒலி இவை முழங்கும் ஊர். பொருள் ஊறும் இயற் றமிழைத் தேரும் மாதர்களுடன் வேறு திசை ஆடவர்கள் கூற இசை ஆராய்ச்சி செய்யப்படும் ஊர். இரப்போர் தம் துயர்கெடக் கற்பக விருக்ஷம்போல உதவும் கொடையாளர் கள் பயிலும் ஊர். புலவாணருடைய துன்பங்களையும் வறு மையையும் தொலைக்கக் கருதி நிதி நல்கும் (பெரியோர்) நிறைந்த பதி. மனிதர்களும் தவம் முயலும் முநிவர்களும் தமது மலம் நீங்கவேண்டி இறைவனைத் தியானிக்கும் இடம். மாசு இல்லாத தலம். லட்சுமிகரம் நிலைத்த தலம். வலம் வந்து வழிபடுவோர் வாழ்த்திசைக்கும் தலம். முநி கணங்களும் தவம் முயலும் அதி நிபுணர்களும் வழிபடும் தலம். பக்தர்களும் சித்தர்களும் நெருங்கி வழிபடு தலம். இயக்கர், முநிவர் குழாம் நிறைந்து நெருங்கு தலம். மாத வத்தோர், வானோர் வழிபட்ட தலம். பல காலங்கள் வேதங்கள் இறைவனது பாதங்களை மலர் கொண்டு போற்றி வழிபட்ட தலம். நான்மறைகளும் துதிசெய்து வணங்கி வழிபட்ட தலம். இராவணனுக்கு அருளிய கருணையன் என மனமகிழ்வொடு மறை முறை உணரும் தலம். உலகிற் புகழ்பெற பிரமன் மறை உணர்த்து முறை யில் வழிபட்ட தலம். பலகோடி உருத்திரர்கள் "தலைவன்" என இறைவனைப் போற்றுந் தலம்.

மனமுடையீர்! பெரிய சீர் மறைக்காட்டைப் பேணுங் கள். மறைக்காட்டை எப்போதும் ஏத்துதலே குணம். தேவி:—யாழ்மொழியாள் (யாழைப் பழித்த மொழியம்மை.)

கதவம் காப்புக் கொள்ளும் வகையால் (மூடும் வகை யால்) எனக்கு உன் அருள் சற்று உதவுக—என ஸ்ரீ சம் பந்தப் பெருமான் வேண்டியது 173-ஆம் பதிகத்திற் குறிக் கப்பட்டுள்ளது.

184. மாகறல்:—'வட மாகறல்' எனப்பட்டுளது. இது நீண்ட பொழிலை உடைய ஊர். இருண்டு விரிந்த கானலைக் கொண்ட ஊர். மேகம் படியும் பொழிலில் மயில்களின் நடமாடுதல் மலியும். தாமரை, நெய்தல், கழுநீர், குவளை இவைகளில் உள்ள தேனையுண்டு வண்டு பல பண் முரலும் ஓசை பயிலும். மஞ்சள் விளையுங் கழனியில் கடைசியர்களுடைய பாடல், விளையாடல் இவைகளின் அரவம் மலியும். மடைகொண்ட புனலும், வயல் கூடு பொழிலும் விளங்கும். தேனார் கழனியில் நறு நீலம் ஒளி விட் டிலகும். மாடங்களின் மிசை தூசு துகில் நீள் கொடிகள் மேகத்தை அளாவும். மலைபோலுயர் மாடங்களில் நீள்கொடிகள் பறந்து வீசும். கதிர் தங்கு முத்தும் பொன் மணிகளுங்கொண்ட மங்கையர்கள் மைந்தர்களுடன் புனலாடி மகிழ்வர். கலையொலி செய் மங்கையர்களின் பாடலொலியும் ஆடலழகும் மிக்குப் பொலிவுற்று அழகு பெருகும். காலையும் மாலையும் துந்துபிகள், சங்கு, குழல், யாழ், முழவு முழங்க இறைவனை வழிபாடு செய்து மாதவர்கள் ஏத்தி மகிழ்வர். [இதனால் இத்தலத்தில் காலை மாலை பூசைவேளையில் வாத்திய கோஷம் விசேஷம்.] மறையோர்களும் பல வேட மாதவர்களும் ஒன்றுகூடி இனிது இறைஞ்சி வானோர்போலத் தொழுதெழுவர். குற்றமிலாச் செய்கைகள் மிக்க மாதவர்கள் ஓதி நிறைவர். மாகறலுளான் அடியைச் சிந்திப்பவர்களுடைய தீவினைகள் உடனே தீரும். மாகறல் வாழும் பெருமானது அடியாரை வினை அடையாது; அப் பெருமானது புகழை ஏத்தும் அடியார்களுடைய வினை யகலுவது எளிது. மாகறல் ஈசன் என ஏத்த வினை ஓடிப்போம்; மாகறலில் வாழும் ஈசனது சடையின் மேல் உள்ள மலர்கள், கங்கை, திங்கள் இவைகளை உன்னுபவருடைய தொல்வினைகள் ஒடுங்கி அவர் வானுலகு ஏறல் எளிதாம்.

உங்கள் வினைதீர மாகறல் ஈசர் அடியை வாழ்த்தி வழிபாடு செய்ய எழுமின்! அவரை வாழ்த்தி அவர் திருவடி

யைச் சிந்திப்பவருடைய வினைகள் மிகவும் அஞ்சி அகலும்.

185. மாணிகுழி:—கெடில நதிக்கரையில் உள்ள ஊர். கெடிலப் புனல் வயலிற் பாயும் ஊர். பொழிலில்—பண் பயிலும் வண்டு பல (மலர்) கெண்டி மதுவுண்டு நிறையும்; மல்லிகை, குருந்து, கொடி மாதவி, செருந்தி, குரா, புன்னை, தாது சொரிந்து மலியும்; அழகிய மஞ்ஞை நடமாடுதலைக் கண்டு வண்டுகள் உலாவி இசைபாடும். பலாப்பழங்கள் சொரிந்து மணம் வீசும். தெங்கின் இளநீர் வாழைமீது விழும் வழியில் நிரை கமுகின் தாறு உதிரும். கன்னிவாளை குதிகொள்ளும்; வள்ளைக் கொடிபடரும்; பழனத்தில் தாமரை மணங்கமழும். வண்டு முரலும். சேறு நிறை வயலில் இள எருமைகள் படிந்து மனைவந்து சேரும். மண நிறை சோலை புடைசூழும் மாடங்கள் நீடிய மாணிகுழி தேவர் தலைவனது நகராகிய (அமராவதி) போல விளங்கும். இங்கு மாதர் புனல் குடைந்து ஆடுவர்; தமது மாளிகை யில் மன்னி ஊசலில் ஏறி யமர்ந்து இனிதாக இசை பாடுவர். திருமாணிகுழி என்னும் தலம் சிவபெருமான் மகிழ்ந்துறையும் தானம். திருமால் குறளனாகி (வாமனாவ தாரத்தில்) நித்த நியமத்துடன் சித்தத்தை மிகவும் ஒருக் கிச் சிவபிரானை வழிபட்ட தலம். மாணிகுழி—“உதவி மாணிகுழி” எனப்பட்டுளது.

186. மாந்துறை:—காவிரியின் வடகரையில் உள்ள தலம். சூரியன், சந்திரன், வானவர், மன்னர்கள் வழிபட்ட தலம். மாந்துறையை எக்காலமும் உள்ளத்து அழுத்து தல் அழகு. அத்தலம் ஈசனுக்கு இடமாம். மாந்துறை ஈசனைத் தூபம், தீபம், பாட்டு, அவி, மலர் இவையுடன் வழிபட்டு அவன் நாமங்களை நாவினாற் சொல்பவர் தலையாய தவத்தோராவர். மாந்துறை யீசனது தேவர் தொழுங் கழலை ஏத்துவோம், பணிவோம். மாந்துறையைச் சிந்தி யாத மனத்தவர் சேரும் நெறி தீநெறிதான். மாந்துறை

அமர்வானது மலரடியிணைக் கோலத்தை நாளும் ஏத்தி ஆடுங்கள், பாடுங்கள் கூற்றுவன் நலியான்.

187. மாற்பேறு :—சேறுசேர் வயல்கொண்ட ஊர். பாலாற்றின் தென்கரையில் உள்ள ஊர். மடைநீர் மல்கும் ஊர். தேவி கருந்தட மலர்க்கண்ணி; சுவாமி-மணிகண்டர், மாற்பேற்றடிகள். தேவியும் தானுமாய் இறைவன் உறையும் வளநகர் மாற்பேறு. அது தேசம் புகழும் ஊர். மாலும், சோமனும் பணிசெய்த ஊர். விண்ணவர், தானவர், முனிவர், மண்ணவர் வணங்கும் தலம். திருமாற்பேற்று ஈசா என ஏத்துங்கள். திருமாற்பேற்றடிகளைப் பரவிடப் பாவங்கெடும், வினைபாறும். தாம் பாடிய "குருந்தவன்" என்னும் திருப்பதிகத்தைச் செந்துப் பண்ணிற் பாடப்பட்ட "நல்ல செந்திசை பாடல்" எனச் சம்பந்தப் பெருமான் குறித்துள்ளார்.

188. மீயச்சூர் :—மேகம் உரிஞ்சும் பொழில் சூழ்ந்த தலம். வண்டு ஒலிக்கும் பொய்கையின் நீரில் மூழ்கி எருமை படியும் வயல்சூழ்ந்த ஊர். மீயச்சூரைத் தொழுது வினையை வீட்டுங்கள். மீயச்சூரானைத் தலையால் வணங்கினவர்க்கு இமையோர் உலகம் எய்துதல் அரிதன்று.

189. முதுகுன்றம் :—முல்லை நிலத்துள்ள தலம். மழை பொழிய வெள்ளருவி சேரும் புறவுநிலம். புகழ்பெற்ற (மணி) முத்தாற்றின் கரையில் உள்ள தலம். இங்கு முழுங் கொலி நீருடன் முத்தாறு வலஞ்செய்யும், மூங்கில் உதிர்க்கும் முத்துக்களை வாரிக் கொழிக்கும். (மணிமுத்த நதியில்) மணியும் முத்தும் வரக் குறவர் சிறுமிமார்கள் கூடி அவை தமை வாரி முறங்களினுற் கொழித்து மணியை விலக்கி முத்தை உலையிற் பெய்வர். முத்தாறு பண்டங்களை அடித்துவந்து இருகரைகளையும் மோதி, வரம்புகளைத் தாண்டி, நெல், கழுநீர், குவளை சாயப் பாய்ந்து, செந்தாமரை மலர வயல்களைத் தழுவும். மா, பலா, வாழை, கமுகு, தெங்கு, நெருங்கிய சோலையில் முப்பழங்களின் சாறு ஒழு

குவதால் சேறு உலராத வயல் சூழ்ந்துள்ளது. பொழில்-நறும்பொழில், மூடியபொழில், தேனூர் பொழில், மேகந் தோயும் பொழில், மொட்டலரும் பொழில். பொழிலில் தேனூர் செங்காந்தள் நிரம்ப மலரும், குரவு, கொடிமுல்லை குவிந்த சோலையில், வாசப்பொழிலில் வண்டுகள் நெருங்கிப் பாடி இசை எழுப்பும். பொழிலில் முழவு ஒலிக்கும். கொல்லையில் வேடர்கள் கும்பிடுவதைக் கண்டு அயலில் உள்ள முல்லை முறுவல் செய்வதுபோல அரும்பும். பொழிலிற் புனற்படப்பைத் தடத்து அருகே முயல்ஓடக் கயல் பாயும். பாடுங் குயிலின் அருகிற் கிளி பயிலும். பொழில்களின் கனிகளை உதிர்த்து, கயத்திற் படிந்து, வாசலிற் புகுந்து, தென்றல் வீசும். குறைவிலாப் பழ மூங்கில்கள் முத்துக்களை உதிர்க்கும். மூங்கில் சிறிது வளையச் சிறு மந்தி மூங்கில்மீதிருந்து நடம் செய்யும். விண்ணளாவும் மூங்கில் மீதுள்ள மந்தி மழையைக் கண்டு குட்டியுடன் போக, கற்குகையில் உள்ள பெரிய யானை மலைச்சாரலிற் சென்று இரைதேரும். களிறு அஞ்சிப் பிளிறும்படி ஆளியானது வழியே செல்லும். வானில் இடிமுழங்கச் சிங்கம் தனது குகையிற் குமுறும்.

இம்மலை சூரியனும் சந்திரனும் தவழும் மலை. மேகம் படியும் மலை. தேவேசன் அமரும் மலை. தனக்கு இணையில்லா மலை. இத்தலம் சீரொடு விளங்கும் தலம். ஆறு சமயங்களுக்கும் ஒரு தலைவனும் ஈசன் தேவியுடன் கருதி மகிழ்ந்து அமரும் ஊர். நிலமெலாம் மூடவந்த பிரளய வெள்ளம் கீழே தாழத் தான் மேல் உயர்ந்த தலம். தேசமெலாம் நிறைந்த புகழ் வாய்ந்த தலம். முத்தி தருந் தலம். தவ முயன்றோர் அருள்பெறுந் தலம். முரசொலிக்குந் தலம். அணி கலைச் செஞ்சொலார் பயிலுந் தலம். அணி பொற் கலன்களுடன் அரசர்கள் வருதலும், பன்னாளும் மணமுரசு முழங்குவதுந் திகழும் ஊர். மடவார்கள் குறிஞ்சிபாடி முருகனுடைய பெருமையைப் பகருந் தலம். திருவிழாக்களில் நாடக சாலையில் மங்கையர் வந்து முழவுடன் இசைபாடி நடஞ்செயுந் தலம். வெஞ்சொல்

வேடர், ஆடவர் விரும்ப இறைவன் அமருந் தலம். அடியவர் "சிவனே" என்று எப்போதும் மலர்கொண்டு ஏத்திப் புகழுந் தலம். ஞானிகளும் நான்மறை யுணர்ந்து ஐம் புலன்களைச் செற்று மோனிகளும் ஆன முனி சிரேஷ்டர்கள் தனித்திருந்து தவம் புரியுந் தலம். மறைபல சொல்லி, மலருஞ் சாந்துங் கொண்டு * முனிவர் முறையால் தொழுத தலம். தவமிக உடையார், மூவா முனிவர் வணங்குங் கோயில். மலர்கொண்டு வானவர் வணங்க இறைவன் தேவியோடும் அமரும் தலம். வானோரும் பல கணங்களும் கூட்டமாய் வந்து வணங்குந் தலம். சுரர், மாதவர், கின்னரர், பல முனிவர்கள் ஏத்தித் தொழுந் தலம். மந்தி மலர்கள் பலகொண்டு முந்தித் தொழுது வணங்கிய கோயில்.

திருமுதுகுன்றம் ஊனமான பிணியைக் கெடுக்கும். திருமுதுகுன்றத்து ஈசா! உமைக் கருதுவார் சிட்டர்களாய்ச் சீர்பெறுவர். உமை ஏத்துவார் பயன் தலை நிற்பவர். உமை ஓதுவார் திருவொடு தேசினர். உமைப் பரவுவார் உலகில் அரசராவார். உமைப் பாடுவார் நல்ல சித்திகள் கூடிய அடியார்களாய் நைவின்றி நாளும் நலம் பெறுவார். உமை வாழ்த்துவார் பழியொடு பகையிலர். முதுகுன்றை இடைவிடாது ஏத்துவார் படைசூழ உலகுடையோராவர்; முதுகுன்றை உருகி நினைப்போர் பெருக வாழ்வார். முதுகுன்றைப் பணிபவர் பிணிகெட்டு உலகில் அமைதியுடனிருப்பர். (ஆகவே) முதுகுன்றைக் கூட்டமாய்ச் சென்று பணியுங்கள். (அங்ஙனம் சென்று) பொய்கள் கெட நின்று கைகூப்பித் தொழுதால் வையம் உங்களுடையதாம். பத்தியாக நித்தம் ஏத்தினல் செல்வம் கைகூடும். மலர் தூவி ஏத்தினல் என்றும் இன்பமாம். அன்புடன் மலர் தூவினல் பாச வினைபோம். முதுகுன்றில் ஐயா என்பவர் இரப்போர்க்குப் பொய் சொல்லார். அப் பெரியார்களுக்குச் செய்யாள் (லட்சுமி) பக்கத்திலேயே

* [விருத்தாசல புராணம் - கலியகல் சருக்கம்.]

இருப்பாள். (எனவே,) முதுகுன்றைத் தியானியுங்கள், நித்தலும் கைதொழுங்கள். விரும்பிச் (சென்று) காணுங் கள்.

190. முல்லைவாயில் தேன்:—காவிரியின் வடகரையில் உள்ள தலம். சங்கையும் இப்பியையும் கடல் ஓதம் மோத முத்துக்கள் தெருவில் வந்து அலைகொள்ளும் ஊர். (பொழி லில்) தாழையும், வகுளமும் அரும்பும். புன்னை வாசம் வீசும். குன்றும் குன்றும், குலையுங் குலையும், கொடியுங் கொடியும் குழுமிச் செறியும். கழனியும் சோலையும் கலக்கும். கமலங்கள் தங்கு மதுவில் தேனைப் பருகி வண்டு பாடும். செந்நெல் வயலிற் சேலும் வாளையும் குதிகொள்ளும். மானு லவும் கொல்லையில் மயில் வந்து உலவும். குயிலேறு சோலையில் உள்ள மாமரத்தில் வண்டேறிக் களிக்கும் மாடங்களில் மேகம் தோயும். இத்தலமானது மாதர்கள் ஆடும் அரங்கின் கோபுரங்களும் பொன் செவ்வி வாய்ந்த மாடங்களும் இலகுந் தலம். எக்காலத்தும் நெல் வளத் தாற் சோறளிக்குந் தலம். தேவி - கோதை யம்மை.

191. மூக்கீச்சரம்:—(வேல் வல்ல அழகிய) சோழன், (சீர்பெற் றிலங்கிய) பாண்டியன், (அழகிய வஞ்சிநகர்த் தலை வனும்) சேரன் மூவரும் சேர்ந்த தலம். மூவரும் (பணி) செய்த தலம். இவர்கள் மூவரும் மூக்கீச்சரத்து அடிகளே (ஆண்டருளும்) செல்வர் (அவரே பரம்பொருள்) என்னும் உணர்ச்சி கொண்டு இறைவனை வழிபடும் பொருட்டு (சம் பந்தப் பெருமான்) பாடிய பதிகம் இத்தலத்துப் பதிகம்.

192. வக்கரை:—வானும் பிறையும் தேர்யும் பொழில் சூழ்ந்த தலம். சுவாமி சந்திரசேகரர். அவருடைய அருளை வேண்டி இந்திரன் முதலிய இமையோர்கள் தொழுது இறைஞ்சும் பதி இத்தலம். இறைவன் உறையும் திருப் பதி. திருவக்கரையில் அமரும் பிரான் கழலையே சிந்தி யுங்கள்; செப்புங்கள்.

193. வடுகூர்:—அழகிய ஊர். புனல் சூழ்ந்த ஊர். சோலை மணம் வீசும். பொழிற் சோலையில் முல்லைக்கொடி சூழும்; மலர்களை மோந்து வண்டு இசை பாடும்; பல வண்டுகள் கூடிப் பறை போலவும் குழல் போலவும் ஒலிகள் எழுப்பும். அன்னம் ஆலும். வடுகூர் புகழ் வாய்ந்த தலம். தொண்டு நிரம்பச் செய்யும் அடியார்கள் பலரும் நெருங்கி ஏத்த வடுகூர் அடிகள் ஆடல் புரிவர்.

194. வல்லம்:—இறைவன் உறையும் திருப்பதி. கற்றவர் வாழும் பதி. [ஸ்ரீ சம்பந்தப் பெருமான் இத் தலத்தை (நேரிற்) சென்று கண்டு பதிகம் பாடியதாகப் பதி கத்திற் சொல்லப்பட்டுள்ளது.]

195. வலஞ்சுழி:—மாறுநீர்க் (வற்றுநீர்க்) காவிரி சூழும் பதி. மேகந்தோய் பொழில் சூழும். பொழிலில் வண்டு கெண்டும். தேனுற்ற மணமார் மலர்ச் சோலையில் வண்டினம் மலர் விரிய விருப்புடன் இசைபாடும். தாம ரைத் தாது அளாய், கொல்லைப் புனத்தில் குருமாமணி கொண்டுபோய் நுண் மணல்மேல் அன்னம் வைகும் குவளை மலரும் இடத்தருகே நீர் மணம் நாறும். குருகும் நாரை யும் நீர் நிலையில் இரை தேரும்.

வலஞ்சுழி-மாநகரம் எனப்பட்டுளது. இது மாடவீதி கள் கொண்ட ஊர். சுவாமி "வலஞ்சுழி மருந்து" என்று சொல்லப்பட்டுள்ளார். என்றும் பிரியாது காதலியுந் தானுமாக இறைவன் மகிழ்ச்சியுடன் உலகேத்த அமர்ந் துள்ள தலம் திருவலஞ்சுழி. இது காவிரியின் தீர்த்த நீரிற் பூச நாளிற் குடைவோருடைய இடர் தீர்க்குந் தலம். [ஆதலால் இத்தலத்தில் பூச ஸ்நாநம் (திருவிடைமருதூர் போல) விசேடம் என்பது ஏற்படுகின்றது.] மன்னிய மறை யோர்கள் போற்றுந் தலம். "குன்றியூர் முதலிய தலங் களில் இலோம் என்கின்றார் அவர் உள்ள பிற தலங்களை யான் அறியேன் ஆயினும் வலஞ்சுழிக்குச் சென்றால் அங்கு தலைமகனைச் சந்திக்கலாம்" என்று கூறித் தலைமகள் தளர் வாள். இத்தலத்தில் அருளும் வரமும் பெறலாம். நெஞ்

சமே! திருவலஞ்சுழி வாணனை வாயார அன்புடன் சொல்லி அன்பு மிக்கு ஏத்திப்பாடி வழிபட எவ்வளவோ புண்ணியம் நீ செய்திருக்கவேண்டும். வலஞ்சுழி நாதனைப் புல்கி ஏத்தியிருப்பவர் புண்ணியரே. வலஞ்சுழி நாதனது தொண்டரோடு கூடுந் தொடர்பையே தொடர்வோம். வலஞ்சுழி நாதனது மெய்த் தொண்டரோடிருந்ததால் நமது வல்வினை நீங்கி ஒழிந்தது. வலஞ்சுழி வாணனைச் சிந்தையில் எப்போதும் கொண்டவர்க்கு உயர்வு ஆம்; பிணி போம். வலஞ்சுழி யெம்மானைப் பயில வல்லவர் பரகதி காண்பர், மற்றவர் காணார்; வலஞ்சுழியை வலஞ் செய்பவரது வினையும் துன்பமும் போம். வலஞ்சுழிப் பெருமானைப் பிரியாதவர் பெறுங் கதியைப் பேசில் அளவறுக்க ஒண்ணாது. "வள்ளல் வலஞ்சுழி வாணன்" என்று மருவி நினைந்தேத்தி உள்ளம் உருக உணருமின்கள். நோய் அடையாது. வீடும், ஞானமும் வேண்டுதிரேல் வலஞ்சுழியை நாடுமின்.

196. வலம்புரம்:—மேகம் படியும் நீண்ட பெரிய சோலையின் மணங் கமழும் ஊர். வண்டு அணையும் பொழில் விளங்கும் ஊர். வற்றுதல் அறியாப் புனல் வாய்ப்பு உடைய ஊர். வயலில் எருமைகள் படியும் ஊர். நித்தமும் முழவம் அதிரும் ஊர். பறையொலி இசைப்பாட்டொலி நீங்காத் தலம். புகழ் வாழ்க்கையருத பதி. முத்தீத் தொழில் உடைய நான்மறையோர் வாழும் பதி. வானவர் நாடோறும் வந்து இறைஞ்சும் தலம். "வலம்புர நன்னகர்" எனப்பட்டுள்ளது.

197. வலிதாயம்:—இங்கு மடை யிலங்கு பொழிலின் நிழலில் மது வீசும். கமுகு, பலா, தேன் நிறையும். மணம் மல்கும். வண்டு வைகும். தேவி பெயர் திருமாது (தாயம்மை.) இது இறைவன் திருமாதோடு பிரியாது மகிழ்ந்து உறையும் தலம். மண் நிறைந்த புகழ் கொண்ட தலம். அடியார்கள் வணங்குந் தலம். மந்தி கடுவனோடு கூடி வணங்கும் தலம். உலகோர் பணியப் பிணி தீர்த்து

விளங்குந் தலம். உலகத்திற் புகழ்பெற (வேண்டினோரால்) எண்ணப்படும் வலிதாயத்தைப்பற்றி வாழுதலே பாடும் அடியார்களுக்குக் கதியளிப்பதாகும். வலிதாயத்தைச் சிந்தியாதவரை அடுகின்ற துயர் தீர்தல் எளிதன்று. வலிதாயத்தைச் சிந்திக்கும் அடியாரை இடர், நோய் அடையா. வலிதாயத்துப் பெருமான் கழலை ஏத்த நமக்கு உண்மைக் கதி கிடைக்கும். மலர் கொண்டு அவர் கழலை ஏத்தத் தெளிவு கிடைக்கும். வலிதாயத்தைத் தொழுதேத்தும் உரிமை பெற்றவரைப் பெரியோர் என உலகோர் நினைப்பார். வலிதாயம் அடைய நின்ற அடியாரை வினை, அல்லல், துயர் அடையா. வலிதாயத்தை உயிர் உள்ள அளவுந் தொழ உள்ளத்துத் துயர் போம். வலிதாயத்தைப் பேசி(ப் புகழும்) ஆசை உடையாரை அடியார் எனப் பெரியோர் விரும்புவர். உய்யும் வண்ணம் வலிதாயத்தை நினைமின். நினைத்தால் வினை தீரும். நலம் கூடும்.

198. வலிவலம்:—பொழில் நெருங்கியது, மலர் மணம் வீசுவது, வண்டு கிண்டிப் பாடுவது. மதில் அழகு மிக்க தொழிற் பாடுடையது, மலைபோன்றது, அதன் மீதுள்ள நெருங்கிய கொடி வானை அளாவும். இத்தலம் கொடை மிக்க வடிவினர் பயிலுந் தலம்.

199. வாஞ்சியம்:—பொழிலில்-தென்றல் துன்றும்; வண்டு கெண்டி இசைபாடும். மாடத்தில் மதிதோயும். இத்தலம் சிலமேவு புகழ்விளங்குந் தலம். இறைவன் என்றும் வாசம் செய்யுந் தலம். இறைவனுக்கு உகந்த தலம். ஞாலம் வந்து பணியும் திருக்கோயிலைக் கொண்ட தலம். யாவரும் ஏத்தத் தேவியுடன் இறைவன் அமருந் தலம். பண்ணும் இசையும் பாடலும் மல்குந் தலம். திருவாஞ்சியத்து இறைவன் பாதம் அடைந்தாரது அடியாரது அடியாரை நோய் அடையாது; அவர்கள் (நன்னெறியி னின்றும்) பிறழார்கள். வினையுங் கூற்றமும் அவர்களைக் கண்டால் அகன்றுபோம். அவர்களுக்கு (நற்) கதி கிடைக்கும். திருவாஞ்சியத்தில், இறைவனது அடியைச் சார்ந்து தொழுவார்க்கு அல்லது

நோய் இல்லை. திருவாஞ்சியத்துச் செல்வர் தம் அடியார்களுடைய பாவந் தீர்ப்பர்; பழி போக்குவர். திருவாஞ்சியத்து வேந்தரைப் பாட விரும்பும் மனத்தார்கள் வினை பற்றறுப்பார்கள். திருவாஞ்சியத்து நாதர் தம் நாமங்களைப் பரவுவார்களுடைய வினைதீர்க்க நின்றார்.

200. வாய்மூர்:—கானல் நிலம். மதிதோயும் உயர்ந்த பொழில். தேன்பெருகு சோலை. இறைவன் (வாய்மூரடிகள்) தானும் உமையுமாக உறையும் இடம்.

[வெண்ணீறணிந்து, விடையேறிச், சைவவேடத்துடன் (அப்பர் சுவாமிகளது) கனவில் இறைவன் தோன்றினதும், அவர் வாய்மூரில் ஆடல் காட்டினதும் பதிகத்திற் குறிப்பிக்கப்பட்டுள்ளன.]

201. வாளொளிபுற்றூர்:—இத்தலத்து இறைவர் நள்ளிருளில் மகளிர் நின்றேத்த வான வாழ்க்கையதுடையார். இத்தலம் வண்டு வாழும் பதி. (வண்டு பூசித்த தலம் - இது தலபுராணத்திற் சொல்லப்பட்டுளது.) சுவாமி—(மாணிக்க) வண்ணர். தேவி—வண்டமர் பூங்குழல் அம்மை; ஸ்தலவிருக்ஷம்—வாகை. தொண்டர்கள் மாமலர் தூவ இறைவன் தோன்றி நிற்பான். (ஆதலின்) நல்ல மலர்தூவி வாளொளி புற்றூர் இறைவன் அடியைக் காண்போம், சார்வோம், சேர்வோம்.

202. வான்மியூர்:—கடற்கரை யூர். கானலுங் கழியுஞ் சூழ்ந்த ஊர். பொழில் நிழற் கானலில் கடலோதம் மல்கும் ஊர். அழகிய நீண்ட தேனார் பொழில் சூழ்ந்த ஊர். மேகந்தோய் சோலையில் வண்டுகள் ஒலிக்கும். மாதவி சூழும் பொழிலாற் சூழப்பெற்றதாய்த், தொழிற் பாடுடையதாய்த் திண்ணிதாய் மதில் சூழ்ந்து பொலியும். வயலிற் கயல் பாயும். தேரோடு வீதியும், மேகந்தோய் மாடமாளிகையும் விளங்கும். திருவான்மி அழிவிலாத தலம்; புகழ்வீறு தலம்; தென்பால் வையமெலாம் திகழுந் தலம். சென்று

தரிசிப்பவருடைய இடர் தீர்க்குந் தலம். இறைவன் தேவி யோடு வீற்றிருக்குந் தலம். சோலையில் தவஞ் செய்வோ ரது புகழ்சேர் தலம். எண் திசைப்பொருளுந் தருங் கட லால் புகழுஞ் செல்வமும் பெருகும் ஊர். மண்ணினிற் புகழ் பெற்றவரும் மங்கையரும் பயிலும் ஊர். செஞ்சொ லாளர்கள் பயிலும் ஊர்; மதிலின் புறத்தே பொழிலில் தீதிலா அந்தணர் ஓதுகின்ற வேத ஒலி நீங்காத தலம். சந்து, காரகில், புனல்கொண்டு அடியார் சிந்தைசெய்து பரவும் தலம். 'வான்மியூர்ப் பெருமானே! உன்னையல்லால் எனது ஆதரவு வேறொருவரை அடையாது' என்றும், வான்மியூர்ப் பெருமான் அருள்செய்ய இவ்வினாவுரைப் பதி கத்தை ஓதினேன் என்றும் ஸ்ரீ சம்பந்தப் பெருமான் கூறி யுள்ளார்.

203. விசயமங்கை:—குரவு, சுரபுன்னை, கோங்கு, வேங்கைகள் விரவிய பொழில் சூழ்ந்த ஊர். இறைவன் தேவியோடு இனிது அமருந் தலம். கோதனம் (பசுக்கள்) வழிபட்ட தலம். நான்மறை வேதியர் தொழுந் தலம். விஞ்சையர் தொழுந் தலம். வானவர் (விண்ணவர்) நீரும், மலரும், தண்ணறுஞ் சாந்தமும் கொண்டு இறைஞ்சி வழிபட்டு இறைவன் திருவருளைப் பெற்ற தலம். வானவர் தலைவரும் மிக்கோரும் நாடோறும் தொழுதெழு தலம்.

204. விடைவாய்:—அழகிய ஊர். மணி, சந்து இவை களைக் கொண்டு நறும்புனல் பெருகும். எங்கும் கோடற்பூ அரவுபோல மலரும். புனலிற் செங்கழுநீர் மொட்டில் வண்டு தேன் உண்ணும்; தன் பெடையைப் புல்கி வண்டு மலரில் துயில் கொள்ளும். நெற்கதிர்கள் சாமரை வீச அன்னம் வீற்றிருக்கும். மலைபோலும் மாளிகையின் சூளிகை (தளத்தின்) மேலே உள்ள கொடி வானோரை அழைப்பதுபோல விரிந்து பறக்கும். கீத ஒலியும், முழ வொலியும், வேதத் தொலியும் பயிலும். மாறிலாப் பெருஞ் செல்வம் நிறையும். மாதர்கள் நடஞ் செய்வர். திரு விழாக்களில் வீதிகள் தோறும் விண்ணோர்கள் வந்து இறைஞ்சுவார்கள்.

205. வியலூர்:—நிறைபொழிலும் வயலுஞ் சூழ்ந்த தலம். எங்கும் நீர் விரியும் ஊர். விண்ணோரும் மண்ணோரும் தொழும் ஊர். சிவனை நினைவார் வாழும் ஊர்.

206. விளநகர்:—காவிரித் துறை கொண்ட தலம். மேகந் தவழும் பொழில் சூழ்ந்த ஊர். பொழிலில் வண்டு யாழ் முரலும் தலம். திருநீறு பூசும் அன்பு மிக்க அடியார்கள் வழிபாடு செய்யும் ஊர். [பூக்கொணரும் திருத்தொண்டு பூண்ட அன்பர் ஒருவர் காவிரியின் வெள்ளத்தில் அகப்பட்டு அலையுண்டும் பூக்கூடையை விடாது இறைவனையே தியானிக்க] இறைவன் [அவ்வன்பரைத்] துறைகாட்டிக் கரையேற்றின தலம். சுவாமி-துறைகாட்டு வள்ளலார்; தேவி-வேயுறுதோளி யம்மை.

207. விளமர்:—விரி பொழிலில் வண்டுகள் மலரில் இருந்து இசைபாடும். தேவி யாழினுமென்மொழியம்மை. யாழினுமென்மொழி யம்மை பாகனது கழலைத் தொழுபவரை வினை குறுகாது. சிவபிரான் உறையும் வளநகராம் விளமரை அன்போடு விரும்புங்கள்.

208. விற்குடி:—விண் தோயும் பொழில் மல்கிய ஊர். விரிமலர்ப் பொய்கை சூழ்ந்து தேன் மலியும் ஊர். இறைவன் இனிது அமருந் தலம். வீரட்டத் தலம். விற்குடி வீரட்டத்தை ஏத்த வல்லாரை அருவினைகள் அடையா; இசைபாடி நின்றாரைத் துன்பம், நோய் அடையா; சிந்திப்பவரை இடர்கள் அடையா; பிரிவிலாதவரைப் பெருந்தவத்தோரென உலகம் பாராட்டும். விற்குடி வீரட்டத்தைக் கண்டு களிப்பவர் நற்கருத்து வாய்ந்த குணத்தோர்; மலர் கொண்டு நினைந்தேத்துவோர்கள் வருத்தம் ஒன்றும் அறியார். கை கொண்டு தொழுவோர் தவ மல்கு குணத்தார். விற்குடி வீரட்டத்தைச் சேர நினைப்பவர்க் கன்றிப் பிறருக்குத் தீவினை, பிணி கெடும் வழி யில்லை. வீரட்டத்தமரும் ஈசன் வல்வினையை விட்டுவார். விற்குடி வீரட்டத்தைப் பரவுமின்; பரவினால் அருநோய் பற்றறும்.

209. விற்கோலம்:—ஊர்-கூகம். ஆலயம் - திருவிற்கோலம். நறும்பொழில் சூழ்ந்த தலம். செழுமதில்

கொண்ட கோயில். சுவாமி திரிபுராந்தகர் (திரிபுரமெரித்த மூர்த்தி திருக்கையில் விற்கோலமாகத் தங்கிய இடம் திரு விற்கோலம் என்பர்). "ஐயன்நல் அதிசயன்" எனப் போற் றப்பட்டுளது. சுவாமி தீண்டாத் திருமேனி; [அதிக மழை பெய்கிறதாக இருந்தால் சுவாமிமேல் வெண்மையான வர் ணம் படருகிறதும், யுத்தம் நேரிடுவதா யிருந்தாற் சிவந்த வர்ணம் படருகிறதுமான அதிசயமான ஸ்தலம்.]

210. வீழிமிழலை:—(i) தலவர்ணனை. கடலின் மணல் திடரில் உள்ள அழகிய ஊர். மிழலை நாட்டைச்சேர்ந்தது. அழகிய பொழில் சூழ்ந்த ஊர். சிலைமதிலைப் புடை தழு விய பொழில். திலகம் இது என்று உலகம் புகழ்ந்து பாராட்டும் பொழில். கமுகு, தெங்கு, இளங்கொடி, மா, செண்பகம், பலா, இலுப்பை, வேங்கை, மகிழ் இவை நிறைந்து வெயில் புகாத பொழில். குரவம், சுரபுன்னை, கோங்கு, வேங்கை, விரவும் பொழில். மேகந்தோயும் பொழில். விண்ணளாவும் பொழில். மலையன்னபொழில். பொழிலில் மலர் நிறையும், மணம் வீசும். கதிரவன் கதிர் தோயும், வெண்மதி தவழும், கொன்றை மரத்தில் வண்டு கள் ஒலிக்கும். மும்மென முரலும் வண்டுகள் திசையெங் கும் கெண்டும்; சேற்றிற் செங்கழுநீர்த் தாதாடிப் பூவில் தேனுண்டு, சிவந்த வண்டு உருமாறிச் செவ்வழிப்பண் (எதுகுல காம்போதி ராகம்) பாடும். பொழில் தரும் மண முள்ள தேனை உண்டு வண்டு முரலும். உயிர்கள் இன்பம் அடைய வண்டுகள் பண் தவறுத வழியிற் பாட மஞ்ஞை கள் நடமாடும். மேகம் முழவொலி ஒலிக்க, மயில்கள் பல நடமாட, வண்டு பாட, கொன்றை மணம் வீசு பொன்னைத் தர மெல்லிய காந்தள் கையேற்கும். புன்னை முத்தரும்பி விரைத்தாதைப் பொன்மணி யென ஈனும். நீரிற் சங்கு கள் திகழ, செந்தாமரைத் தீயில் புன்கு மலர் சொரிந் திடுதல் அஷ்டமணஞ் செய்வதை நிகர்க்கும். தாழைகள் ஆனையின் வெள்ளைக் கொம்பு போல விரியும். வாழைப் பழம் மதிலில் விழும். கமுகங் குலையொடு பழங்கள் விழும். தெங்கு மேகம் அளாவும். வாசப் புன்னை, மௌவல், செங்

கழுநீர் இவைகளை அணைந்து தென்றல், வீசும் பொழிலில் தேன் துளி சேரும். பொழில் நுழை தென்றல் மணம் வீசும். வான் தோயும் மதில் மருங்கில் வளம் வாய்ந்த பொழிலில் வெயில் தணிந்து ஒளி வீசும்; குளிர் புனலும் அலர் பொழிலும் பொலிவு தரும், (மாதர்தம்) பல்போல முத்தும், முகம் போலத் தாமரையும், விழிபோலக் கயலும், வாய்போலப் பவளமும் திகழ்தரும். கிளியும் மயிலும் பயிலும் பொழிலில் ஞாயிறு விசும்பைப் பொலிவிக்கும். படித்த நான்மறைகளைக் கேட்ட கிளிகள் பதங்களை ஓதப் பக்கத்திருந்த விடைக்குலம் அவைகளைப் பயிலும். பண்டிதர்கள் பன்னுளும் பயின்ருேதும் ஓசை கேட்டுப் பொழிற் கிளிகள் வேதங்களுக்குப் பொருள் சொல்லும். சேற்றிற் கரிய ஆமையின் அகடு நிலவென வெண்மை காட்டும். வயல்களிலும் நீர் நிலைகளிலும் பங்கயம் மலரும். செங்கமல வேலியைக் கொண்ட வயலில் உள்ள செந்நெற் பொழில் வழியே தென்றல் நுழைந்து மணம் வீசும். மரகத நிறமும் புனலும் அணைந்து விளங்கும் வயலும் பொழிலும் பொலியும். தாமரையில் இலைக் குடையின் கீழ் நெற்கதிர் சாமரையிரட்ட இள அன்னம் வீற்றிருக்கும்; தன் இளம் பெடையைப் புல்கி மகிழும். பொய்கையில் தாமரை மலர்மேல் அன்னம் நடைபயில வெண்தாமரை செந்தாது உதிர்க்கும். வயலில் விசையுறு புனல் சேரும். நல்ல விளைவு பொலியும் வயலில் அரிந் தெடுத்த சும்மை வான் அளாவும். செங்கமலங்கள் வேலி போலச் சூழும் வயலில் செந்நெல் வளரும். பொய்கைகளிற் செங்கமலங்கள் மலர்ந்து செந்தீப் போலச் சுடரொளி வீசும். ஊரில், நீண்ட மதில் விளங்கும். மதிலில் மேகம் உரிஞ்சும், மதி தவழும். ஒளிவாய்ந்த மணி மாடங்களும், மந்தர மலைபோன்ற மணி மாளிகைகளும், மேகந் தோயும் வெண் கனக மாளிகைகளும், விண்ணுலவு மாளிகைகளும் அழகுபெற விளங்கும். மலையன்ன கன்மதிலும், செங்கனக மாளிகைகளும், விலையுயர்ந்த மாடங்களும் பொலியும், வென்றிக் கொடிகள் நிரம்பி மதிலை மூடும். அக்கொடிகள் பரப்பது (இங்கு) வந்து பரம்பொருளை வணங்

குங்கள் என்று விண்ணோரை விளித்து அழைப்பது போலத் தோன்றும்.

(ii) நலச்சிறப்பு :—திருவீழிமிழலை—புனிதமான ஊர். தீர்த்தமாய் நாளும் ஆடும் பொய்கையை உடைய ஊர், மாசிலாத பதி. மறை விளங்கும் பதி. உலகினில் நீண்ட காலமாய் உள்ள ஊர். புகழ்விளங்கும் பதி. கலைவல்ல புலவர்களுடைய இடரை நீக்கும் கொடையாளர்கள் வாழும் ஊர். சிறியோர் அறிவுமிக்க விருத்தரை அடி வீழ்ந்து வணங்குந் தலம். தெரிந்த அடியார்கள் சென்ற திசை தோறும் அவர்களை விரும்பி எதிர்கொள்பவர்கள் வாழும் தலம். நண்ணிவரும் நாவலர்கள் நாடோறும் புகழை வளர்க்கும் ஊர். நீதி நிறை செல்வர்கள் நித்த நியமங்களை விதிப்படி அநுட்டிக்குந் தலம். பாவத்தை விடுத்தார் மிக வாழுந் தலம். கலையும் பல மறையும் அறநெறியும் நிரம்பி னவர் வாழும் ஊர். வினையில்லவர் வாழும் ஊர். அழுதும், விழுந்தும், எழுந்தும், ஆடியும், பாடியும் தொழும் பக்தர்கள் வாழும் ஊர். பொழிலில் வித்தகர் வாழும் ஊர். கற்பகத் தருபோன்ற கொடையினர் வாழும் ஊர். அழகிய மாதர்கள் விளங்கும் அழகு நிறை ஊர். மயில், மான், மதி, இளவேய், வெயில் இவைகளை நிகர்க்கும் மாதர்கள் வாழும் பதி. பண் என்ன மொழிபெற்ற மாதர்கள் பாலகரைப் பாராட்டும் ஓசையைக் கேட்டு விண்ணவர்கள் வியப் படைந்து தத்தம் விமானத்தோடும் கீழிறங்கிக் கேட்குந் தலம். திருவுற்ற அந்தணர், பூசுரர், மறை முறையுணர் மறையவர், மெய்ம் மொழியே பேசும் நான்மறையோர், வித்தக மறையவர், நான்மறைவல்ல வேதியர், திறல்மிக்க வேதியர் வாழும் பதி, விரும்பும் பதி, வழிபடும் பதி. வித்தகரும், மறையொலி மிகுபாடலை இசையுடன் உரைப் பாரும் வாழும் ஊர். பிரமனை நிகர்க்கும் வேதியர்தம் வேத ஒலி நீங்காத தலம். கலியையவென்ற வேதியர்கள் வாழும் ஊர். கீத இசையோடும் கேள்விப் பெருக்குடனும் வேத ஒலி நீங்காத தலம், கேள்வி நிரம்பி நாடொறும் வேதம்

ஓதுப்பவரும், வேதியரும், வேள்விசெய் அந்தணரும் வாழும் ஊர். மறை, வேள்வி கற்றோர் நிரம்பி வாழும் ஊர். மறை முறைப்படி புல் பரப்பி, நெய் சமிதையுடன் தழல் வேட்டு உலகளிக்கும் பெரியோர் வாழும் ஊர். விதி வழி தவறுத மறையவர் வாழும் ஊர். வேள்விப்புகை நாளும் விண்ணிற் பொலியும் ஊர். மந்திர மறையொடு வளரும் வேள்விப் புகைபோய் விண்ணிற் படர அந்தப்புகை யிருளில் மந்தரமன்ன மாளிகைகள் ஒளிவிட்டு சோதி விளக்கென்னப் பொலியும் ஊர். மாதவர்கள் போன்ற மறையோர் வளர்த்த வேள்வியின் பயனுல் தீமை வராது இன்பமே பெருகும் பதி. தக்காரும், மறை வேள்வியில் தலையாயவராய் மிக்காரும் வாழும் ஊர். வேதி (வேள்வி மேடை) வீதிகளில் உள்ள ஊர். திருவிழா சதா நிகழுந் தலம். காலையும் மாலையும் விழாக்கள் நடைபெறுந் தலம். தெருவினில் வரும் பெருவிழாவின் ஒலி பெருகுந் தலம். கோயிலானது மேலிருந்து கீழே வரவழைக்கப்பட்ட கோயில்; அது "விண்ணிழி கோயில்" எனப்படும். இக் கோயிலில் இறைவர் நாடொறும் விருப்புடன் அமர்வர். மிழலையூர் அவர் இருக்கை. மழுவும் மானும் இன்றிப் பிரான் அமர்ந்தருளிய தலம். முழவொலி, சங்கொலியுடன் பல மறைகளையும் ஓதும் சிட்டர்கள் துதிசெய இறைவர் அமர்ந்தருளும் திருப்பதி.

(iii) **தலத்தில் வழிபட்டோர்:** இமையவர் தொழுது வழிபட்ட ஈசன் அமருந் தலம். காதலொடு தொழுத அன்பர்களுக்கு (மாதர்களுக்கு) இறைவன் அருளிய பதி. செல்வ மறையோர் பணிந்து வழிபடுந் தலம். செந்தமிழர், தெய்வமறை நாவர், நற்கலை தெரிந்தோர், முடிவிலாப் பெருங் குணத்தோர்கள்—அருச்சனைசெய்து வழிபடுந் தலம். வேதியர் வழிபட விண்ணிழி கோயிலில் இறைவன் அமர்ந்தருளுந் தலம். பிரமன் அன்ன மறையோர் இறைவனை வழிபடும் பதி. புரூருவா பணிசெய்த தலம். வேந்தர்கள் வந்து இறைஞ்சும் பதி. சலந்தரன் தலையை அரிந்து உருட்டிய சக்கரத்தைப் பெறவேண்டி அன்புடன் வழிபட்ட

திருமால் இறைவனைப் பூசிப்பதற்காக விண்ணினின்றும் கீழே இவ்வுலகுக்கு வரவழைத்த விமானம் (விண்ணிழி விமானம்) விளங்கும் ஊர். திருமால் ஆயிரம் பூக்கொண்டு பூசிக்கவேண்டித் தனது கண்மலரை இட்டு அருச்சிக்க இறைவன் அவருக்குச் சக்கரம் ஈந்த பெரும் பதி.

(iv) தலவழிபாட்டின் பயன்:—திருவீழிமிழலையை நினைய வல்லவர் அடியார் இணக்கம் பெறுவர்; லட்சுமிகரம் பெறுவர்; பகைவர்க்கு ஒரு சிங்கம்போலத் திகழ்வர்; அழகு நிரம்பப் பெறுவர், ஞான ஒளிபெறுவர், செந் நெறியிற்சேர்வர், கொடையாளராய்த் திகழ்வர், பிரமனைப் போலப் பொலிவர், புகழ்மகளின் துணைபெறுவர், மன்மத னைப்போல ஒளிபெறுவர், சனங்கள் மகிழ விளங்குவர். மிழலை யீசன் திருவடிக்கு அன்பர் துன்பிலர். மிழலை நாதரை விருப்புடன் மேவ வினை நம்மை மேவாது. அவரைச் சிந்தை செய்பவருடைய தீவினைகெடும். அவரைச் சித்தம் வைத்தவரே—மெய்த் தவத்தவராம்; அவர் திருவடியை நினைப்பவருக்கு யாதொரு துன்பமும் இல்லை; அவர் திருவடியைத் தொழுபவருடைய மேல்வினை நாடொறும் கெடும்: அவர் திருவடியை உளங்கொண்ட வரை உளங்கொண்டவருடைய வினை உடனே நீங்கும்; அவர் திருவடியைச் சிரத்திற் பூவெனக் கொள்பவரது புகழ் உலகிற் பரந்தோங்கும். அவர் திருவடியிற் பூவும் புனலும் தூவுவோர் நன்மையடைவர். அவர் அடியார் களுடைய பாவத்தை நசிப்பர்; இன்பங் கொடுப்பர். மிழலை இறைவனைத் தொழக் குறையில்லை. வீழிமிழலையார் என வல்வினை மாயும்; வீழிமிழலையான் என வினைகெடும். இறைவன் நாமம் "நமச்சிவாய" என்பதைச் சொல்வோர் நல்லவர். திருவீழிமிழலை நாதர் தம்மைத் தொழுது ஆடிப் பாடுவார் சிந்தையுட் சேர்வர். தம்மையன்றிப் பிற அறியா அடியவர்களுடைய சிந்தையுள் மன்னுவர். திருவீழிமிழலை யீசனை ஏத்தவல்லவருடைய வினைநாசமாம். திருவீழிமிழலை அடைபவரே அடியவர். அத்தலத்துக்கு அடியார்கள் கலந்து வருவார்கள். திருவீழி மிழலையை அறிந்தவர்

துன்பம் அறியார். அத்தலத்தைத் தமதாக நினைவாரும், புகழ்கேட் டுணர்வாரும் உயர்வார். அத்தலத்தை உளங் கொள்பவருடைய வினை ஒயும்; உணர்ந்தவருடைய தீவினை தேயும். அத்தலத்தைத் தொழ வல்லவர் செய்வதே தொண்டு; அவரே நல்லர்; அத்தலத்தைப் பரவும் அடியாரே அடியார். அத்தலத்தை நினையாதவர் நெஞ்சம் நெஞ்சல்ல.

மிழலைப் பெருமானே! உம்மைப் புகழ்வதே அழகு. உம்மை அறிபவர் விருப்பொடு துதிப்பர். உம்மை உணர் பவர் ஞானக்கண் பெறுவர். உம்மைப் போற்றுவோர் பக்தர்கள்; உம்மை ஏத்துவோர் புலன்களை வெல்வதைப் பொருளாகக் கொள்ளுவர்.

அடியீர்! புதுமலரிட்டுத் தொழுது உய்ய ஈசன் உறையும் கோயில் வீழிமிழலைக்கு வம்மின்!

தன் சரித்திரம் :—(சமணரை வாதில்வெல்ல) என்னைச் சிறிது மதித்து வருவித்த ஈசனே! மிழலையீர்! ஏசலுக்கு இடமில்லாமல் குற்றமற்ற காசினைக் கொடுத்தருளும்.

211. வெண்காடு :—கடலுங் கானலும் விளங்கும் ஊர். விண்ணளாவும் பொழிலில் கானலுக்கு அருகே ஞாழலும், செருந்தியும், புன்னையும், தாழை வெண்குருகும் தயங்கும். அருவியில் வெண்முத்து அலைபடும். வெள்ளைச் சுரிசங்கு உலவித் திரியும். பொழிலில் வண்டு பாடும்; மயில் நடமாடக் கடல் முழங்க வண்டு இசை முரலும். வெண் டாமரைமேற் கருவண்டு யாழ் வாசிக்கும். முடத்தாழை மலரின் நிழலைத் தடத்து நீரிற் கண்டு குருகென்று நினைத் துக் கெண்டை மீன் தாமரைப் பூவில் மறைவதைக் கண்டு முத்தம் நகைப்பதுபோலக் கதிர் வீசும், தாமரையில் அன்னம் மருவும். பண்மொழியால் இறைவன் நாமம் பல ஓதுங் கிளிகள் பனைமரத்தில் வீற்றிருக்கும். வேதத்து ஒலி கேட்ட கிளிகள் சொற்கள்

பயிலும். விளைகழனிப் பழனம் சூழ்ந்து விளங்கும். இத்தலம் வியந்தவர் பரவும் பதி. இறைவன் ஆடல் அமர்ந்த பதி. வேதியர்கள் விரும்பும் பதி. வேள்விப் புகையால் வானம் இருள்மிகு பதி. மந்திரங்கள் சொல்லியும், வேதம் ஓதியும் இந்திரன் வானவர்களுடன் வழிபட்ட திருப்பதி. மண்ணவரும் விண்ணவரும் நாளும் வணங்கும் இறைவன் வாழும் பதி. வெள்ளையானை (ஐராவதம்) பணிய அதற்கு இறைவன் அருள் சுரந்த பதி. தன்னை வழிபட்ட மாணியின் பொருட்டு, யமனை உதைத்து, அம் மாணிக்கு அமரர் உலகம் அளித்த பெருமான் வாழும் பதி. [யமனை உதைத்த இடம் திருவெண்காடு—என்பது ஒரு கொள்கை]. திருவெண்காட்டு ஈசன் திருவடிக்கீழ் மாலை, சந்தனம் இவைகொண்டு வழிபட்ட மறையவனை அடர்க்க வந்த காலனுடைய உயிர் நீங்கின பின்பு யமதூதர்கள் சிவனடியாரை அண்டிப் பிடிக்க அஞ்சுவர். திருவெண்காட்டில் வினையை விலக்கும் முக்குளங்கள் உள்ளன; இம் முக்குள நீரில் தோய்ந்தவரைத் தீவினை தோயாது. முக்குள நீரில் தோயின் பேய் அடையாது, பேய் அடைந்திருப்பின் அது பிரிந்துபோம்; பிள்ளைவரம் முதல் எண்ணிய எவ்வரமும் கைகூடும். ஐயுறவே வேண்டாம். திருவெண்காட்டான் என்று ஓதியவர் யாதொரு தீதுமிலர். வெண்காட்டான் எனறு சொல்லி உள்ளம் உருகாதவருடைய உணர்வை (இன்னதென்று) யாம் உணரோம். திருவெண்காட்டு அண்ணலை அடிதொழ அல்லல் இல்லை.

212. வெண்டுறை:—திண்ணிய மதில்சூழ்ந்த தலம். தேவி—வேனெடுங் கண்ணியுடன் இறைவன விரும்பி அமரும் தலம்.

213. வெண்ணி:—அழகிய ஊர். லட்சுமிகரம் திகழும் ஊர். நல்லவர் தொழும் தலம். வேதியர் தொழும் தலம். விண்ணவர் தொழுந் தலம். வெண்ணியில் அமர்ந்துறையும் பெருமானைச் சிந்திக்க வல்லவருடைய வினை ஓயும். வெண்ணி யண்ணலை அடைய வல்லார்க்கு அல்லல்

இல்லை. அவரை நினையவல்லாரிடம் வினை நில்லாது. அவர் மாட்டுத் தொண்டுபூண்டு அவரை ஏத்த வல்லார்முன் துயர் தோன்றாது. அவரை ஏத்தாதார் ஏழையர், பேய்கள். அவரை ஏத்துவோர் குற்றம் இலர். அவரைப் போற்றுவோர் ஆற்றல் உடையோர்.

214. வேட்களம்:—கடற் கானலுங் கழியுஞ் சூழ்ந்த தலம். கானலில் வண்டு பண்செய்ய மண நிறைபொழில் சூழ்ந்த தலம். உள்ளங் கலந்தெழுந்த வேத ஒலியிசையும் வேள்வியும் நீங்காத தலம். தேவி "நல்ல நாயகி" "வேட்கள நன்னகர்" எனப்பட்டுள்ளது.

215. வேட்டக்குடி:—கடலுங் கழியுங் கானலும் அருகில் உள்ள தலம். தாழைசூழ்ந்த கழிக்கானல் விளங்குந் தலம். காபாலியின் கனைகழலுக்குத் தொண்டு பூண்டு தொழுது இறைஞ்சுவதுபோலக் கடல் சுடர்ப்பவளத்தைத் திரைகொண் டெறியுந் தலம். இப்பியும் முத்தும் கானலில் எறிபடு தலம். வெண்மணற் பாங்கில் உள்ள தலம். திரை நீரில் மணிகள் உந்தப்படுந் தலம். கடற் சங்கு இடறிப் போய்ப் புன்னை நிழலில் அமருந் தலம். வெண்டாமரையும் வெண் குருகும் காணப்படும் கானலும் பொய்கையும் உள்ள தலம். திரைசேர் வயல் சூழுந் தலம். தேனார்ந்த மலர்ச்சோலை சூழுந் தலம். மீன் பிடிப்போர் வலையில் மீன் வாரி ஊரெங்கும் விற்குந் தலம்.

216. வேதிகுடி:—இங்கு மாமரப் பொழிலின் நிழலில் வண்டு இசைபாடும். பொழிலில் கமுகு, வாழை பொலியும். இணைவாளைகள் மடுவில் பிரியாது விளையாடும். வயல் வளப்பத்துடன் விளங்கும். இத்தலம் ஐம்புலன்களையும் வென்று, அறுவகைப் பொருளையும் தெரிந்து, இசைக் கிளவியால் வெஞ்சினம் ஒழிந்த பெரியோர் வாழும் பதி. மங்கையர்கள் மங்கலமாகக் கன்னியர்க்கும் ஆடவர்க்கும் மணம் இயற்றும் பதி. மடந்தையரும் ஆடவரும் கூட்டிய குழற்கலவியின் மணம் விண்ணிற் கமழ்ந்துலவும் ஊர். பாடல் பாடுபவரும், அடியார்களும், நீரும் பூவும்கொண்டு

திருநீறு பூசிப் பணிந்து புகழ்பெறு தலம். பாவலர்கள் பாடக்கேட்ட கொடையாளர்கள் வாழும் பெருஞ்செல்வ நெடுமாடங்கள் விளங்கும் வீதிகளை உடைய தலம். உலகம் (பொருள்களின்) விலையேற்றத்தால் தடுமாறினும் புகழே மிக்கு இழிவிலாதவரும், புலவருக்கு வெய்ய மொழி உரை செயாதவருமாய பெரியார்கள் வாழும் பதி. அமரர்கள் இறைவனைப் போற்றித் தம் அச்சம், இடர் நீங்கப்பெற்ற தலம்.

217. வேள்விக்குடி:—தேவியுடன் பகலிடம் திருத்துருத்தியில் அமரும் பெருமான் இரவிடம் திருவேள்விக்குடியில் உறைவர்.

218. வேற்காடு:—மாம் பொழில் சூழும் ஊர் (இது இன்றும் பிரத்தியட்சம்). சுவாமி—வேதபுரீசுரர். வேற்காட்டீசரை நினைமின். வேற்காட்டை (ஈறிலா மொழியால்) எழில் கூறினார்க்குக் குற்றம் வராது. வேற்காட்டைச் சிந்தை செய்வோர் உய்ந்தோர், தெள்ளியோர், தேவர் (என்னலாம்). வேற்காட்டைச் சொல்ல வல்லவர் பல்லாண்டு வாழ்வர். வேற்காட்டை வணங்கிப் பணிந்தேத்தப் பாவம் பாழ்படும். வேற்காட்டைப் பாட்டினாற் பணிந்தேத்த வல்லர் வினையை விரைவில் ஓட்டுவர்; பாடிப்பணிந்தார் சேடர், செல்வராவர். வேற்காட்டை அன்புடன் வழிபட நினைந்தவர் இறைவனது கழலைச் சேர்வது திண்ணம். வேற்காட்டின்மீது நூல் [கோவை முதலிய பிரபந்த வகைகள்] செய்து பணிந்தேத்த வல்லவரின் வினை மாயும். வேற்காட்டீசருக்கு மலர், சந்தனம், புகை (குங்குலியம் முதலிய) கொடுத்தவரைத் (தீங்கு) கேடு அணுகாது. [இத்தலத்துக்கு இத்தொண்டுகள் கவனிக்கற்பாலன]. வேற்காட்டைத் தரிசித்து நம்பன் கழலைப் பேணிச் (சம்பந்தப் பெருமானது) செந்தமிழைப் பாடக் குணமாம்.

219. வைகல் மாடக்கோயில்:—அன்னம் நடை பயிலும் ஊர். மணங்கொண்ட மலர்ப்பொழில் சூழ்ந்த தலம். மாதர்கள் பயிலும் ஊர். அறிவினர் வாழும் ஊர். மறையோடு எரியோம்புவோர் வாழும் ஊர். மாலை கொண்டு

மறையவர் வழிபடுந் தலம். உமையொடும் இறைவன் தங்கும் இடம். தேவி—கொம்பியல்கோதை. கோயில்—மாடக்கோயில்; வைகலுக்கு மேற்றிசையில் விளங்கும் கோயில்; உலகம் மகிழக் கோச் செங்கட் சோழன் செய்த கோயில்; அழகிய கோயில்; மதிதவழ் கோயில்; மேகம் அளாவு கோயில்; வைகலில் வாழ்பவர்கள் வலம்வரும் மலையன்ன மாடக்கோயில்; வடமலை யனைய கோயில். மால் அன்ன மணியணி மாடக்கோயில்.

220. வைகாவூர்:—தலத்தின் பெயர் "வைகாவில்" என்று சொல்லப்பட்டுள்ளது. வைகாவில்—மதியும் மேகமும் தோயும் பொழில்கள் சூழ்ந்த ஊர். வயல் சூழ்ந்த ஊர். தெங்கின் இளநீர் முதிய கமுகின்மீது விழ, கமுகின் தாறுகள் சிதறி வாழைமீது விழ, வாழை கனிகள் உதிர்ந்து வயலில் ஊறி சேறுசெய்யும் ஊர். சோலையில் தெங்கின் பழம் விழ வாளைகள் குதிகொள்ளும்; அதனால் தேன் மணங்கமழ மலர்கள் விரியும். வயலில் உள்ள தாமரை மலர்களிற் புக்கு வண்டுகள் விளையாடி இசைபாட அழகிய குயில்கள் மிழற்றும். பொழிலில் தாழை, புன்னை, ஞாழல், மாதவி மணங்கமழ வண்டு பல பாடும். இத்தலம் மைந்தரும் மாதர் பலரும் இசைபாடித் தொழுது சேருந் தலம். முழுதுணர்ந்த முனிவர்கள் இருபோதும் மருவித் தொழுது சேருந் தலம். அடியார்கள் வாச மலர்களைத் தூவி யணையும் பதி. அடியார்கள் திருநீறுபூசிச் சிந்தை செய்து பாடி, மலர்கொண்டு பூசிக்க அணையும்பதி. வையகமெலாம் மலர்கொண்டு காலையும், மாலையும், தொழுதேத்தும் அழகிய தலம். தேசமெல்லாம் பரவத் திகழும் பெருமான் வாழும் பதி, விரும்பும் இடம்.

## 83. தலங்கள் வழிபட்டுப் பேறுபெற்றோர் [238]

சிவபெருமானை அவ்வத் தலங்களில் வழிபட்டுப் பேறு பெற்றோருள் சகல சிவராசிகளும் அடங்கும். அவை தம்முட் சுவாமிகளாற் கூறப்பட்டன :

தேவர், பிற கணங்களுள் :—பார்வதி, மால், பிரமன், சரஸ்வதி, உருத்திரர், காளி, நீலி, இந்திராதி தேவர்கள், இயக்கர், கின்னரர், விஞ்சையர், சித்தர், எல்லாக் கணங்கள், சூரியன், சந்திரன், தருமன் (யமன்), வருணன், திக்குப்பாலகர், ராகு, கேது, பிரகஸ்பதி, ஐராவதம், பாரிடங்கள், தானவர்கள் (அசுரர்கள்), மந்திரம், மறை (வேதம்); முனி கணங்களுள்—சண்பை முனி, பராசரர் (கொச்சை முனி), மார்க்கண்டேயர், நீரின் மாமுனிவன் முதலிய தவத்தோர், முனி கணங்கள்; அரச வர்க்கத்தில்—ராமர், லட்சுமணர், கோச்செங்கட் சோழன், சிபி, புரூரவா, நளன், மங்கையர்க்கரசி; அடியார்களுள்—முருகநாயனர், நீலநக்கர், சிறுத்தொண்டர், குலச்சிறை (நாயனர்); மற்றும் பெரியோர்களுள்—சுக்கிரீவன், வாலி, அநுமான், சாம்புவான் முதலியோர்; பொதுவாக ஏனையோருள் கலைஞர், சைவர், பாசுபதர், செந்தமிழோர், மறையோர், வேடர்; பறவைகளுள்—சம்பாதி, சடாயு, அன்னம், தாரா, பகன்றில்; விலங்குகளுள்—மடங்கல், களிறு, பிடி, புலி, பசுக்கள், மான், கடுவன், மந்தி முதலியன.

## 84. தல விசேடங்கள் [228—233]

1. கொடையாளர், பெரியோர், கற்றோர் சிறப்புற்றிருந்த தலங்கள் [228 (i)] :—ஆக்கூர், திருவையாறு, கச்சி, சீகாழி, கோயில் (தில்லை), பழுவூர், திருப்பூவணம், திருமறைக்காடு, திருவல்லம், திருவீழிமிழலை, திருவேதிகுடி.

2. தமிழும் - தமிழரும் - சிறப்புற்றிருந்த தலங்கள் [228 (ii)] :—சீகாழி, கோயில் (தில்லை), திருச்செங்காட்டங்குடி, தேவூர், மழபாடி, திருமறைக்காடு, திருவீழிமிழலை.

3. மறையோர் சிறப்புற்றிருந்த தலங்கள் [228 (iii)] :—திரு அழுந்தூர், ஓமாம்புலியூர், சீகாழி, சாத்தமங்கை, தண்டலை நீணெறி, தலைச்சங்காடு, திருமருகல், திருவிழிமிழலை.

4. தேரும், தேர்வீதியும், தேர்விழாவும் சொல்லப்பட்ட தலங்கள் [229 (i)] :—திருவையாறு, கச்சி, திருக்களர், சீகாழி, கோயில் (தில்லை), சேய்நலூர், தெளிச்சேரி, திருநல்லூர், திருநறையூர், நாகை, திருப்புன்கூர், திருப்பூவணம், திருமறைக்காடு, திருவான்மியூர்.

5. மதிலின் சிறப்பு சொல்லப்பட்ட தலங்கள் [229 (ii)] :—திருவாரூர், திருவாலவாய், திருவையாறு, ஓமாம்புலியூர் கச்சி, சீகாழி, கோட்டூர், சிவபுரம், சிறுகுடி, தெளிச்சேரி, பாம்புரம், திருப்பூவணம், பெண்ணுகடம், திருமருகல். திருமறைக்காடு, வலிவலம், திருவான்மியூர், திருவிற்கோலம், திருவீழிமிழலை, திருவெண்டுறை.

6. பிரளயத்தை வென்ற தலங்கள் [230 (i)] :—காழி, முதுகுன்று.

7. தலவர்ணனை அதிகமாகப் பதிகங்களிற் காணப் படும் தலங்கள் [232] :—திருவிடைச்சுரம், குற்றாலம், கொடுங்குன்றம், திருக்கோணமலை.

குறிப்பு : தலங்களின் திருநாமங்களை ஓதி மலரிட்டுப் போற்றுதல் *[233]* ஒரு தொண்டாம்.

## 85. ஆற்றங்கரைத் தலங்கள் [226]

அரிசிலாற்றங் கரையில் :—அம்பர், அம்பர்மாகாளம், அரிசிற்கரைப் புத்தூர், சிவபுரம், திலதைப்பதி, பாம்புரம், பேணுபெருந்துறை என்னுந் தலங்களும், கடுவாய் நதிக் கரையில் குடவாயிலும், கம்பை யாற்றுக்கருகில் ஏகம்பமும்; காவிரி—காவிரியின் கால்களுக்கு அருகில், திரு ஆனைக்கா, திருஇடைமருது, திருவையாறு, கடைமுடி, கண்டியூர், காட்டுப்பள்ளி கீழை—மேலை, காழி, குடந்தைக்காரோணம்—குடமூக்கு, குரங்காடுதுறை வட—தென், சக்கரப்பள்ளி, சாய்க்காடு, சிவபுரம், செம்பொன் பள்ளி, திருச்சோற்றுத்துறை, திருத்துருத்தி, தென் குடித்திட்டை, நல்லூர், திருநாகேச்சுரம், திருநெய்த்தானம், பழனம், பாண்டிக் கொடுமுடி, புள்ளமங்கை, மங்கலக்குடி,

மயிலாடுதுறை, மாந்துறை, முல்லைவாயில்—தென், திரு வலஞ்சுழி, விளநகர் என்னும் தலங்களும், குடைத்தலை யாற்றுக் கருகில் கோகரணமும், கெடில நதிக்கு அருகில் திரு அதிகையும், திருமாணி குழியும், கொள்ளிடத்துக்கு அருகில் அன்பிலாலந்துறையும், கோட்டாற்றுக்கு அருகில் சீகாழியும், தாமிரபர்ணி சிந்துபூந்துறைக்கு அருகில் திரு நெல்வேலியும், நிவா நதிக்கு அருகில் நெல்வாயில் அரத் துறையும், பம்பை நதிக்கரையில் திருவாமாத்தூரும், பவானி) நதிக்கரையில் திருநணுவும், பாலாவியின் கரையில் (திருக்கேதீச்சுரமும், பாலாற்றுக் (பாலிக்கு) அருகில் திரு மாற்பேறும், பெண்ணை நதிக்கரையில் திருக்கோவலூரும், மண்ணி நதிக்கரையில் கண்ணார்கோயிலும், முகலி நதிக் கரையில் காளத்தியும், (மணி) முத்தாற்றங் கரையில் திரு முதுகுன்றமும், (முள்ளி) யாற்றுக்கு அருகில் கொள்ளம் பூதூரும், வைகை யாற்றுக்கு அருகில் ஆப்பனூர், ஏட கம், திருப்பூவணமும் இருப்பதாக நூலகத்து விளங்கு கின்றது.

## 86. கடற்கரைத் தலங்கள் [227]

இடும்பாவனம், இராமேசுரம், திருவுசாத்தானம், திருவொற்றியூர், கடிக்குளம், கலிக்காமூர், கழிப்பாலை, காவிரிப்பூம்பட்டினம், காழி, கேதீச்சுரம், கோகரணம். திருக்கோணமலை, திருச்சாய்க்காடு, தருமபுரம், தெளிச் சேரி, நல்லூர்ப்பெருமணம், நாகை, திருப்பாதிரிப் புலியூர, திருப்புனவாயில், மயிலை, மயேந்திரப்பள்ளி, மறைக்காடு, முல்லைவாயில்—தென், திருவான்மியூர், திருவீழிமிழலை, திருவெண்காடு, திருவேட்களம், திருவேட்டக்குடி என்னும் 28 தலங்கள் கடலுக்கு அருகில் உள்ள தலங்கள் என்பது விளங்குகின்றது.

## 87. தலத்துக்கு ஏற்ற சுவாமி திருநாமங்கள் [239]

இறைவனைக் காட்டும் பதங்களுள் அந்த அந்தத் தலத் துக்கு ஏற்ற பதங்களைச் சுவாமிகள் உபயோகிக்கின்றனர்.

உதாரணமாக:—அரத்துறை அடிகள், ஆமாத்தூர் அம்மான், ஆலவாய் அண்ணல், குடமூக்கிற் குழகன், திருநெல்வேலிச் செல்வர், புகலிப் புண்ணியன், வலஞ்சுழி வாணன்.

## 88. தலம் கோயிற் பெயர், [230 (ii), 234]

காரோணத் தலங்களாகக் குடந்தையையும் நாகையையும்; வீரட்டானத் தலங்களாக அதிகை, கடவூர், கண்டியூர், கோவலூர், பறியல், விற்குடி என்னுந் தலங்களையும்; பெருங்கோயில், மாடக்கோயில் உள்ளனவாக அழுந்தூர், ஆக்கூர், கீழ்வேளூர், குடவாயில், நல்லூர் (மலைக்கோயில்), பெண்ணாகடம், வைகல் என்னுந் தலங்களையும் சொல்லியுள்ளார்,

ஆவூரிற் பசுபதிச்சரமும், காவிரிப்பூம்பட்டினத்திற் பல்லவனீச்சரமும், திருச்செங்காட்டங்குடியிற் கணபதீச்சரமும், நரையூரிற் சித்தீச்சரமும், திருப்பனந்தாளில் தாடகேச்சரமும், திருப்புகலூரில் வர்த்தமானீச்சரமும், திருமயிலையிற் கபாலீச்சரமும், மாதோட்டத்திற் கேதீச்சரமும் திருக்கோயிலின் பெயராக எடுத்துக் கூறியுள்ளார்.

## 89. சுவாமி பெயர்-தேவி பெயர் முதலிய [235]

சம்பந்தமூர்த்தி தம் பதிகங்களில் ஆங்காங்கு அவ்வத் தலத்துக்கு உரிய சுவாமியின் திருநாமத்தையோ, தேவி திருநாமத்தையோ, ஸ்தல விருட்சத்தையோ, தீர்த்தத்தையோ எடுத்துக் கூறுவர். உதாரணமாக திருவக்கரைப் பதிகத்தில் சந்த்ரசேகரர் எனச் சுவாமி திருநாமத்தையும், அண்ணாமலைப் பதிகத்தில் உண்ணாமுலை எனத் தேவி திருநாமத்தையும், திருவெண்காட்டுப் பதிகத்தில் முக்குளநீரையும், திருமயிலைப் பதிகத்தில் புன்னை விருட்சத்தையும் எடுத்துக்கூறியுள்ளார்.

## 90. தலங்களும் வாத்தியங்களும் [289]

ஸ்ரீ சம்பந்தப் பெருமான் தலயாத்திரை செய்த பொழுது அவ்வத்தலங்களில் முழங்கின வாத்தியங்களைப் பற்றிக் கூறுவதாவது:—(1) அன்பிலாலந்துறையில்:—முழவதிர மடமாதர் நடமாடினர். (2) கடம்பூரில்:—நெடுமாடங்களில் மாதர்தங் கலையொலியும், சங்கொலியும், பறையொலியும் முழங்கின (3) கூடல் ஆலவாயில்:—அரசர் வருகையும் அப்பொழுது மணியொலி, சங்கொலி முரசொலியும் ஓயாது முழங்கின. (4) கோட்டாற்றில்:—திருவிழாவில் குழலும் மொந்தையும் வாசிக்கப்பட்டன. (5) தேவூரில்:—மாதர்தம் மாளிகையில் யாழ் இசை விளங்கிற்று. வீதிகளில் தேச ஒலி வீணை யாதிய இயங்களின் கீதங்கள் நிறைந்தன. மாதர்கள் நடனம் ஆட, முரவம் வாசிக்கவல்லவர்கள் அதை வாசித்தனர். (6) நல்லூர்ப்பெருமணத்தில்:—சதா நட்டக் கொட்டொலி கேட்டது. (7) நள்ளாற்றில்:—முழவொலியும் விழவொலியும் முழங்கின. (8) நறையூரில்:—தேர்த் திருவிழாவில் வீதியில் ஒலிக்கும் முழவொலியும் விழாவொலியும் திசையெலாம் சென்றன. (9) நாகைக் காரோணத்தில்:—மாட நெடுவீதியிற் சதா முழவொலி பொலிந்தது. (10) பராய்த்துறையில்:—பறையுஞ் சங்கும் ஒலித்தன. (11) பரிதிநியமத்தில்:—பறை யொலியும் சங்கொலியும் விளங்கின. (12) பனையூரில்:—விழா நிறைந்து பறை ஒலித்தது. (13) மங்கலக்குடியில்:—பறையொலியுடன் பாடல், ஆடல் மல்கின. (14) மருகலில்:—சதா பாடல், முழவும், விழவும் பொலிந்தன. (15) மழபாடியில் பாட்டொலியும் முழவு ஆதிய பல ஓசைகளும் மலிந்தன. (16) மறைக்காட்டில்:—சங்கு, படகம், தேர் விழாவின் ஒலி, மாதர்களின் இசை பாடல் ஒலி முழங்கின. (17) மாகறலில்:—காலையும் மாலையும் துந்துபிகள், சங்கு, குழல், யாழ், முழவு முழங்கின. (18) முதுகுன்றத்தில் (விருத்தாசலத்தில்):—மண முரசு பண்ணும் ஒலித்தது. நாடகசாலையில் மங்கையர் நடனம் முழவொலியுடன் திகழ்ந்தது. (19)

வலம்புரத்தில்:—பறையொலி வகைவகைப் பண்ணில் ஒலித்தது. முழவொலி நித்தமும் ஒலித்தது. (20) வேணுபுரத்தில்:—(சீகாழியில்):—முழவொலியும் விழவொலியும் சதா முழங்கின.

## 91. தவம், தவத்தினர்-கற்றோர்-அவர் நிலை [58, 243, 244]

(1) கலைவல்ல புலவர்கள், கற்றல் கேட்டல் உடையார், தமிழ்க்கலை தெரிந்தவர், செஞ்சொலாளர்கள், நாவலர்கள், பாவலர்கள்; பரமனைப் பாடுவார், பன்னூல் விரித்தவர், புலவாணர்—அக்காலத்திற் பலரிருந்தனர். புலவர்கள் வறுமையிற்படா வண்ணம் கொடை பயில் பெரியோர் பலர் இருந்தனர். புலவர்கள் அக்காலத்தில் நல்ல மதிப்புள்ள நிலையில் இருந்தனர். உலகம் செழிப்பற்ற பஞ்சகாலத்தும் புலவர்மாட்டு வெய்யமொழி கூருத புகழ்மிக்க பெரியோர்கள் இருந்தனர்.

(2) தவத்தினர், பேரியோர், ஞானிகள், புலன் வென்றோர்:—உயர் ஞானத்தர், ஊனமிலார், ஏதமிலார், கோதிலார், பழியிலார், மாசிலோர்கள், எழுமையும் விழுமியர், ஒள்ளியர், சிரிஞர், பண்பினர், புண்ணியர், பொறையார், கேடில் எண்ணத்தர், கொள்கையினலுயர்ந்த நிறையுடையார், சீலம் மிகு சித்தத்தவர், செம்மையினர், தலைப்படுந் தவத்தார், தவமலி பத்தர், துலை யெடுத்த சொற்பயில்வார், நடுவுணர் பெருமையர், நான்மறையை முழுதுணர்ந்தார், நித்த நியமங்கள் விதிப்படி நின்றவர், நிலைகொண்ட மனத்தவர், புலன்கள் தமைவென்ருர், மனந்தளராத் தகுதியர், மெய்த்தவத்தோர், வாய்மை வழுவாத மொழியார், வெஞ்சினம் ஒழித்தவர்கள்—ஆகிய பல பெரியார் வாழ்ந்திருந்தனர்.

(3) தவமும் தவத்தவரும் [244];—காழிநாதர் நாமத்தைக் கற்றல் நற்றவம். அவர் திருவடியை உற முயல்வது

தவம். அவரை வணங்க, அவர் மழபாடியை வணங்க, அவர் திருவடியைப் பேணத் தவமாம். சம்பந்தப் பெருமான் பாடிய தமிழில் வல்லவர்களுடைய அடியைப் பேணுதல் தவமாம். தவநெறி வேண்டில் திருப்பருப்பதம் பரவுக, சிவபுரம் வழிபடுக, தேவாரம் கற்க-ஓதுக. பழிப்பாய வாழ்க்கை ஒழியத் தவஞ் செய்யத் தக்க இடம் கடந்தை. அத்தலத்துத் தூங்கானை மாடத்தைத் தொழுமின்கள். திருவீழிமிழலையைச் சித்தம் வைப்பவர் மெய்த்தவர். பாதிரிப்புலியூரை வணங்குந் தவமில்லிகள் பிணியாக்கையைப் பெறுவார்கள். தூபம், தீபம், பாட்டு, அவி, மலர் சேர்த்து இறைவன் திருநாமங்களை நாவினில் ஓதுபவரே தலைப்படுந் தவத்தோர்.

## 92. திருஞான சம்பந்தரைப் பற்றிய செய்திகள் [248—257]

(1) பெயர் [248 (20)] :—சம்பந்தன், ஞானசம்பந்தன், ஞானன், திருஞான சம்பந்தன், பந்தன்—என்னும் பெயர்களால் தம்மைக் குறித்துள்ளார். அவர் இருந்த ஊர் காரணமாகவும், அவர் அழகு, குணம், அறிவு, நிலை, கோத்திரம், தமிழ்ஞானம் முதலிய காரணமாகவும் வந்துள்ள அவர் பெயர்களுட் சில கீழ்வருவன :—அணிகொள் சம்பந்தன், அந்தமில் ஞான சம்பந்தன், அழகார் சம்பந்தன், இசைஞான சம்பந்தன், இணையில் சம்பந்தன், கலைஞான சம்பந்தன், கவுணியன், கழுமல நகரிறை, காழிக் கவுணியன், காழி ஞான சம்பந்தன். காழிப் பூசுரன். கொச்சை வேந்தன், சண்பையர்கோன், சந்தங்கொள் சம்பந்தன், சிரபுரக்கோன், தமிழ் ஞானசம்பந்தன், தமிழ் விரகன், தோணிபுரத் தலைவன், நல்ல கேள்வி ஞான சம்பந்தன், நலஞான சம்பந்தன், நிகரிலி, பழுதில் ஞான சம்பந்தன், பிரமபுரத் தலைவன், புகலித் திருஞான சம்பந்தன், புறவ நன்னகர் மன்னன், பூந்தராய்ப் பந்தன், பொன்னி நாடன், மறைஞான சம்பந்தன், மறைஞான ஞானமுநிவன், முத்தமிழ் விரகன், மெய்ஞ்ஞான சம்பந்தன்,

மெய்ஞ்ஞானப் பூசுரன், வெங்குரு நன்னகரான், வேதிய ரதிபதி.

(2) சம்பந்தர் ஊர், புகழ், கோத்திரம், தமிழ், இசை [248(3), (4), (19), (21), (22), 255]:—'கழுமலம் நாம் அமரும் ஊரே' என இவரே தமது ஊர் சீகாழி (கழுமலம்) எனக் குறித்துள்ளார். இவர் கவுணிய கோத்திரத்தவர், சிவபிரானை ஆதரித்ததால் இவர் புகழ் ஞாலமெல்லாம் பரவி நின்றது, நிற்கின்றது., சங்கத் தமிழில்—இனிய நல்ல செந்தமிழிற் பாடவல்லவர். "தமிழ் நாதன் ஞான சம்பந்தன்' எனவும், "நற்றமிழ்க் கின்றுணை ஞான சம்பந்தன்" எனவும் இவர் தம்மைக் குறித்துள்ளதால் இவருக்கும் தமிழுக்கும் உள்ள பொருத்தம் நன்கு வெளி வரும். முத்தமிழினும் வல்லவராதலின், 'முத்தமிழ் விரகர்' எனவும் தம்மாலே குறிக்கப்பட்டுள்ளார். நாத் திறம் படைத்தவர். சிவபிரான் திருவருளால் தம் பதிகங்களை நல்ல சந்தத்திலும் பண்ணிலும் இசையுடனே தாம் பாடினதாக உரைத்துள்ளார்.

(3) கலை ஞானம், கேள்வி ஞானம் [251]:—பல கலைகளிலும் வல்லவர். ஈசனருளால் சந்தப்பாக்களைத் தமிழிற் பாட வல்லவர். நல்ல கேள்வி, ஞானம் நிரம்பியவர்.

(4) மறை ஞானம் [257]:—ஆறங்கம், நால்வேதம் வல்லவர்; மறைபயிலும் நாவர்; மறை ஞானம் வல்ல தமிழ் விரகர், வேதப்பொருளையே தமிழ் மறையாகப் பாடினவர்.

(5) ஞானம் [254]:—இறைவனருளால் சிவஞானம், குறைவில் ஞானம், தமிழ் ஞானம், மறை ஞானம், மெய்ஞ் ஞானம் யாவுங் கிடைக்கப் பெற்றவர்.

(6) அழகு [248(2)]:—சம்பந்தர் அழகர். கண் ணிறைந்த கோலத்தவர்.

(7) குலம் [248 (1)] :—எரியோம்பும் தொழில் வாய்ந்த அந்தணர் குலத்தவர். அந்தணர்க் கதிபதி. அந்தணர்க்கு உரிய தாமரை மாலை யணிந்தவர்.

(8) சீர், குணம், முதலியன [248 (13, 16)] :— சம்பந்தப் பெருமான் பகைமையற்ற நெஞ்சினர். பேரும், புகழும் நிறைந்தவர். கலிகடந்த கையர். கற்றோரெல்லாம் இவரைத் தொழுது வணங்குவர். கைதவ மிலாதவர். ஞாயிறுபோலும் புகழொளி வாய்ந்தவர். சீரும், திருவும், நலமும், திறமும், அன்பும் உடையவர். தூமொழியர்; அசையா நலத்தவர்; உலகுக்கு நன்னடை கற்பிப்பவர்; நல்லோர்க்குத் துணையாம் பெருந்தன்மையர்; பொய்யிலார். அருவினையேன் எனத் தம்மையே நொந்து கொள்வார்.

(9) சம்பந்தரது திடமும் தீரமும் [248 (17)] :—தேவி தந்த ஞானப்பால் அடிசிலை உண்ட தெய்வமாதலின் இவருக்கு எதையும் திடம்பட ஆணையிட்டுக் கூறும் ஆற்றல் இருந்தது. 'யாம் பாடிய மாலைகொண்டு சிவபிரானைச் சிந்தைசெய்ய வல்லவர் இமையோருலகு எய்தி அரசாளுவர்; இது சரதம்; யாம் ஆணையிட்டுரைக்கின்றோம்' எனச் சிற்சில இடங்களில் திடம்பட உரைத்துள்ளார்.

(10) சம்பந்தரும் சிவனும் [248 (7)-(12)] :—சிவபிரானை 'எம்மான் எனக்கு எந்தை', 'என் அப்பன்' எனக் குறித்துள்ளார்: சிவபிரானது திருவொளியே தான் என்றும், நாள்தோறும் நனவிலும் கனவிலும் சிவவொளி தன்னிடம் நிலைபெற்று விளங்கும் என்றும், தனதுரை சிவனுரையே என்றும், சிவபிரான் தன்னிடம் ஒன்றியுள்ளாரென்றும், (சிவபிரான்போலத்) தான் 'அந்தம் (முடிவு) இலான்' என்றும் கூறியுள்ளார்.

(11) சம்பந்தரது பக்தி [248 (6)-(12)] :—சிவபிரானிடத்து அளவற்ற பக்தி வாயந்தவர் இவர் என்பது சிவபிரானை எங்கடவுள், எங்கள் பிரான், எம் அண்ணல், எம் அரசு, என்பொன், என் மணி, நங்களிறை, நம்பெருமான்

எனப் பலவாறாக இவர் பாராட்டி யுள்ளதால் ஏற்படும். 'என்நேச' - என நேசபாவமும் காட்டியுள்ளார். சிவபிரான் தன்னை ஆட்கொண்டதை 'எமை ஆளுடைய அண்ணல்,' 'என்னை ஆளுடையான்', 'தோற்றங்காட்டி யாட்கொண் டீர்', 'விலையிலாட் கொண்ட விகிர்தன்'-எனப் பலவாறாகக் குறித்துள்ளார்.

"என இறைவனை அடையும்வழி யாதென அறிந்து அவ்வழியிற் பரவி அவரது திருவடியைச் சிந்திக்கின்றேன்; பெண்ணொரு பாகங் கொண்ட பிரானையன்றி வேறு அறி யேன் நான், அப் பிரானே என் தலைவர். சிவவேடத்தையே பெருமையாக நினைப்பேன்; சிவ சரிதையையே பரவி நின்று ருகுவேன்; சிவனைப் பற்றிப் பேச்சு ஒழிய வேறு பேச்சு பேசேன்; "அர (ஹர) எனப் போற்றும் பணியில் வல்லவன் நான்" மறந்து போகும் தன்மையை உடைய மனத்தை மாற்றி, ஆவியை வற்புறுத்தி, பிறப்பில் பெருமான் திரு வடியையே ஏத்திப் பணிவேன்; சிவபிரான் திருவடியைச் சென்னிமிசைக் கொண்டொழுகுவேன். என் உள்ளம் ஏகம்பம் உடையானையே உள்கும். காழிப்பிரான் திருவடி யையே நான் பரவுவேன். அவர் திருவடியே எனக்கு அணி; என்ன கஷ்டம் வந்தபோதிலும் ஈசர் கழலையே சிந்தை செய்வேன். சிராப்பள்ளியானைக் கூற என் உள்ளம் குளி ரும். அவர் தம் திருவடித் தியானத்தில் என் உள்ளம் குளிர்ந்த போதெல்லாம் நான் உகந்து உகந்து அவரை உரைப்பேன். அவர் திருவடியை என்னால் மறக்க முடி யாது. என் உள்ளம் சோர்வுற்றிருந்தாலும் சரி, கிளர்ச்சி யுற்றிருந்தாலும் சரி-சதா ஈசன் திறத்தையே நான் சொல்லுவேன்" என்றும், "மூலத்தடம் மூழ்கிய போகங் களாகிய சகலத்தையும் விலைக்கு ஆவணங் கொண்டு என்னை ஆண்டருளிய விரி சடைப் பெருமானே! எனக்கு இடர் வரினும், நோய் வரினும், யான் தளர்ச்சி உறினும், உன் கழலையே தொழு தெழுவேன்; நான் உண்ணினும், பசிப்பினும், உறங்கினும், உன் திருவடிகளையே என் நா உரைக்கும், உன் வழியடியேனாகிய நான் உன்னைப் பரவுதல்

ஒழியேன்; உன்னை யன்றி எனக்கு ஆதரவு இல்லை, உன் திருவடியல்லாது என் சிந்தை வேறு உணராது, நனவு கனவு எப்போதும், ஈசா, உன்னை வழிபடுதலை மறவேன்; பலவற்றையும் அவமே நினைக்கும் மனத்தை, துன்பம் அடையாதிருக்கவேண்டி, வலித்திழுத் தடக்கினேன். உன்றன் திருநாமத்தையே நாளும் நவிற்றுவேன். நான் வாழினும், சாவினும், வருந்தினும், விழினும், ஈசா! உன் கழலை நான் விடுவேனல்லேன்'' என்றும், இவ்வாறு பல இடங்களில் தமது திடபத்தியைச் சம்பந்தப் பெருமான் தெரிவித்திருக்கிறார். இறைவர் தமது உச்சியிலும், சென்னியிலும், கண்ணிலும், நாவிலும் சிந்தையிலும் வீற்றிருப்பதாகவும், காலையும் மாலையும், தமது உள்ளத்திற் புகுந்து அவர் விளையாடுவதாகவும் கூறியுள்ளார்.

(12) இவர் பாடிய பதிகங்களின் விவரம் [313]:— கிடைத்த பதிகங்கள் வரையில்—23பண்ணிற் பாடியிருக்கின்றார். முதல் திருமுறை 8 பண்களும் 137 பதிகமும், இரண்டாம் திருமுறையில் 6 பண்களும் 122 பதிகமும். மூன்றாந் திருமுறை 9 பண்களும் 125 பதிகமும் உள்ளன. இவை தம்முள் பண் இந்தளத்தில்தான் அதிக பதிகங்கள் (39 பதிகம்) உள்ளன.

(13) செய்யுள் நடை:

(i) நகைச்சுவை முதலிய [248 (18), 290, 292]:—

சில இடங்களில் வேடிக்கையான கருத்துக்களை வெளியிட்டுள்ளார். உதாரணமாக:—

சிவபிரான் திருவடி இருவர் இதயத்தில் திகழ்கின்றது—ஒன்று என் இதயத்தில், மற்றொன்று காலன் இதயத்தில் என்கின்றார் (காலனை இதயத்திற் சிவபிரான் உதைத்தாராதலின்.)

(ii) நகைச்சுவைதரும் அடிகள், வேடிக்கை அடிகள் [248 (18), 290, 292]:—

### I. (சிவனை நோக்கிக் கூறுவது)

சிவனே ! நீ யாவரும் ஏச வெண்டலையிற் பலி கொள்வது இல்லாமை காரணத்தாலோ ? உன் மார்பில் உள்ள அணிகலத்தை (பாம்பை) நீ விற்றாலும் வாங்குவார் இல்லை; "என்னிடம் விலையுள்ள அணிகலன்கள் இல்லை" யென்றோ நீ மழுவையும் சூலத்தையும் ஏந்தி யுள்ளாய் ! பொருள் இல்லாமையால் தான் போலும், உனக்கு வேண்டியவர்களை அண்டங்கள் ஆளவைத்துவிட்டு நீ மாத்திரம் காட்டில் வாழ்க்கை கொண்டு பலிக்குத் திரிகின்றாய் ! விட்டுவிட்டுப் போகக் குடியிருப்பு இடம் இல்லாமையால் தான் நீ பலி கொள்ளப் போகும்பொழுது கூட உன் பாகத்திலே உன் மனைவியை வைத்துக்கொண்டு செல்கின்றாய். அங்ஙனம் உமையை விட்டு நீ பிரியாதிருந்தும் நீ முனிவன் எனப் பேர் பெற்றாய் ! மங்கையைப் பாகம் வைத்தே மாதவம் பயிலும் வேடங் கொண்டாயே, அது எப்படி ? கல்மங்கை பங்கனாயினும் நீ பொல்லானல்லை. ஐம்புலனையும் வென்றும் ஒருபால் மாதை விரும்புகின்றாயே, அது எப்படி !

### II. உலகோரை நோக்கிக் கூறுவது

1. ஈசனைச் சேராதவர்மேல் வினைகள் சேரும்.
2. காழியை மருவாதவர் வான் மருவார்.
3. முதல்வன் பாதத்தைப் பற்றினவரைப் பாவம் பற்றாது.
4. விழிமிழலையை அறிவார் அவலம் அறியார்.

**வேடிக்கை அடிகள் :**

(1) "அங்கையில் அங்கழல் ஏந்தினான்." (அங்கழல் என்பதை அங்கு அழல் எனவும் : அம் கழல் எனவும் பிரித்துப் பொருள் கண்டுணர்க.

(2) "அங்கையிற் சென்னி வைத்தாய்"—[இதில் சென்னி-பிரமகபாலம் எனப் பொருள் கொள்வதோடு கையில் தலையை வைத்தாய்-எனவுந் தொனிக்கும்.]

(iii) வியப்புக் குறிப்பு அடிகள் (1) நீ எங்கும் நிறைந்தவனாயிருந்தும் துருத்தியில் அடங்கி வாழ்கின்றாயே; அது எப்படி ? சொல்.

(2) நீ பெண்பால் இடம் கொண்டும் துருத்திபுக்கு யோகியாய் இருக்கின்றாயே; இதென்ன மாயம்!

(துருத்தி—ஒருதலம்; உலையூது கருவி)

(iv) இகழ்ச்சிக் குறிப்பு:—ஆமாத்தூரை நித்தம் நினையாதவர் நெஞ்சமும் ஒரு நெஞ்சா? ஆமாத்தூர் எம்மான் என்று ஏத்தாதவர் பேயரிற் பேயர். ஆமாத்தூர் அம்மானது கழலைப் பரவா வாழ்க்கையொரு வாழ்க்கையா? பொலிவு ஒரு பொலிவா? வேடம் ஒரு வேடமா? ஆமாத்தூர் அம்மானைக் காணாத கண் காணாத கண்ணே, கூறாத நா கூறாத நாவே, கேளாத செவி கேளாத செவியே; நம்பன் நாமம் நவிலாத நாவை நா என்னலாகாது; வீழிமிழலை நினைவு இல்லாதவர் நெஞ்சம் நெஞ்சல்ல.

(v) சம்பந்தர் செய்யுள் நடையிற் சில சொற்பிரயோக விசேடம் [15, 50]:—சுவாமிகள் அடிக்கடி உபயோகிக்கும் பதங்களுள் "அன்றியும்போய்" [பலி கொள்வதன்றியும் போய், கூறது அன்றியும் போய், நிகழ்மதியன்றியும் போய், காரரவன்றியும் போய்—47-ம் பதிகம்] என்பது போல "ஒன்று" என்பதும் கூறத்தக்கது.

ஏருதொன்று உகைத்து, படை யொன்றேந்தி, பன்றி வெண் கொம்பொன்று பூண்டு, பிறையொன்றுடையவன், சிலையொன்றுடையார், விடையொன்றேறி, மழுவொன்றேந்தி, கொடியொன்றுடையார்,—என்று கூறி 'ஒன்று' என்னுஞ் சொல்லை ஆளுவர்.

(14) சம்பந்தரும் புறச்சமயிகளும் [256]:—புறச்சமயிகளை நினைந்து, ஐயோ! சைவத்தின் உண்மையை உணர்ந்து சிவபெருமானை வழிபட்டிலரே என வருந்துவர். ஏனோ சமணர், தேரர், ஆதியோர் எம்பெருமானது சீரை எள்ளளவும் நினையாதிருக்கின்றனர் என நைவர்; அவர்களுக்கு ஞானம் ஊட்டவும் முடியுமோ? அது காணாதாற்குக் காட்டுவதாகுமே—என ஏங்குவர். எண்ணிறந்த அமணர்களும் சாக்கியர்களும் சிவபெருமானை நினையாது

மயங்குகின்றார்களே—இதுவும் சிவனது கூத்துப் போலும் என வியப்பர். அமணராதியோர் செய்த உபதேசங்கள் நல்லுபதேசங்கள் அல்ல; அவை விஷத்திலுங் கொடியன என்பதை நம்மவர் உணர்ந்திலரே எனக் கிலேசங் கொள்வார் அவர்களும் ஏன் சிவபெருமானைத் தொழுது வணங்கிப் புண்ணியம் பெறக் கூடாது எனச் சிந்தனை கொள்வர். சிவபிரானை உள்ளத்தே நினைந்து உருகாதவருடைய ஞானத்தை யாம் அறிகிலேம்—எனக் கவலுறுவர்.

(15) சம்பந்தரும் அடியார்களும் [253]:—சம்பந்தப் பெருமானுக்குச் சிவனடியார்களிடத்தே சிறந்த பக்தி உண்டு. கச்சி ஏகம்பனை விரும்புவோர் எவரோ அவரே என் தலைமேலார் என்கின்றார். சிவபிரானது லீலைகளையெல்லாம் அடியராயினீர், யான் அறிகின்றிலேன்—நீங்கள் எனக்கு விளக்குங்கள் என அடியார்களை வினவுவர். சிவபெருமானே! எங்களை ஆட்கொண்டு எங்கள் விண்ணப்பங்களைக் கேளாதிருப்பது நியாயமோ? உன் அடியார்கள் பசியால் வருந்த நீ இரக்கங் கொள்ளாதிருப்பது தகுதியா—என அடியார்கள் பொருட்டுச் சிவனுடன் வாதும் ஆடுவர்.

(16) சம்பந்தரும் ஸ்தல பக்தியும் [248(15)]:—ஆலவாய், திருவாஞ்சியம், திருப்புன்கூர், கானப்பேர், குற்றாலம், சீகாழி, வடுகூர் ஆதிய தலங்களையே என் உள்ளம் நாடும், என் நா பிதற்றும் எனக் கூறுவர்.

(17) சம்பந்தரது வேண்டுகோள்கள் [248(23)]:—இறைவா; அஞ்சல் என்று உரைத்தருளுதி! எனக்குக் கொடுப்பதற்கு ஒன்றும் இல்லையோ - இதுவோ உனதருள் ; யான் இளைக்கும் போழ்தும், வருந்தும் போழ்தும் என்னை என்றருளுதி. நிலையான பொருளை நான் கொள்ளும்படி நீ நினைத்தருளுதி—என வேண்டுவர்.

(18) சம்பந்தமூர்த்திகள் காலம் [248(14)]:—சோழன் மகளாகிய மங்கையர்க்கரசியை மணந்த பாண்டியன்

காலத்திருந்தவர் சுவாமிகள் இவர் காலத்திலிருந்து இவராற் சொல்லப்பட்டவர்கள்—மங்கையர்க்கரசி, அவள் கணவன் பாண்டியன் (நின்ற சீர்நெடுமாறன்), மந்திரி குலச்சிறைநாயனர், சிறுத்தொண்டர், முருகநாயனர், நீலநக்க நாயனர், பாணர் (நீலகண்டயாழ்ப்பாணர்), தில்லைவாழ்ந்தணர். இவர் காலத்துக்கு முன்பிருந்து இவராற் பாராட்டப்பட்டவர்கள்—கண்ணப்பர், சண்டேசுரர், கோச்செங்கட் சோழன், அமர்நீதிநாயனர், நமிநந்தியடிகள், புகழ்த்துணை நாயனர். இவர் காலத்தில் மும்முடி மன்னர் (சேர சோழ பாண்டியர்) இருந்தனர். இவர்கள் மூவரும் சைவ நெறியைக் கைப்பற்றி உய்வான் வேண்டிச் சம்பந்தப் பெருமான் கடவுளை மூக்கிச்சுரத்துத் தேவாரத்திற் பரவியுள்ளார். (பதிகம்-256).

(19) சம்பந்தர் சரித்திரம் (அவர் கூறியபடி) [248(5)]:—(i) தனது தோற்றத்தின் (பிறப்பின்) காரணம்: சமணரும் சாக்கியரும் எப்பொழுதும் சைவத்தைப் பழித்து நின்றனர். வாதில் அவர்கள் வாய் மடிந்து நிற்கவும், சைவம் ஓங்கவும் கருதி இறைவன் எனக்குத் தோற்றந் தந்தனர் (மண்ணிற் பிறக்கும்படி செய்தனர்). சிவபிரானது திருவடியை மறவாதிருந்த என்னை மயங்கச் செய்து இம் மண்ணிற் பிறக்குமாறு காட்டினர். உலகிற் பழி பெருக மலம் பெருகிற்று. அம்மலம் அழிய வேண்டும் என்பது சிவன் கருத்து. அக் கருத்தை நிறைவேற்ற யான் வந்துள்ளேன். எனது பூர்வ நிலையிற் சிவபிரான் "எந்தை தன் தந்தை". சிவபிரானது திவ்ய ஒளியே மெய்ஞ்ஞான சம்பந்தனகிய நான். தேவர்களும் வியக்கும்படிக் காழிப் பிரான் தேவியுடன் என்னைப் பெற்று ஆட்கொண்டனர். பார்வதிபாகன் என் இயல்பையும் மாற்றி என் சிந்தனையையும் மாற்றி என்னைக் கூத்தாட்டி வைக்கின்றனர். என் பழவினையை அறுக்கவல்ல நெறியை இறைவர் எனக்குக் காட்டினர். என்கள்ளத்தையும் பழியையும் தீர்த்தார் என் நல்குரவு, ஊனங்கள், காதல் பாசம் யாவையும் ஒழித்தார். புகலிநாதர் யார்க்கும் அரியவரா யிருந்தும் என்னிடம்

விளையாடுவார். என் உள்ளே விளங்குவார். காழிநாதரே எனக்குக் குரு எனது இப் பிறப்பை அறுக்க வல்லவர் அவரே. அவரே நரை, திரை கெடும் வழியை அருளினர். காழிப்பிரானையே நான் முதல் முதல் அணுகினேன். அவரையே தினம் பணிவேன். கனவிலும் நனவிலும் அவரது திருவருட்பிரகாசம் என்னிடம் உள்ளது. அவரை உணர்ந்து நான் அவரைப் போற்றுகின்றேன். இறைவரது திருவருள் விலாசத்தால் அவரைப் பரவும் முறையை யறிந்து அவ்வழியில் நிற்கின்றேன். என்னுலான பணியை முன்பும் இன்றும் எனது பாலப் பருவத்தில் செய்கின் றேன். இவ்வாழ்க்கையால் வரும் வேதனை நோயைக் கண்டு என் உள்ளம், இறைவா! உன்றன் நாமத்தையே காதலிக் கின்றது.

(ii) ஸ்தல நிகழ்ச்சிகள் : சுவாமிகள் தரிசித்த முறைப்படி கூடியவரையில் :—

காழி:—*காழி நாதரே தன் உள்ளத்தைக் கவர்ந்த கள்வர் என்கின்றார்.* [பதிகம் 1]

நனிபள்ளி:—*சுவாமிகள் பாலை நிலத்தை நெய்தல் நில மாகப் பாடின இடம் இது. இது 'முத்திலங்கு மணல் சூழ் கிடக்கை' என்பதிற் குறிப்பிலுணரப்படும். இத்தலத்துப் பதிகத்தை யாவரும் எளிதிற் கேட்கத் தமது தந்தையின் தோள்மேலிருந்து—(பறைபோலத் தெள்ளிய குரலில்) குழந் தைச் சம்பந்தர் பாடினர்.* [பதிகம் 220-7,11.]

திருவெண்காடு:—*முக்குளத்தைச் சிறப்பித்துப் பாடி னர்.* [பதிகம் 184.]

தில்லை:—*தில்லைவாழந்தணர் சொரூபம் சிவ சொரூப மாகப் புலப்பட்டதை "நிலத்தார் கரிய மிடற்றார்" என்னும் பதிகத்திற் பாராட்டியுள்ளார்.* [பதிகம் 259]

திருமுதுகுன்று, திருநாரையூர், கருவூர் திருமறைக்காடு:— *இவ்வூர்ப் பதிகங்களால், சுவாமிகள் ஷை தலங்களுக்கு நேரிற் சென்று கை தொழுது வணங்கினர்—என்பது*

புலப்படுகின்றது [பதிகங்கள்-292-11; 222-11; 164-11; 173-1, 11; 227-11;].

திருநெல்வாயில் அரத்துறை :—இத்தலத்துப் பதிகத்தில் [226] இறைவன் திருவருள் யாருக்குக் கிடைக்கும் என்பதை விவரித்துள்ளார். தனக்கு முத்துச் சிவிகை முதலியவற்றை இத்தலத்து ஈசன் அருளிய திறத்தைக் கருதிப் பாடினது இப்பதிகம்.

பழுவூர் :—இத்தலத்துப் பதிகத்தில் [170-4, 11] மலையாள அந்தணர்கள் பூசையைச் சிறப்பித்தார்.

சேய்நலூர் ;—இவ்வூர்ப் பதிகத்தில் [48-7] சண்டேசுர நாயனாரது வழிபாட்டைச் சிறப்பித்துப் பாடினார்,

சீகாழி :—சுவாமிகளின் சொந்த ஊராதலின், அவரது பதிகம்பெற்ற தலங்களுள் சீகாழியே அதிகப்பதிகம் பெற்று விளங்குகின்றது. இங்கு சக்கரமாற்று, வழிமொழித் திருவிராகம், வழிமுடக்கு மாவின் பாச்சல் முதலிய அரிய பதிகங்களை மெய்த்தவ வழிநின்ற அன்பர்களுக்கு உதவும் பொருட்டு ஈசனது கழலைப் பேணிப் பாடினர்.

பாச்சிலாச்சிராமம் :—வாட்டம் அடைந்த ஒரு பெண்ணின் வாட்டந் தீரப் பாடிய பதிகம் [44]. இத்தலத்துப் பதிகம். அதில் அப்பெண் 'மூவரிலும் முதலாய் நடுவாய மூர்த்தியை யன்றி மொழியாள்'—என அவள் பக்தி நிலையை எடுத்துக் காட்டியுள்ளார்.

கொடிமாடச்செங்குன்றூர் :—(திருச்செங்கோடு) 'அடியார்களை வினைதிண்டுதல் கூடாது' என்று திருநீலகண்டக் காப்பிட்டு இங்குப் பதிகம் [116] அருளினார். இப்பதிகத்தால் அடியார்களுக்குற்ற பனிநோய் நீங்கிற்று.

திருநணா :—சொல் வித்தகத்தால் பாடிய பதிகம் என இவ்வூர்ப் பதிகத்தைக் குறிப்பிட்டார் (208-11).

மூக்கீச்சரம் :—சிவபிரானே 'முழுமுதற் கடவுளென மூவேந்தர்களும் நினைந்து வழிபடவேண்டிப் பாடிய பதிகம் இவ்வூர்ப் பதிகம் (256-11.)

திருஆனைக்கா :—கோச்செங்கட் சோழனை இத்தலத்துப் பதிகத்திற் சிறப்பித்தார். [159-5]

திருநறையூர் :—இத்தலத்துப் பதிகத்தில் (29) புன்சடைக் கோலத்தைப் பாவியுள்ளார்.

அரிசிற்கரைப்புத்தூர் :—இப்பதிகத்தில் புகழ்த்துணை நாயனார் ஒவ்வொரு நாளும் காசுபெற்ற திருவிளையாடலைச் சொல்லி யுள்ளார் [199-7.]

திருவிடைமருதூர் :—பதிகம் [192] எல்லிப் பொழுதிற் பாடியதாக ஏற்படுகின்றது (192-11.)

திருவாவடுதுறை :—பதிகம் (262)—இதில் 'எமக்கு ஈவ தொன்றிலையோ? இதுவோ எமை ஆளுமாறு'—என முறையிட்டனர்.

சாத்தமங்கைப் பதிகத்தில் [316-11] திருநீலநக்கரைச் சிறப்பித்துக் குறித்தார்.

நாகைக்காரோணம் :—இவ்வூர்ப் பதிகம் நல்லார்கள் முன்னிலையில் தாம் பாடியதாகத் தெரிவிக்கின்றார் (252-11)

திருச்செங்காட்டங்குடி :—இவ்வூர்ப் பதிகங்களில் [61-10, 321] சிறுத்தொண்ட நாயனார் தொண்டின் சிறப்பைக் கூறுகின்றார்.

மருகல் :—(i) இத்தலத்துப் பதிகத்தில் [6] திருச்செங்காட்டங்குடி யீசரையும் சிறப்பித்து இரண்டு தலங்களையும் சேர்த்துப் பாடியுள்ளார்.

(ii) அலங்கல் சூடிய இப்பெண்ணை இப்படித் துயர்க்கு ஆளாக்கலாமா—எனத் திருமருகலிற் பாடிய பதிகம் (154) விடந்தீர்ந்த பதிகம்—எனப்படும்.

திருப்புகலூர் :—(வர்த்தமானீச்சரம்) இங்கு முருக நாயனார் பூசையைச் சிறப்பித்திருக்கின்றார் [228-3.]

திருவீழிமிழலை :—பதிகம் (4) இது 'காழி பாதி வீழி பாதி' பதிகம் எனப்படும். மழு, மான் கையிலில்லாத தரிசனம் குறிப்பிக்கப்பட்டுளது [4-9]. இத்தலத்தில்—வாசி தீரக் காசு கேட்ட பதிகம் [92] பாடினர்.

தேவூர் :—இத்தலத்தைத் தென்றல்வீசு காலத்தில் தரிசித்தனர் என்பதும், அங்கு தமிழ்க்கலை தெரிந்தவர் இருந்தனர் என்பதும், தேனும் பாம்பும தெருவில் அதிக மாய் இருந்தன என்பதும் இத்தலத்துப் பதிகங்களில் இருந்து எற்படுகின்றன. [218-7, 8; 332-2.]

திருமறைக்காடு :—இத்தலத்திற் கதவங் காப்புக் கொள்ளப் பதிகம் பாடினர் (173-11). சந்தத் தமிழ்ப் பதிக மும் பாடினர் (334-11.)

திருவாய்மூர் :—இத்தலத்துப் பதிகத்தில் (247)—அம்பிகை பாட இறைவன் ஆடல் காட்டினரெனவும், இறைவன் விடையேறி வஞ்சனை வடிவோடு கனவில் வந்து துயர் செய்தனர் எனவும் கூறியுள்ளார். இது அப்பர் சுவாமிகளது கனவில் இறைவன் வந்து அழைத்ததைக் குறிக்கின்றது போலும்.

திருவாலவாய் :—இத்தலத்துப் பதிக மொன்றில் (378) மங்கையர்க்கரசியாரையும் குலச்சிறை நாயனரையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். இரவில் அமணர் (தாம் இருந்த இடத்தில்) தீ இட்டதும், 'இறைவா—அஞ்ச லென்றெனக் கருள் செய், இந்தத் தீயின் வெப்பம் அரசன் பாண்டியனைப் பற்றுவதாக' என இவர் பாடியதும், 'இந்த அமணர் கூட்டத்தை வாதில் வென்றழித்தல் திருவருட் சம்மதந்தானு ?' என முன்னதாகக் கேட்டுக் கொண்டதும், அங்ஙனம் வாதித்து வாதில் வெற்றி பெறுவதனல்—'ஈசா ! உன் புகழே இம்மேதினியிற் பொலிதல் வேண்டும்'-என்று வேண்டிச் சொக்கநாதரிடம் சுவாமிகள் விடை கொண்டதும் அவர் பதிகங்களால் (305, 309, 366) ஏற் படுகின்றன. பாண்டியன் முன்னிலையிற் பாண்டிமாதேவி யைப் பார்த்துப் 'பாலுண்ணும் பாலன் இவன் என நீ அஞ்சுதல் வேண்டாம், எனக்கு ஆவலாய் அரன்—சொக்க நாதர்—என்னுளே இருந்து துணை நிற்பதால் ஆனைமலை முதலிய இடங்களிற் குடிகொண்ட இந்தச் சமணர்களுக்கு நான் எளியேன் அல்லன்' எனத் திடம்பட உரைத்தனர்

[பதிகம் 297]. திருநீற்றைப் போற்றிப் பதிகம் பாடிப் பாண்டியன் உடலிலுற்ற தீப்பிணி தீரப் பாடினர் [பதிகம் 202.]

'இது தேவியின் திருமுலையைச் சிறப்பித்துக் கூறுவதால் இதை எரியிலிடிற் பழுதில்லை, இது மெய்ம்மை' எனத் திடம்படப் பாண்டியன் முன்னிலையிற் கூறித் திருநள்ளாற்றுப்பதிக ஏட்டை எரியிலிடும்பொழுது ஒரு பதிகம் [345] பாடினர். பின்னர்—பாண்டியன் சபையின் முன்னிலையில் பதிகம் எழுதி நதியில் இட்டதையும், அந்த ஏடு 'விடையேறும் பெருமானே பெருமான்' என்பதைத் தெய்வந் தெளியாதார்கள் யாவரும் அறியும்படி நாட்டி, நீரோட்டத்திற் பற்றுதலின்றி எதிர் ஏறிச் சென்று அமணர் செய்துவந்த பழிச் சொல் அடங்கவும், சிவனாது திருப்புகழ் ஓங்கவும் செய்து திரு ஏடகத்திற் கரையிற் சென்று அணைந்தது என்பதையும் தமது பதிகங்களில் [312-11, 371-12, 290-11] விளக்கியுள்ளார். அங்ஙனம் எதிர் சென்ற ஏட்டில் எழுதிய 'வாழ்க அந்தணர்' என்னும் பாசுரத்தைப் "பல்லார்களும் மதிக்கப்" பாடிய பாசுரம் என்கின்றார் (312-11). இறைவன் திருவருட்டுணையே பாண்டியன் தேவியின் மங்கல அணியைக் காத்தது என்றும் சொல்லியுள்ளார் [373-6] இங்ஙனம் திருவாலவாயிற் பல லீலைகள் செய்தனர்.

**திருப்பூவணம்** :—இத்தலத்துப் பதிகத்தைப் பகைவர்கள் அஞ்சத் தமிழிற் சொன்னதாகத் தெரிவிக்கின்றனர் (64-11).

**திருப்பாதாளீச்சுரம்**:—இத்தலத்துப் பதிகத்தில் [108] மதிசூடிய தோற்றத்தையும், தேவிபாகமமர் தோற்றத்தையும் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

**கொள்ளம்பூதூர்** :—இத்தலத்துப் பதிகத்தில் [264-6] தாம் பதிகம் பாடி ஓடஞ்செலுத்தி ஓடங் கரையணையச் செய்ததைக் குறித்துள்ளார்.

திருநள்ளாறு :—இங்கு திருவாலவாய்—திருநள்ளாறு இரண்டு தலங்களையும் சேர்த்துப் பாடி வாதில் சமணர் சாக்கியர் நடுக்குற நின்றதைக் குறிக்கின்றார் [7-10].

திருத்தெளிச்சேரி :—சாக்கியர், சமணர் தம் திறத்தனவாம் அல்லலை நீக்குவித்த சதுரர் நீர் என்று இறைவனை இத்தலத்துப் பதிகத்திற் பாராட்டியுள்ளார் [139-10].

திருவீழிமிழலை :—இத்தலத்துப் பதிகத்தில் (374-10) இறைவா! என்னையும் சிறிது மதித்து, நான் அமணரை வாதில் வெல்லவும், புத்தரமணரை அழிக்கவும் உதவி புரிந்தனையே—என மகிழ்ந்தனர்.

திருமழபாடி :—இத் தலத்துப் பதிகத்தில் [145-10] அமணர் சாக்கியர் நலியும் நாள் கெடுத்து என்னை ஆண்டருளிய நாதனே ! என நன்றி பாராட்டுகின்றார்.

சீகாழி :—புத்தன் தலைதத்த இடியை ஏவின எம் பெருமானே என ஏகபாதத் திருபதிகத்திற் [127-4] பாராட்டி மகிழ்ந்தனர்.

திருவதிகை :—இங்கு நடன தரிசனம் பெற்று 'ஆடும் வீரட்டானத்தே' எனப் பாராட்டினார் [பதிகம் 46].

திருவோத்தூர் :—ஆண் பனைமரம் குலையீனச் செய்த லீலையை இத்தலத்துப் பதிகத்திற் [54-11] கூறியுள்ளார்.

திருவல்லம் :—இத்தலத்தைத் தாம் நேரிற் கண்டு தரிசித்துச் செந்தமிழ் பாடியதாகக் கூறியுள்ளார். [பதிகம் 113-11]

திருவாலங்காடு :—இந்தத் தலத்தைத் தாம் பாட மறந்ததையும், இறைவன் தன் நெஞ்சம் புகுந்து நினைப்பித்துத் தொழச் செய்து பாடச் செய்ததையும் தமது பதிகத்திற் [45-1, 11] சொல்லியுள்ளார்.

காளத்தி :—இத்தலத்துப் பதிகத்தில் [327-4] கண்ணப்பர் வழிபாட்டை விளக்கினார்.

**கேதாரம்** :—தாம் நேரிற் போகாததால் இருந்த இடத்திலேயே தமது அறிவினுல் ஆய்ந்து "கேதாரத்தை ஆய்ந்து சொன்ன அருந்தமிழ்கள் பத்தும்" எனப்பதிகம் சொல்லினுர் [250-11].

**அனேகதங்காவதம்** :—இத்தலத்துப் பதிகம் தம்மைச் சூழ்ந்து நின்ற நல்லோர்கள் முன்பு அல்லல் தீரப் பாடினது [141-11].

**திருமயிலை** :—இங்கு, மாதத் திருவிழாக்களைக் காணுதே போதியோ பூம்பாவாய் எனப் பூம்பாவைப் பாட்டாகப் பாடினர் [183-11].

**திருவான்மியூர்** :—இறைவன் அருள் செய்தபடி இங்கு விஞவுரைப் பதிகம் பாடினர் 140-11].

**சீகாழி** :—நாலடிமேல் வைப்புப் பதிகம் பாடி அதில் 'இனி என்னை உன் அடியிணைக் கீழ் உற நல்கிடு' என வேண்டினர் (261-9).

**திருநல்லூர்ப்பெருமணம்** :—திருமணக்கோலம் பூண்ட சுவாமிகள்— 'என் பாடல்களின் உண்மை நிலைபெற வேண்டும், அன்பர்கள் அவைதமை மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும். ஆதலால். இன்று நல்லூர்த் திருக்கோயிலிற் புக்கிருந்த பெருமானே! உனது திருவடியை உறக்கருதி இப்பதிகத்தைப் பாடினேன். எமக்குப் போக்கருளீர்'—எனச் சிவபதம் பெற விண்ணப்பஞ் செய்து [383-1, 8, 11]. நந்திநாமம் "நமச்சிவாய" (பதிகம் 307) ஓதிச் சோதியிற் கரந்தனர்].

## 93. திருமகள் [லட்சுமி] [259]

அலர் மகள், செய்யாள், திரு, திருமகள், பங்கயச் செல்வி, பங்கய மங்கை, பூமகள், பொன், மலர் மகள், மலராள்—என்னும் பெயர் கொண்டவள் லட்சுமி. அவள் அழகுடையவள்; செந்தாமரைமேல் வீற்றிருப்பவள்; மறைவனத்திலும் (வேதாரணியத்திலும்), சிவபுரம் என்னுங்

தலத்தை நினைப்பவர் இடத்தும், சம்பந்தப் பெருமானது திருப்பாடல்களை மனங் கொளப் பயிற்றுவோர் தம் மார்பிலும், சிவத்யான சிரேட்டர்களது மார்பிலும் பிரியாது உறைவாள். சம்பந்தப் பெருமானது திருப்பாடல் களில் வல்லவருக்குத் துணை புரிவாள். அப்பெருமான் உரைத்த பத்தும் மனமகிழ்ச்சியோடு பயில்பவரிடம் தங்கு வாள். 'முதுகுன்றில் ஐயா' என்று சொல்லுவோர், இரப் போரிடம் பொய்யாதவர்—ஆகிய இருவோர் பக்கலிலும் இருப்பாள்.

## 94. திருமால் [260, 261]

திருமால் பாற்கடலில் அரவணையில் துயில்பவர். அந்த அரவு அழல்வாயது; ஐந்து வாயது, படங் கொண்டது, புள்ளிகள் வாய்ந்தது, பாயாக அமைந்தது, பைங்கண்ணது. திருமாலின் துயில் 'அறிதுயில்' எனப் பட்டுளது. அத்துயிலானது—மறை கூறிய வழியே மனிதர்கள், தேவர்கள் வாழும் உலகுகள் எல்லாம் நிலை பெறுதற்கு வேண்டிய நினைப்போடு கூடிய துயிலாகும். அத்தகைய அரியின் உருவொடு கலந்தவராய்ச் சிவபிரான் உலகங்களை அளிப்பர்.

திருமாலுக்கு ஊர்தி கருடன். கொடியுங் கருடன். திருமகள் காதலன்—நாயகன் திருமால். அவள் திருமாலின் மார்பில் உறைவாள். திருமால் அழகர், திருவினர், திறமை வாய்ந்தவர். நீண்ட அழகிய முடியினர், அவர் கண் தாமரை போன்ற செம்மையது. அவர் கருநிறத்தவர், கடல் நிறத்தவர், நீல வண்ணர், பச்சை நிறத்தவர், மணி வண்ணர், மேக வண்ணர்; "பாலாடு மேனி கரியான்" எனவும் கூறப்பட்டுளது. அவர்—ஆற்றல் உடையவர், ஈறு உள்ளவர், ஏழுலகையும் உண்டவர், கடல் கடைந் தவர், துழாய் மாலையணிந்தவர், (ராகு, கேது) பாம்பின் தலையை அரிந்தவர், பிரமனை யீன்றவர் மணி புனை மார்பினர், மெய்யர், வேதத்திற் சொல்லப்பட்டவர், அவர் எடுத்த—

**வராக அவதாரத்தில்** :—பயங்கரமான கோப ரூபமுடன் பன்றியாய்ப் பூமியைத் தமது எயிற்றின் நுனியில் நிறுவினர்.

**வாமனவதாரத்தில்** :—குறிய, அழகிய மாணியின் உருக் கொண்டனர். வானவரை வருத்திய மாவலியிடம் சென்றனர்; சென்று மண் இரந்தார்; தான நீர் ஏற்ருர்; குறளராம் அவர் வானளாவி நிமிர்ந்தார்; தாவினர்; மண்ணை அளந்தார், விண்ணை அளந்தார், திசைகளை அளந்தார், அடி மூன்று அளந்தார்.

**ஸ்ரீராமாவதாரத்தில்** :—விற்போர் வல்லமையால் அரக்கனைச் செற்ருர்.

**கிருஷ்ணவதாரத்தில்** :—குருந்தொசித்தார், புள்ளின் வாயைப் பிளந்தார், மருதிடை நடந்தார்; மலையைக் குடையாக ஏந்தி மழையைத் தாங்கினர், தடுத்தார்; யானையின் வெண் கொம்பை ஒடித்தார், விளவின் கனியைக் கன்ருல் எறிந்தார்.

**திருமாலின் படை** :—திருமால் கையிற் பொலியும் படை "ஆழி" (திகிரி, சக்கரம், நேமி, எனவும் படும்). இது அடல் (வன்மை) மலிந்தது, ஒளி வாய்ந்தது, கூர்மை கொண்டது, மதிப்பு மிக்கது, எரி வீசுவது; உம்பர்கள் துதி செய்யத் திருமால் இப்படை கொண்டு அவர்களைக் காத்தளிப்பார். திருமாலின் கையில் "சங்க"மும் உள்ளது; அது ஒளி வீசுவது.

**திருமாலைக் குறிக்கும் பெயர்கள்**:—அரவணையான், அரி, ஆழியான், ஓதவண்ணன், கண்ணன், கரியவன், கரியான், கரியோன், கார்வண்ணன், காழியான், கிடந்தவன், கிடந்தான், கோவலன், திருவின் நாயகன், திருமால், நாரணன், நெடியவன், நெடியான், நெடுமால், பச்சையான், மணிவண்ணன், மதுசூதனன், மாதவன், மாயவன், மாயன், மால் மாலவன், மாலான், மாலினர், முகில் வண்ணன், விண்டு, விளங்கொளி.

## 95. திருமாலும் சிவனும் [262]

திருமாலின் காதலர் சிவன். திருமாலே (சிவனது) தேவி. திருமால், பிரமன் இவர்களது உடற்பொறை யொடு இறைவர் திரிவர். திருமால் உருவம் சிவன் உரு விற் கலந்துள்ளது. சிவபிரான் திருமாலொடு கூடுவர். பிரிவர்; உடன் இருந்தும் திருமால் இறைவனைக் கண்டி லர். சிவனது ஒரு பாதி திருமால்; சிவனுக்கு மாது ஒரு பால், மால் ஒரு பால்.

திருமால் பூசித்தது:—ஆயிர மலர் கொண்டு சிவபிரா னைத் திருமால் வழிபட்டுத் தமது கண் மலரையே இடந்து அப்பிப் பூசித்துச் சிவபிரானிடமிருந்து (சலந்தரனது தலையை அரிந்த) சக்கரத்தைப் பெற்றனர். இறைவன் வீற்றிருப்பதற்காக விண்ணிலிருந்து விமானம் ஒன்றை (விண்ணிழி விமானத்தை) வரவழைத்தனர்.

மண்ணுளார்க்கும் விண்ணுளார்க்கும் அசுரர்களால் ஏற்படும் துயர்களைக் களையும் பொருட்டு இறைவன் திரு மாலுக்கு ஆழி அளித்தனர்.

வராக அவதாரத்திற் பூசித்தது:—வென்றிப் பன்றியாய் சிவபுரம் என்னும் தலத்தில் இறைவனைத் திருமால் வழி பட்டுப் பேறு பெற்றார். இப்பன்றியின் நிறம் வெள்ளை.

வாமனுவதாரத்திற் பூசித்தது:—திருமால் மாணியாய், குறிய உருவுடன், தமது சித்தத்தை ஒருக்கி நித்த நியம வழிபாடு செய்த தலம் திருமாணி குழி.

ஸ்ரீராமாவதாரத்திற் பூசித்தது:—தமது தம்பி, ஜாம்பு வான், சுக்கிரீவன், அநுமான் இவர்களுடன் ஸ்ரீராமர் வழி பட்டுத் தொழுத தலம் திருவுசாத்தனம். ராவணனைச் சங்க ரித்த பழியும் வினையும் தம்மை மூடிட அவை நீங்குதற் பொருட்டு அருள் நல்கு என்று ஸ்ரீராமர் சிவபிரானைப் பிர திட்டை செய்து பூசித்துப் போற்றிய திருக்கோயில் இரா மேசுரம்.

திருமால் பூசித்த பிற தலங்கள் மழபாடியும் திருமாற்பேறும்.

பிற விஷயங்கள்:—திருமாலுக்குக் குரு சிவபிரான். சிவபிரான் திருமால் மகனாகிய காமனை எரித்தார். திரிபுர சம்ஹார காலத்தில் திருமால் சிவபிரானது அம்பாக அமைந்தார். பிரமனும் திருமாலும் தத்தம் வலிமையைப் பேசிப் போராடிய பொழுது திருமால் பன்றிக் கோலம் கொண்டு மண்ணைக் கெண்டி ஆழ்ந்து தேடினார்; அடி காணாது அயர்ந்தார்; "ஹர" பாராயணம் செய்து வணங்கினார். அருள் பெற்றார். இந்தப் பன்றி நீலநிறப் பன்றி; "நீலமலை" போன்ற பெருத்த உருவத்தது.

திருமால் போகம் பொலிய அழகாய் வாழ்வதற்கு மூலாதாரம் இறைவன் தேவியொடு பிரியாது அமர்ந் திருத்தலே.

## 96. திருவிளையாடற் சரிதங்கள் [263]

மதுரையிற் சங்கம் நிறுவியது, மதுரையில் திருக்கூத்தாடியது, மதுரை நான் மாடக் கூடலானது, பாண்டியனுடைய வெப்பு நோயைத் திருநீறு கொண்டு தீர்த்து மங்கையர்க் கரசியின் திருமங்கிலிய அணியைக் காத்தது, பாணனுக்கு அருளியது, விருத்தனும் பாலனும் ஆனது, (மாணிக்கம், வளையல், விறகு) விற்றது, வேதத்துக்குப் பொருள் அருளியது. சித்தராயது, வைகையில் ஏடு எதிரேற அருளியதும் ஆன திருவிளையாடல்கள் குறிக்கப் பட்டுள.

## 97. தீர்த்தங்களும்-விசேடங்களும் [236]

திருவிடை மருதூர், திருவலஞ்சுழி என்னும் தலங்களில் காவிரி நதியில் தைப்பூசத்தில் ஸ்நான விசேடமும்; அம்பர் மாகாளம், கோகரணம், திருப்பாற்றுறை, திருவெண்காடு என்னும் தலங்களில் உள்ள தீர்த்தங்களின் மகிமையும்; திருக்கேதாரம், தெளிச்சேரி, நள்ளாறு, திருப்

பருப்பதம் என்னுந் தலங்களில் உள்ள தீர்த்தங்களை முனி வர், வானவர் நாடி நிற்பதும்; மைலாப்பூரிற் கடலாட்டும் சொல்லப்பட்டுள. கோகரணத்தில் உள்ள தீர்த்தம் பழி தீர்க்கும், விட நோயை விலக்கும்; திருப்பாற்றுறையில் உள்ள தீர்த்தம் பாவம் தீர்க்கும். திருவலஞ்சுழியிற் காவிரி தீர்த்தம் இடர் தீர்க்கும்; திருவெண்காட்டு முக்குள நீர் பேயை விலக்கும்; பிள்ளை வரம் முதலிய நினைத்த வரங் களெல்லாம் தரும்; வினையை ஒழிக்கும் சிவபிரான் சடை யிற் சகல தீர்த்தங்களும் ஒடுங்கியுள்ளன.

## 98. தென்றல் [265]

தென்றல்-மந்தம் (மந்தானிலம்) எனவும் படும். திரு ஆமாத்தூர், திரு ஏடகம், திருவையாறு, கயிலாயம், கலிக் காமூர், காழி (சிரபுரம், தோணிபுரம், புறவம், வேணுபுரம்) தேவூர், திருநெல்வேலி, திருப்புனவாயில், திருப்பூவணம், திருமழபாடி, திருமாந்துறை, திருமுதுகுன்றம், திருவாஞ் சியம், திருவீழிமிழலை, வேதவனம், (திருமறைக்காடு) என் னுந் தலப் பதிகங்களில் தென்றலைப் பற்றிக் கூறியுள்ளார். தென்றல் பொழிலில் நுழைந்து வருதலால் மலர் வாசம் வீசும்.

## 99. தேவர்-அமரர் முதலிய கணங்கள் தேவதைகள் [266,267]

இமையோர் ஊர் அமராவதி. அவர் விண்மிசை வாழ்வர். திருநீறணிவர். அருக்கன், இந்திரன், முதலா னோர் இமையோர் கணத்தைச் சார்ந்தவர்கள். இமையோர் எண்ணிறந்தோர். கற்பக விருக்ஷம் அவர் புரத்துள்ளது. வானவர், தானவர், இயக்கர், கின்னரர், சித்தர், விச்சா தரர், விஞ்சையர், நாகர், முனிவர், பேய் இவர்களின் கணங் கள் இறைவனை வழிபடும். இவர் தமுள் ஆகாய வழியிற் செல்லுங் கணங்கள் உள. அவை 'விசும்பியங்கும் கணம்' எனப்பட்டன. ஒரு காலர்கள், நீர்க்கோட்டிமையோர்,

குதிரை முகத்தார்—எனப்பட்டவர் திருக்கேதாரம் என்னுந் தலத்தை அடைந்தும், அத்தலத்தில் இருந்தும் இறைவனை வழிபட்டனர். தங்களுக்குத் துன்பம் வரும்பொழுதெல்லாம் தேவர்கள் கயிலைக்கு ஓடி இறைவனைப் பணிந்து முறையிடுவார்கள். தேவர்கள் எல்லா மொழியிலும் தோத்திரங்கள் சொல்லித் தொழுவார்கள். வேத இசைபாடித் தொழுவார்கள். விரை மலர்கள் சொரிந்தேத்தித் தொழுவார்கள். சித்தரும் தேவருங் கூடிச் செழுமலர் நல்லன கொண்டு தொழுவார்கள். பல தீர்த்தங்களிற் படிந்தும், மலர் சுமந்தோடியும் வானவர் மகிழ்ந்தேத்துவார். தேவரெல்லாம் பயம் நீங்கவேண்டிய காரணம்பற்றி இறைவனைப் பற்றுதலால் சித்தந்தெளியாது நிற்கின்றனர். தேவர் வேறு, அமரர் வேறு: அண்ட வானவர்கள் வேறு, அமரர் வேறு; வானுளார் வேறு அமரர் வேறு எனத் தெரிகின்றது. தேவர்கள் ஆறு சமயங்களையும் ஓதியும உணர்ந்தும் உள்ளார்கள். இந்திரன், சந்திரன், சூரியன், திருமால், நந்தி, பிரமன், யமன்-தனித் தலைப்புக்கள் பார்க்க. தேவதைகளுள்-மலர் மகள், கலைமகள், ஜெயமகள், புகழ்மகள், மோடி, கலையூர்தி, காளி, நீலி சொல்லப்பட்டுள.

குபேரன்:—அளகாபுரிக்கு இறைவன். சிவபிரானுக்குத் தோழன். அவன் திருவடி மலர் மலரப்பாடும் அன்பன்.

## 100. தேவாரம் [268]

(1) தேவாரம்—தேவாரம் வல்லவரின் பெருமை:— ஸ்ரீ சம்பந்தப் பெருமான் பாடல்கள் நிகரில்லாத பலன்களை அளிப்பன. அவை கற்று வல்லவரின் அடிபேணுதல்தான் தவம். அப்பாடல்களைத் தம் வாழ்க்கைத் துணையாகக் கொண்டவர் வினையிலர். அவை ஓதுவோர் சேர்ந்த இடங்களெல்லாம் தீர்த்தங்கள் எனக் கொள்க. அவரே தக்கோர்.

(2) சம்பந்தப்பெருமான் தம் பாடல்களை எவ்வண்ணம் பாடினர் என்பது:—சுவாமிகள் தமக்கு உதித்த

குற்றமிலாத நல்ல இசையிற் பாடினர். பண்ணும் இசையும் பொருந்தப் பாடினர்.

(3) தேவாரத்தில் விருப்பமுள்ளவர், கற்போர் கேட்போர் அடையும் பேறு :—சுவாமிகளின் பாடல்களில் இன்பங்கொள்ள வல்லவரும், அப்பாடல்களைத் தமக்கு வாழ்க்கைத் துணையாகக் கொண்டவரும் வினையிலர், வான் அடைவர், விண்ணுலகாள்வர், ஈசனை எய்துவர், வீடு அடைவர். இரவும் பகலும் அப்பாடல்களை ஏத்தி உருகி ஓதுவோர் சிவன் சேவடியினின்றும் பிரியார்; அப்பாடல்களை மகிழ்ச்சியுடன் இசைபாட வல்லவர் இறைவனோடுறைவர்; அவைதமை அன்புடன் கற்போரையும் கேட்போரையும் வினைகள் சேரா; வருத்தங்கள் சாரா; குற்றங்கள் குறுகா; அவரை விட்டுத் தீவினைகள் அகலும்: அவர்க்குள்ள நல்வினைகள் தளரா; அவர் சிவலோகம் பெறலாகும். அவர் தமருக்கும் இன்பமாம்.

(4) சுவாமிகளின் உபதேசம் :—உங்கள் பழிநீங்கத் தேவாரத்தை ஓதி உய்யுங்கள். இசைபாடி ஏத்துங்கள். அதை எழுதுந் தொழில் வல்லவர் நல்லவர்.

(5) சுவாமிகள் பாடினதின் கருத்து :—நன்மை பரவ வேண்டிப் பத்தியுடனும் அன்புடனும் சுவாமிகள் பாடினர். பறையடிப்பதுபோல உலகிற் பரவப் பாடினர். ஈனமிலா வழியிற் பாடினர். அடியாரைக் கோளும் நாளும் பீடியா வண்ணம் பாடினர். அவர் பாடல்கள் இறைவனைக் குறிப்பன, வாழ்த்துவன.

(6) தேவாரம் கேட்குமுறை:—கற்றுவல்லார் சொலக் கேட்க; இன்னிசையுடன் சொல்லக் கேட்க; யாழ்வல்லார் சொலக் கேட்க; அன்புடன் கேட்க; சொல்லும் பொழுது ஈசனடியை ஏத்து மனத்துடன் கேட்க.

(7) தேவாரம் கற்கும் முறை ஓதும் முறை:— அகலிடம் எங்கும் ஓதுக (நாடெலாம் முழங்குக என்றபடி); அழுதும் நக்கும் அன்பு செய்து துதிக்க; இச்சையுடன் பாடுக; இசையுடன் பாடுக; இட்டமாய்ப் பாடுக; இரவும் பகலும் நினைத்துப் பரவுக: இருந்து பாடுக; தலந்தொறுந் திரிந்து பாடுக; இன்னிசையுடன் ஓதுக; இனிதாக இசை பாடி யாடுக; உண்மையினால் நினைந்தேத்துக; உணர்ந் தேத்துக; உயர்வு பெற ஓதுக; உரிய இசையிற் பாடுக; உருகிப் பாடுக; உருப்போடுக: உற்றுணர்க; ஊனமிலா வகையில் உரைக்க; எங்குநின் றேத்துக; எம்பந்தம் எனக் கருதி ஏத்துக; எழுதுக; என்றும் இசையுடன் பாடுக; கூடிய அளவு பாடுக; கோலத்தாற் பாடுக; கோழையாய்ப் பாடினும் பலனுண்டு; சம்பந்தர் ஏத்திய இசையொடு பாடுக; சித்தஞ்சேரச் செப்புக; சிந்தனையால் உரை செய்க; சிந்தை மகிழ்ந்தேத்துக; செவிக்கு இனிதாகப் பாடுக; தகவுற மொழிக; தஞ்சமிது என்று கொண்டு இசை பாடுக; தனித்தும் பாடுக; பலருடன் கூடியும் பாடுக; தொழுதேத்திப் பாடுக; நம் பரம் இது எனக் கருதிப் பாடுக; நம்பி ஓதுக; நன்கு உணரச் சொல்லுக; நன்மை யால் உரை செய்க; நாளும் ஓதுக; நினைந்தேத்தி ஓதுக; பங்கம் நீங்கப் பாடுக; பண் நிரம்பப் பாடுக; பக்தியுடன் பாடுக, பயில்வொடு கற்க; பலர்கூடிப் பாடுக; பலர் புகழப் பரவுக; பழிதீர ஏத்துக; பாடிப் பரவித் திரிக; பாடியாடுக; பாடி விம்முக; வெருவுக; விரும்புக; பாரார் புகழ ஓதுக; பெருவிருப்புடனும் மகிழ்ச்சியுடனும் பாடுக; பேணி உருகி உரை செய்க: பொழுதிற் றொழுது துதித்துப் பாடுக; மகிழ்ந்து பாடுக: மடியாது (சோம்பலின்றிப்) பாடுக; மனப் பாடம் பண்ணுக; மாலைகளைப் பரவிடுந் தொழிலை மேற் கொள்க; முறைமையால் ஏத்துக; மொழிந்து நினைந்து ஆடுக; யாழிற் பாடுக; வந்த வண்ணம் இசைமிகும்படி பாடுக; வந்த வண்ணம் பாடுக, வழங்கும் இசை கூடும் வகையிற் பாடுக; வாய்ந்தவாறு பாடுக; வாய் நிரம்பக் (குளிரப்) பாடுக; வித்தகத்துடன் பாடுக. யாம் பாடிய "பத்தும்" பாடவல்லவர்-எனப் பல இடங்களிற் கூறுவதால்—

முதல் பத்துப் பாடல்களையும் ஓதிப் பயில்வதே முறை என்பதும், 11-ஆவது பாடல் பாடவேண்டியது அத்துணை அவசியமில்லை என்பதும் ஏற்படும். இப்போது முதற் பாட்டையும் பதினோராவது பாட்டையும் ஓதிவரும் முறை இதற்கு நேர்மாறு யிருக்கின்றது.

(8) தேவாரத்தைக் குறிக்குஞ் சொற்றொடர்கள் :—தாம் தாம் அருளிய தமிழ் மாலையைக் குறிக்கச் சம்பந்தப் பெருமான் அரிய பல தொடர் மொழிகளை உபயோகித்துள்ளார். அவை தம்முட் சில கூறுவாம் :—அடிஞானம், அருண்மாலைத் தமிழ், அளிதரு பாடல், அற்றமில் மாலை, ஆராத சொன்மாலை, ஆரா அருந்தமிழ்மாலை, ஏழின்னிசை மாலை, கலைமலிதமிழ், குறையாப்பனுவல், குன்றாத் தமிழ், கோலமிக்கமாலை, சங்கமலி செந்தமிழ்கள், சந்தமலி பாடல், செஞ்சொன்மாலை, ஞாலமிக்க தண்டமிழ். ஞானத் தமிழ், ஞானமொழி மாலை, தமிழாரம், தவமல்கு தமிழ், திருநெறிய தமிழ் தெருண்ட பாடல், தேன்மொழி மாலை, தொடைமலி பாடல், நல்ல செந்திசை பாடல், நலமலி பாடல், நிகரில் பல மல்கிய பாடல், படமலி தமிழ், படைநவில் பாடல், பண் பெர்லி செந்தமிழ் மாலை, பலந்தரு தமிழ்க் கிளவி, பலமிகு தமிழ், பேசற்கினிய பாடல், பேரியல் இன்தமிழ், பொறிநீட ரவன் புனைபாடல், மறையிலங்கு தமிழ், மறைவளருந் தமிழ் மாலை, முடிவில் இன்தமிழ், வடமார் தமிழ், வாய்மைத்து, விலையுடை அருந்தமிழ் மாலை.

மேற்கூறியவற்றால், அருள், அருமை, இயல், ஞானம், இசை, கலை, கோலம், சந்தம், செம்மை, புகழ், திரு, தவம், பண், பலம், வாய்மை,-இவையெல்லாம் நிரம்பியது பெருமானது திருவாக்கு என்பதும; சங்கத் தமிழே நிரம்பியது அது என்பதும்; தேன் போன்றது, நிகரிலாப் பலனை அளிப்பது, பேசற் கினியது, மறைப் பொருள் விளங்குவது என்பதும்; இறைவன் மாலையாக ஏற்று அணிவது என்பதும்; இறைவன் அருளாற் பாடப்பெற்றது என்பதும்; இறைவனது திருவருளையே உடையன அவர் பாடல்கள்

என்பதும் நன்கு பெறப்படும். 'பாடல்' என்னும் தலைப்பையும் பார்க்க.

(9) தேவாரம் ஓதுவதால், கற்பதால் வரும் பயன் [268-12,14] :—அல்லல் அறும்; அவலம் நீங்கும், அழிவு இல்லை; இடர் ஒழியும், ஊனம் தீரும். கவலை கழியும், குற்றங்கள் குறுகா; கேடு இல்லை, கேதம் இல்லை, சங்கை தீரும், தடுமாற்றம் இல்லை; தளர்வு ஒழியும், தீது இல்லை; தீய அடையா, தீவினைகள் அகலும், துயர் அணையாது, துன்பம் அடையாது, நடலையில்லை, நெஞ்சிருள் நீங்கும், நோய் சாராது, பங்கம் நீங்கும், பந்தபாசம் அறும், பழி நீங்கும், பாசம் அறும், பாவம் நாசமாம், பிணி அறும், பிறப்பு அறும்;

அமரலோகம் ஆட்சி கூடும், இமையோர் ஏத்துவர், இறைவன் அருள் கூடும், இறைவனோ டுறைதல் கூடும், இன்பம் ஓங்கும், ஈசனை எய்தலாம், உணர்வு பெறலாம், உம்பராகலாம், உயர்கதி பெறலாம், உயர்வு பெறலாம், உருத்திர ராகலாம், உலகாளலாம், உள்ளம் ஒருவழிக் கொள்ளும், எத்திசையும் ஆளலாம், கலைமகள் துணை பெறலாம், குணங்கள் கூடும், கொடையினராகலாம், சய மகள் துணை பெறலாம், சிவகதி பெறலாம், சிவலோகம் பெறலாம், சிவன் சேவடி சேரலாம், செல்வம் ஓங்கும், ஞானம் உண்டாம், தக்கோ ராவோம், தவநெறி கூடும், திருவளர் செம்மை பெறலாம், தீர்த்தம் ஆவோம், தூநெறி பெறலாம், தேவர் வந்து சிந்தையில் இருப்பர், நல்ல கூடும், நல்லோ ராகலாம், நல்வினைகள் தளரா, நன்னெறி கூடும், நிறை வளர் நெஞ்சாம், நீடு வாழலாம், பரகதி பெறலாம், பரமனடி சேரலாம், பரலோகத்திருக்கலாம், பாக்கியம் கூடும், பார்முழு தாளலாம், புகழ் சேரும், புகழ்மகள் துணை கூடும், புண்ணியராகலாம், புவலோகம் கூடும், பொன் அடையலாம், போகங்கள் பெறலாம், மண் பொலிய வாழலாம், மதி கூடும், மலர்மகள் துணை கூடும், மானமாக்கும், யோகஞ் சேரும், வான் உறையலாம், வானவர்கள் வழி

படுவர், வானோர் எதிர்கொள்வார், விண்ணவர் விமானம் கொடுவருவர், விண்ணுலகாளலாம், வீடு எளிதாம், வேந்தரென உலகாளலாம். தாம் கூறுவதில் ஐயம் வேண்டாம், பலன் கிடைப்பது சரதம், திண்ணம் என ஆணையிட்டுச் சில இடங்களிற் சுவாமிகள் கூறியுள்ளார்.

## 101. தேன் [269]

மலையில் மரக் கொம்புகளிடையே தேன் சொரியும். தாமரை மலரில் தேன் உண்டு. மலர்த் தேனில் வண்டு அமரும். தேனை உண்டு வண்டு இசை பாடும்.

## 102. தொகை, தொகைக் குறிப்பு [270]

எண்களில் ஒன்றில்-இறைவனும்; இரண்டில்-பிரம விட்டுணுக்களும், பிறப்பும், பொழுதும்; மூன்றில்-உலகு, காலம், குணம், தமிழ், தீ, புரம், பொழுது, மூர்த்திகளும்; நாலில்-அந்தக்கரணம், திசை, நிலம், மறையும்; ஐந்தில் - ஆனஞ்சு, எழுத்து, புலன், பூதமும்; ஆறில் - அங்கம், சமயம், சுவை, பகையும்; ஏழில்-இசை, உலகு, கடல், நரகம், பண்ணும்; எட்டில்-கலை, குணம், சித்தி, திசை, மணமும்; பதினறில்-கலையும்; பதினெட்டில்-கணமும்; முக்கியமாய்க் கூறப்பட்டுள்ளன.

## 103. தொண்டு வகை [233, 271]

இறைவன் கோயிலை அலகு மாற்றினால் (துடைப்பத்தால்) வீசிப் பெருக்கி, நீர்கொண்டு இறைவனது திருமேனியை ஆட்டுவித்து, அலர் கொண்டு அவரைத் தவருது பூசித்து ஏத்துதல் ஒரு தொண்டு; மொந்தை தாளம், தகுணிச்சம் முதலிய வாத்தியங்களை முடக்கமின்றி வாசித்து இறைவனைத் தொழுவது ஒரு தொண்டு. தலங்களின் திருநாமங்களை ஓதி மலரிட்டுப் போற்றுதல் ஒரு தொண்டு.

## 104. தொழில் தொழில், வகை [272]

(i) உழுதல் தொழிலில்-மேழிகொண்டு உழுதல், நாறு நடுதல், கதிரறுத்தல் முதலியனவும் (ii) இறைவனைப் பணியும் தொழிலில்-தொண்டு செய்வதும், தாம் பாடிய தேவாரத்தைப் பரவி ஓதுவதும், (iii) மறையோர் தொழிலில்-எரி மூன்று ஓம்புதலும், தருப்பை, நெய், சமிதை கொண்டு வேள்வி செய்வதும், மறைவழிப்படியே நீர்க் குடங்கொண்டு இறைவனுக்கு அபிஷேகம் செய்வதும், வேதங்களை நாடிக் கற்பதும், (iv) நட்டுவத் தொழிலில் - மடவார்கள் நடனஞ் செய்ய முரவம் (ஒருவகைப்பறை) கரங்கொண்டு வாசிப்பதும், (v) போர்த் தொழிலும் சொல்லப்பட்டுள.

## 105. நகரமும் நகர லட்சண உறுப்புக்களும் [273-289]

(i) நகரங்கள்:—தழைந்த பொழில்கள், மாட மாளிகைகள், பெண்கள் நடனஞ் செய்யும் சிறந்த நாடக மேடைகள், செல்வம் நிறைந்த கடை கொள் மாடங்கள், ஆழ்ந்த கிடங்குகள், வட்ட மதில்கள், சாலைகள், கூடங்கள், (மேகத்தையும் நிலவையும் தொடும் உயரமுள்ள) கோபுரங்கள், இடிதாங்கிகள், மண்டபங்கள்-இவை நகரங்களுக்கு லட்சணமாய் விளங்கின. வேல் வடிப்போர் சேரி முதலிய 'தொழிலர்ளர் சேரிகள்' அமையப் பெற்றன. பறையொலி, சங்கொலி, பலியுணு இவைதமை ஊர்கள்தோறும் காணலாம்.

(ii) கொடிகள் [278] :—துகில்களால் ஆயன, பலவித சித்திரக் கோலத்தன. மூங்கிலின் தண்டிற் கொம்பிற் பிணிக்கப்பட்டன. கடைகள், குன்றத்துச்சிகள், கோயில்கள், சூளிகைகள், தேர்கள், மாடங்கள், மாளிகைகள், வாயில்கள், வீதிகள் முதலிய இடங்களில் விரிந்து திகழ்ந்தன. கொடிகள் மேக மண்டலத்தை அளாவும், விண்ணில் திகழும், மதியைத் தடவும். பெரிய மாடத்து உய

ரும் கொடிகளின் நெருக்கத்தால் வெயிலும் தெரியாது. திருவிழாக்களில் வெண்கொடிகள் விளங்கின.

(iii) மதில்கள் [285]:—அழகு வாய்ந்தன; கொடியாடுவன; செம்பொன் னிறத்தன; மேகத்தை உரிஞ்சுவன; நிலவைத் தொடுவன; வானை அளாவுவன; மலைபோற் பெருத்தன; கல்லாற் கட்டப்பட்டன; திண்ணெனத் திகழ்வன; வேலைப்பாடு அடைந்தன; காவல் நிரம்பியன; போர்க்கு வேண்டிய படைகள் அமைக்கப்பெற்றன; வட்டமாய் அமைந்தன; வெற்றி தருவன.

(iv) மாடங்கள் [286]:—அழகு பொலிவன; கொடியாடுவன; செம்பொன்னின் செவ்வி தருவன; மேக மண்டலத்தை அளாவுவன; மலையை நிகர்ப்பன; மதியைத் தொடுவன; வெண்ணிறத்தன; மதில் சூழ்வன; மறையோர்கள் வாழ்வன; விலை உயர்ந்தன.

(v) மாளிகைகள் [287 (1)]:—அழகு வாய்ந்தன; பொன்மயத்தன; பெண்கள் இருந்து யாழிசை பாடுவன; சுடர்வீசிப் பொலிவன; குன்றை யொப்பன; கோலக் கொடிகளும் சித்திரக் கொடிகளுங் குலவுவன; பெண்களும் ஆடவரும் பயில்வன; நெடியன; வான் அளாவுவன; வரிசையாயுள்ளன; ஜயலட்சுமி வீற்றிருப்பன; சூளிகையின்மேல் மடவார் குழந்தையொடு கொஞ்சுவன; மயில்கள் கூவி விளையாடுவன; தென்றல் வீசுவன.

(vi) வீதிகள் [288]:—கடை வீதிகள், தேரோடு வீதிகள், மாடவீதிகள்-எனப் பலவகையன. வீதிகள் காவல் பெற்றன; கொடிகளாடுவன; நன்மணம் வீசுவன; கூட்டம் நிரம்பியன; கடலொலிபோல ஒலி பெருத்தன; யானையின் மதச் சேறு கிடப்பன; வீணை ஒலி, முழவொலி நிரம்பியன; நீண்ட அளவின; மாட மாளிகைகள் விளங்குவன; விழாக்கள் சிறப்பாய் நடைபெறுவன.

## 106. நகைகள் (அணிகலன்கள்) [291]

ஆபரணங்களுள், ஆழி (மோதிரம்), ஹாரம், பொன்மாலை, கடகம், கடிகை, கண்டிகை, கழல், கிண்கிணி, குண்

டலம், குழை, சரி (வளை), சிலம்பு, சூடகம், (முத்துத்) தாழ் வடம், தொடி, தோடு, நூபுரம், பாடகம், முடி (கிரீடம்), மேகலை, வடம், வளை (சங்குவளை)—சொல்லப்பட்டுள.

## 107. நந்திதேவர் [293]

சிவபிரான் காட்டில் நடம் செய்யும்பொழுது நந்தி தேவர் கரங்கொண்டு முழவங் கொட்டுவர்.

## 108. நாடு, தேசம், நாட்டவர், தேசத்தவர் [294]

கங்கை நாட்டு மறையவர் நியமமும் தகுதியும் பூண்டு பெரும்புகழ் பெற்றவர். இவர்களைப் பற்றிச் சீகாழிப் பதிகத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. [பக்கம் 107—பார்க்க]. மலையாள தேசத்து அந்தணர்கள் திருப்பழு வூரில் பண்ணுடன் பாடித் தொழுது இறைவனைப் பூசித்து வந்தனர் [பக்கம் 156 பார்க்க]. சம்பந்தப் பெருமான் பொன்னி நாட்டினர்—(சீகாழி—பொன்னி காவிரி-நாட்டி லுளதாதலால்).

## 109. நாமமும், நாம விசேடமும் [171—173]

### I. திருநாமங்கள்

சிவபிரானைக் குறிக்குஞ் சொற்களையும் சொற்றொடர் களையும் ஸ்ரீ சம்பந்தப் பெருமானின் பதிகங்களுள் ஆராயு மிடத்துச் சிவபிரானது திருநாமங்களின் இலக்கங்கள் பின் வருமாறு ஏற்படுகின்றன.

(i) பொதுவாகக் கடவுளைக் குறிக்கும் திருநாமச் சொற் களும் சொற்றொடர்களும்...[(உதாரணம்)—அண்ணல், ஆதி, இறைவன், உத்தமன், ஊனமில்லி, எந்தை, ஏறினர், ஐயர், ஒருவன், கடவுள், சதுரன், தலைவன், நம்பன், பரமன், மருந்தன், வரதன்; அட்டமூர்த்தி, ஆட்சிகொண்டார், இமையோர் பெருமான், உம்பர்க்கொருவன், ஊனுயிரான்,

எண்ணிடை ஒன்றினர், ஏதமிலர், ஒருவர்க்கும் உணர்வரியான், கருதுவார் மனத்துளான், சகலசேகரன், தன்னேர் பிறரில்லான், நங்கள் பெருமான், பரதத்துவன், மண்ணிடை ஐந்தினர்].

(ii) *சிறப்பாகச் சிவபிரானைக் குறிக்குந் திருநாமச் சொற்களும் சொற்றொடர்களும் ... ... ... 1,993

1. அவர் அணிவன காரணமாகப் போந்த திருநாமங்கள் ... ... ... 453

2. அவர் வீரச்செயலைக் குறித்துவரும் திருநாமங்கள் ... ... ... 233

3. அவர் ஆடல், உருவம், உறைவிடம், படை, வாகனம் முதலிய பற்றிவரும் திருநாமங்களும் பிறவும் ... ... ... 1,307

மொத்தம் 1,993.

இவை தம்முள் மிக்கு வந்தன அவரது சடைபற்றிய நாமங்கள் 179, விடைபற்றிய நாமங்கள் 147, நஞ்சுண்டது பற்றிய நாமங்கள் 152.

[*உதாரணம் :—1 அக்கினர், அரவர், ஆறர், கரியுரியான், காபாலி, கொன்றையான், கோவணவன், தோலினர், நீறனர், பிறையன்.]

2. இருவர் காண்பரியான், காமனைக் காய்ந்தவன், காலகாலர், நஞ்சமுதுண்டவன், புரபங்கன், வேழம் உரித்தபிரான்.

3. ஆடலன், தீப்போலி, முக்கணர், மங்கைபங்கினன், சடையன், கயிலையார், காடர், சூலத்தான், விடையினன், அரன், ஈசன், சிவன், பிஞ்ஞகன், பித்தன்]

ஆகமொத்தம்—953+1,993=2,946.

(iii) இறைவனை விளிக்கும் திருநாமச் சொற்களும் சொற்றொடர்களும் :—

(1) ஒரே சொல்லால் வரும் விளிகள் 213.

[உதாரணம் :—அண்ணா, ஆதீ, இறைவா, ஈசா, உயிரே, எம்மான், எளியாய், ஏற்றானே, ஐயனே, ஒருத்தனே, கண்டனே, சடையா, தலைவா, நடனே, பரமா, மணியே, வானே.]

(2) சொற்றொடர்களாக வரும் விளிகள் 450

[உதாரணம் :—அண்டநாயகனே, ஆலநிழலுளாய், இரப்புள்ளீர், உம்பராளி, ஊரார்ந்த சில்பலியீர், எண்டோளீர், ஏறதேறினீர், ஐய அரனே பெருமான், ஒளிர் சங்கக் குழையா, ஓதீ நான்மறைகள், காலகாலா, சாமவேதா, தாவணவ் விடையினாய், நாட்டமூன்றுடையீர், பாடலார் வாய்மொழியீர், மாறிலா மணியே, வாளரா ஆட்டுகந்தீரே.]

ஆகமொத்தம் ... 212+450=663.

II. நாம விசேடம் [173]

(i) நாமங்களை ஓதுதல், தியானித்தல், காதலித்தல் :— இறைவனே! உன் திருநாமங்களை ஓத என் உள்ளம் காதலிக்கின்றது. உன் திருநாமங்களை என் நாவால் ஏத்த அருளுதி. உன் நாமங்களை ஓதுகின்றேன். வந்து அருளுவாயாக. நெஞ்சமே! இறைவன் திருநாமங்களை மறவாதே; உலகீரே! இறைவன் திருநாமங்களைப் பிதற்றுங்கள், அறிந்து சொல்லுங்கள். ஓதி உய்யுங்கள். குருகே! பிறப்பில்லியாம் இறைவன் பேரை ஓதிப் பிதற்றி என் பெருநலத்தை இழக்கவோ! மாதர்கள் ஈசன் பல நாமங்களைப் பண் மொழியால் ஓதுவர்கள்; ஓதி அவன் புகழைப் பெருக்குவர். வேதியர்கள் மறைகளை ஓதி அரன் நாமங்களை உணர்த்திடுவர்.

(ii) இறைவனது திருநாமத்தைக் கேட்டல், அதன் பயன் :—கிளியே! இறைவன் திருநாமத்தை எனக்கு ஒரு முறை பேசு. நெஞ்சே! இறைவன் புகழ் நாமங்களைச் செவி கேட்க வேண்டும்; கேட்டால், நமது கிளை கிளைக்கும்; இறைவன் கேடிலாத திறத்தை அருளிக் கோள் நீக்குவர்.

(iii) இறைவன் திருநாமங்களைப் பரவுதல் :—இறைவரது உயர்ந்த சிறந்த நாமங்களால் ஒழிவின்றி நாளும் அவரை அடி பரவுக. அவர் நாமங்களை ஓதிப் பிதற்றுக. விரதிகள் இறைவன் நன்னுமங்களை நானுவிதமாக எங்கும் ஏத்தி வாழ்த்துவார். விஞ்சையர், விண்ணவர், வேதியர், நீற்றர், இவர்கள் இறைவர் திருநாமங்களை ஓதி உணர்ந்து பணிவர். இராவணன் ஓதிப் பரவிய திருநாமங்களை உடையவர் இறைவர்.

(iv) திருநாமங்களை ஓதுவதால் வரும் பயன் :—இறைவர் திருநாமங்களை நிரம்ப ஓதிப் பரவுவோர் அல்லல் அடையார், இப்பூமியில் இறவார்-பிறவார், இன்பம் நாடோறும் நணுகுவர், உயர்ச்சி பெறுவர், குணவோராவர், சீர் பெறுவர், தத்துவ ஞானத் தலைவராவர், தலைப்படுந் தவத்தோராவர், தொல்வினை தீர்வர், நோய் அடையார், பிணி நீங்குவர், முன்னெறி காண்பர், வினையும் இடரும் பாவமும் நீங்கப்பெறுவர். இறைவர் தம் நாமம் 'நமச்சிவாய' என்பதைச் செபிப்போர் நல்லர். ஆதலின், இறைவர் தம் நாமங்களைக் கற்றலே நற்றவம்.

(v) நாமச்சிறப்பு-நாமவிசேடம்:-ஆதிரையான் என்பது தம் தலைவன் பெயரென் றுணர்ந்து அன்பர்கள் அவற்கு ஆளானுர்கள். தாயாந் தன்மை வாய்ந்த இறைவர் திருநாமங்கள் என்றும் நிலைபெற்று விளங்கும். எரியிலிட்டாலும் அவை அழிவு படா; அவையே துயர்கெடுக்கும்; அவையே நன்னெறியாம்; அவையே மந்திரமாம்; மருந்தாம்; மறுமைப் பயன் தருவனவாம்: மற்றும் எல்லாம் ஆம்; அவைகளைக் கேட்டால் இறைவன் திருவருள் கூடும்; நமக்குக் கேடுபடாத்திறம் கைகூடும்; கோள் நீங்கும்; நமது சுற்றம் தழைத்தோங்கும்; ஆதலால், நெஞ்சமே, நீ அந்நாமங்களைச் சிந்தனை செய்வாயாக; பெருமை வாய்ந்த அந்நாமங்களை நவிலாத நாவை நா எனக் கூறலாகாது; அந்நாமங்களை ஏத்தாதார் பேயரிற் பேயர்; ஏத்துவோர் தலையாய தவத்தர்; ஆதலின், அரன் திருநாமம் எங்கும் சூழ்ந்து விளங்குவதாக.

(vi) இறைவன் திருநாமங்கள் பல :—இறைவர் ஆயிரம் பேர் உடையார்; பல்லாயிரம் பேருடையார்; நாமமென்று பலவும் உடையார்; ஈறிலாப் பேரினர்; எண்ணரும் பேரினர்; ஞானப் பேராயிரம் பேரினர்; வானோர் நூறுயிரம் (லட்ச) நாமங் கூறி இறைவனைத் தொழுவர்;

(vii) 'அர' நாம தீர்த்தம் :—அரன் திருநாமங்கொண்ட "ஹர தீர்த்தம்" என்பது கோகரணத்தில் உள்ளது. அதில் முழுகினல், விடநோய்கள் நீங்கும்.

(viii) தல நாமம் :—இறைவன் தங்கும் தலங்களின் பலவற்றின் பேர்களைக் கூறி மலர்தூவி ஏத்துதல் ஒரு தொண்டாகும்.

## 110. நாயன்மார் [295]

(1) அமர் நீதி நாயனர் [295 (1)] :—கோவணத்தைக் (கவர்ந்து) கொண்டு வஞ்சனைத் திருவிளையாடல் ஒன்று இறைவர் இயற்றினர்.

(2) கண்ணப்ப நாயனர் [295 (2)] —கானவேடர்; வாயே (அபிடேக) கலசமாக வழிபட்டவர்; தமது கண்ணையே அம்பினல் இடந்து ஈசனுக்கு அப்பி ஈசன் திருவடியைக் கூடினவர்; இவரது அரிய செயலுக்கு (மகிழ்ந்து) கடவுள் பெரும்பேறு (தேவுநிலை) அளித்தார்.

(3) குலச்சிறை நாயனர் [295 (3) :—பாண்டியனிடம் மந்திரியாயிருந்தவர். ஆலவாய்ப் பெருமானைப் பரவிப் பணிந்தவர். சிவனடியார்கள் தனித்துவரினும் கூட்டமாய் வரினும் அவர்தமைக் களிப்புடன் பணியும் பெரியார். குலத்தினரோ, குலமிலரோ, நலத்தினரோ, நலமிலரோ-சிவனடியாரெனில் அவர்தம் வேடத்தில் ஈடுபட்டுப் பணியுந் தவத்தினர். ஐந்தெழுத்தை ஓதிப் பூதி, கோவணம் பூண்ட சைவ வேடத்தவரைக் கண்டால் இவர் உடனே தொழுதெழுவார். திசைகள் தோறும் தொண்டர்கள் இவரைத் தொழுது இவர் குணத்தின் மேன்மையைக் கூடிக்கூடிப் பேசிப் பேசி மகிழ்வர்.

(4) கோச்செங்கட் சோழன் [295 (4)] :—சோழ ராஜன்; செங்கண்ணன்; அதனாற் "கோச்செங்கட் சோழன்" எனப் பெயர் பெற்றான்; கழலினன் : போர் வீரன்; திறைவாங்கிய நிறைசெல்வன்; நல்ல அரசன்; யானைப்படை உடையான்; முற்பிறப்பிற் சிலந்தியாயிருந் தவன். தான் செய்த தவப்பயனால் அடுத்த பிறப்பில் சோழ ராஜனாக இறைவன் அருளாற் பிறந்தான். அம்பர்ப் பெருந் திருக்கோயிலும், வைகன்மாடக்கோயிலும் இவன் கட்டிய கோயில்கள். மூக்கீச்சுரம், தண்டலை நீணெறிக் கோயில் களுக்கும் இவன் சம்பந்தம் உண்டு. திருவானைக்கா அண்ணலின் திருவருளைப் பெரிதும் பெற்ற பெருமை உடையான்.

(5) சண்டேசுரர் [295(5)]:—இவர் மண்ணியாற்றின் கண் மணலால் இலிங்கந் தாபித்துப் பாலபிஷேகஞ் செய்து நறுமலராற் பூசிக்க, இவர் தாதை பாற்குடத்தை இடறிச் சிந்தி இவரது புண்ணிய கருமத்துக்கு இடர் செய்ய, இவர் கோபித்து அவர் காலை வெட்ட, இறைவர் இவர் திருப் பணிக்கு உகந்து தாம் அணியும் மாலையையும் தமது போனகத்தையும் இவருக்கு அருளி, இவர்மேல் கங்கை நீரைத் தெளித்துத் தமது கையால் இவர் ஆகத்தைத் தடவி, இவருக்குச் சிவசாரூபம் அளித்துச், சண்டீசர் என்னும் தலைமைப் பதமுந் தந்து ஆட்கொண்டார். "முன்பு ஒரு காலத்தில் நிகழ்ந்ததாக இச் சரித்திரத்தை அறிந்தோர் சொலக் கேட்டிருக்கின்றோம்" என்று சம்பந்தப் பெருமான் சொல்லுவதாற் சம்பந்தமூர்த்திக்குப் பலகாலம் முன்னர் இருந்தவர் சண்டேசுரர் என்பது ஏற்படுகின்றது.

(6) சிறுத்தொண்ட நாயனார் [295(6)]:-இவர் ஊர் திருச்செங்காட்டங்குடி: இவர் திருநீறு பூசுவார்; திருநீறு உட்கொள்ளுவார்; போர் வீரர்; சீருஞ் சிறப்பும் நிறைந் தவர்; சிட்டர்; இவர் வேண்டுகோளின்படி சம்பந்தப் பெருமான் திருச்செங்காட்டங்குடியிற் கணபதீச்சரத்து மேய பெருமான் பேரிற் செந்தமிழ்ப் பதிகம் பாடினர்.

கணபதீச்சரத்தில் இந் நாயனர் மிக ஈடுபட்டவரென்றும், இந் நாயனரது தொண்டில் ஈசனர் மிக ஈடுபட்டவரென்றும் சம்பந்தப் பெருமான் பாராட்டியுள்ளார்.

(7) திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனர் [295(7)]: பாணர் பத்தியுடனும் இசையுடனும் பாடினதும், அருள் பெற்றதும் கூறப்பட்டுள்ளன.

(8) திருநீலநக்கநாயனர் [295(8)]:—இவர் பெரியார். இவர் ஊர் சாத்தமங்கை. இவர் அங்கிருந்த காரணத்தால் அவ்வூர் 'நீலநக்கனர் நகர்' எனத் தொண்டர்களாற் பாராட்டப்பட்டது. அவ்வூரில் "அயவந்தி" என்னும் ஆலயத்து அமர்ந்த பெருமானை இவர் போற்றிப் பரவி வந்தார்.

(9) தில்லைவாழ் அந்தணர் [295(9)]:—அந்தணர்; சீலத்தர்; சிவசாரூபத்தினர்; சிற்றம்பலத்தை விட்டுப் பிரியாதவர்; கற்றவண்ணம் எரியோம்புவர்; கலியையும் வாராமே தடுப்பவர்.

(10) நமிநந்தியடிகள் [295(10)]:—தமது ஆவியிலே இறைவனையும் ஐந்தெழுத்தையும் ஒடுக்கினவர். அங்கணனை ஆதரிக்கும் நாவுடையார். இறைவனது திருவருளைப் பெற்றவர்.

(11) நின்றசீர்நெடுமாற நாயனர் [295(11)]:—தமிழ்ப் பாண்டியன்; பத்திநிலை பெற்றவன்; வெண்ணீறணிந்தவன்.

(12) புகழ்த்துணை நாயனர் [295(12)]:—இவர் காலையும் மாலையும் (அரிசிற்கரைப்) புத்தூரில் இறைவனை வழிபட்டனர். இவரது கஷ்டத்தை அறிந்த இறைவர் இவருக்குத் தினந்தோறும் படிக்காசு தந்து உதவினர்.

(13) மங்கையர்க்கரசி [295(13)]:—சோழன் மகள்; பாண்டியன் மாதேவி; செந்துவர் வாயாள்; சேலன கண்ணுள்; பண்ணின் மொழியாள்; பந்தணை விரலாள்; பத்தி நிறைந்த பாவை; திரு அன்ன செவ்வியள்; பல நலங்களும் வாய்ந்தவள்; கையில் வளையும், மார்பில் திருநீறும், சந்தனக் குழம்பும், முத்துத் தாழ்வடமும்

பூண்டவள்; நாள்தோறும் ஆலவாய்ப் பெருமானைப் பரவிப் பணிந்தவள். திருநீற்றை வளர்க்கும் இச்சை பூண்டவள். இந்த அம்மையாரது பத்திக்கு இரங்கி இறைவர் (தொண்டர்க்கணியராயிருந்து) இவரது திருமங்கலியத்தை விளங்கவைத்து உதவினர்.

(14) முருகநாயனர் [295(14):—இவர் புகலூர் வர்த்தமானீச்சரம் என்னும் தலத்திலே, திருக்குளத்தில் ஸ்நானஞ் செய்து, மாலை, சாந்தம், புகை இவைகொண்டு இறைவனை வழிபட்டு மகிழ்ந்தவர்; நறிய கொன்றை மலர் கொண்டு முடிமாலை முதலிய கட்டி இறைவனுக்கு முப்போதும் அலங்காரஞ் செய்து இன்பம் உற்றவர்.

## 111. நிதி [296]

'தொலையா இரு நிதி'—எனச் சங்க நிதி, பதும நிதி குறிக்கப்பட்டுள.

## 112. நிலம் [297]

நிலம் ஐந்து வகைப்படும்; குறிஞ்சி நிலப் பெண்கள் மலை நிலத்தைப் பாடி (மலைக் கடவுளாகிய) முருகன், பெருமையை ஓதுவார். புறவு (முல்லை) நிலத்து—விலங்குகளில் பசுவும் கலைமானும்; பறவைகளுள் அன்னமும், கிளியும், குயிலும்; மலர்களுள் கோடலும், செங்கழுநீரும்; தாமரையும், முல்லையும்—கூறப்பட்டுள. புறவு (முல்லை) நிலத்துத் தலங்களாக—கடலூர் மயானம், காழி, கானப்பேர், குடமூக்கு (கும்பகோணம்), திருச்செங்கோடு (கொடி மாடச் செங்குன்றூர்), பரிதி நியமம், விருத்தாசலம் (முதுகுன்று), திருவெண்காடு கூறப்பட்டுள.

## 113. நிறங்களும், நிறங்கள் கொண்டவையும் [298]

நிறங்களுள், கருமை, செம்மை, நீலம், பசுமை, வெண்மை, அஞ்சன(மை) நிறம், அந்தி நிறம், அழல் நிறம், இருள் நிறம், கடல் நிறம், தளிர் நிறம், பவள நிறம், பால் நிறம். புயல் (மேகம்) நிறம், பொன் நிறம், மணிநிறம் பின்வருமாறு சொல்லப்பட்டுள:

(i) கரு நிறத்தன :—அஞ்சனம், இரவு, இருள், கடல், கழி, காடு, குவளை, குழல் (கூந்தல்), சிவபிரானது கண்டம், பனைமரம், மலை, (காள)மேகம், வண்டு.

கரு நிறத்தவர் :—அமணர், இராவணன், காலன், திருமால்.

(ii) செந்நிறத்தின :—அந்தி, அழல், (செந்)தாமரை, பவளம், மந்தியின் முகம், மணி.

செந்நிறத்தவர் :—செங்கதிர், சிவபிரான்.

(iii) தளிர் நிறத்தது மலைமகள் திருமுலை.

(iv) நீல நிறத்தது :—கண், குழல், சிவபிரானது கண்டம், குவளை, நீல (மலர்), மணி, மலை, வண்டு, விடம் (ஆலகாலவிடம்); நீலநிறத்தவர் :—அமணர்.

(v) பச்சை நிறத்தது :—கிளி.
பச்சை நிறத்தினன்—திருமால்.

(vi) பொன்னிறத்தன :—கொன்றை மலர், சிவபிரான் சடை, புன்னை (தாது-மலர்), பலாப்பழம், மாம்பழம், வாழைப்பழம். பொன்னிறத்தவன்—பிரமன்.

(vii) வெண்ணிறத்தன :—அருவிகள், எயிறு, எருது (விடை), சங்கு, (வெண்) தாமரை, திங்கள், தோடு, பால், புரிநூல், பொடி (திருநீறு), மேகம், வளை.

## 114 திருநீறு: திருநீற்றின் பெருமை முதலிய [258]

சாம்பல், சுண்ணம், நீறு, புண்டரிகம், (திரிபுண்டரம்), பூதி, பொடி—இவை திருநீற்றைக் குறிப்பன.

2. திருநீறு ஆன் வழியிற் செய்தெடுப்பது; வெங்கனலிற் சுட்டெடுப்பது; திருநீற்றுக்கு வாசனை சேர்ப்பதுண்டு. அருமை, அழகு, ஒளி, கொழுமை, தூய்மை, நலம், வித்தகம், வெண்மை வாய்ந்தது; நீருடன் சேர்த்துப் பிசைந்து திரிபுண்டரமாக அணியப்படுவது; அந்தமும் அளவும் அறியாதது ; அள்ளிப் பூசப் (உத்தூளனம் செய்யப்)

படுவது, உட்கொள்ளப்படுவது; இராவணன் அணிந்தது; வானவர் (தேவர்கள்) முனிவர் அணிவது; வெண்மையிற் சங்கும் பாலும் போன்றது; பொன் எனத் திகழ்வது; கோது, மாசு இல்லாதது; மூல முண்டது; கண்ணுக் கினியது; விலையுடையது; கருதவும், காணவும், பூசவும், பேசவும், பரவவும் இனியது; அவலம், ஆசை, இடர், துயர், பாபம், புன்மை, வருத்தம்—இவைகளைத் தொலைப்பது; இன்பம், கவின், சித்தி, பத்தி, பெருமை, போதம், மதி, முத்தி, வானம் இவைகளை அளிப்பது; எண்ணவும் ஓதவும் தகுவது; ஏத்துந் தகையது; துதிக்கப்படுவது; பயிலப் படுவது; மாணந் தகைவது; துயிலைத் தடுப்பது; தக்கோர், தேசத்தோர் புகழ்வது; இருமைக்கும் உள்ளது; சமயத் திலும் உண்மையிலும் வேதத்திலும் உள்ளது; திரி புரத்தை எரித்தது.

திருநீறே அந்தம், அருத்தம், சத்தியம், சுத்தம், சுந் தரம், தத்துவம், தந்திரம், பாக்கியம், புண்ணியம், பொருத் தம் மந்திரம்.

3. திருநீறு சமணராதி பரசமயிகளின் கண்ணை மறைப்பது; புத்தராதிகளை வாதில் அழிக்க வல்லது, அண்டத்தவரும் எண்டிசையோரும் ஏத்தும் பெருமையது; அந்தமும் அளவும் கடந்து நின்றது; உடம்புக் குற்ற இடர் எல்லாம் தீர்த்து இன்பம் தருவது; பெருந் தவத்தோர் களுக்கு உற்ற ஆசையைக் கெடுத்து உதவுவது; விரும்பி அணிபவருக்குப் பெருமை கொடுப்பது; மாலும் அயனும் அறியா வகையில் அமைந்தது; பராசத்தியின் வண்ணம் கொண்டது. முதலாய், முடிவாய், வையகம் முழுதுமாய் விளங்குவது; பிற சமயிகளின் பொய்யை விலக்கி உண்மை நிலையைக் கண்ட சித்தத்தவர்கள் தெளிந்து தேறினது. புண்ணியரே திருநீற்றைப் பூசுவர்.

4. சிவபிரான் திருநீற்றைச் சாந்தமென உகந்து பூசுவர். அபிடேகத்துக்குரிய பொருளாகவும் கொள்ளுவர். திருநீற்றைப் பூசுபவரிடத்தே சிவபிரான் அமர்ந்துள்ளார்.

திருநீறு பூசிய தொண்டரே நமக்குச் சார்பு. வேறு சார்பு இல்லை.

## 115. நூல், நூல்வகை, நூலினர் [299]

நூல் வகைகளுள்:—அறநூல், கலைமுத்தமிழ் நூல், சூதர் உரைத்த புராணங்கள், தருக்க சாத்திரம், மாலைகள், வண்ணங்கள், விருத்தங்கள் சொல்லப்பட்டுள.

தூதுக்கு உரியனவாக:—அன்றில், அன்னம், கபோதகம், கிளி, குயில், குருகு, நாரை, பூவை, வண்டு, வாரணம் —சொல்லப்பட்டுள.

சைன நூல்களுள்:—எலியின் தொழிற்பாட்டு, கிளியின் விருத்தம் கூறப்பட்டுள. சமணர், புத்தர்களுடைய நூல்களெல்லாம் "பொய்த்தவம் பொங்கு நூல்" "பொய்ந் நூல்", "பொய்ம்மொழி நூல்" எனக் குறிப்பிக்கப்பட்டுள்ளன.

சீகாழியில் "மெய்ம்மை நூல்" ஓதினவர்கள் வாழ்ந்தார்கள். இறைவனைப் பற்றிய நூல்களை ஓதும் தொண்டர்களை நோய், பிணி அணுகாவகையில் இறைவர் காக்கின்றனர்.

## 116. நெஞ்சம்-மனம்-சித்தம்-உள்ளம் [300]

(1) நெஞ்சம் இறைவனது நாமத்தை மறத்தல் ஆகாது. தலங்களை உணர்ந்து தியானித்தல் வேண்டும். தலங்களை வணங்கும் பாக்கியம் இருந்தால் நெஞ்சு பெரும் புண்ணியஞ் செய்ததேயாம். நெஞ்சகத்தில் இறைவன் இடங்கொள்ளவேண்டும் என்று நினைப்பவர் தம் விதியாவான் இறைவன். நெஞ்சில் வஞ்சம் ஒன்றும் கூடாது. ஆமாத்தூரையும், திருவீழிமிழலையையும் நினையாதவர் நெஞ்சம் நெஞ்சல்ல.

நெஞ்சம்:—ஆழி நெஞ்சம், உயர் நெஞ்சு, ஏர்கெழு நெஞ்சு, ஏழை நெஞ்சு, செப்ப நெஞ்சு, நன்னெஞ்சு, மடநெஞ்சு-என விளிக்கப்பட்டுளது.

(2) மனம்:—ஒருங்குதல் வேண்டும். ஒரு நெறியில் இருத்தல் வேண்டும். இரண்டு பட்டிருத்தல் கூடாது. கள்ள மனத்தவர்கள் கலதிகள். கலங்கா மனத்தவர்கள் மெய்யர்கள். மனத்தாற் பரனைப் பரவிப் பாடி நாடுமின், உய்ம்மின்; மனத்திற் பிரமபுரம் என்னுந் தலத்தைத் தரிக்கவும்; கதிபெற வேண்டில் ஈசனடியை மதிக்கவும், பூசை செய்வதால் மனம் ஒடுங்கும். கொடையிலா மனம், மறக்கு மனம், மால் மனம், வஞ்சக மனம் இவை-இழிந்தன. தாழு மனம், தீப மனம், தொழு மனம், நன் மனம், நிலைகொண்ட மனம், பத்திசெய் மனம், பணியு மனம், மாசில் மனம்— இவை சிறந்தன. கற்றிலா மனம் நடுங்கும் தளரா மனத்தினரே தகுதியர்.

(3) உள்ளம்:—உள்ளத்தில் தியானித்து உருக இறைவர் உவகை தருவார், உடன் இருப்பார், உள்ளங் கவர்வார், உள்ளங் குளிர்விப்பார். உள்ளமே கோயிலாகப் பாவித்து இறைவனைத் தியானித்தல் வேண்டும். ஐம்புலன் களும் நிலையாத வண்ணம் உளத்திடை வென்றடர்த்தல் வேண்டும். அன்பொடு பாடும் பெரியோரும், உள்ளத் துறவுடையோரும் பெரியோர்.

(4) சித்தம் - சிந்தனை - புந்தி:—தீயன விலகவேண்டி இறைவனை எண்ணும் அடியவருடைய சிந்தையில் தேவர்கள் வசிப்பார்கள். இறைவன் நாமங்களை மறவாமல் சிந்தித்தல் வேண்டும். இறைவனைப் பாடுவோர்கள் நல்ல சித்தமுடைய அடியார்கள். இறைவனைச் சிந்தையுடன் மகிழ்ந்தேத்தவேண்டும். சிவன் சேவடிக்கே செல்லும் சிந்தை வேண்டும். சிந்தையானது நன்பொருளை விரும்புதல் வேண்டும். சிலமாய சிந்தை, ஞானமுலாவு சிந்தை, தணிகொண்ட சிந்தை, தெளி சிந்தை, நலம்கெழு சிந்தை, நெறிகொள் சிந்தை-சிறந்தன.

(5) சித்தமும் சிவனும் [300(2)]:—அழுது எழும் அன்பர் சிந்தையிலும், உருகுவார் உள்ளத்தும், உள்ளம் ஒன்றி உள்குவார் உளத்தும், நிறை பெற்ற அடியார் நெஞ்சினுள்ளும், கோதிலா மனத்தினும், தமது திருவடியைப்

போற்றிசைப்பார் வாயினும், மனத்தும், தொண்டர்கள் சிந்தையிலும், பரிந்து கைதொழுபவரிடமும், பழந்தொண்டர் ஆவியுள்ளும், நித்தலும் நியமத்துடன் நீரும் மலரும் தூவிச் சித்தம் சிவன்பால் ஒன்றினவரிடத்தும், மலர் கொய்து வணங்கும் செய்ய உள்ளத்திலும், வானவர் சிந்தையிலும் இறைவர் வாசஞ் செய்து அருள் புரிவர். கல்லா நெஞ்சில் நில்லார்.

## 117. நெறி [301]

பூமியில் உயர்வுபெற விரும்பினவர்கள் நன்னெறியை உள்குவார்கள். வீட்டின்பம் அடையக் கூடிய நெறி "ஒளி நெறி, குறியாற் குறி கொண்டவர் போய்க்குறுகும் நெறி, சிவலோக நெறி, தக்கநெறி, தவநெறி, திருநெறி, தூநெறி, நன்னெறி, மெய்ந்நெறி, வானையேறு நெறி, வீடு காட்டும் நெறி, வேதநெறி" எனப்படுகின்றது. அதுவே மாலும் நான்முகனும் அறியா நெறி; மயக்கந்தீர்க்கும் நெறி. ஏனைய நெறிகளைச் சிந்தையிற் கொள்ளலாகாது.

## 118. நோய்கள், நோய் வரா வழி [302-304]

கொடு நோய்களான பல என்றார். நோய்களுள் இருமல், ஈளை, கம்பதாளி, குளிர், குன்மம், சூலை, தும்மல், பித்து, வாதம், வெப்பு, கவலை நோய், காம நோய், விட நோய் சொல்லப்பட்டுள. பாதிரிப்புலியூர் அரனை வணங்கும் தவமிலிகள் பிணியாக்கையைப் பெறுவார்கள். இறைவன் திருநாமத்தைச் சொல்லும் அடியாரையும், இறைவனைப் பாடும் அடியாரையும், இறைவனுக்கு மாலைசூட்டும் அடியாரையும், இறைவன் கழல்பரவி மனம் உருகும் அடியாரையும், காலந் தவறாது அவருக்குப் பூசை செய்யும் அடியாரையும், தேவாரம் பாடும் அடியாரையும், நெய்த்தானம், திருமழபாடி, திருவலஞ்சுழி, திருவாஞ்சியம், திருவிற்குடி விரட்டம் என்னுந் தலங்களை அடைந்தும் சிந்தித்தும் உருகும் அடியார்களையும் நோய்கள் நலியா. பிணி கெட

வேண்டில் திருக்கானப் பேரை நண்ணி ஞானமலர்கொடு பூசிக்கவேண்டும். சிக்கற் பெருமானைப் பணிந்தால் பிணி போம். தில்லைச் சிற்றம்பலத்தை ஏத்த நோய் மாயும். சம்பந்தப் பெருமான் திருப்பதிகங்களைச் சிந்தை வைத்துச் செப்ப நோய் நீங்கும். ஈசனே நோய் நீக்க வல்லார். அவரை வாழ்த்துந் தொண்டர் துயர், பிணி யிலர்.

## 119. பஞ்சபூதங்கள் [305-310]

(1) மண் (306)—அவனி, குவலயம், (கு) கூ, ஞாலம், தரணி, தலம், நிலம், பார், புவி, பூ, பூதலம், பூமி, வையகம், வையம்-என்பன மண்ணின் பிறபெயர்கள். பூமி கடலாற் சூழப்பெற்றது, நீண்டது, பழமை வாய்ந்தது, பாறைகள் கொண்டது, புகழ்பெற்றது, மழைபெறுவது, மண்பொய்த்தால் விளைவு வளம் குன்றும்.

(2) நீர் [307]:—அப்பு, அம், அயம், அலர், ஆலம். கம், கயம், சரம், சலம், சலவம், தடம், தீர்த்தம், பாணி, புனல், மை, வாரி, வெள்ளம் இவை நீரின் பிற பெயர்கள், நீர்—இரைப்பது, ஈர்ப்பது, எதிர்ப்பது, எற்றுவது, எறிவது, ஒலிப்பது; ஒழுகுவது, ததும்புவது, தூயது, தெள்ளியது, பெருகுவது, பொங்குவது, மோதுவது, விரிவது; அலைபுரளுவது, அழகு வாய்ந்தது, அழிக்க வல்லது, ஒழுகுந் தன்மையது, ஒளிவீசுவது, கண்ணுக் கினியது, குளிர்ச்சி உடையது, சலசல என ஒலிப்பது, சுழலுடையது, செழுமை வாய்ந்தது, திரையும் நுரையுங் கொண்டது, நலந்தருவது, பழமை வாய்ந்தது, பாய்ந்து செல்லுவது, மணலைக் கவர்ந்து சொரிவது, மலையினின் றிழிவது, மேகத்தினின்று வருவது, வாசனை யமைந்தது, (பொருள்களைத்) தள்ளவும் இழுத்துச் செல்லவும் வல்லது, வண்டல்களை வாரித் தள்ளி விசையுடன் வருவது. அச்சந் தரும்படி நாணல் மடிய வெள்ளமாய் வருவது. வாவி, மடை, கடல், பொய்கை, ஆறு—இவைகளில் நிறைவது; கயல், கெண்டை, வாளை—இவைகட்கு இருப்பிடம். பூச நீர் விசேடமானது - நீரிற் பூ மலரும்.

(3) தீ [308] :—அங்கி, அனல், அழல், உதாசனன், எரி, கனல், சுடர், தழல், நெருப்பு என்பன தீயின் பிற பெயர்கள். தீ யானது இலங்கும், ஓங்கும், கௌவும், சுடும், சுலவும், துளங்கும். நுடங்கும், படரும், பற்றும், புகையும், பொங்கும், மிளிரும், முழங்கும், மேனேக்கும்; மற்றும் தீயானது ஒள்ளியது, பெரியது, வலியது, வெய்யது, செந் நிறத்தது, சோதி வீசுவது, விறல் வாய்ந்தது. பிரள யாக்கினி "அந்தமில்லா அனல்" எனப்பட்டது.

(4) காற்று [309] :—கால், பவனம், மாருதம், வளி, வாயு—காற்றின் பிறபெயர்கள். காற்று (பொருள்களை) எறிந்து வீசவும், தள்ளவும் வல்லது.

(5) வான் [310]:—அண்டம், அந்தரம், அம்பரம், ஆகாச(ய)ம், காயம், புவம், மாகம், மீ, வானகம், வானம், விசும்பு, விண்—இவை வானின் பிறபெயர்கள். வான் மேலே உள்ளது, எழிலுடையது, நீண்டது, பெரியது, மேகம் படிவது, இடி படுவது, மழை பொழிவது. விண் பொய்த்தால் மழை குன்றும்.

## 120. படைகள் (ஆயுதங்கள்) [311]

சிவபிரான் கையில் உள்ளனவும் பிறவும் :—அங்குசம், பாசம் ; அம்பு, வில் ; சூலம்-வேல்; தண்டு-முசலம், மழு-வாள் இவை சிவபிரான் திருக்கரத்துள்ள படைகளாகவும்; சக்கரம்-அவர் சலந்தரனைத் தடிவதற்காகப் படைத்துப் பின்னர்த் திருமாலுக்கு அளித்த படையாகவும்; பாசுபதம் அவர் அருச்சுனனுக்கு அளித்த படையாகவும்; வாள் அவர் ராவணனுக்கு அளித்த படையாகவும் கூறப்பட்டுள. இவை தம்முள் சலந்தரனை வீழ்த்திய சக்கரம் தழல் உமிழுந் தன்மையது. திரிபுரத்தை எரித்த கணைகள் கூரிய, கொடிய எரிகணைகள். சூலம்-அழகியது, ஒரு தாளுடையது, இருபுறமும் கூர்மை கொண்டது, மூவிலையை உடையது;

நெருப்பு உமிழ்வது; குறி பிழையாதது; பெருங் கோபத்தையும் வன்மையையும் உடையது. மழு-நெருப்பு வீசுவது; ஒளி கொண்டது, கூர்மை உடையது, வெண்ணிறத்தது, வெய்யது, தூயது, பெரியது, பயத்தைத் தருவது, போர்க்குத் தக்கது. சிவபிரானுக்குப் பழைய படைகளாகவும், வெற்றி தரும் படைகளாகவும், அவர் வலது திருக்கரத்தில் ஏந்திய படைகளாகவும் உள்ளன சூலமும் மழுவுமே.

## 121. பண் வகைகள் [313]

இருபத்து மூன்று பண் வகைகளிற் சம்பந்தப் பெருமானுடைய பதிகங்கள் உள்ளன. இவ்விருபத்து மூன்று பண்கள் இப்பொழுது வழங்கும் ராக வகைகளிற் பதினாறு வகை ராகங்களின் பாற்படுகின்றன. [தலைப்பு 92(12)ம் பார்க்க.]

## 122. பத்தி நிலை மெய்ப்பாடு [314]

பத்தி மிக்க அடியவர் இறைவனை உண்ணினைந்து உருகுவர்; மூர்த்தி திருநாமம் தவிரப் பிற மொழியார்; இறைவன் அடியில் விழுவர், ஆடுவர், பாடுவர், அழுவர், தொழுவர்; எழுவர். இரவும் பகலும் நினைந்தேத்துவர்: விம்முவர், வெருவுவர், கண்ணீர் பொழிவர். இசைபாடிப் பரவுதலைக் கேட்கும்பொழுது விம்மி அழுவர்.

## 123. பதிகப் பாகுபாடு [321]

[8-9-10-ஆம் பாடல்களைக் குறிப்பன]

சுவாமிகள் (i) ராவணனைப்பற்றித் தமது பதிகத்தின் 8-ஆவது பாடலில் வழக்கமாய்க் குறிக்கின்றார். அங்ஙனம் 8-ஆவது பாடலிற் குறியாது வேறு பாடலிற் குறித்துள்ள பதிகங்கள்—19; ராவணனைப்பற்றி எந்தப் பாடலிலுங் குறியாத பதிகங்கள்—27: எட்டாம் பாட்டு இட்டாப் பதிகம்—1.

(ii) பிரமன், மால் இருவர்க்கும் அரியராய் நின்றதை 9-ஆவது பாடலில் வழக்கமாய்க் குறிக்கின்றார்; அங்ஙனம் 9-ஆம் பாடலிற் குறியாது வேறு பாடலிற் குறித்த பதிகங்கள் 26. இருவர்க் கருமையென்னும் விஷயமே யில்லாத பதிகங்கள் 12.

(iii) சமணர், புத்தரைப்பற்றி 10-ஆவது பாடலில் வழக்கமாய்க் குறிக்கின்றார். அங்ஙனம் 10-ஆம் பாடலிற் குறியாது வேறு பாடலிற் குறித்துள்ள பதிகங்கள் 9. அவர்களைப்பற்றி ஒன்றும் சொல்லப்படாப் பதிகங்கள் 20.

ராவணன், இருவர்க்கருமை, சமணர்-இம்மூன்று விஷயங்களும் இல்லாத பதிகங்கள் 6. ராவணன், இருவர்க் கருமை-இவ்விரண்டு விஷயங்களும் இல்லாத பதிகங்கள் 9; ராவணன் சமணர் - இவ்விரண்டு விஷயமும் இல்லாத பதிகங்கள் - 10; இருவர்க்கருமை, சமணர்-இவ்விரண்டு விஷயமும் இல்லாத பதிகங்கள் 5; ராவணன்-இருவர்க் கருமை-இவ்விரண்டு விஷயமும் ஒரே பாட்டில் உள்ள பதிகங்கள் 6.

## 124. பதிக விசேடங்கள் [322]

[தலைப்பு 133-ம் பார்க்க]

(1) பதிக விசேடங்கள்:—அகப்பொருட் பதிகங்கள், அந்தாதித் தொடைப் பதிகம், அர்த்தநாரீசுர கோலப் பதிகம், ஆசிரியப்பாவாக அமையும் பதிகங்கள், ஆற்றுப் படைப்பதிகங்கள், எழுகூற்றிருக்கைப்பதிகம், ஏகபாதப் பதிகம், கட்டளைக்கலித்துறையாக அமையும் பதிகங்கள், கோளறுபதிகம், சடைக்கோலப்பதிகம், சந்தப்பாவினப் பதிகங்கள், சீகாழிப் பல்பெயர்ப் பதிகங்கள். திருநீல கண்டப் பதிகம், திருநீற்றுப் பதிகம், தேவி வர்ணனைப் பதிகம், நமச்சிவாயப் பதிகம், பஞ்சாக்கரப் பதிகம், பறவை விடு தூதுப் பதிகங்கள், மாலை மாற்றுப் பதிகம். யமகப் பதிகங்கள், யாழ்மூரிப் பதிகம், வினாவுரைப்

பதிகங்கள், க்ஷேத்திரக் கோவைப் பதிகம்—ஆகிய அருமைப் பதிகங்கள் உள்ளன.

(2) குறைப்பதிகங்கள்:—[316]:—அடியோ, பாடலோ குறைந்த பதிகங்களின் எண் 54.

(3) பாடல் விசேடங்கள் [328, 232]:—அடியார் தம் சிவ சாரூபம் சொல் பாட்டு, எண்கள் நிறையவரும் பாட்டு, கோள்களின் பெயர் வரும் பாட்டு, நெஞ்சறிவுறுத்தற் பாடல்கள், மங்கள வேளையிற் பாடக்கூடிய பாடல்கள், மார்க்கண்டர் சரித்திர விசேடஞ் சொல் பாட்டு, சந்தப் பாட்டுகள், வாழ்த்துப் பாட்டு-ஆகிய பல உள்ளன. சந்த ஒலி மிக்க பாடல்கள் 48 உள்ளன;

## 125. இயற்றமிழ் வழியே பதிகங்களின் பாகுபாடு [315]

ஒரு சீர், இரண்டு சீர், மூன்று சீர், நான்கு சீர், ஐந்து சீர், ஆறு சீர், ஏழு சீர், எட்டு சீர், பத்து சீர், பதினொரு சீர்களில் வரும் பதிகங்களும், சீர்கள் கலந்தும் மிக்கும் வருவனவும், சீர்கள் ஒன்று மூன்று அடிகளில் மிக்கும், இரண்டு நான்கு அடிகளில் குறைந்தும் வருவனவும், ஒரு பாற் படாதனவும், இசைப்பாவுக்கே உரியனவுமான பதிகங்களும் உள்ளன. 4, 5, 6 சீர்களில் தாம் பதிகங்கள் அதிகமாயுள்ளன.

## 126. பதிகத் தொடக்கம் [319]

சுவாமிகள் தம் பதிகங்களைத் தொடங்குவதில் அதிகமாகத் தொடங்குவன பின்வரும் விஷயங்களைப் பற்றியனவாம்:—

(i) சிவபெருமானைக் குறிப்பன:—இவற்றுள் திரிபுரம் எரித்தது, அர்த்தநாரீசுர கோலம், சடை-கொன்றை சூடுவது, கங்கை தரிப்பது, மதி சூடியது, நீறு பூசியுள்ளது, நஞ்சுண்டதும்-நீலகண்டமும்.

(ii) உமையைக் குறிப்பன:—இவற்றுள் தேவியின் திருமுலையும் குழலும்.

## 127. பதிக ஈறு [320]

தம் பதிகங்களை முடிப்பதில் சுவாமிகள் அதிகமாக உபயோகப்படுத்தி உள்ள சொற்றொடர்கள் பின்வரும் பொருளின:—(இல்லை), 'பாவமே', (வானத்து) இருப்பாரே'.

## 128. பரம்பொருள், பேரின்பம், வீடு, சிவகதி [323]

இது உயர்கதி, ஒளிநெறி, சிவகதி, பரகதி, பேரின்பம், வீடு எனப்படும்.

## 129. பழம்-காய்-வகைகள் [324]

(1) கமுகம் பழம்—காய்:—கமுகு குலைகுலையாய்க் காய்க்கும். காய் மரகத நிறம்; பழம் பவள நிறம். சோலைகளிற் கமுகம் பழங்கள் உதிரும்; பறவைகள் இரவிற்கூட கமுகின் செங்கனியை உண்ணும்.

(2) கோவ்வைப் பழம்:—இது (செந்நிறத்துக்காகத்) தேவியின் செவ்வாய்க்கு உவமை கூறப்பட்டுள்ளது.

(3) தெங்கின் பழம்:—தெங்கின் பழம் சோலைகளில் விழும். தெங்கின் பழம வீழ இள எருமை இரிந்து ஓடும்; வாளை குதி கொள்ளும்.

(4) பலாப்பழம்:—பலாப்பழங்கள் மரத்தில் குலையாய்த் தொங்கும். பொழில்களிற் பலா, பழங்களைச் சொரிந்து மணம் வீசும். பலாப்பழம் கொழுமை கொண்டது; மணம் வீசுவது; தேன் நிறைந்தது; இனிப் புடையது; பொன் நிறத்தது. மந்திகள் மரமேறி பழங்களைக் கொண்டுவந்து உண்டு குதிக்கும். பலாப்பழத்தின் சுளைகளைக் கீறி முசுக்கள் (குரங்குகள்) தினந்தோறும் தமது கூட்டத்துடன் உண்டு விளையாடும். பெண் குரங்குகள் உண்டு வீழ்த்த

பலாப்பழங்களை ஆண் குரங்குகள் உண்டு களித்துக் குதிக்கும். வாசலில் உள்ள பலாவின் பழங்களைக் கறவைக் கன்றுகள் உண்டு விளையாடும்.

(5) பனம்பழம்:—மழபாடித் தலத்தின் அருகில் உள்ள பொழிற் பக்கங்களிற் பனம்பழம் விழும்.

(6) மாம்பழம்:—சோலையில் மாங்கனிகள் நெருங்கிப் பொலியும். மரத்தின் கிளைகளில் மாம்பழங்கள் குலையாகத் தொங்கும். மாங்கனிகள் பொன்னிறத்தன; தேன் நிறைந்தன; அழகிய மாம்பழங்கள் ஆற்றில் அலையுண்டு வரும். (பவானியில்) சோலைகளில் தேன் நிறைந்த இனிய மாம்பழங்கள் உதிரும். தவஞ் செய்வோர் மலர் பறிப்பத் தாழ்த்திவிட்ட கொம்புகள் பட்டதனால் அருகில் உள்ள மாமரத்திலுள்ள காய்கள் கவண்கல் போல வேகமாய்க் கீழேயுள்ள சுனையில் விழ அங்குள்ள பறவைகள் (அச்சமுற்று) கரைசேரப் பறந்தோடும். மாம்பழங்கள் கீழே அகழியில் விழ வாளை மீன்கள் பூநிறைந்த பொய்கைகளிற் போய் வைகும். மாங்கனியை மந்திகள் உண்ணும். ஆண் குரங்குகள் கொம்பிணைப்பற்றித் தேமாங்கனி உண்ணும்; (முசுக்கள்) குரங்குகள் தமது கூட்டத்துடன் மாம்பழங்களை உண்டு குதிக்கும்.

(7) வாழைப்பழம்:—சோலையில் வாழைப்பழங்கள் உதிரும்; வாழைப் பழங்கள் பொன் நிறத்தன. தேன் நிரம்பிய; நல்ல வாழைகள் தேன் சொரியும். வாழை குலையாய்ப் பழுக்கும். மதங்கொண்டு சினங்கொண்ட யானையின் கை போல வாழைக் குலை தொங்கும். வாழைப் பழங்கள் ஆற்றில் அலையுண்டு வரும். வாழைப் பழங்கள் கீழேயுள்ள மதில்மேல் விழும். தாறு சிதறக் கனிகள் உதிர்ந்து வீழ்ந்து ஊறி வயல்களிற் சேறு செய்யும். வாழைக் குலையிற் கூழை மந்தி கனிகளை உண்டு தன் இனத்துடன் மாறுபட்டு அவை சிதைந்தோடப் பாய்ந்து பயிலும். தேன் மிக்க கனிகளை உண்ண மந்திகள் மேல் நோக்கியபடியே

பொழில்களில் இறங்கும். (குற்றால) மலையின் பக்கங்களிற் சோலைகளில் வாழைக் கனிகள் (பொலிந்து) தொங்கும். மலைச் சாரலில் மந்தி தன் மகவுடன் வந்து வாழைக் குலையில் உள்ள இனிய பழங்களை உண்ணும்.

(8) பழங்கள் (போது):—சோலைகளிற் பழங்களும் மலர்களும் உதிரும். (காளத்தி மலையில்) கருமந்திகள் பல்வகையான பழங்களை உண்டு கூட்டமாய் நெருங்கி மலையிடம் ஒலிப்ப விளையாடும். சினங்கொண்ட மந்தி மரமேறிக் கனிகளைச் சிந்தும். குரங்குக் கூட்டங்கள் பொழில்களில் கனியுண்டு விளையாடும். இனிய கனிகளில் வண்டினங்கள் தேன் பருகும். பல்வகைய ஆண் குரங்குகளும் பெண் குரங்குகளும் சோலைகளிற் கனியுண்டு தருக்கும். வாழைக் கனியும் மாங்கனியும் தேன் பிலிற்றும். மா, பலா, வாழை எனப்படும் முக்கனிகளின் சாறு ஒழுகிச் சேறு உலராதுள்ள வயல்கள் முதுகுன்றத்தில்—(விருத்தாசலத்தில்) சூழ்ந்துள்ளன. மா, வாழை பலா-இவை தம் கனிகள் பொன்னிறத்தன. “பாலினால் நறு நெய்யாற் பழத்தினாற் பயின்றாட்டி” என வருவதால், பாலும் நெய்யும் போலப் பழமும் சிவபிரானது அபிடேகத்துக்கு உபயோகப்படும்.

## 130. பாடல் [326]

தேவாரப் பாடல் [தலைப்பு 100 (8)-ம் பார்க்க] அன்பு தருவது; அழிவில்லாதது; ஆய்ந்து கூறப்பட்டது; இறைவன் திருவருளை முறைமையாகக் கூறுவது; இன்பம் தருவது; இன்னிசையில் அமைவது; ஈசன் கழலிற் சேர்வது; அவர் கழலைப் போற்றுவது; சந்தம் மலிந்தது; செஞ்சொல்லாலாயது; செப்பரிய தண்டமிழாலாயது: சொல் மலிந்தது; தெளிவு கொண்டது; நலம் மலிந்தது; பண் அமர்ந்தது; பயில்வார்க்கு இனியது; பலம் நிரம்பியது; பூம்பாவையை எழுப்பியது; மறையொலி முறையே அமைந்தது; மெய்யாயது; வலங்கொண்டது.

பிற பாடல்களுள்—கடைசியர்கள் பாடல், குறிகலந்த இசை பாடல், செந்திசை பாடல், தையலார் பாட்டு, நான் மறையோர் பாடல், பத்திமைப் பாடல், (பூசல்) பணி வார்கள் பாடல், மங்கையர்கள் பாடல், மாதரிசை பாடல், கலவி......தொழிலின் பாடல்—என்பன கூறப்பட்டுள.

## 131. பாடல்—ஆற்றுப்படைகள்

(1) காழி ஆற்றுப்படை [16 (1)] அல்லல் வாழ்க்கையிற் பட்டு அவத்தைப்படுமுன் காழியைச் சேருங்கள்; மூப்பின் வாய்ப்பட்டுக் கை கால் தளர்வதின் முன் காழியைச் சேருங்கள்; பிறன் வாயிலிற் காத்திருந்து அவன் நாளை உச்சிக்கு வா என்று சொல்லி அனுப்பும் உரையைக் கேட்பதன் முனம் காழியைச் சேருங்கள்.

(2) கோடிகா ஆற்றுப்படை [16 (2)] :—நம் பொருள் நம் மக்கள் என்று நச்சி யிச்சை செய்து அல்லற்படுமுன் கோடிகாவு சேருங்கள்; அழிந்து போகும் இவ் வாழ்க்கையை விட்டு நல்ல நெறி நாடக் கோடிகாவு சேருங்கள்; நோய், பிணி, மாயும் வகையைச் சொல்லுவேன்—கோடிகா சேருங்கள்.

(3) நெஞ்சாற்றுப்படை [16 (3), (5)] :— I (கோவலூர், நெஞ்சமே! உறுதி வேண்டில் அவலத்துள் அழுந்தாது கோவலூர் சேருக; நரைதிரை வருமுன் கோவலூர் சேருக; பிறரை வேண்டி வருந்தாதே—கோவலூர் சேருக; நோய், மூப்பு இவை நலியுமுன் கோவலூர் சேருக, கேடு, மூப்பு, சாக்காடு இவைதமைப் போக்கக் கோவலூர் சேருக. II (ஆரூர்) :—பிறவியால் வருவது கேடு; வாழ்க்கை அல்லலோடு கூடியது, என் செய்யலாம் என நெஞ்சமே அஞ்சாதே! நீ ஆரூர் தொழுதால் உய்யலாம்.

(4) கடந்தை ஆற்றுப்படை [16 (4)] :—சலிப்பு, பிணி, மூப்பு, பிறவி, சாக்காடு இவை கொண்ட வாழ்க்கை

யொழியத் தவஞ் செய்வதற்குத் தக்க இடம் வேண்டில், பெண்ணாகடம் சென்று தொழுமின்கள்.

## 132. பாடல்-துதி

திடபத்திக் கூறித் துதித்தல் [264 (5)] :—சங்கரனே! புண்ணியனே! நீலகண்டனே! இடர்வரினும், தளர்ச்சிவரினும், வினைவரினும், துயர் உறினும், பிணிவரினும், நோய் தொடரினும், உண்ணினும், பசிப்பினும், உறங்கினும், வாழினும், சாவினும், வருந்தினும், நனவிலும், கனவிலும், உன் திருவடியையே என் சிந்தை நாடும்; உன் திருவடியையே எனது நா உரைக்கும்.

## 133. பாடல்-பா வகைகள் [329-333]

ஒலி, கலிக்கோவை, சக்கரம், சந்தம், செந்திசைப் பாடல், தொழிற்பாட்டு, பாசுரம், மாலை, மாவின்பாச்சல், வண்ணம், வழிமுடக்கு, வழிமொழி, விருத்தம்-என்னும் பா வகைகளின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. எழு கூற்றிருக்கை, ஏக பாதம் கூடசதுக்கம், கொம்பிலாப் பாட்டு, கோமூத்திரி, சக்கரமாற்று, மாலைமாற்று, மொழி மாற்று, யமகம் ஆதிய சித்திரக் கவிகளையும், அந்தாதித் தொடை, (திரு) இராகம், திரு (இருக்குக்) குறள், ஈரடி, ஈரடிமேல் வைப்பு, தாளச் சதி, நாலடிமேல் வைப்பு, இடைமடக்கு-முக்கால் ஆதிய பாவகைகளையும் காணலாகும். ஆசிரியப்பா போல அமைந்துள்ள பதிகங்கள் சில; கட்டளைக் கலித்துறைபோல அமைந்துள்ள பதிகங்கள் சில; சில பாடல்களிலிருந்து நேரிசை, இன்னிசை, சிந்தியல்-குறள் வெண்பாக்கள் அமைகின்றன. பாட்டுக்குள் பாடல்கள் (கரந்துறை பாடல்கள்) சில பாடல்களிற் கிடைக்கின்றன. சில பாடல்களிற் சில எழுத்துக்களையோ சொற்களையோ விட வேறுவகைப் பாக்கள் வெளி வருகின்றன. இங்ஙனம் பல விசித்திரங்கள் சுவாமிகள் பாடல்களில் உள்ளன.

மேலும், இறைவனுடைய இயல், உரு, கோலம், தலம், நீறு, பெருமை, வீரம், என்பவற்றைக் குறிப்பனவும்,

இறைவன் வீரச்செயல்கள், அடியார்க்கருளும் பண்பு, அடியார் பெறும் பேறு, உபதேசமொழி, ஐந்தெழுத்து, திருவடிப் பெருமை, படைக்கலங்கள், இவை தமைக் குறிப் பனவும், இறைவனது அரவணிகோலம், ஆடற்கோலம், சடைக்கோலம், பலிக்கெழு கோலம், பிறைக் கோலம், மணக்கோலம், விடைக்கோலம், இவைதமைக் குறிப்பன வும், மங்கையர்க்கரசியாரது புகழைக் குறிப்பனவும், இறை வனைப் போற்றத் துதிரூபமாய் வருவனவுமான அருமை யான அடிகளை அகவற்பாவாக அமைத்து, "தேவார ஒளிநெறி" என்னும் நூலிற் காட்டியுள்ளேன்.

## 134. பார்வதி தேவி [336]

(i) தேவியைக் குறிக்குஞ் சொற்கள், சொற்றொடர்களுள்:— உமை நங்கை என்னும் பெடை, ஏழை, திருமாது, தையல், நாரி, பெண்ணினல்லாள், பெருந்திருமகள், பேதையாள், மாதர், மாதேவி—என்பன குறிக்கத் தக்கன.

(ii) தேவியின் அங்கலட்சணங்கள் :—

(1) அடி :—மென்மையிற் பஞ்சுக்கு ஒப்பானது. நூபுரம், பாடகம் அணிந்துள்ளது.

(2) அல்குல் :—அகன்றுள்ளது. படஅரவும் தேரும் போன்றது, பட்டணிந்தது.

(3) ஆகம் :—பொன்னணிகள் பூண்டது.

(4) இடை :—சிறியது, நுண்ணியது; அரவு, இழை, (வஞ்சிக்) கொடி துடி, மின்—போன்றது.

(5) கண் :—அழகியது, கரு நிறத்தது, விசால மானது, நெடியது, பெரியது, மை பூசப் பெற்றது, வரி (ரேகைகள்) கொண்டது; அத்திரம், அம்பு (கணை), பிணை, மலர் (நீலம், காவி, குவளை, தாமரை), மாழை (மாவடு), மான், மீன் (கயல், சேல்), வண்டு, வாள், வேல் போன்றது.

(6) கூந்தல் :—குரா, மரு முதலிய மலரணிந்தது, வண்டு நாடுவது, மலர் நிறைந்தது, மாலை சூடியது, நறிய வாசனை கொண்டது, கரு நிறத்தது, நெறி (வளைவு) கொண்டது, சரிந்து தாழ்ந்துள்ளது, நெருங்கியது, நீண்டுள்ளது, பாரமுடையது, மெல்லியது.

(7) கை-முன்கை :—வெளிய, பலவாகிய வளைகளை நிறையப்பூண்டது; சங்க வளை, பொற்றொடி பூண்டது.

(8) சடை :—நீண்டது.

(9) சாயல் :—அன்னம், (தளருங்) கொடி, பூங் கொடி, இளம்கொம்பு, தோகை மயில், மான் போன்றது.

(10) தோள் :—வேய் போன்றது.

(11) நடை :—அன்னம், பிடி, மயில்—இவை தம் நடையை ஒத்தது.

(12) நுதல் :—பட்டமணிந்தது, பிறையும் சிலையும் (வில்லும்) போன்றது.

(13) பல் :—நிலவும், முத்தும், முல்லையும் போன்றது.

(14) புருவம் :—வில்லை வென்றது.

(15) முகம் :—நிறைவெண் திங்களும், தாமரையும் போன்றது.

(16) முலை :—அதிசயிக்கத் தக்கது, சித்திரமானது, வட்டமானது. கச்சு அணிந்தது, தேமல் படர்ந்தது, (மாந்)தளிர் நிறத்தது, குளிர்ச்சி கொண்டது, சந்தனம் அணிந்தது, உண்ணப்படாதது, பாலை (மூவா மருந்தை), உள்ளே கொண்டது, பொன்னணி, மணிவடம் பூண்டது; ஈர்க்கும் இடைபோகா வண்ணம் நெருங்கியது; அழகு, இளமை, ஒளி, சீர், நலம், மென்மை, பருமை, போகம், வீறு வாய்ந்தது; அரும்பு (கோங்கரும்பு), கலசம், குரும்பை, சூதாடு கருவி, செப்பு, பொற் கலசம், முள்ளி முகை போன்றது.

(17) மேனி :—மாந்தளிர்நிறம்.

(18) **மொழி** :—அழகியது, தூயது; மொழியின் இனி மைக்கு உவமையாக இன்னிசையாழ், குழல், பண், கரும்பு, தேன், பாகு, பால், கிளி, குயில்-சொல்லப் பட்டுள.

(19) **வாய்இதழ்** :-கொவ்வைக்கனி, பவளம்போன்றது.

(20) **விரல்** :—காந்தள் போன்றது, பந்து அமர்வது.

**தேவியைப்பற்றிய பிற செய்திகள்** :—தேவி இமவான் மகளாதலால் மலைமகள் என்னும் பொருளிற் பல சொற்றொடர்கள் வந்துள. உதாரணமாக-கல்லின் மான், கல்லினற் பாவை, சிலம்பின் மங்கை, வரை மகள்-என வருவன காணலாம். திருமாலே தேவி. தேவி இறைவர் ஆகத்தில் இடது பாகம் கொண்டுள்ளாள். தேவி மார் பிற் சிவனும், சிவன் மார்பில் தேவியும் உறைவர். தேவி இறைவனுக்குத் தாரம். இமையோர்க்கு உச்சித் தானத் தவள். தேவி மாலை யணிந்துள்ளாள்; சூடகம், நூபுரம், பாடகம், பூந்துகில், பொற்றோடு, மேகலை, வளை அணிந்துள் ளாள். தேவி தீதிலாள்; நல்லாள்; அழகும், இளமையும், உருவும், ஒளியும், குளிர்ச்சியும், தளிர் வண்ணமும், தேசும், வளமும், வடிவும் விளங்குபவள்; முடிவிலாப் புகழும் பெருமையும் வாய்ந்தவள். அழிவிலாள்; பழையோள்; மாறிலாள். சத்திகளுள் ஆதிசத்தி தேவியே; தேவி யுடன் இறைவன் தொல்லை யூழியாய் நிற்பவன்; தேவி யொடு பிரிவிலான். இறைவனிடத்து அன்பிற் பிரியாத வள் தேவி. அறங்களை வளர்ப்பவள்; திரிபுரத்தை எரித் தவள். காஞ்சியில் தவஞ் செய்தபொழுது கம்பா நதி பெருக்குக்கு நடுங்கித் தேவி இறைவனைத் தழுவினள், உடனுறையும்பேறு பெற்றனள். தேவி சுளிவு கொள்ள இறைவன் தேடிச் சென்று அச்சுளிவை நீக்கியருளினர். தேவியும் இறைவனும் உயிர்கள் தோறும் அமர்ந்துள் ளார்கள். கங்கையின் வரவு கண்டு தேவி முனிவு (கோபம்) கொண்டு வாடினள். ஊடினள், பிடி உருஎடுத்துத் தேவி கணபதியைப் பெற்றிட்டாள். தேவியின் கழல்

சிவபிரானது கையது. புலியாடை, ஆமை ஓடு, ஏனக் கொம்பு, எலும்பு, பாம்பு இவை தமைப்பூண்ட கோலத்தைக்கண்டும், கொலையானை வந்த போதும், இறைவன் அதன் தோலை உரித்தபோதும், தோலைப் போர்த்த போதும், இறைவன் நஞ்சையுண்ட காலத்தும், கயிலை மலையை ராவணன் அசைத்தெடுத்த காலத்தும், இறைவன் சுடலையில் செய்யும் ஆடலைக் கண்டும் தேவி அஞ்சினள். தேவியின் அம்சமாகிய காளி தாரகனைச் செற்றனள். இறைவன் ஆடும்பொழுது தேவி கீதம் பாடுவாள். திருமாலும், பிரமனும் போகத்துடன் பயில்வதற்கு ஆதாரம் இறைவன் தேவியுடன் அமர்தலே.

## 135. பாரத விஷயங்கள் [337]

'சிவனும் விசயனும்' என்னும் 75-ஆம் தலைப்பைப் பார்க்க,

## 136. பிரமன் [338]

அண்ணல்; அழலோம்புவன்; அற்புதன்: அறஉருவன்; அறுபகை வென்றவன்; அன்ன (வாகனன்); ஆதியாயவன்; ஈறு உள்ளவன்; உந்தியில் தோன்றியவன்; ஊழிதோறும் (வரன் முறைப்படி) ஏழுலகும் படைப்பவன்; கமல மலரைக் கையிற் கொண்டவன்; கலைமகள் கணவன்; கேடில்புகழோன்; கோலம் உடையான்; செங்கமல மலரில் வீற்றிருப்பவன்; [வீற்றிருக்கும் மலர்- "சாமவெண்டாமரை'' என்றும், "வேதக்கிளர் தாமரை"—என்றும் சொல்லப்பட்டுளது]; தவத்தவன்; திருமால் மைந்தன்; தேவரால் தொழப்படுபவன்; நல்லியலோன்; நன்று தீது இலாதோன்; நாணம் பூண்டோன்; நான்முகத்தோன்; புலன்நுகர்வோன்; பூணூல் அணிந்தோன்; பெரியான்; பொன்னிறத்தவன்; ராவணன் தவத்துக்கு இரங்கி அவனுக்குப் பெருவலி அருளியவன்; [illegible]வரன்; விழுமியோன்.

அன்னமாய் (கழுகாய், பருந்தாய்)ப் பறந்தும் சிவனது திருமுடியைக் காணமாட்டாது மயங்கினவன்; பார்வதி

யும், மாலும் போலப் பிரமனும் சிவன் திரு வுருவில் ஒருபால் அமர்ந்தவன். பிரமன் தலை ஒன்றைச் சிவபிரான் அறுத்தனர். பிரமன் தலையோடே சிவபிரானது உண் கலம். பிரமன் எழுத்து அடியாரைச் சிவனிடமிருந்து பிரிக்கவல்லது அன்று. சிவபிரான் தேவியொடும் அமர்ந் திருப்பதால்தான் பிரமனும் மாலும் போகத்துடன் பொலி கின்றனர்.

பிரமன் மறை பயில்பவன், மறையீந்தவன், மறை வல்லவன், மறையோர்க்கு ஆதி; அவன் வேத கீதன், வேத நாவன். வேத முதல்வன்.

பிரமன் சிவபிரானைக் கீழ்ச்சொல்லிய தலங்களில் வழி பட்டதாக அத்தலங்களின் பதிகங்கள் விளக்குகின்றன:— இராமேசுவரம், ஐயாறு, காருயில், சீகாழி, திருப்பூவணம், திருவுசாத்தானம், மயேந்திரப்பள்ளி, மழபாடி, மறைக்காடு.

**பிரமன் பெயர்கள்** :—அந்தணன், அயன், கனக மனையான், சதுர்முகன், திசைமுகன், நான்முகன், பிரமன், பூமகன், பூவினன்; போதன், மலரான், மறையவன், விதாதா, விதி, வேதியன்.

## 137. புகழ் [341]

இறைவனுக்கு உரியபுகழானது 'அந்தமில் புகழ்', 'எண்ணரும் புகழ்', 'எல்லையில் புகழ்,' 'தொல் புகழ்', என்று பாராட்டப்பட்டுளது. ஸ்ரீராமரை "ஈனமிலாப் புகழ் அண்ணல்" என்று விசேடித்துச் சொல்லியுள்ளார். பரந்தோங்கிய புகழைப் பூண்டிருந்தான் இராவணன் என்பதைக் குறிக்க 'ஏறு புகழ் பெற்ற தென் இலங்கை யவர்கோன்', 'பரந்தோங்கு பல்புகழ் சேர் அரக்கர்கோன்'— எனச் சிறப்பித்துள்ளார். ஞான மொழி மாலையால் உலகுக்கு நலம் நாடிய புகழான் ஞானசம்பந்தன் எனத் தம்மைக் குறித்துள்ளார்.

புகழும், புகழாளரும் மிக்குகின்ற தலங்களுள்-அம்பர், திருவிடைமருதூர், சீகாழி, தென்குடித்திட்டை, திருவாஞ் சியம், திருவீழிமிழலை முதலிய சொல்லப்பட்டுள.

## 138. பூசை [343]

(1) அருச்சனை:—அந்தி சந்தியில் அருச்சனை செய்வர். செந்தமிழர், மறைநாவர், பெருங் குணத்தோர்—அருச்சனை செய்வர். தேவர்கள் லட்ச நாமங்கள் கூறி அருச்சனை செய்து தொழுவர்.

(2) பூசை சாதனங்கள் [343 (3),(7),(8)]:—மலர், நீர், அவி (நைவேத்யம்), பாட்டு, ஓமம், நாவிவாய்ச் சாந்து, (புனுகு சட்டம்), சந்தனம், கந்தம், குங்குலியம் ஆதிய வாசனைப் பொருள்கள், புகை-ஒளி-(தீபம் தூபம்), மாலை வகைகள்.

(3) வழிபடு முறை— [403,406-413]:—வாத்தியங்கள் முழங்க நடம் பயின்று பணிவர்; நூலியற்றிப் பணிவர்; வலம் வந்து பணிவர்; பாடிப் பணிவர்; இசை பாடிப் பணிவர்; நரப்புக் கருவிகளுடன் பல மொழிகளில் ஏத்திப் பணிவர்;

(4) சிவ தோண்டு [406-413, 271]:—இறைவனைத் தியானித்தபடியே பூக்கொய்தல், திருக் கோயிலுக்குப் பூ எடுத்துச் செல்லுதல், நந்தவனம் வைத்தல், குளம் வெட்டுதல், கையால் அலகு கொண்டு திருக்கோயிலைப் பெருக்குதல்-இவை சிவ தொண்டுகளாம்.

(5) பூசித்தவர் - பூசிப்பவர் :—[344]:—சாந்து, மாலை, அகிற் புகை, மலர், நீர், நீர்க்குடம் இவை கொண்டு அடியார் பூசிப்பார், திருநீறிட்டுப் பூசிப்பர். தொண்டர்கள் பலர் கூடி அதி காலையில் இறைவனை நித்தலும் பாடிப் பணிவர். பூசித்தவருள்- செந்தமிழர் பூசித்தது, மறையவர் பூசித்தது, சித்தர் தேவர் பூசித்தது, அருச்சுனன், சடாயு, சண்டேசுரர், நமிநந்தி, நளன், மலையாளர், மாதர், மார்க்கண்டர், முருகநாயனுர், யானை வாலி-இவர்கள் பூசித்தது கூறப்பட்டுள. சடாயு யோசனை தூரம் போய்ப் பூக்கொணர்ந்து பூசித்ததும்; சண்டேசுரர் மண்ணி யாற்றில் மணலால் லிங்கம் தாபித்துப் பூசித்ததும்: நமிநந்தி யடிகள் ஐம்புலன்களையும் அடக்கி,

இறைவனை ஆதரித்து வழிபட்டதும்; நளன் தீபதூப முடன் மலர் தூவிப் பூசித்ததும்; மலையாளர் பண்ணுடன் பாடி யாடிப் பணிந்ததும்; அருச்சுனன் ஐம்புலன்களை ஒடுக்கி நித்தம் பூசித்ததும்; மார்க்கண்டன் இருக்கு மந்திரத் தாலும் புது மலராலும் ஏத்திப் பூசித்ததும்; முருகநாயனர் மாலை கொண்டு அலங்காரம் செய்து பூசித்ததும்; யானை பிடியுடன் காலையில் குளத்தில் மூழ்கிப் பிடியானது திருக் கோயிலைப் பெருக்கத் தான் தனது பெருங் கையில் மலர் கொண்டு பூசித்ததும், வாலி தூபம், சாந்தம், மலர் கொண்டு பூசித்ததும் விளக்கப்பட்டுள்ளன.

தேவர்கள்:—எண்ணிலி தேவர்கள் வழிபட்டனர். நீர், மலர், கந்தம், மாலை இவை கொண்டு நாடோறும் பணிவர். எல்லா மொழியாலும் துதிபாடித் தொழுவர். வேத இசை பாடி மலர் சொரிவர். நாமம் நூருயிரம் சொல்லி வணங்குவர்.

பூசைவகை [345] ஞான பூசை [345(5)]:—ஊன உடம்பில் பிணி நோய் கெட வேண்டில், ஞான பூசை செய்க. இறைவனை அறிவால் தொழுக. ஞானமாக நினைக்க.

மானச பூசை [345(10)]:—நஞ்சை உண்டவனே! உமை பங்கா! எனத் தியானித்துத் தொண்டு பூண்டு உள்ளமே கோயிலாகத் தலைவனை யிருத்தித் துதித்தல் வேண்டும்.

(6) அடியவரைப் பூசித்தல் [345(2)]:—குலம் முதலிய வற்றைக் கவனியாது சிவனடியவரைப் பணிதல் வேண்டும். அஞ்செழுத்து, கோவணம், விபூதி ஆகிய சிவசாதனங் களைக் கண்டதும் தொழுதல் வேண்டும். தனித்துவரினும், கூட்டமாய் வரினும், சிவனடியார் அடிக்கீழ்ப் பணிதல் வேண்டும்.

(7) பணியும் முறை: [403]:—இருக்கு மந்திரம் கொண்டும், மறைபாடியும், வேதத்தின் எண் பொருளால் வேதியர்கள் போற்றிப் பணிவார்கள். கண்ணாரக் கண்டு பண்ணாரப் .பாடிப் பணிதல் வேண்டும். கோழை கட்டிய

நெஞ்சமோ, கவியிலக்கணம் அறியா அறிவோ, இசை கூடிய வகையில் ஏழை யடியார்கள் ஏத்த இறைவர் மகிழ்வர். மனம் ஒன்றிச் சிந்தையை இறைவனிடம் வைத்துத் துதித்தல் வேண்டும். அதுவே உண்மைப் பொருளை அடையும் உபாயம். சய சய எனத் துதி சொல்லிப் பூசித்தல் வேண்டும். நா-அவர் திருநாமங்களை ஓதப், பூவும் நீரும் கொண்டு பூசித்தல் வேண்டும். அங்கை தலைக்கேற வேண்டும்; அஞ்சு புலனும் ஒடுங்குதல் வேண்டும் ; திருநீறு பூசுதல் வேண்டும்; தலை வணங்க வேண்டும்; இருபோதும், இரவும் பகலும், ஏத்துதல் வேண்டும் ; உணர்வால் உள்குளிர்ந்து மெய்யன்புடன் தொழல் வேண்டும்; 'கதியருள்' என்று கைகூப்பித் தொழவேண்டும்; "சாமி தாதை சரண் " எனக் கூறித் தலை சாய்க்கவேண்டும்.

(8) வழிபாட்டுக் காலம் [343(2)]:—இரவும், பகலும், எல்லியும் ஏத்துதல் வேண்டும். அந்தி சந்தியில் அர்ச்சனைகள் செய்யவேண்டும். காலையும் மாலையும் தொழுதல் வேண்டும். நாடோறும் முட்டின்றிப் பணிசெய்ய வேண்டும். நித்தலும் நியமந் தவருது மலர்கொண்டு வணங்கிக் கை தொழுதல் வேண்டும். பத்தியாக முப்போதும் பொற் கழலைப் போற்றுதல் வேண்டும். திருநீறு பூசி நித்தம் அதிகாலையில் தொண்டர் கூட்டம் கூடிப் பணிவர். விடாது பணிதல் அவசியம். மலர்கொண்டு இருபோதும் பணிக.

(9) பூசைவேளையில் மனநிலை. [412]:—ஆவியில் ஐம்புலன்களையும் ஒடுக்கிப், பெருமானையே உள்கி, அவருக்கே நாம் உரிமைப் பொருளாகி, கள்ளம், வஞ்சகம் இவை சற்றுமின்றி அவர் திருவடிகளில் சித்தத்தை நிறுத்தி, நீர்-மலர் தூவித், தலை வணங்கி, உள் குளிர்ந்து பணிதல் வேண்டும்.

(10) பூசையினுல் வரும் பயன். [401]:—நீர், மலர் கொண்டு காலையும் மாலையும் பணிபவருக்கு இறைவன் அணியர், இனியர், மலர் தூவிப் பூசைசெய்தால் மனம்

ஒடுங்கிப் பாழாகும்; இறைவன் புலப்பட்டு எதிர்நிற்பன்; அருளுவன். அலர் கொண்டு பூசைசெய்ய வினை சிதைவாம், நோய் நலியாது, வானகம் எய்தும், தீய கெடும், பாச வினை கெடும்.

## 139. பேய்கள் [346]

(i) கழுது, கூளி என்பன பேயைக் குறிக்கும் பிற பெயர்கள். பேய்களுள் கொள்ளிவாய்ப் பேய் கூறப்பட்டுளது. பேய்கள் காட்டில், இடுகாட்டில், சுடுகாட்டில், முதுமரத்தில் இருப்பன. பேய்கள் பாடும். அவை பறைபோல் விழியன, பகுவாயன, நாவுங் கூந்தலும் விரிந்துள்ளன. பிணத் தசையை உண்பன; பேய்கள் மனிதரைப் பிடிக்கும், பிரியும்.

(ii) பேயும் சிவனும் [347] :—சிவனும் பேயும் (74-ஆம் தலைப்பு)ப் பார்க்க.

## 140. பொழிலும் சோலையும் [351]

(i) சோலைகள் :—இருண்டன, நீண்டன, அழகு வாய்ந்தன, தேன் நிறைந்தன, மலர் நிறைந்தன, குளிர்ந்திருப்பன, நிழல் பயப்பன, நறுமணம் வீசுவன, வானம் அளாவுவன, மதியைத் தடவுவன. மா, பலா, முதலிய இனிய கனிகள் நிறைந்தன. சோலைகளில் குயில்கள் கூவும், இசை பாடும்; மயில்கள் ஆலும்; கூகைகள் முரலும்; தென்றல் வீசும்; பழங்கள் விழும்; புன்கு பொரி சொரியும்; பெடையைப் புல்கி மயில் மாநடம் ஆடும்; வண்டு மதுவுண்டு பாடும்; பண்முரலும்; மேகம் தவழும்.

சொல்லப்பட்ட சோலைகள் :—கமுகஞ்சோலை, சாலிமலி சோலை, பூஞ்சோலை, பொழிற்சோலை, மலர்ச்சோலை.

சோலைகளில் உள்ள மரங்கள், செடி, கொடிகள் :—கமுகு, குரா, கொகுடி முல்லை, கோங்கு, செண்பகம், செருந்தி, ஞாழல், தளவு, தெங்கு, பலா, புன்கு, புன்னை, மரவம்,

மல்லிகை, மா, மாதவி, மௌவல், வகுளம், வல்லி, வன்னி, வாழை.

(ii) பொழில்கள் :—அழகு வாய்ந்தன, அன்னந் தங்குவன, இருண்டுள்ளன, கதிர் தோய்வன, கனி நிறைந் தன, குளிர்ந்துள்ளன, கொக்கரவம் உள்ளன, தடங் கொண்டன, தழைந்துள்ளன, தாது உதிர்வன, திடம் பொலிவன, திண்ணியன, தெய்வத் தருக்கள் வளருவன, தென்றல் வீசுவன, தேன் அவிழ்வன, நறுமணம் வீசுவன, நிழலளிப்பன, நீண்டுள்ளன, பரப்புள்ளன, மதிற் புறத்தன, மரங்கள் நெருங்குவன, மலர் நிறைந்தன, மலைச் சாரலில் உள்ளன, வண்டுகள் கெண்டுவன, வளங்கொண் டுள்ளன, வாவிகள் கொண்டன, வான் அளாவுவன, வெயிற்கு இடங் கொடாதன.

பொழில்களில் கிளிகள் அடையும், கோதும்; குயில் கோதும், மிழற்றும்; தென்றல் வீசும்: நெல் ஆலைகள் விளங்கும்; பலாக்கனி, மாங்கனி, முதலிய கனிகள் நெருங் கும்; பொய்கைகள் விளங்கும்; பொறி அரவுகள் (உலவும்); மதி தோயும்; மயில், குயில், அன்னம் அணையும்; மயில் ஆலும், பேடையோடாடிக் கூடும்; மீனும் புள்ளும் வாழும்; முதுவேய்கள் முத்து உதிர்க்கும்; முழவு அதிரும்; மேகம் தவழும்; வண்டுகள் கீதம் முரலும், பண் பாடும், யாழ்பாடும்; வண்டு பேடையோ டாடும்; விழாக்கள் மல்கும்; வேத சந்தங்கள் ஒலிக்கும் (வேதங்கள் ஓதப் படுதலின்).

**சொல்லப்பட்ட பொழில்கள்**:—தெங்கம் பொழில், நெற் பொழில்.

**பொழில்களில் உள்ள மரங்கள், செடி, கொடிகள்**:— கமுகு, குரவம், குருக்கத்தி, குருந்தம், கைதை, கொன்றை, கோங்கு, கோடல், சந்தம், சுரபுன்னை, செண்பகம், செருந்தி, ஞாழல், தளவம், தாழை, நெய்தல், பலா, பனை, புன்னை, மகிழ், மரவம், மல்லிகை, மலை வாழை, மாதவி, முல்லை, வாழை, வேங்கை, வேய்.

பொழில் வர்ணனை:—மேகம்போல அளித்தலின் "புயல் நேர்வரும் பொழில்" என்றும், தன்னிடத்துள்ள பொருள்களைப் பிறர் எடுத்த போதிலும் அவர்களுக்கு நிழல் தந்து காத்தலின் "பொறை மல்கு பொழில்" என்றும் பொழில் குறிக்கப்பட்டுளது.

## 141. போல-என்னும் பொருளில் வரும் உவமை உருபுகள், சொற்கள் [34, 35]

அ, அடு, அடுத்த, அடைந்த, அணித்தா, அணியும், அணை, அது, அமர், அமரும், அன்ன, அன்னது, அன, அனைய, ஆர், ஆர்ந்த, ஆரும், ஆல், ஆன, இட்ட, இயல், இயலும், இயன்ற, இயன்றெழு, இல், இலங்கு, இலங்கும், இன், இன்ஆர், இன்நிகர், இன்நேர், இன்நேரன்ன, உலா, உலாவிய, உலாவு, உற, உறு, எதிர், என்ன, என, ஏய்க்கும், ஏய்ப்ப, ஏயும், ஒத்தன்ன, ஒத்தனைய, ஒத்து ஒத்தொளிர், கெழு, கொண்ட, கொள், செய், செய்த, செய்தரு, சேர், தகு, தரு, தரும், தாங்கு, தாழ், திகழ், நிகர், நிலாவிய, நேர், நேர்தரு, நேரன்ன, படும், புரை, புரைய, புரையும், புல்கு, பொரு, போல், போல்வார், போல, போலாம், போலும், போலே, மல்கு, மலி, மேவு, வண்ணம், வரும், வளர்—இவை உவமை காட்டுஞ் சொற்களாகப் போல என்னும் பொருளில் வந்துள்ளன: அங்ஙனம் வந்த உவமைகளுள் காவிரிக்குக் கங்கையும் கடலும், குரவின் அரும்புக்குப் பாம்பின் முள்ளெயிறும், கோடற்பூவுக்கு அரவும், தமிழுக்குத் தேனும், (ஆண்) நடைக்கு விடையும், நெற் கதிருக்கு வெண்சாமரையும், பிறைக்கு நாவாயும், பேயின் விழிக்குப் பறையும், மரக்கலத்துக்கு மலையும், வாழையின் குலைக்கு வேழத்தின் கையும் உவமையாக எடுத்துக் காட்டப்பட்டவை குறிப்பிடத் தக்கன.

## 142. போலும் [352]

(i) 'போலும்' என்னும் சொல் "கண்டீர்", 'என்று அறிமின்' என்னும் பொருளிலும்; (ii) "இலர் போலும்"

என்னும் சொற்கள் "உண்டு" என்னும் பொருளிலும்— வந்துள்ளன.

## 143. மரம், செடி, கொடி, மலர் முதலிய [354]

(பழம்-என்னும் தலைப்பிலும் பார்க்க)

(i) (1) அகில்:—மலையில் வளரும். தொண்டர்களும் பெண்களும் இதன் புகையை இறைவனை ஏத்த உபயோகப்படுத்துவார்கள். காளத்தி போன்ற தலங்களில் இதன் புகை விசும்பை அளாவிற்று; மகளிர் கூந்தலுக்கும் அகிற் புகை ஊட்டுவது உண்டு. அந்தணர்களின் ஆகுதிக்குப் பயன்படும்.

(2) இலவம்:—முள் உள்ளது.

(3) எருக்கு:—வெள்ளெருக்கு உண்டு. குளிர்ச்சியை உடையது.

(4) ஏலம்:—வாசனை கொண்டது.

(5) கமுகு:—தாறு உடையது. கூந்தற் குலைகளைக் கொண்டது. வாழைக் குலையிற் கமுகு குலையின பாளையில் தேன் பாய்ந்து ஒழுகும், கமுகின் குழை தரு கண்ணிகள் ஊசலை ஒக்கும். கமுகின் காய்கள் முத்துப்போல அரும்பு விட்டு, மரகத நிறத்துடன் காய்த்துப், பவளநிறத்துடன் பழுக்கும். இதன் பாளையில் இருந்து பாயும் மதுவை உண்டு மந்திகள் குதிக்கும். கமுகு மலைநிலத்தில் வளரும்; உயரமாய் வளரும்.

(6) கரந்தை:—இதன் தளிரைச் சிவபிரான் சூடுவர்.

(7) கரும்பு:—தேன் போலச் சுவைக் கட்டி தரும். நீர் வளப்பத்தில் நெருங்கித் தண்டுபோலப் பருத்து வளரும். செழுமையும் இனிப்பும் கொண்டது.

(8) கழுநீர்:—நீரிற் சேற்றில் வளர்ந்து மலரும்.

(9) கற்பகம்:—தெய்வலோக விருட்சம். கொடைக்குப் பேர்போனது.

(10) காசை:—கரு நிறங்கொண்டது. ஆதலால், கூந்தலுக்கும் இறைவனது நீல கண்டத்துக்கும் இதன் நிறம் உவமை கூறப்பட்டது.

(11) காஞ்சி:—பொன்னிறப் பூவை உடையது; அன்னம் காஞ்சி மலர்ச்சின்னம் ஆலும்—எனக் கூறப்பட்டுள்ளது.

(12) காந்தள்:—இதன் மலர் மகளிர் மெல் விரல் போல இருக்கும். பாம்பு படம் விரித்தாற் போல இது மலரும். தேன் உடையது. கோடல் என்பதைப் பார்க்க.

(13) காவி:—நீரில் மலர்வது, வண்டு மொய்ப்பது, இம்மலர் மகளிர் கண்ணுக்கு உவமை கூறப்பட்டுளது.

(14) குமுதம்:—நீரில் மலர்வது; மகளிர் வாய்க்கு உவமை கூறப்பட்டுளது.

(15) குரவு:—இதன் அரும்பு பாம்பின் முள்பல் (முள்ளெயிறு) போல இருக்கும். இதன் மலர் தேன் கொண்டது. குராமலரின் தோற்றம் பாவையின் தோற்றம் போல இருப்பதால் கவிகள் "குரவம்பாவை" என்பர். குரா பந்தலிட்டது போல மலருமாதலின் 'குரவின் பந்தல்' எனவுங் கூறப்பட்டுளது. இது மலைநிலத்தில் வளரும். மரவம், மல்லிகை, சண்பகம்-இவைகள் மலர்ந்து மாந்துவதைக் கண்டு குரவம் முறுவல் செய்யும் என்கிறார்.

(16) குருந்தம்:—இதன் மலர் வாசனை கொண்டது, வண்டு மொய்க்கும், மாதவியுடன் வளரும், மலை நிலத்தில் வளரும்.

(17) குவளை:—நீரில் மலர்வது; தேன் கொண்டது, வாசனை யுடையது; வண்டு நாடுவது; பெண்களின். கண்ணுக்கு உவமை கூறப்பட்டுளது.

(18) கோடி:—(பெண்களின்) இடைக்கு உவமை கூறப்பட்டுளது.

(19) கொன்றை:—கார் காலத்தில் மலர்வது, பொன் சொரிவது போல மலர் சொரியும்; தார்போல மலர்க்

கொத்துக்கள் ஒழுங்காகத் தொங்கும்; பொன்தாது உதிரும்; கொன்றைமலர் அழகுள்ளது, தேன் நிறைந்தது, வாசனையுள்ளது, வண்டு மொய்ப்பது, பொன்னிறத்தது, விரைவில் வாடாதது.

(20) கோங்கு:—இதன் மலர் பொன்னிறத்தது, மகளிர் தனத்திற்கு உவமை கூறப்பட்டது.

(21) கோடல்:—கோடற் பூ படமுடைய அரவு போலத் தோன்றும்; கை விரல்களைக் கூப்பினது போலவும் இருக்கும். மலைநிலத்தில் வளரும். (காந்தள்-என்பதைப் பார்க்க):

(22) சந்தனம்:—மலை நிலத்தில் வளரும்; தழைகளைக் கொண்டு பொலியும்; இம்மரத்தில் தேன்கூடு இருக்கும்; இதன் வாசனை எட்டுத் திசையும் வீசும். சந்தன மரத்தின் திண் சிறையால் தினைவித்தி வேடர்கள் தினைவிளைவு செய்வார்கள். சந்தன மரத்தின் தளிரைத் தின்று பெண் யானைகள் கன்றினொடு குலவி விளையாடும்.

(23) சேண்பசம்:—இதன் மலரின் வாசனை வெகு தூரம் (அண்டமளவும்) வீசும்; வண்டுகள் நாடும்.

(24) செருந்தி:—காலையிற் செம்பொன் போலப் (பொன்னிற இதழ்களுடன்) மலரும்.

(25) ஞாழல்:—நெய்தல் நிலத்தில் (கடல் சார்ந்த இடத்தில்) மலர்வது; புன்னையுடன் சேர்த்துச் சொல்லப் பட்டுளது. பூ-பொன்னிறம்.:

(26) தாமரை:—நீரிற் சேற்றில் வளர்வது; அழகுள்ளது; வாசனை கொண்டது; தேன் உடையது; தண்டில் முள் உண்டு; மலர்ந்த பூ கிண்ணம் போலத் தோன்றும், இதில் லட்சுமி வாசஞ் செய்வாள், அன்னம் வீற்றிருக்கும்; இதனுடன் குமுதம் வளரும்; இதன் மதுவை உண்டு களித்து வண்டுகள் பாடும்; செந்தாமரைகள் மலர்ந்துள்ள காட்சி செந்தீ எரிவது போலத் தோன்றும்; மீன் பாயத் தாமரை மொட்டு மலரும்; "கமலவேலி" எனப்படும். பெண்கள் முகத்துக்குத் தாமரை உவமை கூறப்பட்டுள்ளது.

(27) தாழை :—நீர்த்துறையில் மலர்வது; நெய்தல் நிலத்தது; வேலிபோல வளரும்-"கைதல் வேலி" என்ருர். தாழை நறுமணம் உடையது, இலைகளை உடையது, வண்டு மொய்ப்பது; நீரில் இதன் நிழல் தோன்ற அந்நிழலைக் குருகு என அஞ்சிக் கெண்டைமீன் மறைந்து ஒதுங்கும்; நுளைச்சியர் தாழையின் வெண்மடலைப் பறிப்பர். ஆனையின் வெள்ளைக் கொம்புபோலத் தாழையானது மலர்களை ஈனும். தாழைக்கு முடம் (வளைவு) உண்டு; முள்ளுண்டு.

(28) தினை :—சந்தன மரத்தின் சிறையால் விதைக்கப்படுவது: தினைக்கதிரைத் தாய்க்கிளி பிள்ளைக் கிளிக்கு ஊட்டும்.

(29) தெங்கு :—மடல் உண்டு; குலை உண்டு; இதன் பாளை மதகரியின் மருப்புப் போல நீண்டு வெளித் தோன்றும்,

(29a) நாவல்:—வெள்ளைநாவல் [திரு ஆனைக்காத் தலத்தில்.]

(30) நீலம் :—நீர்ப்பூ; சுனையில் மலரும்; வாசனை வீசும்: தேன் உள்ளது; வண்டு மொய்ப்பது; கெண்டைமீன் பாய்வதாற் சுனையில் நீலத்தின் மொட்டு அலரும்; நீலமலர் பெண்களின் கண்ணுக்கு உவமை கூறப்பட்டுள்ளது. சுனைகளில் நீலம் நெய்தலுடன் மலரும்.

(31) நெய்தல் :—கடல் சார் இடத்துப்பூ; தேன்உடையது, வண்டு உலவும்பூ, சுனைகளில் நீலத்தொடு மலரும்; கருநெய்தல் கண்ணுக்கு உவமை கூறப்பட்டுள்ளது.

(32) பலா :—அழகிய மரம்; பலாப்பழம் தேன் உள்ளது, பொன்னிறத்தது.

(33) பனை-(பெண்ணை) :—தாறுடையது; அன்றில் பட்சிகள் இதிற் கூடுகட்டி இருக்கும்.

(34) புன்கு :—இம் மரம் பூவைச் சொரிவது கலியாணத்தில் பொரி சொரிவது போல இருக்கும்.

(35) புன்னை :—கடல் சார்ந்த இடத்தில் வளரும் மரம், ஒளிகொண்ட வெள்ளி மடலிடைப் பவளமும்

முத்தும்போலப் புன்னை மலரும். வெண்கிழியிற் பவளம் போல மலரும். புன்னைப் பொழில் மணங்கமழும், களக்கின் ஒளி காட்டும். புன்னை மலர் பொன் உதிர்வது போல விழும்; பொன்னந்தாது சொரியும். புன்னையின் மொட்டு நிதி யவிழ்ப்பதுபோலப் பொன் தரும். 'முடப் புன்னை' என்பர். நூல்களில் புன்னை ஞாழலுடன் சேர்த்துச் சொல்லப்படும்.

(36) மத்தம் ;—அழகும், குளிர்ச்சியும், தேனும் கொண்டது; பொன் பொதிமத்தம், மதமத்தம் எனப்படு கின்றது.

(37) மராம் (கடம்பு) :—வேனிற் காலத்து மலரும்.

(38) மருதம் :—ஆடைகளுக்குச் (சிவப்புச்) சாயம் ஊட்ட இதன் பூ உபயோகப்படுத்தப்பட்டது.

(39) மல்லிகை :—மணமுடையது; தேன்உடையது; மிருதுத் தன்மை உடையது; கொடிப்பூவும் உண்டு.

(40) மலர்-(பொது) :—மணம் உடையது, தேன் கொண்டது; வண்டுகள் மொய்ப்பது, அழகு வாய்ந்தது, குளிர்ச்சி கொண்டது; நீரிலும் மலரும்.

(41) மா (மாமரம்) :—தழையுடையது, வண்டு மொய்ப்பது. பழங்களின் தேன் ஒழுக மந்திகள் இம்மரத் திற் குதிகொள்ளும். இதன் தளிர்களைக் கோதிக் குயில் பாடும். இதன் பழம் பொன் நிறத்தது.

(42) மாதவி :—கொடிப்பூ; பக்கத்திலுள்ள குருந்த மேறிக் கொடிவிடும், வாசனை யுண்டு, வண்டுகள் மொய்க் கும்; பந்தலிட்டு வளரும், 'மாதவிப்பந்தல்' என்பர். இதிற் குயில் தங்கும்,

(43) முண்டகம் :—கழிமுள்ளிச்செடி, நீர்த்துறையில் வளரும்.

(44) முல்லை :—கார் காலத்தில் மலரும்; வாசனையுள் ளது, வெண்ணிறத்தது: கொடிப்பூவுமுண்டு, தன் பக்கத்தி லுள்ள செண்பகம், வேங்கைமரங்களிற் படர்ந்து கொடி முல்லை மெல்லரும்பு ஈனும். மகளிர் பல்லுக்கு முல்லை உவமை கூறப்பட்டுள்ளது; வேடர் கூடிநின்று

கும்பிடுவதைக் கண்டு முல்லை அயலே முறுவல் செய்யும் என்கிறார்.

(44a) மூங்கில் :—வேய்-பார்க்க.

(45) மௌவல் :—வாசனை யுடையது; கடல் சார்ந்த இடத்தில் மலரும்; கொடிப்பூ.

(46) வன்னி :—தேனுடையது.

(47) வாழை :—தாறுடையது; குலைதள்ளும்; பழம் பொன்னிறத்தது; தேன் உடையது; மலைப்பழமும் உண்டு. யானையின் (துதிக்)கை போல வாழை காய்குலை யீனும்; வாழைப் பழக்குலை வேடர் கைபோலத் தொங்கும். வாழை செழும்புனல் போலக் குளிர்ந்தது.

(48) வேங்கை :—மலைநிலத்து மரம். காற்றில் வேங்கை மரத்தின் பூ உதிரப் பாறையின்மேற் கிடந்த வேங்கை (புலி) (அதை) உறுத்து நோக்கும். வேங்கையின் பூ செம்பொன்னிறத்தது. வேங்கைகள் பொன்னிற மலர்களைப் பூக்கும் நாள்களே குறக்குலத்து மாதரும் மைந்தரும் மணம் செய்யும் நாள்கள்.

(49) வேய் :—விண்ணளவு ஓங்கி வளர்வது. மூங்கிலில் நின்றிருந்த மழைத் துளிகள் மழை போலச் சொரியும். மலையில் மூங்கில்கள் ஒன்றோடொன்று எதிரெதிர் உரிஞ்சத் தீப்பொறி பறக்கும். முதுவேய்கள் கலகலென ஒலி கொள்ளும் முத்துக்களை உதிர்க்கும். மூங்கிலின் மணிகள் திரைகளிற் காண லாகும்.

(ii) **கடற்கரையில் (நெய்தல் நிலத்தில்) வளரும் மரம்** :—கண்டகம், கண்டல், கொன்றை, ஞாழல், செருந்தி, தாழை, நெய்தல், புன்னை, மாதவி, முல்லை, மௌவல்.

(iii) **சுடுகாட்டில் (பாலைநிலத்தில்) வளர்வன** :—இண்டு, ஈகை, ஓமை, காரை, கள்ளி, களா, கூகை, சூரை, படர் தொடரி, முல்லை, முள்ளிலவம், வாகை, வெள்ளில்.

(iv) **நீர்ப்பூக்கள்** :—ஆம்பல், கழுநீர், காவி, குமுதம், குவளை, தாமரை, நீலம், நெய்தல்.

(v) **பொன்னிறப் பழங்கள்** :—பலா, மா, வாழை.

(vi) பொன்னிறப் பூக்கள் மலரும் மரங்கள், பொன் தாதுதிர்ப்பன :—காஞ்சி, கொன்றை, கோங்கு, செருந்தி, ஞாழல், புன்னை, மத்தம், வேங்கை.

(vii) கொடிப் பூக்கள் :—மல்லிகை, முல்லை, மௌவல்.

## 144. மலை [355]

போது :—மலையிடையே (மரக்) கோடுகள் தேன் சொரியும்; மலைகளில் பாம்புகள் நிறைந்திருக்கும்; குருந்தம், கோடல்—இவை மணம் வீசும். குகைகள் விளங்கும்; குளிர் சூழும்; மூங்கில், அகில், சந்து-ஆதிய மரங்களும் மணியும் செறியும்; மதி தவழும்; எதிரொலி ஒலிக்கும்.

சிறப்பு :—மலைகளுள் பாடல் பெற்ற தலங்கள் நீங்கலாக—ஆனைமலை, இமயமலை, மந்தரமலை, மேருமலை, சொல்லப்பட்டுள :

(1) ஆனைமலை [355(1)] :—ஆனைமலை ஆதிய இடங்களிற் சமணர்கள் இருந்ததாகக் கூறப்பட்டுளது.

(2) இமயமலை [355(2)] :—இது பனிவளர் மலை, பொன்னியல் பொருப்பு, விண்ணுலாமால்வரை எனப் பட்டுளது. இம் மலைக்கரசன் "மெய்வரையான்" "வெற்பரசு", "வெற்பரையன்"—என்று சொல்லப் பட்டுள்ளான்.

(3) கயிலை மலை [355(3), 388 (3)] :—அரன் உறைதரு கயிலை, இருக்குநீள் வரை, உயர்வரை, எழில் மலை, கதியாகிய மலை, கலைமலி செம்பொற் கயிலை, நொடிவரை, பொன்திகழுங் கயிலை, பொன்மலை, விண்ணுறுமால்வரை, வெள்ளிமலை எனப்பட்டுளது. சிங்கம், யானை திரிதருமலை.

(4) மந்தரமலை [355 (4)] :—இதுவும் பொன்மலை; திண்ணியமலை; கடல்கடைய (மத்தாக) உதவியது. "மந்தரமேரு" திரிபுர மெரித்தபொழுது வில்லாக அமைந்தது.

(5) மேருமலை [355(5)] :-இது அண்டம் அளாவிய ஒப்பற்ற பெரிய பொன்மலை; வடக்கே உள்ளது. அருவிகள்

கொண்டது. பெருமை, விருது வாய்ந்தது; திரிபுரம் எரித்தபொழுது சிவபிரான் இதை வளைத்து வில்லாகத் திருக்கையில் ஏந்தினர்.

குறிப்பு :—ஸ்ரீ கிருஷ்ண பகவான் மழையைத் தடுப்பதற்காக ஏந்திய மலையும் சொல்லப்பட்டுளது.

## 145. மழை-மின்-இடி-மேகம் [356]

(1) இடி :—பலத்த ஓசையது. ஆதலால் இது பலத்த ஓசைகளைக் குறிக்க வருஞ் சொல்லாயிற்று.

(2) மழை :—இளமழை, பருவமழை, பெருமழை என வகைப்படும். விண் பொய்க்க மழை விழாதொழியும்.

(3) மின் :—மின்னுனது விண்ணில் முகிலில் தோன்றும். சுடர்க்கொடிபோல ஒளி வீசும்.

(4) மேகம் :—கார், காரினர், கொண்டல், கொண்டலார், புயல், மங்குல், மஞ்சு, மழை, முகில், முதிரம், வான்- என்பன மேகத்தைக் குறிக்குஞ்சொற்கள். மேகம் பொழில்களில் தவழும், அதிரும், மலைமேற்படியும். வெண்மேகமும் உண்டு, காளமேகமும் உண்டு; மேகம் குளிர்ச்சி தரும், நீர் பொழியும். பயிர்களுக்கு உதவும், மின்னலுக்கு இருப்பிடம்.

(5) மேகமும் சிவனும் :—சிவனே உலகுக்கு மழையளித்து உலகை உய்யச் செய்பவர். அவர் சடையில் மேகங்கள் அமர்ந்துள்ளன.

## 146. மறையும் வேதமும் [357-366; 445-457.]

(i) மறைகள் [357] :—மறைகள் நான்கு; அவை பழையன; அங்கங்கள் கொண்டன; கடவுளைப் பற்றிப் பேசுவன; அறநெறிகளைக் காட்டுவன; அரிய நெறிகளை விளக்குவன; நலமலிவன; பங்கமிலாதன; பழியிலாதன; பண்ணிறைந்தன; பொய்யாதன; மாறுதன. மறைப்பொருள்கள் எண்ணில; இருக்குமறை தொன்மையது.

(1) மறை சொல்லித் தொழுதல் [358] :—பிரமன், மார்க்கண்டர், பிற முனிவர்கள், வானவர், தானவர், பூசுரர்-

இவர்கள் மறைமொழிகொடு, மறையொலிகொடு, மறை பல சொல்லி இறைவன் மகிழ இருக்கு மறையோதிப் பூசித்து ஏத்துவர்.

(2) மறை படித்தல், பயிலுதல் [359]:—மறை படித்தால் பாவம் தீரும்; மறைவழியே நிற்றல் வேண்டும்; மறை கூறிய வழியே புல்லைப் பரப்பிச் சமிதை கொண்டு வேள்வி யாற்றுவர், ஓமென்று தொடங்கி மறைபயில்வார்.

(3) மறையும் சிவனும் [361]:—இறைவர் மறைகளைத் தோற்றுவித்தார், ஆய்ந்தார், தொகுத்தார், விரித்தார்; ஆகமங்களை வகுத்தார், சமயங்களை வகுத்தார். அங்கங்கள், நான்மறைகள், அறம் பொருளின் பயன்கள் இவை தமை நால்வர்க்கு வெளியிட்டு அருள் புரிந்தார். இறைவரே மறையின் பொருள். அவரே மறை வல்லவர். மறை நாலுமே அவர்தம் திருப்பாட்டு, அவர் மறை ஓதுவர், பேசுவர், பாடுவர். திரிபுரமெரித்த நாளில் மறை அவருக்குப் புரவி யாயிற்று. இராவணனுக்கு இறைவன் காட்டிய கருணையை மறைகள் பாராட்டும்.

(4) மறையும் பூவையும் கிளியும் [363],—மறைகளை ஓதக்கேட்ட கிளிகளும் பூவைகளும் தாமும் மறை யோதும்; மறையோதுவதிற் பிழைகள் இருப்பின் பழகின கிளிகள் அப்பிழைகளைத் திருத்தும்.

(5) மறை பூசித்த தலங்கள் [371]:—மறைகள் திருமறைக் காட்டிலும் (வேதாரணியத்திலும்), திருவெண் காட்டிலும் இறைவனை வழிபட்டன.

(6) மறையும் பூதமும் [362]:—தம்மைச் சுற்றியுள்ள பூதங்கள் மறைப்பாடல்களைப் பாட இறைவர் ஆடுவர்.

(7) மறையும் மறையவரும் (364, 446(6)]:—மறைகள், அங்கங்கள், கலைகள், இவையெலாம் வல்ல செல்வர்கள் இருந்தார்கள்; அவர்கள் நள்ளிருள் யாமத்திலும் மறை சொல்லி எரியோம்புவார்கள்; பூசை செய்தபின் ஒழிவுள்ள வேளையில் மறைகள் பேசிப் பொழுது போக்குவார்கள்; மறைகொண்ட கீதங்களைப் பாடுவார்கள்; மறையொலி, மந்த்ர வேள்வி நீங்காத ஒழுக்கத்தினர்கள்; நாளும் மறையோதும் வழக்கத்தினர்கள்.

(8) மறையோர் சபை [369]:—நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் கற்றுணர்ந்தவர்கள் சபைகூடி மகிழ்வார்கள்.

(9) மறையொலி [366]:—வானவரும், தானவரும், வேதியரும் மறையொலி முழங்குவர்; வீடுகள்தோறும் மறையொலி முழங்கும.

(ii) வேதங்கள் [445]:—வேதங்கள் நான்கு. வேத சாகைகள் ஆயிரம். வேதம்—வேத சாகைகள் யாவும் இறைவன் அருளியனவே. பிரம விட்ணுக்கள் "சுருதியார் இருவர்" எனப்பட்டனர்.

(iii) வேத ஒலி [445(2)]:—வேதம் ஓதும் ஒலிக்குக் கடலொலி உவமை கூறப்பட்டுளது, வேதமானது உள்ளங் கலந்து இசையுடன் ஓதப்படும். வேத ஒலி பொழில்களில் முழங்கும். திருவீழிமிழலையில் வேதியருடைய வேத ஒலி எப்பொழுதும் நீங்காது முழங்கிற்று. வேத ஒலியைக் கிளிகள் பயிலும்.

(2) வேதஞ்சொல்லிப் பூசை:—[445(3)]:—பிரமன் ஆதிய தேவர்கள் கடலொலி போல முழங்கி வேத இசை பாடிப் புகுந்து பணிவர். வெண்மணலே சிவமாகப் பாவிக் கப்பட்டு வேதமந்திரங்களால் பூசை செய்யப்பட்டது. வேதி யர்கள் உரிய வேளையில் வேதம் ஓதி இறைவனை அலங் கரித்துப் பணிவார்கள். பூசித்து வணங்குவார்கள்; ஆர ணம் கொண்டு அடிதொழுவார்கள்.

(3) வேதமும் சிவனும் [361, 446]:—இறைவன் நான்கு வேதங்களையும் அவைதம் பொருள்களையும் அருளிச் செய்தார்; இறைவனுக்குச் சாமவேதம் பிரியமானதால், அவர் "சாமவேதன்" எனப்பட்டார்; இராவணனும் சாம வேத கீதம் ஓதி இறைவனை மகிழ்வித்து அவரது திரு வருளையும் அவரிடமிருந்து ஒரு வாளையும் பெற்றான்; வேத நாவன், வேதகீதன், வேதபுராணர், வேத முதல்வர், வேத விகிர்தர், வேதர், வேதனர் - என இறைவர் பாராட்டப்பட் டுளார். இறைவனுக்கு இருக்கும் (ருக்வேதப் பாடலும்)

உகந்ததே. இறைவன் வேதம் ஓதுவர், வேதம் பாடுவர்; அவர் வேதம் விரித்தவர்; வேதம் வல்லவர்; நால்வருக்கு இருக்கு (வேதத்தை) உபதேசித்தார். வேதங்கள் இறைவனைப் போற்றும். திருமறைக்காட்டிற் பல காலங்கள் வேதங்கள் இறைவன் பாதங்களைப் பூசித்தன. மயேந்திரப் பள்ளியிலும் பூசித்தன. நான்கு வேதங்களிலும் சொல்லப்பட்ட மெய்ப்பொருள் நாதன் நாமமாம் 'நமச்சிவாய' என்பதே. வேதமும் வேள்வியும் இறைவனுக்கு "நன்குடை" எனப்பட்டுள.

(4) **வேதமும் வேதியரும்:**—[364, 446 (6)] நாலு வேதங்கள், ஆறங்கங்கள் இவைதமைக் கற்று இறைவனை வேத கீதங்களால் நாள்தோறும் தொழுதேத்தும் பெரியோர்கள் இருந்தார்கள்.

(5) **வேதமும் கிளியும்:**—[446(7)] பண்டிதர்கள் பல நாள் பயின்று வரும் வேத ஓசையைக் கேட்டுப் பழகிக் கிளிகள் வேதங்களுக்குப் பொருள் சொல்லும் ஊர்கள் திருவீழிமிழலையும் திருவெண்காடும் என அறிகிறோம்.

(6) **மறையும் வேதமும் :**—[446(5)] மறையும் வேதமும் பொதுவாக ஒன்றே போலத் தோன்றும். "மறைகள் வேதம் விரித்தோதுவார்" எனவும், "பல வேதம்...மறை நான்கு...ஆனார்" எனவும் ஒரே இடத்திற் கூறப்பட்ட போது மறை வேறு வேதம் வேறு போலத் தோன்றும்; அங்ஙனம் இரண்டும் ஒன்றாக வருமிடத்தும், பல மறை, பல வேதம் என வருமிடத்தும், வேதம் என்பது நான்கு மறை அல்லாத அறிய வேண்டிய பிற வேதங்களையும், 'மறை' என்பது நான்கு வேதமல்லாத பிற மறை பொருள்களையும் குறிக்கின்றன போலும்.

(6-A) **மறையும் இசையும்**—தலைப்பு 9-5 பார்க்க.

(7) **அங்கம், ஆகமம்:**—[447, 449] அங்கங்கள் ஆறு. இறைவரே அங்கங்களையும் ஆகமங்களையும் வகுத்தருளினார். ஆறங்கங்களின் பொருளாவார் அவரே.

## 147. மறையோர், அந்தணர், வேதியர்
[367-370]

அந்தணர் ஆகுதி வேள்வி செய்பவர். எரி மூன்றும் வளர்ப்பவர். இறைவன் திருவடியையே ஆயும் மனத்தினர். நான்கு வேதம் ஆறங்கம் கற்றவர். வேத ஒலியைப் பாடல் செய் இன்னிசையாளர். ஓமென்று மறை பயில்வார்; சீரும் புகழும் தேசத்தில் மிக்க செல்வர். இவர் கூடும் சபைகளுமுண்டு. இவர் தளராத வாய்மைப் புந்தியாளர். பிரமனைத் தமது ஆதியாகக் கொண்டவர், தோலொடு நூலிழை சேர்ந்த மார்பினர். நள்ளிருள் யாமத்தும் மறை வழி தெரிந்து மூன்றெரி ஓம்புவர். நாடோறும் வேதம் ஓதுவர். பல மறைகள் கற்று வல்லார். புகழும் லட்சுமீகரமும வாய்ந்தவர். திருநீறு நிரம்பிய மார்பினர். சுருதிப்பொருள் வல்லார். மந்திர வேதங்கள் ஓதுநாவர். மறைகள் வேதம் விரித்து ஓதுவார். வேதம் பயின்றேத்தி புலன்கள்தமை வென்ற புகழவர். வேத மொழி சொல்லி இறைவன் திருவடியை ஏத்துபவர். புது மலர் மாலைகொண்டு சிவபிரானை வழிபடுபவர். வேத கீதம் உணர்ந்தவர். நாளும் மறையோதி அரன் நாமம் உணர்த்துபவர். இன்பமே அறிபவர்; உயர் குலத்தவர்; உலகுக்கு மிக்கர்; ஓமம் வளர்ப்பவர்; கலியை வென்றவர்; கலை வல்லவர்; கேடிலா எண்ணத்தவர்; கேள்வியாளர்; சீர்மிகு திறலினர்; தாயன்ன தன்மையர்; திருந்து மறையோர்; தெய்விக சிந்தையர்; நல்லியல்புடையவர்; நன்மைசேர் வாழ்வினர்; பிரமனைப் போன்றவர்; புண்ணிய சீலர்; பொய்யகமில்லார்; பொய்யா நாவினர்; மறை பயில்வோர்; மாதவர்கள் அனையவர்; மெய் மொழிபவர்; விதி வழுவாதவர்; வேள்வி யருதவர்; வேத வழித் தொழிலினர்; இடப்பாகம் திகழும் நூல்மார்பினர்; ஆசாரத்தினர், கொடையாளர், தரைத்தேவர், திடத்தினர், தீதிலார், தூயவர், புகழாளர், பொய்யிலார், மறுவிலார், முத்தழலோர், விழுமியார். வேதியர்க்கு அந்தியுள் மந்திரம் பஞ்சாட்சரம் (அஞ்செழுத்து.)

அந்தணர்களுள் மலையாளரும் இருந்தனர். கங்கை நாட்டு உயர் கீர்த்தி மறையவர் நல்ல நியமத்தவர். தகுதியின் மிக்கவர். தில்லைவாழ் அந்தணர்கள், கற்றபடியே எரியோம்பிக், கலியை வாராமே செற்றவர்கள். பிரமனைப் போன்ற மறையோர் அக்காலத்து இருந்தனர். அவர் இறைவர் திருவடிப் பெருமையையே ஆயுந் தன்மையர். அவர் தம் தியானத்தில் இறைவருக்கு விருப்பு.

## 148 மாதர்கள் [372-374]

அரிவை, ஆயிழை, ஏந்திழை, ஏழை, கன்னியர், காரிகை, கொடியர், கொம்பனார், கோதை, சேயிழை, தாழ் குழல், தெரிவை, தையல், நல்லார், நேரிழை, பாவையர், பூங்கொடி, பெண், பேதைமார், பைந்தொடி, மகளிர், மங்கை, மடக்கொடி, மடந்தை, மடவரல், மடவார், மாதர், மாது—என்பன பெண்களைக் குறிக்குஞ் சொற்கள்.

### (I) அவயவ வர்ணனை

அடி :—தாமரை, பஞ்சு போன்றிருக்கும்.

அரை :—சிங்க அரை எனப்பட்டுள்ளது.

இடை (மருங்குல்) :—கொடி, துடி, மின், வள்ளிக் கொடி போன்றது.

இதழ் :—இஞ்சுக (முருக்கு) நிறத்தது.

கண் :—அகன்றிருக்கும்; மையணிந்திருக்கும்; காவி மலர், குவளை, நீல மலர், கயல், கெண்டை, சேல், அம்பு, வேல், மான், விடம் போன்றிருக்கும்.

குழல் :—வண்டு மொய்க்கும், வாசனை வீசும், கறுத் திருக்கும், நீண்டிருக்கும், மலர் சேர்ந்துளது.

கை :—சூடகம், வளை அணிந்திருக்கும்.

தோள் :—மூங்கிலை ஒக்கும்.

நகை (பல்) :—வெண்ணிறத்தது; தரளம் போன்றிருக்கும்.

நடை :—அன்ன நடை, பிடி நடை போன்றது.

நுதல் (புருவம்) :—வில் போன்றது; ஒளி உள்ளது.

முகம் :—தாமரை, மதி போன்றது.

முலே :—பருமை, மென்மை உடையது.

மேனி :—பூவண்ணத்தது.

மொழி :—கிளி, குயில், பூவை, மயில்—இவைகளுக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. செந்துப் பண் போன்றது. தேனும் பாலும் போல இனியது.

வாய் :—பவளத்துக்கு உவமை கூறப்பட்டுளது.

விரல் :—கோடன் மலருக்கு ஒப்பிடப்பட்டுள்ளது.

(II) மாதர்களின் பழக்கங்கள்—வழக்கங்கள் [373]

(1) அணிகலம் :—சரி, சிலம்பு, சூடகம், தொடி, தோடு, நூபுரம், பாடகம், முத்துத் தாழ்வடம், மேகலே, வடம், வளே.

(2) ஆடல், பாடல் :—மடந்தையர் அரங்கேறி நடம் பயில்வர். அவர் ஆடும் அரங்கு கோபுரங்களுடன் அமைக்கப்பட்டது. நடனசாலேயில் மாதர்களின் மேகலே ஒலி ஆடல்பாடலுடன் அழகு தரும். அரங்கத்தில் ஆடும் பொழுது மாதர்கள் பண் காந்தாரத்தில் (நவரோசு ராகத்தில்) பாடுவார்கள். தாளத்துக்கு ஒப்ப நடமாடி இறைவன் நாமங்களேச் சொல்லித் துதிப்பார்கள். அப்பொழுது முரவம், முழவம் என்னும் வாத்தியங்கள் ஒலிக்கும்; அவர்கள் பாடும் கீத ஓசை அண்டர் அண்டத்தை ஊடறுத்துச்செல்லும். தங்கள் மாளிகையில் மன்னி இனிதாக இசைபாடி ஊசலாடுவர். மாளிகையிற் சூளிகையிலேறிப் பாடலொலியைப் பரப்புவர்; யாழ் பயிலுவர்; வண்ணம் பாடுவர்; நாடகம் ஆடிப் பாடுவர். குறிஞ்சிஙிலத்தை (குறிஞ்சிப் பண்ணில்) பாடி முருகன் பெருமையைப் பகர்வர். தம் பாடல்களில் எல்லாம் இறைவன் பெருமையையே எடுத்து ஓதுவர். திருவிழாக் காலங்

களில் அரங்கேறி மைந்தருடன் இறைவனைப் பாடித் தொழுவார்.

(3) **ஆலய வழிபாடு** :—கோயிலுக்கு மலர், புனல், தூபம், சாந்தம் எடுத்துக் கன்னியர் செல்வர். அகில் கொண்டு புகைப்பர். காலையிற் புகுந்து இறைஞ்சுவர். கூட்டமாய்ச் செல்வர் : துணைவரொடுந் தொழுதேத்துவர். ஆடவருடன் செல்வர். நள்ளிருளிற் சென்று நின்று பணிவர். சிவவேடத்தையே பரவுவார். புண்ணியவாணரும் மாதவர்களும் உடன் புகுந்தேத்த மாதர்கள் அண்ணலின் புகழைப் பாடுவார்கள்.

(4) **தலையில் அணியும் பூக்கள்** :—செங்கழுநீர், தாமரை, நீலம், நெய்தல் முதலிய மலர்கள்.

(5) **தினைப்புனங் காத்தல்** :—மலைச்சாரலில் உள்ள மணிகளை வாரி எறிந்து தினையுண்ணும் கிளிகளைக் கடிவர்.

(6) **நடன மாதர்கள்** :—வரிசையில் அமைந்த மாளிகைகளில் அழகிலும் செல்வத்திலும் லட்சுமிக்கு நிகராய் வாசம் செய்வார்கள்.

(7) **நீரிற் குளித்தல், நீர் விளையாடல்** :—மாதர்கள் காலையில் இசைபாடி எழுவார்கள். சோலையில் உள்ள சுனைக்கோ, பொய்கைக்கோ, யாற்றுக்கோ, கடலுக்கோ, சென்று குடைந்தாடுவார்கள்; கடவுளைத் துதிப்பார்கள்; அங்ஙனம் அவர்கள் குடைந்த புனல் மணங் கமழும், மாதர்கள் பொய்கையிற் குதித்து விளையாடுதலால் நீரில் உள்ள வாளை மீன்களும், கயல் மீன்களும் பாய்ந்து அப்புறம் ஓடும். சுனையில் ஆடவந்த மைந்தரும் மகளிரும் இறைவனிடத்திற் சிந்தனையைச் செலுத்திப் பாடல் பயிலுவர்.

(8) **பூக்கொய்தல்** :—கோங்கு, கொடிமுல்லை, மல்லிகை, சண்பகம், வேங்கை யாதிய பூக்களை மாதர்கள் கொய்வார்கள்.

(9) **மகளிரும் மைந்தருங் குழந்தைகளும்** :—மங்கையர் மாளிகை மேலிருந்து அச்சமின்றிப் பாடல் ஒலியை

எழுப்புவர். ஊசல் ஏறி இனிதாக இசை பாடுவர்; வாழ்த்துரைப்பர்: மைந்தரொடு கலவி செய்வர்; குழந்தை யொடு குலவுவர்; பாலகனை இவர்கள் பாராட்டும் இனிய ஓசையைக் கேட்டு விசும்பிற் செல்லுங் கணங்கள் மகிழும்; விண்ணவர் வியப்பெய்தி விமானத்தொடும் கீழிறங்கிக் கேட்பர்.

(10) விளையாட்டு :—மங்கையர் அம்மானை, கழல் பந்து ஆடுவர். மாடநெடுவீதியிற் கையாற் பந்தோச்சி விளையாடுவர். அவர்கள் விளையாடும் ஓசை ஊரில் மலியும். மறையவர்களுடைய மனை ஒவ்வொன்றிலும் இறைவன் தன்மையைக் கூறும் பாடல்களைப் பாடி மகளிர் கழல், பந்து, அம்மானை ஆடுவர். கடல் முத்தைப் பருமணலாகக் கொண்டு பாவையர் மணஞ்செய்வர்.

(11) பிற விஷயங்கள் :—

(i) கண்களுக்கு மையிட்டுக் கொள்ளும் வழக்கம் இருந்தது.

(ii) கலை (மேகலை) ஒலியுடன் பாடலொலியும் மல்கும்.

(iii) காமநோயிற்பட்டுக் காலுங் கையுந் தளர்ந்தவர் களை மாதர்கள் இகழ்ந்துரைப்பார்கள்.

(iv) கிளிக்கும் பூவைக்கும் மடந்தையர் சொற் பயிற்றுவர், குங்குமம், வாசனைப் பொருள்கள் உபயோகப் படுத்தப்பட்டன.

148A மாதர்களும் இசையும்-தலைப்பு 9-7 பார்க்க.

## 149. மாதர்களும் திருவிழாக்களும் [374]

மகளிர் கார்த்திகை நாளில் விளக்கீடு கொண்டாடு வர்: தைப் பூசத்தில் நெய்யுஞச் செய்து கொண்டாடுவர். திங்கள் நாளில் ஆடல் செய்வர். திருவிழாக்களில் கூட்டங் கூடுவர். வாசலிற் கவிபாடிப் பொன் பரிசு பெறுவர். அரங்கேறி மைந்தரொடும் இறைவனை ஏத்து வர். முழவொலிக்க நாடக சாலையில் ஆடுவர்.

## 150. மார்க்கண்டர், அவர் நிலையும் பூசையும் [87(2)-(6)-(9); 344(8)]

இவர் அந்தணர்; மாணி (பிரமசாரி); பாலனர்; மாதவமுடைய மாமுநி; சிவபிரானது அடியிணையைக் காலையிற் புதுமலர் கொண்டும், நீர் கொண்டும் சாந்து கொண்டும், பால்கொண்டும், புகை கொண்டும், தீபங் கொண்டும், இருக்கு மந்திரம் கொண்டும், வேதமொழிகளாற் கசிந்த மனத்துடன் பூசை செய்து, கொன்றைமாலை புனைந்து அறிவுடன் மிக வழிபட்ட மாதவச் சிறப்பினர், இம் மகாமுநிவர் தம்மை வழிபட்ட காரணத்தால் இறைவர் இவர் ஆகம் நிலைக்கவும், காலன் மடியவும் திருவெண்காடு என்னுந் தலத்தில் இவருக்குத் திருவருள் பாலித்தார். தலைப்பு 56-3 பார்க்க.

## 151. மாலை வகைகள் [376]

இண்டை, தொங்கல், தாமம், கண்ணி இவை மாலை வகைய. இவைதம்முள் இண்டை பெரும்பாலும் முடியிற் சூடும் மாலை வகைத்து. திருவடியிலும் இண்டை சூடுதலுண்டு. சிவபிரான் கோன்றைத் தொங்கல், கோன்றைத் தாமம், கோன்றைக் கண்ணி மூன்றினும் மகிழ்ந்து விருப்பங் கொள்ளுவார்.

## 152. முத்து, பொன், மணி, பவளம் முதலிய [377]

(1) இப்பி :—கடலிற் கிடைப்பது, இப்பியிலிருந்து முத்து கிடைக்கின்றது. இது இப்பி முத்து. இப்பிகள் வெண்ணிறத்தன.

(2) பவளம் :—கடலிற் கிடைப்பது. திரளாய் இருக்கும். செந்நிறத்தது. உருவும் ஒளியும் உடையது. திரைகளால் உந்தப்பட்டு வரும். விளைவயலுள் மேய்புலத்தில் எருமைகளின்கால் இடறப் பவளம் வெளிப்பட்டு ஒளி வீசும்.

(3) பளிங்கு :—சாதிப்பளிங்கு, சுத்தமான பளிங்கு, வெண்பளிங்கு எனக் கூறப்பட்டுள்ளது.

(4) பொன் :—ஆணிப்பொன், உரைவந்த பொன், எனச் சொல்லப்பட்டுளது. மலையகத்தே உள்ள பொன் ஆற்றில் அகப்பட்டு அலையுண்டுவரும்.

(5) மணி :—கடல், ஆறு, அருவிகள், மலை, நாகம் இவைகளிற் கிடைக்கும். மலைகளிற் பன்றிகள் உழுதலால் மணிகள் வெளித்தோன்றி ஒளி வீசும். நாகம் உமிழும்; மணி சுடும்; இருளை விலக்கவல்ல ஒளியை வீசும்.

(6) மரகதம் :—உயர்ந்த சாதியதுண்டு.

(7) மாணிக்கம், வயிரம் :—மாணிக்கத் தொத்து, முழுவயிரத்திரள் எனக் கூறப்பட்டுள.

முத்து :—கடல், மூங்கில், யானைமருப்பு, இவைகளுட் கிடைக்கும். கடல் முத்து, இப்பி முத்து, சங்குமுத்து என உள. தரளத்திரள், நித்திலத்தொத்து எனப்படு கின்றது. கடல் முத்து நிலவைப் போன்ற குளிர்ச்சியை யும் ஒளியையும் உடையது. கப்பல் வியாபாரப் பொருள் களுள் முத்து ஒன்றாயிருந்தது. 'வங்கமாரு முத்தம்' என் கின்றார். முதிர்ந்து உடல் தளர்ந்த மூங்கில்களிலிருந்து ஒளிகொள் முத்துக்கள் கலகலென உதிரும். ஆறுகளும் அருவிகளும் மூங்கில் முத்துக்களை அடித்துக்கொண்டு வரும். யானையின் வெண்மருப்பிலுள்ள குருத்தை உண்ண விரும்பிச் சிங்கம் அம்மருப்பினைப் பிளக்க அதிலிருந்து முத்துக்கள் உதிரும். முத்தைப் பருமணலாக்கொண்டு பாவையர் மணங்கூட்டி மணஞ் செய்வர்.

அம்பவளத்திரள், ஆச்சிலாத பளிங்கு, காச்சிலாத பொன், ஆணிநற்பொன், கனவயிரத்திரள், முழுவயிரத் திரள், நித்திலப் பெருந்தொத்து, துளக்கமில்லாத விளக்கு, மாணிக்கத் தொத்து, இவைகள் கடவுளுக்கு உவமை கூறப்பட்டுள. முத்து - பல்லுக்கும், பவளம் - வாய்க்கும் உவமை கூறப்பட்டுள்ளன.

## 153. முருகக் கடவுள் [378]

இவர் அறுமுக இறை, கந்தன், குமரன், குமரவேள், சாமி, சேந்தன், சேய், மயிலூர்தி, முருகன், மைந்தன்—என்னும் திருநாமங்கள் கொண்டவர். தேவர்களுடைய பகைவர்களைத் தொலைக்கவேண்டிச் சிவபிரான் இவரைப் பெற்றனர். இவர் மாயச் சூரை வதைத்தனர். பகையெல்லாம் தொலைத்தனர். இமையோரைப் (பொன்னுலகிற்) குடியேற்றினர். வள்ளியை மணந்தனர். குறிஞ்சி நிலத்திற் பெண்கள் குறிஞ்சிப் பண் பாடி இவருடைய பெருமையைப் புகழ்வார்கள்.

## 154. முனிவர்கள் [379]

(1) முனிவர்களுள் உபமன்யு, கௌதமர், சனகாதி நால்வர், சூத முனிவர், துர்வாசர் (சண்பை முனி), பராசரர் (கொச்சை முனி), மார்க்கண்டேயர், வியாக்கிரபாதர்-இவர்களைப்பற்றிய குறிப்புக்கள் உள. (உபமன்யு) பாலனாயிருந்தபொழுது சிவபிரான் அவருக்குப் பாற்கடல் ஈந்தது, (கௌதமரால்) இந்திரன் சாபம் பெற்றது, (சனகாதி) நால்வருக்கு இறைவன் அறம் உபதேசித்தது. சூத முனிவர் (சிவ புராணங்கள் சொன்னது), துர்வாசர் தமக்குற்ற பழியைக் காழியில் களையப் பெற்றது, பராசரர் தமக்குள்ள துர்க்கந்தம் காழியில் நீங்கப்பெற்றது, மார்க்கண்டருக்காக இறைவன் காலனை அடக்கியது, வியாக்கிர பாதர் (நடன தரிசனம் கண்டு அதைக் கற்றது)—இவை குறிப்பிக்கப் பட்டுள.

(2) முனிவர்கள் ஒழுக்கம் முதலிய:—மாதவர்களும் முனிவர்களும் காலையில் ஸ்நானம் செய்வார்கள். மரவுரித் தோல் உடுப்பார்கள். திருநீறணிவார்கள். காலை-மாலை கடவுள் வழிபாடு செய்வார்கள். மாசு நீக்கும் செய்கை உடையார்கள். உடலிலெழுகின்ற மயிர்களுடனும் சடை முடியுடனும் பெருந்தவம் செய்வார்கள். முன்னை வினையைத் தொலைக்க வழி தேடுவார்கள். மூப்பு அறியார்கள். சாபமிடும் ஆற்றலுடையார்கள். நான் மறைகளையும்

உணர்ந்து, ஐம்புலன்களையும் அடக்கி மௌனிகளாய்த் தனித்திருந்து காட்டில் தவம் புரிவார்கள். இறைவன் திருவடியையே தியானித்து அழைக்கும் பெருமையாளர்கள். பலகலை ஆய்ந்தவர்கள்.

## 155. மொழிகள் [380]

ஆரியம் (வட சொல்), தமிழ்ச் சொல், பாகதம் (பிராகிருதம்), திசை மொழி—இவை சொல்லப்பட்டுள. வட சொல் "விஞ்சமர் வடசொல்"—எனப்பட்டுளது. நரம்பமர் வாத்தியங்களுடன் தமிழ் மொழி, வடமொழி, திசை மொழிகளால் தோத்திரங்கள் சொல்லி அடியார்கள் தொழுதார்கள். அறிவிலிகள் ஆரியத்தின் பயனையும் செந்தமிழ்ப் பயனையும் அறிந்திலர்கள். தமிழ்ச் சொலும் வடசொலும் இறைவன் தாணீழற் கீழவை.

## 156. மோனை விசேடங்கள் [381]

முற்றுமோனை வந்துள்ள அடிகள், மோனையில்லா அடிகள், மோனை நிறைந்துள்ள பாட்டு முதலியன காணலாகும்.

## 157. யமன் (காலன்) [382]

இயமன்—காலன், காலனுர், கூற்றம், கூற்று, கூற்றுவன், கூற்றத்தார், சண்டன், தருமன், நமன், மறலி, வெங்குரு என்னும் நாமங்களைக் கொண்டவன். திறலும் சினமும் வாய்ந்தவன்; கரி நிறத்தினன்; கழல் அணிந்தவன்; அஞ்சாதவன்; எதற்கும் பின்வாங்கான்; மிகப் பெரியான்; வேற் படையும் பாசக் கயிறும் கொண்டுள்ளான்; விதியின் விளைவின் பயனுக உயிர்கள்மீது கொதித்துச் சீறி வருபவன்; செய்த வினைக்கு ஏற்ப மெய் தெரிந்து செங்கோல் நடத்துபவன்; விதித்த நாள் முடிவில் உயிர் கொள்ளும் தொழிலோன்; 'நமசிவாய' நாமம் ஓதவல்லார் இடமும், சிவனடியார்களிடமும் செல்ல இயமன் தூதுவர் அஞ்சுவர். நமன், நமன் தமர், நமன் தூதர், நமனிடம்

தண்டனே—இவை யாவும் விலக வேண்டில், கண்ணார் கோயில், திருவாஞ்சியம், திருநாரையூர், கலிக்காமூர்-என் னுந் தலத்திலுள்ள சிவபிரானை நண்ணி அவர் திருவடி களை யேத்திப் பணிக. மார்க்கண்டருக்காகச் சிவபிரான் காலனை உதைத்தது—56(3) தலைப்பைப் பார்க்க.

## 158. யாக்கை, பிறப்பு, வாழ்க்கை [383]

(i) **காயம்:**—மாயக் காயம்; இரை வேண்டிநிற்கும்; பிணிபடும்; திரை, நரை வரும்; வான், தீ, காற்று, நீர், நிலம் என்னும் ப்ஞ்ச பூதத்தாலானது; தீயினுக்கு உறவு; எலும் புக்கழி, இறைச்சிமண், புலால்தோல், பொல்லாமை உச்சி, வாயில்கள் ஒன்பது கொண்ட ஒரு மனை; நிணம், குடல், நரம்பு முதலியன தன்னகத்தே கொண்டது.

(ii) **வாழ்க்கை:**—அல்லலுக்கு இடம்; இழிப்புக்கும், சலிப்புக்கும், பழிப்புக்கும் இடம்; நிலையிலாதது. ஐம்புலன் களின் சேட்டைக்கு உட்பட்டது. பிணி, மூப்பு, மரணம் இவையுடன் கூடியது. பாம்பின் வாயில் அகப்பட்ட தேரை யொன்றின் வாயில் உள்ள ஒரு சிறு பறவையானது பூந் தேனைச் சுவைத்து இன்புறலாம் எனக் கருதுவதற்கு நிகராகும் இவ் வாழ்க்கையில் நாம் இன்புறக் கருதுவது. கூற்றுவன் நமது ஆருயிரைக் கொள்ளைகொள்ளப் பார்த் துக் கொண்டே யிருக்கின்றான். ஆதலால், பிறன்கடை வாயிலிற் காத்தல், பல்வகைய பிணியிற் படல் முதலிய வாழ்க்கைத் துக்கங்கள் நம்மைப் பீடியா வண்ணம் இறை வன் திருவடியைப் பற்றி நாம் உய்தல் வேண்டும்.

(iii) **மூப்புவர்ணனை:**—உடம்பு மூத்தால் பல்விழும்; நாத் தளரும்; மெய் வாடும்; தோல் திரையும்; ஆடு போல நரைகள் தோன்றும், உரையும் பாட்டும் தளர்வெய்தும்; ஏதம் மிகும்; இருமல், ஈளை, சூலை, குன்மம் முதலிய நோய் கள் பீடிக்கும்; செவி கேட்பிலா தாகும்; கண் நோக்கு இழக்கும்; நன்னீர்மை குன்றும்.

## 159. யோகம் - யோகியர் [384]

தமது ஒரு பாகத்தில் தேவி யிருந்தும் பேரொளி தாங்கிய யோகியர் பெருமான் ஆவர் சிவபிரான். சினம், ஐம்பொறி முதலிய பகைகளை வென்று அறிவொடு பொருளை உணர்ந்து நிற்பவர் சிவ சாரூபம் பெற்றுப் பரனை அடைவர்.

## 160. (இ)ராமாயணச் செய்திகள் [386-387]

(1) அநுமன்:—இவர் ஸ்ரீராமருடன் திருவுசாத்தானம் என்னும் தலத்திற் சிவபிரானைத் தொழுது வழிபட்டவர்.

(2) ஸ்ரீராமர்:—இவர் ஈனமிலாப் புகழுடைய அண்ணல்; நீரிடைத் துயிலும் திருமாலின் அம்சம்; வில்லாளி; திருவுசாத்தானத்திற் சிவபிரானைத் தொழுது வழிபட்டவர், கடலில் அணைகட்டி வழி செய்தவர்; இலங்கை யரசனாகிய இராவணனது பத்து முடிகளையும் மலையன்ன தோள்களையும் அறுத்துத் தள்ளிய வில்லாளி; இராவணனைக் கொன்றதால் தம்மைப் பழியும் வினையும் மூடிடத் தமது நுண்ணறிவு கொண்டு சிவ மூர்த்தியைத் தாபித்து வணங்கி வழிபட்டு "இப்பழியும் வினையும் நீங்க எனக்கு இனியருளுக' என வேண்டித் துதித்து இராமேசுரம் என்னும் தலத்தை உண்டு பண்ணித் தமது வினையும் பழியும் நீங்க மகிழ்ந்தவர்.

(3) இராவணன்:—தலைப்பு 161-பார்க்க.

(4) இலக்குமணன்:—ஸ்ரீராமருடைய தம்பி; திருவுசாத்தானத்திற் சிவபிரானை வழிபட்டவன்.

(5) சடாயு:—ஒரு பறவை. சூரியன் இதன் தந்தை. இது வைத்தீசுரன் கோயிலில் (புள்ளிருக்கு வேளூரில்) சிவபிரானைப் பத்தியுடன் பலகாலம் வழிபட்டு அறிவுடன் தொண்டு செய்தது. ஒருநாள் கூடத் தவறுத வண்ணம் ஒரு யோசனை தூரம் போய்ப் பூக்கொணர்ந்து வந்து, வேத மந்திரங்களிற் சொல்லியப்படி வெண்மணல் இலிங்கமே சிவ

மாகப் பாவித்து ஞானத்துடன் வழிபட்டுப் பூசனை செய்து வந்தது. (சீதையைக் கவர்ந்து) ஆகாய வழியில் தேரோட்டிச் சென்ற இராவணனை ஸ்ரீராமருக்காகத் தடுத்து, அவன் மெய் புண்ணுகும்படி புடைத்து, அவனுடன் பொருது அவனைப் புறங்கண்டது. பொய் சொல்லாது உயிரிழந்தது.

(6) சம்பாதி:—ஒரு பறவை. புள்ளிருக்கு வேளூரிற் சிவபிரானை வழிபட்டது.

(7) சீதை:—மான்போற் கண்ணி; வைதேகி என்னும் பெயர் பெற்றவள். ராவணனால் காட்டில் மாயையால் வௌவப்பட்டாள்.

(8) சுக்கிரீவன்:—போருக்கு அமைந்தவன். திருவுசாத்தானத்திற் சிவபிரானை வழிபட்டவன்.

(9) ஜாம்புவான்:—நீடித்திருந்தவன். திருவுசாத்தானத்திற் சிவபிரானை வழிபட்டவன்.

## 161. (இ)ராவணன் [387]

(1) இராவணன் ஓர் அரக்கன்; மாயம் வல்லவராகி வானிலும் நீரிலும் செல்லவல்ல அரக்கர்களுக்கு இறைவன். (தென்) இலங்கைக்கு அரசன்.

(2) இராவணன் உருவ வர்ணனை:—இராவணனுக்குத் தலைகள் பத்து, அவை மலைபோன்றன. முடி-மணிமுடி-பூமுடி; மயிர்-எரிபோன்றது; வாய்கள் பத்து; உடம்பு ஒன்று, அடி இரண்டு; உருவம் - முரட்டுருவம்; எயிறு (பல்)-அடல் கொண்டது, பிறைபோல வளைந்தது, ஒளி விசுவது; தோள்கள் இருபது-பூண் அணிந்தன, அழகுள்ளன, உயர்ந்தன, அகன்றன, மலைபோன்றன, வெற்றி பூண்டன; கரங்கள் இருபது, கடகம் அணிந்தன, யானையின் தடக்கைகள் போன்றன, ஆழ்கடலும் கருமலையும் போன்றன; மார்பு-மலைபோன்றது, பூண் அணிந்தது.

(3) இராவணன் நிறம்:—இருள் நிறம், கடலென நிறம், கருநிறம், கருமுகில் போன்ற நிறம், நீலமணி போன்றநிறம், மைந்நிறம்,

(4) இராவணன் உயரம்:—மேகம் அளாவும்.

(5) இராவணன் படை முதலிய:—இராவணனுக்குக் கடற்படை யிருந்தது. பிற படைகளும் இருந்தன. அவன் வாட் போரில் வீர முள்ளவன். அவன் வேல் எரி போன்றது. அவன் தேர் ஆகாயத்திற் செல்லவல்லது.

(6) இராவணன் வீரம், திறல், ஆயுள் முதலிய:-இராவணன் முக்கோடி வாழ்நாள் பெற்றவன். அவனது வலிமை தவமுயற்சியால் பிரமனிடத்துப் பெறப்பட்டது. அவன் புகழ் பெற்றவன். அசுரர் குலவிளக்கு. தொலையாவலி, உலகமஞ்சும் திறல், தேசு, போர்த்திறம், வெற்றி வாய்ந்தவன். சூரியன் தன் ஊர்வழி வராவகை ஆணையிட்டுத் தன் பதியைக் காத்தவன். கயிலைமலையை அசைத்தெடுத்த திறல் வாய்ந்தவன். திக்குவிசயம் செய்தவன். போரில் அவன் முன் நிற்பவர் யாருமிலர். கிரகங்கள் அவன் ஆணைப்படி நடந்தன. திருமாலோடும் பொருத திறல் வாய்ந்தவன்.

(7) இராவணனுடைய குறைகள் குற்றங்கள்:—இராவணன் உன்மத்தன், கடியவன், தூர்த்தன், நிட்டுரன், நீசன், பேதை, மதமத்தன், வன்கணன், மெய் சொல்லாதவன், வெஞ்சினம் மிக்கவன், உயர்நெறியிற் செல்லாதவன், நிரம்பா மதியினன்; கருத்து, கருணை, பாங்கு, பெருந்தன்மை, மதி-இவை யில்லாதவன்; தருக்கு உடையவன்; இரக்கமிலாத தொழில்களைப் புரிபவன்; சனி, புதன், ஞாயிறு, வெள்ளி, திங்களிற் பல தீய செய்கைகளைச் செய்து மகிழ்ந்தவன்.

(8) இராவணன் யாவரையும் நலிவித்தது:-இராவணன் அறத்தை அழித்தான், உலகை வெருட்டினன், தேவர்களுக்குக் கெடுதி செய்தான், தேவர்கள் சேனையைத் தீப் போல வெருட்டித் துரத்தினன். விண்ணவரும் மண்ணவரும் அவனுக்கு அஞ்சினர். (அடியாரிடம் மாத்திரம் அவன் கொடுமை செல்லாது).

(9) இராவணனைப்பற்றிய பிற விஷயங்கள்:—(i) இருபது கரங்களும் நோயெடுக்க இராவணன் வாலியின் வாலினற் கட்டப்பட்டான். (ii) இராவணன் ஏழிசையாழ் வாசிப்

பதில் வல்லவன். (iii) இராவணன் சிவபக்தன், திருநீறு பூசுபவன்; ஐந்தெழுத்து ஓதுபவன்; அவன் மனைவி வண்டோதரியும் ஐந்தெழுத் தோதுபவள்.

(10) இராமாயணம்—இராவணன் காமத்தால் நெறியிழந் தான், அறிவிழந்தான், ஸ்ரீராமருடைய தேவி வைதேகியை (சீதையைக்) கானகத்தில் மாயையாற் கவர்ந்தான். ஸ்ரீ ராமருக்காக வந்து பொருத சடாயுவினால் புண்படுத்தப் பட்டான். ஸ்ரீராமரால் உயிரிழந்தான்.

## 162. (இ)ராவணனும் சிவனும் [388]

(1) இராவணன் கயிலையை எடுத்ததும், நெரிப்புண்டதும், இசைபாடி அருள் பெற்றதும்:—இராவணன் கயிலைமலையை அணுகினதும் 'எனது தேர் அப்புறம் போகவேண்டும், ஆதலால் இம்மலையைப் பேர்ப்பேன், கீண்டி யெடுப்பேன்,' என முழங்கிப் பாய்ந்தெழுந்தான். "என்ன இந்தமலை! இதன்மேல் ஒரு பெருமானும் இருக்கின்றனரோ, பார்க் கிறேன் அதைத்தான்"—என நிந்தனை செய்து வெகுண் டான். உமையாள் கணவன் விரும்பி வீற்றிருக்கும் திரு மலையாயிற்றே இது; இதனை வலஞ் செய்து செல்வதே வாய்மை என உணரும் மதியிலாதவனாய் அச்சமிலாது, கூசாது, மதியாது, கொதித்தெழுந்தான். 'எனக்கு மேல் வலிமை ஒருவருக்கு உளது என ஒப்புக்கொள்ளேன், என் எதிர்பொருவார் யார்'-எனக் கூறியெழுந்தான். தனது வாட்போர்த்திறத்தையே நினைத்துச் சினத் துடன் எழுந்தான். இங்ஙனம் தனது வலியே பெரிதென நினைத்து, அஞ்சுதலின்றி, அறிவீனத்தால் எதிரோடித் தன் கால்களை ஊன்றித் தன் கண்ணும் வாயும் நெருப் பெழ, மெய் கலங்க. தன் இருபது கரங்களையும் நிறுவி, விண்ணும் அதிர அக்கயிலை மலையை வேரோடும் பேர்த் தசைத்து அலைத்துக் குலுக்கி நிலைகுலையச் செய்து சட சட என எடுத்தான்; அப்படி யெடுக்கும்பொழுது உமா தேவி பயந்தனள். தேவி பயந்ததைக் கண்ட பெருமானார் முறுவல் செய்து தமது ஒரு காலின் விரல்களுள் ஒரு

விரலில் உள்ள நகத்தின் நுனியால் சிறிதே ஊன்றி யழுத்தினர். மலையின்கீழ் இராவணன் நசுக்குண்டான். அவனுடைய இருபதுதோள்களும், உடலும், உரமும், கரமும், சிரமும் நெரிப்புண்டன. கண்களும் வாய்களும் நெரிந்தன. உடல் புண்ணுயிற்று, இரத்தம் பெருகிற்று. இராவணன் பலவாறு அஞ்சினன், பத்துவாயாலும் அலறினுன், பாடி அழுதான், கதறினுன், இரங்கினுன், சோர்ந்தான், ஓலமிட்டான்; அவன் அடல், ஆண்மை, ஆள்வினே, ஆற்றல், இகல், ஈடு, ஊக்கம், செருக்கு, தேசு, நலம், பலம், மிண்டு, மூர்க்கு, வலி, வீரம் யாவும் ஒடுங்கின. சிவபிரான் சிரித்தனர். இராவணன் நடுநடுங்கி உய்யும் வழியை நாடினன். இறைவனேப் பணிந்தான், நீதியறிந்து புகழ்ந்து ஏத்தினுன், சிவனடி சரண் என்று கைந்நரம் பெடுத்தமைத்து மனம் ஒன்றி ஏழிசை யாழ் வாசித்தான்; சாமவேத கீதத்தை ஓதினுன்; பண் நிறை பாடல்களேப் பாடினுன்; ஐந்தெழுத்தைச் செபித்தான்; அவன் இசைக்கும் பாடலுக்கும் பெருமான் இரங்கினர், மகிழ்ந்தனர்; ஊன்றிய விரலே நெகிழ்த்தனர்; இராவணனது துயரைத் தீர்த்தனர்; புண்கள் ஒழியுமாறு அருளினர்; இழந்த வலியையும் தந்தனர்; ஒளிவீசுவதும், வெற்றி தருவதுமான கூரிய பெரிய கரவாளேயும் பிறபடைகளேயும் அவனுக்கு அளித்தருளினர்; தேரும், வாழ்நாளும், இராவணன் என்கிற பேரும், தியான சக்தியும், குணமும் தந்து அருளி அவனேயும் ஆட்கொண்டனர்.

(2) இராவணன் எடுத்த மலே—கயிலேமலே—அது அரனுக்கு உறைவிடம்; அழகு, எழுச்சி, ஒண்மை, உடையது; உயர்ந்த மரங்களேக் கொண்டது; மேகங்கள் படிவது; குற்றமிலாதது; பெரியது; குளிர்ந்தது; செழுவியது; பருத்தது; பொலிவது; வான் அளாவுவது.

## 163. வண்டு [390-397]

அரி, அளி, அறுபதம், கழுது, சுரும்பு, தும்பி; தேன்-இவை வண்டின் பிற பெயர்கள். (சுரும்பு - ஆண் வண்டு, தும்பி—கருவண்டு, தேன் - பெண் வண்டு).

வண்டுகள் சோலையில் வசிப்பன; வாவியில் சஞ்சரிப்பன; அழகியன; அழகிய சிறைகளைக் கொண்டன; கரு நிறத்தின, நீல நிறத்தின, தேசுள்ளன, தேனை நாடுவன; நுண் சிறையன, பொறி வாய்ந்தன, வரி கொண்டன, ஒலி செய்வன; மழலை மொழிவன; பண் பயிலுவன; மூசுவன; நறுமணத்தை நாடுவன; மலர்களில் உள்ள மதுவை உண்பன; உண்டு களிப்பன; மும்மென்று இசை முரலுவன, சண்பகக் காட்டில் தேன் பெறப் போர் புரிவன; மரக் கொம்புகளில் அமர்வன; குறியுடன் பாடுவன, கூட்டமாய்க் கூடிக் கலந்து பூக்களில் உள்ள மதுவை உண்பன; காலையில் மலர்களைக் கெண்டுவன; மலர்களைக் கௌவித் தேனைப் பருகுவன; தேனை உண்பதால் வண்டுகளுக்குக் களிப்பு மிகும்; களிப்பு மிகுந்து அவை இசை முரலும், பாடும். தேன் வண்டுகள் பண் பயிலும், பாடும், யாழ் வாசிக்கும். வண்டுகள் தாமரை மலரில் தங்கும்; முல்லை, சண்பகம், குருந்தம் ஆகிய மலர்மிசை ஏறும்; கொன்றை, செங்கழுநீர், நெய்தல் மலர்களில் உலவும்; தாமரை மலர்களில் புக்கு விளையாடும்; தாமரை மலர்த் தேனைப் பருகிக் களிக்கும். தும்பி வண்டுகள் கோடல் மலர்களில் முழுகிச் சஞ்சரிக்கும். வண்டுகள் புன்னை மரங்களில் உலவும்; நறும் பொழில்களில் செழிப்புள்ள மலர்களை நாடும்; அவை தமை நெருங்கிக் கோதும், அளையும்; மலர்த் தேனை நாடித் திரியும்; இனிமையான பழங்களில் உள்ள தேனைப் பருகும்; வண்டுகள் மலரை ஊதி மதுவை உண்பதால் மலரின் இதழ்கள் விரியும், பொழிற் சோலையில் தேனும் வண்டும் திளைக்கும். தன் காதல் வண்டு உண்டு களித்ததால் உதிர்ந்த புன்னைத் தாதினைக் கண்டு பெண் வண்டு ஊடிப் பொழிலில் மறையும். அல்லி மலரைப் புல்லி வண்டுகள் உறங்கும். வண்டு தன் பெடையைப் புல்லித்தேன் நிறைந்த மலரில் துயிலும்.

வண்டும் இசையும்-தலைப்பு 9-(8-12) பார்க்க.

## 164. வயல் - கழனி [398]

வயல்களிற் செந்நெல் காடுபோல வளரும். நெற் கதிர்கள் அசைந்துகொண்டிருக்கும். வயல்களிற் சேறும்,

நீரும், அல்லி முதலிய பூக்களும், வள்ளைக் கொடிகளும், மீன்களும், நாரை, குருகு முதலிய பறவைகளும் காண லாகும். ஆலைகள் வயல்களுக்கு அருகில் இருக்கும். கழனி களினின்றும் அரிந் தெடுத்த சும்மை வான் அளாவும். கழனி, செய், பழனம், செறு, புலம், படுகர் என்னுஞ் சொற்கள் வயலையும் வயல் சார்ந்த இடத்தையும் குறிப்பன.

## 165. வர்ணனைகள், விளக்கங்கள் [399]

1. அகில்:—அகிலின் புகை மாதர்கள் சுவடொற்று வதிற் புலப்படும்.

2. அசும்பு:—பசும்புற்றரை பசும்பொன்போல விளங்கும்.

3. அருவி:—வெண்ணிறத்தது; திண்ணெனவிழும்; உம்மென்ற ஒலியுடன் விழும்; தந்தத் திந்தத் எனப் பாய்ந்து போகும்; முத்து, பொன், மணி, சாந்தம், அகில், பளிங்கு, வயிரம் இவைகளை உந்திப்பாயும்; மழலை முழவு போல அதிரும், அருவி பாயும் வேகத்தைக் கண்டு யானைகள் அஞ்சும்.

4. அன்னம்:—தலைப்பு 180-III-2-பார்க்க.

5. ஆந்தை:—தலைப்பு 180-III-3 பார்க்க.

6. ஆமை:—தலைப்பு 180-II-1-பார்க்க.

7. ஆயன்:—கனைத்த எருமை காணாது போக ஆயன் தன் கையில் உள்ள (புல்லாங்) குழலை ஊதுவான். குழலோசை கேட்டு எருமைகள் அனைத்தும் ஒன்று சேரும்.

8. ஆற்றங்கரை:—காவிரியின் கரை அழகியது. கரைமீது மயில்கள் ஆலும்.

9. இடி.—இடியின் ஒலிக்கு அஞ்சிக் கூகைக் கூட்டங்கள் (கோட்டான்கள்) மலைச்சாரலில் ஓடித்திரியும்; சிங்கங்கள் குமுறும்; யானைக்கூட்டங்கள் சோலைகளிற் புகுந்து மண்டும்; பாம்புகள் புற்றுக்குள் ஒடுங்கும்.

10. இயற்கை வர்ணனை:—

(i) மயில், வண்டு முதலிய:—மாதவி மரத்தில் வண்டு இசைபாட மயிலாடும். புன்னை செம்பொன் கொடுக்கும். மயில் நடனஞ் செய்யக், கடல் முழக்கஞ் செய்ய, வண்டு இசை முரலும். தாமரைத்தேன் உண்டு வண்டு இசை பாட, மயிலாட, விண் அதிர்ந்தொலிக்கும். மலைமிசைப் படிகின்ற மேகம் முழவுபோல ஒலிக்க, மயில்கள் பல நடனம் ஆட—வண்டுகள் பாடும், கொன்றை பொன் வீசும், காந்தள் கையேற்கும். வண்டுபாட, மயில் ஆல, மான்கன்று துள்ள, கெண்டை பாயச் சுனையில் நீலோற் பல மலரின் மொட்டு மலரும். மயில் நடமாட, வண்டு பாட, கோடல் கையசைப்ப, அன்னம் பேடையோ டூடி மகிழும்.

(ii) வெண்குருகு தாழை வெண்மடலைத் தனது இளம்பெடை எனக் கருதிப் புல்கும். மடல் அவிழ்ந்த வளைந்த தாழையின் நிழலைக் குருகு எனக் கருதிக் குளத் தில் உள்ள கெண்டைமீன் தாமரைப் பூவின் கீழ் மறையும். அதைக் கண்டு நகைப்பது போல் முத்துக்கள் ஒளிவீசும்,

(iii) குளங்கள்தோறும் மாதர்தம் முகம்போலத் தாமரை மலரும்; அவர்தம் வாய்போலச் செங்குமுதம் மலரும், பவளம் நிறங்காட்டும்; அவர் கண்கள் போலக் கருங்குவளையும் நெய்தலும் மலரும், கயல் மீன் விளங்கும்; அவர் பற்கள்போல் முத்து ஒளிவீசும்.

(iv) தெங்கின் இளநீர் கீழே கமுகின்மேல் விழ, கமுகின் தாறு சிதறி வாழையின்மேல் விழ, வாழையி லிருந்து விழுங்கனிகள் வயலில் ஊறிச் சேறு செய்யும்.

(v) வயலருகே மான் பாயும், மந்திகள் மரத்தின் மீதேறும், மடுக்கள்தோறும் தாமரை மலர்மீது மீன் பாயும், அதனால் தேன் ஒழுகத் தாமரை மொட்டு மலரும்

(vi) தேரைகள் ஆரையிலை சாய மிதிகொள்ளும்; வாளை குதிகொள்ள வள்ளை துவளும். நாரைகள் ஆரல் மீன்களை வாரி எருமைகள் தங்கு வயலில் வைகும்.

(vii) பன்றிக்கூட்டமும், மான்கூட்டமும், கரடியும் இறங்கும் இராப்பொழுதில் ஆனைக்கூட்டமும் மலைச் சாரலில் அணையும்.

(viii) மலரைப் பறிப்பதற்காகத் தாழ்த்திவிட்ட கொம்பு விடப்பட்டதும் அது மேலே எழும்பி மா மரக் கிளையில் தாக்க மாங்காய்கள் கவண்வீசு கல்லுப்போல சுனைக்கரையில் விழ அதற்கஞ்சிப் பறவைகள் பறந்து ஓடி விலகும்.

(ix) வேடர்கள் ஒன்றுகூடி நின்று கும்பிடுவதைப் பார்த்து முல்லை அயலே முறுவல் செய்வது போல அரும்பும்.

11. ஊழி-பிரளயம்:—மண் நீரில் மடிய, எரிபுக, எரி, பெருங்காற்றில் அவிய, விண் கெடும்படி வான் கொள்ள, பிரம விட்ணுக்களின் களேபரத்தைப் (எலும்பைப்) பூண்டு இறைவன் எழில் உருவினனாய்த் திரிவன்; கடல்நீர் பார் முழுதும் ஓடி மூடும்; அண்டர் நிலைகெடுவர்; வெள்ளம் வான் அளாவும்; ஊழியந்தத்தில் கடல்கள் உலகங்களை மூட அமரர்கள் "எந்தாய்" எனப் பணிந்து இறைவனிடம் சரண்புகுவார்.

12. எருமை—தலைப்பு 180-iv-(6) பார்க்க.

13. கடல்: திரைகளை மொண்டு வீசும்; மலை போன்ற திரை யெனுங் கையால் முத்தையும் பவளத்தையும் சங்கத்தையும் ஈனும். இரவில் கடற்றிரையால் மோதப்பட்டுக் கரையில் ஒதுங்கிய சங்கமும் இப்பியும் முத்துக்களை ஈனும். அம் முத்துக்கள் மணலிடை வைகி இருளை விலக்கும். வண்டல், வங்கம், சங்கம், சுறு இவை அலையால் அணையும். கடற்கரையில் கண்டல், தாழை, நெய்தல் பொலியும். வயலில் நடுதற்கு உழவர் வர அவர்கள் நடமுடியாதபடி முத்துக்கள் பரலாய் ஆங்குக் குவிந்து கிடக்கும். கடலின் திரையால் சங்குகள் உதையுண்டு சரிந்து இரிந்து அசைந்து இசைந்து வெண்மணற் குவைமேற் சேர்ந்து அங்குத் தங்கி முத்துக்களை ஈன அம் முத்துக்கள் இருளகல ஒளி வீசும். சங்கும் இப்பியும் கட

லோதத்தால் மோதப்படுவதால் திருமுல்லைவாயில் தெருக்களில் முத்துக்கள் அலையுண்ணும். முத்துக்கள் வெண்ணிலாப்போல ஒளிவீசும். திரைகள் ஒன்றோடொன்று ஓடிப் பகைத்து மோதச் சங்கமும் வங்கமும் கரை வந்து சாரும். மலைபோன்ற மரக்கலங்கள் சரக்குடன் இடையிடை வரும்.

14. கமுகு—தலைப்பு-143-I-(5)-பார்க்க.

15. கயல்:—தலைப்பு-180-II-(5) (iii) பார்க்க.

16. கரும்பு:—தென்றல் அடிவருடக் கண்வளரும்.

17. காந்தள்:—தலைப்பு-143 (I)-12-பார்க்க.

(18) காவிரி:—காவிரிக் கால்களில் மணியும் முத்தும் பொன்னும் அடித்துவரும். சந்து, அகில், பெருமரம், இலவங்கம், மாணிக்கம், மற்றும் மலைவளங்கள் யாவையும் ஆர்த்தடித்துப் பாய்ந்து காவிரி வெள்ளம் மண்டிச் சலசல எனப் பெருகிவரும்.

19. கிளி:—தலைப்பு-180-III-(8)-பார்க்க.

20. குயில்:—தலைப்பு-III-(9)-பார்க்க.

21. குரங்கு:—கருங்குரங்கும் கடுவனும் பாய்ந்து போர் புரிய மான் அச்சம் கொள்ளும். ஆண் குரங்குடன் கோபித்த பெண் குரங்கு தனது கைம் மகவை ஏந்திக்கொண்டு மூங்கில்மீது பாயவேண்டிக் கரிய மலை மிசை ஏறும். சேற்று நீரிற் கயலும் இளவாளையும் சண்டை யிடுவதை வேடிக்கை பார்த்துச் செம்முக மந்தி கடுவனொடு திரியும். முழவொலியைக் கேட்ட சில மந்திகள் மழை வரும் என அஞ்சி மரத்தின் மீதேறி மேகங்களைப் பார்க்கும். மந்தி கூத்தாட வண்டு பாடும். மந்திகள் தென்னஞ் சோலையிற் புகுந்து வாழைக் கொத்துக்களை இறுத்து மாமரத்தின் மேல் ஏறும். மேகங் கவியப் பொழில்களில் மந்திகள் கூடி நீண்ட மூங்கில்களின் மீதேறி மேகத்தைத் தொட முயலும். பொழில்களில் மந்திகள் பாய்வதால் தேன் திவலைகள் சிந்தும். கமுகின் இளம் பாளையில் வாய் வைத்து மதுவையுண்டு மந்திகள் குதிக்கும். கூழை மந்தி தாறுடைய

வாழைப்பழத்தை உண்டு தன் இனங்களை வெருட்டிப் பாயும். தேனொழுகும் வாழைக் கனியை உண்ண விரும்பி மந்தி மேலே பார்த்தபடியே கீழே இறங்கும். பழம் நிறைந்த மரங்களில் ஏறிக் கரிய முசுக்கள் மூங்கிலின்மீது பாயும். குரங்கின் இனங்கள் பொழில்களிற் கனிகளை உண்டு நீர் நிறை வயல்களில் விளையாடும். கிளை கிளைகளாய்ப் பாய்ந்து மந்தி உண்டு நழுவவிட்ட இனிய பலாப்பழங்களைக் கடுவன் உண்டு களித்துக் குதிக்கும். கருங் குரங்குகள் தம் இனத்தொடு மாம்பழங்களையும் பலாச் சுளைகளையும் கீறி உண்டு குதிக்கும். பல வகைப் பழங்களை உண்டு மலையகம் ஒலிப்பக் கரு மந்தி விளையாடும். மாம்பழத்தினின்றும் தேனொழுக மந்தி குதிகொள்ளும். மயில் ஆல மந்தியானது சினத்துடன் மரம் ஏறிக் கனிகளைச் சிந்தும். முறுக்கு மூங்கில்கள் சிறிதே வளையுங் காரணத்தால் சிறிய மந்திகள் இளமையான மூங்கில்களைத் தேடி அவை மீதிருந்து நடனம் செய்யும். நீண்ட மூங்கில் வளையும்படி பாய்ந்த கடுவன் அதன் மேலிருந்து நிருத்தம் செய்ய அங்குக் கூடிய வேடுவர்கள் கூச்சலிட்டுக் கை காட்டி (வேடிக்கை பார்க்க மற்றவர்களை) அழைப்பார்கள்.

22. குரா :—இதன் அரும்பு பாம்பினது முள்ளன்ன பல்லைப்போல இருக்கும். மல்லிகையும் சண்பகமும் மலர்ந்து வாடுவதைக் கண்டு (அவை போலத் தான் விரைவில் வாடாமையால்) குரவம் புன்சிரிப்புக் கொள்ளும்.

23. குருகு :—கரிய அடியையும் பசுங்காலையும் உடைய வெண் குருகு பொழில்களில் இறகு உலர்த்தி நீர் நிலையில் இரை தேடும். சிறு குருகு ஆரல் மீன்களை உண்ணும்; கழனிகளில் சிறகுலர்த்தும். குருகு கெண்டை மீன்களைக் கவர்ந்து உண்ணும்.

24. குறவர் :—கற்குடி மலைமீதுள்ள குறமாதர்களின் கைக்குழந்தைகள் இரவில் நிலாவைத் தாவிப் பிடிக்க முயலும். குறவர்கள் புனத்தில் முத்துக்களைச் சேகரித்துக் குவித்து வைப்பார்கள்.

25. கோடி :—மலைபோன்ற மாளிகைகளின் தளத்தின் மேலே விரிந்து பறக்கும் கொடி வானோரை விளிப்பது போலத் தோன்றும்.

26. கோடிமுல்லை :—குருந்தில் ஏறும், கருவண்டுகளால் மொய்க்கப்படும்.

27. கோடல் :—படங் கொண்ட பாம்புபோலப் பூக்கும்.

28. சிங்கம் :—இடி இடித்தால் சிங்கம் குமுறும். குகையில் நன்ருய்த் தூங்கும். சிங்கம் கோபத்துடன் எழ யானைகள் இரிந்து ஓடிப்போகும். யானையின் தந்தத்தில் உள்ள ரச பாகங்களை உண்ணச் சிங்கம் அத் தந்தத்தைப் பிளக்க அதினின்றும் முத்துக்கள் உதிரும்.

29. சுடலை :—கழுகும் நரியும் ஆடிய சுடலையில் வெண்டலைகள் உதையுண்டுருளும். காரை, வாகை, ஈகை, படர்தொடரி, கள்ளி, சூரை-இவை சுடலையிற் காணக் கூடிய செடி, மர வகைகள்.

30. சோலை :—(பொழில் என்பதையும் பார்க்க); சோலைகளில் மயில் பெடையைப் புல்கி ஆடும். குயில் இன்னிசை பாடும். தெங்கின் பழம்-கமுகின் பழம்-வாழைப் பழம் சிந்தும். செருந்தி, ஞாழல், புன்னை, வன்னி, செண்பகம், குரா-அரும்பி மணம் வீசும்.

31. தாமரை:—அன்னம் நடைபயில வெண்டாமரைச் செந்தாது உதிரும். தாமரை மலரக் கயல்மீன் பாயும்; செங்கமலங்கள் எரிபோல மேலால் ஒளிகாட்டும். தெரிவையர் முகம்போலத் தாமரை மலரும். கயலும் சேலும் செருச்செய்யும், வண்டு யாழ்முரலும், தாமரை மலரும்.

32. தாரா :—ஆரல் மீன்களை வயார உண்டு குளம், வயல் முதலிய நீர் நிலைமாட்டுத் தாரா மல்கும்.

33. தாழை :—யானையின் வெண்ணிறத் தந்தங்கள் போலத் தாழை முகிழ்கள் விளங்கும்.

34. தெங்கு :—தெங்கின் வெண்பாளை யானையின் மருப்புப் போல வெளித்தோன்றும்.

35. நகரம், மாளிகை :—வீதிகள் ஒளிவீசும்; மாடங்கள் விண் அளாவும்; கொடிகள் விரிந்திலங்கும்; பெரிய மாடங்களின் உச்சியில் விளங்கும் கொடிக் கூட்டத்தின் நெருக்கத்தால் கீழே வெயிலே தெரியாத நகர் சீகாழி. மாடம், மாளிகை, கூடம், கோபுரம், மணியரங்கு, மதில், மண்டபம் இவையெலாம் ஊரின் செல்வத்தை விளக்கும்.

36. நாரை :—குட்டைகள், குழிக்கரைகள், பொய்கைகள், வயல்கள், கழி, கடல் முதலிய இடங்களில் மீன்கள் இரிய நாரை இரைதேரும். நாரை தன் பெடையை விட்டுப் பிரியாது. கெண்டை மீன்களை இரையாக உண்டு வண்டல் மணலைக் கெண்டி விளையாடும்.

37. நிலா :—நிலவின் ஒளி தீண்டும்போதெல்லாம் வெண்மாடங்கள் தண்ணொளி வீசும்.

38. பசு :—பசுவின் கன்றுகள் முற்றத்திலுள்ள பலாப்பழங்களைத் தின்று விளையாடும்.

39. பறவைகள் :—இரவினுங் கூடக் கமுகின் பழங்களை உண்ணும்.

40. பன்றி :— பன்றிகள் உழுது தோண்டிய இடங்களில் வெளிப்பட்ட மணிகள் இருளகல ஒளிவீசும்.

41. பாம்பு :—பெரிய யானையை விழுங்கி மழுங்கும் பாம்புகளும் உள. இடிக்கு அஞ்சிப் பாம்பு புற்றில் நுடங்கி ஒடுங்கும்.

42, புலி :—மலைப்பாறைகளில் கோபத்துடன் புலி இரை தேடும், காற்றினால் வேங்கை மலர்கள் பாறையின் மேல் விழ அங்குக் கிடக்கும் புலி கோப முகத்தைக் காட்டும்.

43. புன்கு :—தாமரைத் தடாகக் கரையில் உள்ள புன்கு மரங்கள், தடத்திலே சங்குகளில் நீர்திகழச், செந்தாமரை தீயில் தமது மலராகிய பொரியை நிரம்ப இட்டு, (அட்ட) மணஞ் செய்யும்.

44. புன்னை :—புன்னைமலர்ப் பொழில் இருட்டில் ஒளிகாட்டும். புன்னை முத்தரும்பிப் பொன்மணி யீனும்.

45. பூவை :—வீட்டிற் கூடத்தில் வளர்க்கப்படும் பூவைகள் மறை சொல்லும்.

46. பெண்கள் :—பொய்கையில் நீராட அங்குள்ள வாளைகள் அருகிலுள்ள மடையிற் பாய்ந்து விலகும். சுனையிற் கருங்குவளைகள் மாதர்தம் நிலாப்போன்ற முகத்தில் உலவுறுங் கண்போல வளரும். தாமரை போன்ற சீறடியும், பஞ்சுபோன்ற மெல்விரலும், அரவு போன்ற அல்குலும், மயில்-குயில்-கிளியன்ன மொழியுங் கொண்ட மங்கையர் நடனம் செய்வர்.

47. பொய்கை :—தவளையின் வாய் நிறைய கருங்குவளைகள் மதுவைத் தரும்.

48. பொழில் :—பொழில்களில் மேகம் முழவு போல அதிரும்; பிறை தவழும்; மயில்கள் தாம் காதலித்த பெடையுடன் ஆடும்; அதைப் புல்கி ஆலும். கலைமான் தனது துணையுடன் துயிலும். குயில்கள் கூவும், மயில்கள் ஆலும்; கிளிப்பிள்ளைகள் குலவும். வண்டுகள் பண் செய்யும், கலைமான்கள் துள்ளி விளையாட மலைகளும் எதிரொலி செய்யும். குரவம், சுரபுன்னை, கோங்கு, வேங்கை, மரவம், மாதவி, மௌவல் கலந்தோங்கும். வண்டு மலரூதி மது உண்ணுவதால் மலர்கள் இதழ் விரியும். தெங்கின் பழம் கமுகங் குலைமேல் விழும்; அது வாழைப் பழங்கள் மீது விழும்; வாழைப்பழங்கள் மதில்மேல் விழும். குவளைகள் மல்கும். கொடிகள் கூவிளத்தைச் சுற்றிக்கொள்ளும்.

49. மயில் :—மலைச்சாரலில் மயில் தன் பேடையொடு ஆடும்; ஆடி ஆலும்; பொழில் நிழலில் வண்டு பாட மயில் ஆடும். மேகம் போலப் பேரி ஆர்க்கப் பொழிலில் மயில் ஆடும்,

50. மரணவேதனை :—மரணகாலத்தில் ஐம்புலனும் தத்தம் தொழில் செய்ய இயலாது கலங்கும்; நெறி மயங்கும்; அறிவு அழியும்; கோழை மேற்படும்; வேதனை மிகும்.

51. மலை :—மணிகொண்ட நாகங்கள் உலவுதலால் மலைகளில் இருள் விலகி ஒளிவீசும். சிலைவேடர்கள் மலை

வழிகளில் வருவதால் மலையில் உள்ள யானை, புலி, சிங்கம் அவர்கள் வரவுக்கு அஞ்சும். மலைக்குகைகளில் சிங்கம், பன்றி, ஆனை வாசஞ் செய்து விளையாடும்.

52. மழை:—மழைத்துளி சிதறச் சோலைகளிற் பசுக்கள் ஒன்றுசேரும். இடியிடிக்கப் பசுநிரைகள் அஞ்சி மலைச்சாரலில் ஒன்றுகூடும்.

53. மான்:—கலைமான், மான்கன்று, பெண்மான் இவை இரவில் ஒன்றுகூடியிருக்கும். கலைமான் பெடையொடு பயிலும்.

54. மூங்கில்:—பழைய மூங்கில்களினின்றும் ஒளி வீசு முத்துக்கள் கலகலென உதிரும்.

55. யானை:—இடிக்கு அஞ்சி யானைக் கூட்டங்கள் சோலைகளிற் புகும். சிங்கத்தின் குரலோசைக்கும் அஞ்சி யானை மனமொடுங்கிக் குகையிலே தங்கும். ஆளியின் வரவுக்கு அஞ்சி மலையைக் குத்திக் குகையில் தங்கும். யானையின் மத்தகத்தில் சிங்கத்தின் நகங்கள் பாய அம் மத்தகத்தினின்றும் முத்துக்கள் உதிரும். யானைக் கூட்டங்கள் முதுவேய்களைக் கோபித்துச் சுனைகளை நெருங்கும். மூங்கில் முளைகளை வாரி ஆண்யானை பெண் யானை வாயிற் கொடுக்கும். யானைகள் மூங்கிலைப் பற்றி வளைத்துவிட அது வேகமாய் நிமிர்ந்துசென்று கருமேகத்தைக் கீறும். பிடிகள் இளங்கொழுங்கொடிகளை மென்று தின்னும். தாமரை, மூங்கில்முளை இவைகளை யானை உண்ணும். மலையில் உள்ள பொழில்களிற் சந்தனமரத்தின் தளிர்களைத் தின்று பிடி (பெண்யானை) தன் கன்றினொடு விளையாடும். இரவில் வழிமயங்கிய ஆண்யானை மலைச்சாரல் வழியே ஓடிப் பிடியுடனும் கன்றுடனும் அடிவாரம் சேரும். காணாது போன பிடியை ஆண் யானை தேடி ஓடி அழைத்துத் திரியும். வேங்கை மலர்க்கொத்தைப் பறித்துத் தமது மத்தகத்தில் ஏந்தி வந்து பிடியுங் களிறும் ஒருங்கே திருக்குறும்பலா என்னுந் தலத்தில் வணங்கின. (கானப்பேர் என்னுந் தலத்தில்) பிடிகள் பின்னேவர ஆண்யானை தனது கைந்நிறைய

மலர்களைத் தழுவிச் சென்று, காலையில் தடத்தில் மூழ்கி விதிப்படி இறைவனை வழிபடும். பிடி தனது கையால் அலகிடக் (பெருக்கிச் சுத்திசெய்ய) காட்டானை இறைவனை வழிபடும்.

56. வண்டு :—மலர்களைக் கெண்டித் தேனுண்டு திளைக்கும். அல்லி மலரைப் புல்லி உறங்கும். தீங்கனி களில் உள்ள தேனைப் பருகும். பெண் வண்டு தன் காதல் வண்டு ஆடிய புன்னைத் தாதுகளைக் கண்டு ஊடிப் பொழிலில் மறையும். நிழல் மலிந்த சோலையில் நீலவண்டு குழல்போலப் பண்பாடும். மயிலாடத் தான் பாடும் குவளை மலரிலுள்ள கள்ளை அருந்தித் தாமரைத் தாதின் மேலிருந்து வண்டு பண்பாடும். பல வண்டுகள் ஒன்று கூடிக் குழல் போலவும் பறைபோலவும் ஒலிக்கும். வெண்டாமரைமேற் கருவண்டு யாழ் செய்யும்.

57. வயல் :—தாமரை மலரும் நீர்நிலைகளிற் கயல்கள் திளைக்கும். செங்நெல் அறுத்த இடங்களில் அசும்பு (புல்) பாயும்,

58. வாவி :—வாவிகள்தோறும் தாமரை (மாதர்தம்) முகங்காட்ட, செங்குமுதம் வாய்கள் காட்டக், காவி மலரும்-குவளையும்-நெய்தலும் கண்காட்டும்.

59. வாழ்க்கை :—பெண்டிர், மக்கள், சுற்றம், என்பன பேதைப் பெருங்கடல். வாழ்க்கை யென்பது பிணி, பிறவி. மரணம் என்பவைகளுடன் கூடியது. வாழ்க் கையில் பல் விழும். நாத் தளரும், மெய் வாடும், இங்ஙனம் வாழ்க்கை பழிப்புக்கு இடமானது. வினைக்கும் நோய்க்கும் இடமான நமது யாக்கையில் இன்பங் காண்பதானது பாம்பின் வாயில் அகப்பட்ட தேரையின் வாயிற் சிக்கிய சிறு பறவை யொன்று பூவின் நறுந்தேனைச் சுவைத்து இன்புறுவதுபோல இருக்கின்றது.

60. வாழை :—வேடர்தம் கைபோல வாழைக்கனிக் குலை தொங்கும். வாழைப்பழம் தேன் சொரியும். செங்குலை வாழைகள் செழும்புனல் போல விளங்கும். மாறுகொண்ட யானையின் துதிக்கை போல வாழை குலையீனும். பழுத்த வாழைப்பழக் குலை பொன்னை ஒக்கும்.

61. வாளை :—தாமரை மலர்கள் சாய இளவாளை விண்ணிற் குதிகொள்ளும். அரிந்த வயலிற் கிடக்கும் தாமரை மதுச்சொரிய அதைக் குடித்து வாளைகள் களித்துக் கரும்பு ஒடிய உள்ளே பாயும். காவிரி நீரானது வயலிற் பாய வாளைகள் கூடி ஆழ்ந்த நீர்நிலையிற் பாயும். ஓசை படையோசையை நிகர்க்கும். மடையில் வாளை பாய்வதால் நீல மலரின் மொட்டு இதழ் மலர்ந்து வாசனை வீசும். சோலைகளில் தெங்கின் பழங்கள் உதிர வாளைகள் குதிகொள்ளும்; அங்ஙனம் குதிகொள்ளுவதால் மதுத் தோன்ற மலர் விரியும். கழனிகளிற் சேற்றில் உள்ள செங்கயல் அழைப்ப இளவாளைகள் வந்து சேரும்.

62. வெள்ளம் :—ஆற்றில் வெள்ளம் வர, வெள்ள நீர் இரண்டு கரைகளிலும் மோதி, மலைப்பண்டங்களை அடித்துச் சென்று வரம்பு மீறி ஓடி நெல், கழுநீர், குவளை இவைகள் சாயப் பாய்ந்து செந்தாமரைகள் முக மலரும்படி வயல்களிற் சேரும்.

63. வேடர் :—வேடர் இட்ட விறகில் அகிற் புகை விம்மும். பன்றிகள் கிளைத்த ஒளி மணிகளை வேடர்கள் கூட்டிக் குவிப்பார்கள். வேடர்கள் சந்தன மரத்தின் சிறையால் தினை விதைத்து விளைவு செய்வார்கள். வெஞ் சொற் பேசும் வேடர் மடவார் பரண்மீதேறி 'ஆயோ' என்று கிளி ஓட்டுவார்கள்.

64. வேள்வி :—வேள்விப் புகை விண்ணிற் புய லெனப் பொலியும்.

65. வைகை :—இதன் வெள்ளம சந்தனம், அகில் இவைகளை அடித்துக்கொண்டு வரும்.

## 166. வழக்கங்கள், பழக்கங்கள் [400]

(அக்காலத்திய செய்திகள்)

1. ஆலய வழிபாடு, கடவுள் வழிபாடு, பஜனை :— அடியார் இன்னிசை பாடித் தொழுவர்; தண்டு, உடுக்கை தாளம், தக்கை என்னும் பக்க வாத்தியங்களுடன் நடம் செய்து தொழுவார். புண்ணிய வாணர், மாதவர்,

மங்கையர், சிறுவர் புகுந்து ஏத்துவர், பாடுவர். பல தொண்டர் ஒன்றுகூடித் திருநீறு பூசி அதிகாலையிற் பஜனை செய்வர்; தமிழிலும், வடமொழியிலும் வேற்றுத் திசை மொழியிலும் நரம்புக் கருவிகள் கொண்டு இசை கூட்டி வாசித்து நெஞ்சத்து இருள் நீங்கத் தொழுதெழுவார்.

2. இரத்தலின் இழிவு :—ஒருவனிடம் போய் நாளும் இரத்தலும், அவன் உச்சிப் பொழுதில் வா எனச் சொல்லக் கேட்பதும் மிக இழிவு. அக்கதி வாராதிருக்க இறைவனை ஏத்துமின்.

3. ஈதலின் பெருமை :—இப்போது வேளையில்லை, பின் ஒருபொழுது வாருங்கள் என ஒருபோதுங் கூறாத பெருமையரும், இரப்போர்க்கு ஒளிக்காத பெரியாரும், வறுமைவாய்ப்பட் டிருப்பினும் இல்லையென்னாத பண்பினரும். மழை குன்றி வளங்குறுகினும் தமது கொடைத் திறத்திற் குறையாதவரும், தாம் உண்ணுவதை மறைக்காதவரும், யாது கெடுதல் நேரிட்டுக் கட்டத்திலிருந்த போதிலும் தாராளமான கையை உடையவர்களுமான உத்தமர்களும் இருந்தார்கள்.

4. உபசாரம் :—எதிர்கொண்டழைத்தல் (நல்லோரடையும் கதி) :—இறைவன் திரு நாமத்தை ஓதி நல்லொழுக்கத்தில் இவ்வுலகில் இருந்தவரை, (அவர் இறந்தபின்) வானோர் (தம்முலகுக்கு) எதிர்கொண்டழைத்து விமானத்தில் ஏற்றிச் செல்வர்.

5. உழுதல் :—மேழி கொண்டு உழுவார்கள், கடைசியர் கழனியில் பாடுவர், விளையாடுவர்.

6. ஊர்கள் இருந்த நிலை :—அந்தணர் வேள்வி, மறையொலி, செந்தமிழ்க்கீதம்-இவை சிறப்புடன் வளர்ச்சி பெற்றிருந்தன.

7. ஊன் உணவும், அடியார்களும் :—ஊனுடுண்டல் நன்று என்றும், ஊனுடுண்டல் தீயது என்றும் அக்காலத்தில் அடியார்கள் தம்முட்பேசி வாதஞ் செய்வார்கள்.

8. கடற்படை :—இலங்கை மன்னனுன இராவணன் கடற்படை வைத்திருந்தான்.

9. கணிகைமார் :—திரையில் வரும் மணிகளைக் கணிகைமார் கவருவார்.

10. கப்பல்கள் :—கப்பல்கள் கரை நோக்கித் தூரத்தில் வரும் குறியைச் சங்கங்கள் முழங்கித் தெரிவிக்கும்,

11. கள் குடித்தலும், கள் குடிக்கும் அடியாரிடம் இருந்த மதிப்பும் :—கட் குடித்து ஊர் திரிதல் சொல்லப் பட்டுளது. சிவனடியார் கட்குடியரா யிருப்பினும் அவர் தம் பண்பை இகழ்வார்கள் அறிவிலிகளே.

12. கிரிப் பிரதட்சிணம் :—இறைவன் வீற்றிருக்கும் திருமலையை வலஞ்செய்தல் நன்றென உணர்தல்வேண்டும்.

13. கோயில்கள் :—கோயில்களில் அகிற் புகை வாசனை கமழும். காலையில் துந்துபி, சங்கு, குழல், யாழ், முழவம் அவைகளின் ஒலியும், மாலையில் வழிபாடும் காணலாகும், மறையொலி, துதியொலி கேட்கலாகும். செந்தமிழர், மறை சொல் நாவர், கலை வல்லுநர், பெருங் குணத்தோர் முதலியோர் தம்மை அருச்சனைகள் செய்ய இறைவர் வீற்றிருக்கின்ருர்.

14. சிறியோரின் நல்லொழுக்கம் :—அறிவு மிக்க விருத்தர்களைச் சிறியவர் கீழே விழுந்து பணிவர். கூட்டமாய்ச் சென்று இறைவன் திருப்பாதத்தைப் பாடுவார்.

15. திருமணம் :—மாதவரும் ஆடவரும் மணத்தை விரும்பி ஒன்றுகூடி மங்கலம் மிகத் திருமணத்தை நடத்தி வைப்பார்கள். திருமண ஓமத் தீயுள் பொரியிடும் வழக்கம் இருந்தது.

16. நிலத்திலுண்ணும் விரதம் :—(இலை போட்டுக் கொள்ளாது) நிலத்தில் உண்ணுதல் சொல்லப்பட்டுளது

17. பாண்டியனும் தமிழும் :—பாண்டியனுக்கும் தமிழுக்கும் இருந்த நெருங்கிய பொருத்தத்தை உணர்த்த பண்ணியல் தமிழ்ப் பாண்டியன்' என்ருர்.

18. பிள்ளை வரம் :—பிள்ளை வரம் வேண்டினோர் புண்ணிய தீர்த்தங்களில் ஆடுதல் வழக்கம். அதுபற்றித் திருவெண்காட்டு முக்குள நீரில் முழுகி வழிபட்டால் பிள்ளைவரம் ஐயுறவின்றிச் சித்திக்கும் என்றுள்ளார்.

19. புலவர் நிலை :—அக்காலத்தில் புலவரிடத்தில் வெகு மதிப்பு இருந்தது. வையம் என்ன விலை மாறி விட்டாலும் புலவர்களுக்குக் கடுமொழி கூருதவர்கள் இருந்தார்கள். பொருட் செல்வ முடையோர் புலவர்களுக்கு நிதி கொடுத்து ஆதரித்தனர்.

20. பேய் :—பிடிப்பதும் உண்டு; பிரிவதும் உண்டு; திருவெண்காட்டு முக்குள நீரிற் படிந்தால் பேய் அணுகாது, பேய்பிடித்திருப்பின் அது பிரியும், இதில் ஐயம் வேண்டாம்—என்கிறார்.

21. பொழில்கள்:—பொழில்களில் ஆடல் பாடல் நடைபெறும்.

22. பொழுது போக்கிய விதம் :—பூசை, வந்தனை செய்யுங் காலந் தவிர மற்ற நேரங்களில் மறை பேசியும், சந்திப்போதில் நிட்டையிலிருந்தும் பெரியோர்கள் காலம் போக்கினர்.

23. போர், போர்க்கோலம், போர் விளையாட்டு:—தும்பை மாலை பூண்டு போருக்கு எழுதல், மற்போர் புரிதல் (பிரமனும் மாலும் தொடையும் மார்பும் மாறுபட இகலியது), திருவிழாவில் சேரியில் வேல் விளையாட்டு—இவைகள் கூறப்பட்டுள.

24. மகேசுர பூசை :—(உருத்திர கணத்தவர்களுக்குப் பூசை):—அண்ணலா ரடியார்தமை அமுது செய்வித்தலின் சிறப்புக் குறிக்கப்பட்டுளது.

25. மயில் :—திருப்புத்தூரில் தெருவு தோறும் மயில்கள் உலவினதைக் கூறியுள்ளார்.

26, மனைகள் :—(i) கட்டும் வகை:—சுவர் வைத்தல், கழி நிரைத்தல், கூரை வேய்தல், வாசல் வைத்தல் கூறப்பட்டுள.

(ii) மறையொலி :—மனைகள் தோறும் மறையொலி முழங்கும்.

(iii) அகழி-கிடங்கு, மதில்:—மனைகளைச் சுற்றி மதில் கிடங்குகள் இருந்தன.

27. மாதர்கள் :—தலைப்பு 148-(II), 149 பார்க்க.

28, மாதவர்:—மரத்தில் இருந்து உரிந்த பட்டையை (தோலை)ப் புனைவர்.

29. முனிவர்கள் :—நீறு பூசுவர்; நிலத்தில் உண்பர்; நீரில் மூழ்குவர்; மலைமேல் வசிப்பர், தெளிந்த சிந்தையர்.

30. மூவேந்தர் — முடி மன்னர்:—சேர சோழ பாண்டியர்கள் மூவரும் சிறந்த சிவ பக்தர்கள். ஆரா அன்போடு திருப்பூவணத்தையும் குடந்தைக் காரோணத்தையும் இவர்கள் தொழுது பணிந்ததைக் கூறியுள்ளார்.

31. இலிங்கம் :—மணல் இலிங்கம் பிரதிட்டை செய்வதும், பால் அபிடேகம் செய்வதும் கூறப்பட்டுள.

32. வேதம் :—பொழில்களில் ஓதப்பட்டது.

33. வேள்வி :—ஆகுதியால் மழை பொழியும்.

## 167. வழிபாட்டினால் வரும் பயன் [401,404-405]

சிவபெருமானை வழிபட்டு வணங்குவதால்:—அச்சம் அல்லல், அவலம், இடர், இடுக்கண், இடும்பை, இருள், ஊனம், ஏதம், கவலை, குற்றம், குறைவு, கூற்றம், கேடு, கோள், நாள், சங்கை, சிதைவு, தடுமாற்றம், தளர்ச்சி, தீயன, துக்கம், துஞ்சுதல், துயர், துன்பம், நடலை, நமன் பால் நடலை, நைவு, நோய், பகை, பழி, பற்று, பாசம், பாவம், பிணி, பிறவி, பீடை, பொன்றுதல், மூப்பு, வசை, வருத்தம், வாதை, வினை, வேட்கை—இவை யெல்லாம் நம்மைப் பீடியாது விலகிப்போம்; மற்றும் அரசு, அழகு, அன்பு, ஆவியுள் இறைவன் வாசம், இமையோர் உலகு, இன்பம், ஈகை, உயர்வு, ஐம்புலனை வெல்லுதல், கலைமகள் துணை, குணம், கொடை, சித்தி, சிவலோகம், சிவனடி

நீழல், சீர், செம்மை, செல்வம், ஞானம், தவம், திரு, திருத்தம், தீபமனம், தீர்க்கம், துஞ்சலில்லா உலகம், துணிவு, துறவு, தெளிவு, தேசு, நல்லகதி, நல்லுணர்வு, நல்வாழ்வு, நல்வினை, நலம், நன்மை, நிலை, நிறை, நெறி, நேசம், பகைமையை வெல்லுதல், பத்தி, பயன், பரலோகம், புகழ், பெருமை, பொன்னுலகு, மதி, மலர்மகள் துணை, மன்மதன் என ஒளி, முத்தி, மேலுலகம், வானரசு, வானுலகம், விண்ணவராற்றல், வீடு, வையம் ஆதிய சகல பாக்கியங்களும் கைகூடும்.

## 168. வழிபடாக்கால் வருவன [402]

இறைவனை வழிபடாக்கால்:—கூற்றம் கொல்ல எழும், தீநெறி சாரும், வினை பொங்கி வரும், பிணி யாக்கை மருவும், பாவம் விலகாது, வான் கிட்டாது, ஊனம் ஒழியாது, ஞானம் கைகூடாது, துயர் தீராது, பரகதி காண இயலாது. வழி படாதவரை 'ஏழையப் பேய்கள்' என்னலாம்.

## 169. வாத்தியங்கள் [414-427]

1. இடக்கை, உடுக்கை, கத்திரிகை, கல்லவடம், குடமுழா, குழல், கொக்கரை, கொட்டு, கொடுகொட்டி, சங்கு, சல்லரி, தக்கை, தகுணிச்சம், தண்டு, தண்ணுமை, தமருகம், தாளம், துடி, துத்திரி, துந்துபி, படகம், பறை, பேரி, மணி, முரசு, முரவம், முழவம், மொந்தை (மோந்தை), யாழ், வீணை - எனப்படும் ஒலிக் கருவிகள் கூறப்பட்டுள்ளன. இவை தம்முள் :—

(i) கல்லவடம்:—சிவபிரானுக்கு உகந்தது.

(ii) குழல்:—இது தொளைக் கருவி. ஆயன் தனது கைக் குழலை ஊத மேதிகள் (எருமைகள்) ஒன்று சேரும்.

(iii) கொக்கரை :—அழகிய ஒரு கருவி.

(iv) கோட்டு:—இது நடத்தின் பொழுது உபயோகப் படுத்தப்படும்.

(v) தக்கை:—இஃது ஒரு கொட்டுங் கருவி.

(vi) தமருகம் :—இது முறைமுறை ஒலிக்கும் கருவி.

(vii) தாளம் :—இறைவனது நடனத்தின்பொழுது அம்மையார் தாம் பாடித் தாளம் இடுவார்.

(viii) பறை :—வார் ஏற்றது; கொட்டப் படுவது; பேயின் கண் பறை போலும் எனப்பட்டுளது.

(ix) பேரி :—இதன் முழக்கம் மேக முழக்கம் போல இருக்கும்.

(x) முரசோலி :—கடலின் ஒலி மணமுரசின் ஒலி போலும்.

(xi) முரவம் :—இது கரத்தால் வாசிக்கப்படும். அருவியின் ஒலி முரவத்தின் ஒலிக்கு ஒப்பிடப்பட்டுளது.

(xii) முழவு :—வட்டவடிவினது; எட்டுக் கட்டுக்களை உடையது; கரங்கொண்டு கொட்டப்படுவது, தட்டப் படுவது; அருவித் திரளின் ஒலி மழலை முழவுக்கு ஒப்பிடப்பட்டுளது; முழவு-மண்ணூர் முழவு, மண் முழவு எனப்பட்டுளது; மன்றத்திலும், மாட வீதிகளிலும் இது வாசிக்கப்படும்: இதன் ஒலி இடிக்கு நிகராகும்; வானையும் எட்டும்; மேக கர்ச்சனை போலிருக்கும்; கடலோசையும் அயர்ப்புக் கொள்ளும்படி முழவோசை மேம்பட்டிருக்கும். சிவபிரானது நடனத்தில் நந்தி முழவங் கொட்டுவர். முழவின் அதிரொலி கேட்டு மந்திகள் மழைவருமென அஞ்சிப் பயந்து மரமேறி முகிலைப் பார்க்கும். வாணாசுரன் கொட்டுவதும் முழவமே. திருவிழாக்களில் முழவின் ஓசை இடியென முழங்கும்; ஊர்களின் விழவின் ஒலியும் முழவின் ஒலியுங் கலந்து ஓயாது விளங்கும்.

(xiii) மொந்தை :—(மோந்தை) இது ஒரு கொட்டு வாத்தியம்.

(xiv) யாழ் :—இது இனிய குரல் இசையைக் கொண்டது. ஏழிசையும் பொலிவது. சம்பந்தப் பெருமானது தமிழ் பத்தையும் யாழின் இசை வல்லவர் சொல்லக் கேட்டவ ரெல்லாம் தத்தம் வினைபோய் வான் அடைவார். யாழின் இனிமை தேவியின் மொழியின்

இனிமைக்கு உவமை கூறப்பட்டுளது. வண்டு யாழ் வாசிப்பது போலவும் குழல் வாசிப்பது போலவும் ஒலிக்கும்; பாலையாழ்-முல்லை யாழ் கூறப்பட்டுள.

(xv) வீணை :—கீதம் இசைக்கும். பண் பொலியும். தேச ஒலி பொலிவிக்கும்.

2. அரசர் வருகை :—அரசர்கள் கூடலைப்போன்ற தலை நகரிற் புகும் பொழுது மணியொலி, சங்கொலி, முரசொலி முழங்கும்.

3. மாதர்களின் ஆடல் பாடல் :—மாதர்கள் நடனம் செய்யும்பொழுது தண்டு (வீணைவகை), உடுக்கை, தாளம், தக்கை, நடனத்துக்கு ஒத்துவர வாசிக்கப்படும். கொட்டு வாத்தியத்தில் வல்லவர்கள் முரவம், முழவம் கொட்டுவார்கள். மாதர்கள் பாடும்பொழுது தாளமும் வீணையும் முழவும் மொந்தையும் ஒலி செயும். மாதர்கள் யாழ் வாசித்துப் பயிலுவார்கள்.

4. பூசை வழிபாடு :—காலையிலும் மாலையிலும் குழல், சங்கு, துந்துபி, முழவு, யாழ் ஒலிக்கும். தென்மொழி, வடமொழி, திசை மொழிப் பாடல்கள் நரப்புக் கருவிகளுடன் ஓதப்படும்.

5. திருவிழாக்களில் :—குழல், கொக்கரை, பறை, முழவு, மொந்தை-வாசிக்கப்படும்.

6. வாத்தியமும் சிவனும் :—சிவபிரான் ஆடும்பொழுது இடக்கை, கத்திரிகை, குழல், கொட்டு, சங்கு, சல்லரி, தக்கை, தாளம், துடி, துத்திரி, படகம், பறை, முழவு, மொந்தை, யாழ், வீணை முதலான பல இயங்கள் ஒலிக்கும். நந்தி முழவங் கொட்டுவர். சிவபிரான் பாடும்பொழுது குழல், கொக்கரை, தாளம், பறை, முழவு, மொந்தை, வீணை உடன் ஒலிக்கும். சிவபிரானது கையில் பறை, பேரி, வீணை உள. அவர் சந்நிதியில் இடக்கை, குழல், கொக்கரை, கொடு கொட்டி, சங்கு, தண்டு, தண்ணுமை, தாளம், பறை, முழவு, மொந்தை, யாழ் வாசிக்கப்படும். அவருக்கு உகந்தது கல்லவடம். அவர் சந்நிதியில் வாணன் முழவு வாசிப்பான். அவர்

பயில்வது மொந்தை, வீணை. அவரைச் சூழ்ந்துள்ள பூத கணமும், பேய்க்கணமும்—குழல், தக்கை, முழவம், மொந்தை, யாழ் இவைகளை ஒலிக்கும்; மொந்தை கொட்டும், சிறுகுழல், பறை, யாழ் இவைகளைப் பயிலும்; குடமுழா, கொடு கொட்டி வாசிக்கும்.

## 170. வியாபாரம் [54(1), (3)].

I. கப்பல் வியாபாரம்:—அக்காலத்தில் மலை போன்ற மிகப் பெரிய கப்பல்கள் உலவின. மரக்கலங்கள் துறை முகத்துக்கு வருகின்ற சேதி சங்க ஒலியால் தெரிவிக்கப் பட்டது. மரக்கலங்களில் பாய்கள் கட்டப்பட்டிருந்தன. சீகாழி, திருக்கழிப்பாலை, திருச்சாய்க்காடு, திருவேட்டக் குடி, நாகப்பட்டினம், மயேந்திரப்பள்ளி, வேதாரணியம் இவைகள் துறைமுகப் பட்டினங்களாய் விளங்கின. அணிகள், சங்கங்கள், பவளம், முத்து, மணி ஆதிய சரக்குகள் ஷை ஊர்களிற் கடற்கரைத் துறைமுகத்திற் பொலிந்தன.

II. நெல் ஆலைகள் திருப்பூவணத்தில் நிரம்பி யிருந்தன.

## 171. விழாக்களும், விழாச்சிறப்புக்களும் [434-437]

திருவிழாக்களில் நெடு வெண்கொடிகள் நெருங்கிப் பொலியும்; மேகத்தை அளாவும்; முழவு, குழல், மொந்தை, கொக்கரை, சங்கம், படகம், பறை முதலிய வாத்தியங்கள் கடலொலி அயரப் பேரொலி எழுப்பும். தேர்கள் வரும் மாடவீதிகள் பல தலங்களில் விளங்கின. மண்ணோர்களும் விண்ணோர்களும் வந்து இறைஞ்சுவர். தத்தம் வினையகல மனவிருப்புடன் திருவிழாக்களைக் காண அடியார்கள் கூடுவார்கள். அருக்கன் முதலாய தேவர்கள் தேர்த்திருவிழா முதலிய சிறந்த விழாக்களில் குழுமிவந்து வணங்குவர். விழாக்காலங்களில் வேல் வல்லார்கள் தத்தம் திறத்தைக் காட்டிப் போர் பொருது விளையாடுவார்கள். சிவனடியார்களுக்கு அன்னம் இடப்படும். மாதர் கூட்டம் வீதிகள் தோறும் அங்கங்கு நெருங்கும். அரங்க

மேடைகளில் மாதர்களும் மைந்தர்களும் ஏறி இறைவன் புகழைப் பாடித் துதிப்பார்கள். மாதர்கள் ஆடல் புரிவார்கள். ம்றையோர் கூட்டம் நிறைந்து பொலியும். தெருவெலாம் விழாவின் ஒலிபெருகி நிற்கும். கார்த்திகை நாளில் பெண்கள் விளக்கிட்டு அலங்காரம் செய்வார்கள். விழாக்களில் திருநீறு பொலியும். அடியார் இறைவன் புகழைப் பண்ணுடன் பாடிப் பின்செல்வர். வேதவொலி முழங்கும். மாதர்களின் பாடலொலி நிரம்பும். தேர் முதலிய விழாக்கள் மிக்க சிறப்புடன் நடைபெறும். திருவிழாக்கள் பொழில்களிலும் நடைபெறும். அதனுல் பொழில்களில் இடிபோல முழவோசை மல்கும். கூட்டம் அதிகமாயிருக்கும். விசேட நாள்கள் தோறும் திருவிழா நடத்தப்படும். அட்டமி நாள், ஆதிரை நாள், ஏழ் விழவு, ஐப்பசி ஓணவிழா, கார்த்திகை விளக்கீடு, திங்கள் நாள் விழா, நாள் விழா, தைப்பூசம், பங்குனி உத்திரம், பருவநாள் விழவு, பெருஞ் சாந்தி, பொற்ருப்பு, மாசிக் கடலாட்டு முதலிய உற்சவங்கள் சுவாமிகள் காலத்திற் பிரபலமாயிருந்தன. மயிலாப்பூரில் இத்திருவிழாக்கள் நடந்தன. திருவீழிமிழலை போன்ற பெரிய தலங்களிற் சதா திருவிழா நடைபெறும். அம்பர் முதலிய 37 தலப் பதிகங்களில் திருவிழா நடைபெறுவதைச் சுவாமிகள் குறிப்பித்துள்ளார். விவரம் தேவார ஒளிநெறியிற் காண்க. சில விழாக்களின் விவரம் :—

(i) ஏழ்விழா :—ஏழுநாள் நடைபெறும் போலும். பொழிலில் நடைபெறும்; அருக்கன் (சூரியன்) முதலான தேவர்களும் கும்புகூடித் தொழுவர். இவ்விழா சீகாழியில் நடைபெற்றது.

(ii) திங்கள் நாள் விழா :—(திருநெல்வேலியில்) நடந்தது. அப்பொழுது மறையவர் கூட்டமும் அரிவையர் ஆடலும் மல்கின.

(iii) தேர்விழா :—அன்று தெருக்களை அலங்கரிப்பர்; நறுமணம் வீசச் செய்வர்; நீண்ட மாடவீதியில் தேர் வரும்; அப்பொழுது சங்கம், படகம் ஒலிக்கும்.

(iv) தைப்பூச விழா :—நேரிழையார் நெய்யுணு நிவேதிப்பர்.

(v) பங்குனி உத்திரத்தில்:—பலிவிழாப் பாடல் ஒலிக்கும்.

(vi) பௌர்ணமித் திருநாளில் :—பாடல் ஆடல் மல்கும்.

## 172. விளையாட்டுகள் [439]

"மாதர்கள்" என்பதன் கீழ் [தலைப்பு-(148(10)] பார்க்க.

பெண்கள் அம்மானை, பந்து, கழல் விளையாடுவர். அவர்கள் அவை விளையாடும் ஓசைகொண்ட ஊர் சீகாழி.

## 173. வினக்கள் [440]

சிவபிரானது தன்மை, பெருமை, செயல்களைக் குறித்துச் சில வினக்களைச் சிவபிரானிடத்தும் அடியார்களிடத்தும் ஸ்ரீ சம்பந்தப் பெருமான் வினவுகின்றனர். அவை தாம் :—

(i) சிவபிரானை நேர்முகமாகக் கேட்கும் வினக்கள் :
சிவனே !

1. நீ அட்டமூர்த்தியாய் இருப்பதின் காரணம் யாது ?

2. உன் கழலை வணங்கும் அடியார்கள் உண்டியால் வருந்த நீ அவர்கள் மீது இரங்காதது என்ன காரணம்?

3. ஐம்புலன்களையும் வென்ற நீ அர்த்தநாரீசுரராய் (மங்கைபங்கராய்) குழையுந் தோடும் விளங்க இருப்பதன் காரணம் என்ன ? மங்கையைப் பாகம் வைத்துத் தவக் கோலம் நீ முயல்வதின் காரணம் யாது ?

4. சடை தாழத், தேவிபாட, நீறு பூசி, மாலும் அயனும் மாண்ட சுடலையில் நீ ஆடல் கொண்டதின் காரணம் யாது? அங்ஙனம், கானிடை ஆடுதலின் கருத்து யாது ? தேவி காண அனலாடுதல் என்ன காரணம் ? எரியேந்தி ஆடுதல் எதன் பொருட்டு ?

5, பன்றியாயும் பறவையாயும் உருவங் கொண்ட இருவரும் (மாலும் அயனும்) வான் அளந்தும் பூமியை இடந்தும் உன்னைக் காணாது ஓலமிட, அவர்கள் மிகவும் அஞ்சும்படி நீ ஆரழலாய் நின்ற பெருங்கோலப் பெருமையின் விளக்கமென்ன? பின்னர், அவர்கள் போற்ற அவர்களுக்கு அருளிய பான்மையின் விளக்கம் என்ன?

6. கங்கை நங்கையை ஏன் சடையிற் சூடியுள்ளாய்? மங்கை ஒருத்தி பாகத்திலே இருக்க அவள் வாடி ஊடும்படி கங்கையைச் சடையில் அடைவித்த காரணம் யாது?

7. கண்கள் மூன்று கொண்ட காரணம் என்ன?

8. காட்டில் வாசம் ஏன் விருப்புடன் கொண்டாய்?

9. காதில் அணியாகக் குழையும் தோடும் ஒக்க விளங்குவ தெங்ஙனம்?

10. மால், அயன், இந்திரன் அஞ்சும்படியாகக் காமன் வெண்பொடியாக ஏனோ கடைக்கண் சிவந்தாய்?

11. கல்வி, வேள்வி, ஞானமாக நீ ஆயதின் காரணம் யாது?

12. கையில் மானும், கரியபாம்பும், வெண்மழுவும் வீணையும் ஏன் வைத்திருக்கின்றாய்?

13. பொன்னிறக் கொன்றையை ஏனோ சூடுகின்றாய்?

14. சடை மீது ஆறு, மதி, பாம்பு இவைகளை ஏன் அணிந்துள்ளாய்? சடையிற் பிறையையும் பாம்பையும் உடன்வைத்த காரணம் யாதோ?

15. தாதையைக் கோபித்து அவன் தாளைத் தடிந்த சண்டேசுரருக்கு உனது மாலையைச் சூட்டித் தலைமை வகுத்தாயே, அதன் காரணம் என்ன?

16. எல்லாம் உனது தலமாக இருக்க, உருத்திரனே! நீ துருத்தியில் அடங்கி வாழ்வதென்ன காரணம்? (துருத்தி-ஒரு தலம், தீ ஊது கருவி) கூடல் ஆலவாயில்

நீ அமர்ந்துள்ள காரணம் யாது? திருவீழிமிழலை விண்ணிழி கோயிலை நீ விரும்பியுள்ள காரணம் யாது? கணபதீச்சரத்தை நீ கர்முறுகின்றதென்ன காரணம்?

17. செஞ்சடைமிசைத் திங்களை ஏற்றமாக வைத்துகந்த காரணம் யாது?

18. உமையம்மை உடலிலே ஒரு பங்கிலிருந்தும் கடலில் வருகரிய நஞ்சை நீ உண்ட கருத்து யாது? வஞ்ச நஞ்சை யுண்டு வானவர்க்கு இன்னருள் வைத்த காரணம் யாதோ?

19. வேதத்தின் நுண்பொருளை நால்வருங் கேட்க ஆலநீழலில் உரைத்த காரணம் யாதோ?

20. அந்தியின் ஒளி நிறமான வண்ணங் கொண்டதென்?

21. அல்லல் வாழ்க்கையாய் ஏறதேறி, வெண்டலையில் மனைகள் தோறும் பலிகொள்ள விரும்புவதின் காரணம் என்ன? விண்ணவர் தொழ வெண்டலையிற் பலி தேர்ந்து ஒலிபாடல் பயில்வது என்ன காரணம்?

22. தேவர்களுக்காக அன்று பிரமனது பொய்த் தலையை அரிந்து அதில் ஊண் உண்ண உகந்த விருப்பத்துக்குக் காரணம் யாதோ?

23. புரத்து அரக்கர்களைத் தீயில் அழுந்தச் செய்து வானவரை நீ தாங்கியது என்ன காரணம்பற்றி? ஏன் அவ்வரக்கர்கள் வாழ்ந்த ஊரை எரித்தாய்? மலையை வில்லாகவும், பாம்பை நாணாகவும், அரியை (திருமாலை) எரியைக் ,காற்றை அம்பாகவும் ஆக்கி மும்மதிலையும் எங்ஙனம் வென்றாய்?

24. புறச்சமயிகளாம் சமணரும் சாக்கியரும் ஏன் அலர் தூற்றுகின்றனர்? ஏன் இவர்கள் உன்னை அடைகின்றிலர்? ஏன் இவர்களை ஆக்குவித்தாய்? ஏன் இவர்கள் குறியை விட்டுக் குறியின்மையைக் (கைக்கொண்டு) கூறுகின்றனர்? புத்தரையும் சமணரையும் பொய்யுரை

கூறும் பித்தராக வைத்துப் பார்த்து மகிழ்கின்ற காரணம் யாது? ஏன் அவர்கள் நேசமின்றி யிருக்கின்றார்கள்?

25. ஏன் உனது பக்கத்தில் பல பூதங்களும் பேய்களும் நெருங்கி நிற்கின்றன?

26. நாற்றிசைக்கும் மூர்த்தியாய் நீ நிற்பது என்ன நன்மை கருதி?

27. தேவி துணுக்கிடும்படி வந்து குறுகிய யானையை நீ எங்ஙனம் கையினாற் கிழித்தாய்? மங்கை வெருவுற யானையின் தோலை ஏன் உரித்துப் போர்த்தாய்? அங்ஙனம் யானையின் கரத்தைப் பற்றித் தோலை உரித்த காரணம் யாது?

28. இராவணன் வலியை முன்பு அடக்கிப் பின்பு அவன் பாடல் கேட்டு மகிழ்ந்து அவனுக்கு அருள் செய்தாயே, இதன் காரணம் யாதோ?

29. ஏன் எருதை வாகனமாகக் கொண்டு பலிக்கு உழல்கின்றாய்? ஏறு ஏறுதல் உனது பெருமைக்கு அடுக்குமா?

30. யாவருந் தொழுதேத்த இருந்த நீ ஏனோ காட்டகத்து வேடனாகி விசயனிடம் சென்றாய், விசயனோடு அம்பு எய்தாய்?

31. நீ தேவியைக் கூடினாய், எருது ஏறினாய், நுதலில் பட்டம் புனைந்தாய், பூதங்கள் பாட நட்டம் ஆடினாய், சிற்றம்பலம் இட்டமாக உறைவாய் இவை யாவும் எக் காரணம் பற்றி?

(ii) அடியாரை வினவுவன—[பதிகம் 172, 296]

ஈசன் கழலே தொழும் தொண்டர்களே! பின்வரும் வினாக்களுக்கு விடை கூறுங்கள்.

1. ஈசன் வானவர் பொருட்டுப் (பேய்க் கூட்டத்துடன் வாத்தியங்கள் முழங்கச் சென்று) ஏன் கடல் நஞ்சை அமுதாகக் கொண்டார்?

2. அவர் காட்டிடை யாடும் கருத்து யாது?

3. மங்கையொருத்தி உடனிருந்தும் கங்கை வெள்ளத்தை வைத்துள்ளதின் பொருள் யாது?

4. ஊணுக்காக (பிரமனது) உச்சித் தலையிற் பலி கொண்டு ஏன் உழல்கின்ருர்? தம்மிடம் தனம் இலாத காரணத்தினுலா-தம்மை நம்பினேர் அண்டங்களை ஆளத் தாம்போய் வன வாழ்க்கையைக் கொண்டு, ஆடியும் பாடியும் உலகெங்கும் பலி தேர்கின்ருர்? தேவர்களுக்காகப் பிரமனது பொய்த் தலையைக் களைந்து அப் பிரம கபாலத்தில் ஊண் உண்ண விரும்பும் விருப்புக்குக் காரணம் யாதோ?

5. ஈசன் புற்றரவும் எலும்பும் பூண்டதின் பொருள் யாதோ?

6. ஈசன் காட்டகத்து வேட்டுவனான கருத்து யாது?

7. இறைவர் (இராவண) அரக்கனுடைய வலியை மலையின் கீழ் வாட்டிப்பின் அவனுக்கு அருள்செய்த காரணம் யாது?

8. தம்மைத் தேடிய இருவர் (அயன், அரி) முன்பாக அவர்கள் தம்மை எட்டாத வகையில் எரி யுருவாய் அவர்கள் ஏத்த நின்ற வண்ணம் யாது?

9. இறைவர் சமண் சாக்கியரை ஏன் ஆக்கினுர்? அவர்கள் ஓதும் சொற்களை ஏன் ஈசன் கொள்ளுவதில்லை?

10. சடைமிசை ஏன் பிள்ளைப்பிறையைச் சூடியுள்ளார்?

11. பொடியணி மார்பில் புரிநூல் பூணும் அழகு என்னே?

12. மலை மங்கை அஞ்ச யானையை உரித்து அதன் தோலைப் போர்த்து மகிழ்ந்த தென்ன காரணம்?

13. ஆல நீழலில் இருந்து நால்வர்க்கு அறம் உணர்த்தியது என்ன காரணம்?

14. மும்மதிலை வாட்டியது என்ன காரணம்?

15. கோ(பசு)வினின்று கிடைக்கும் 'ஆனஞ்சு' ஆடுங் கொள்கை யென்ன ?

16, அமரர்கள் ஏத்த அந்தகாசுரனைச் சூலத்தில் ஆய்ந்தெடுத்த காரணம் யாது ?

## 174. வினாவிடை விளக்கங்கள் [441]

சுவாமிகள் சில பொருள்களின் உண்மையைத் தெளிவாக விளக்குகின்றனர், அவைதமை 'வினாவிடை விளக்கங்கள்' என்னுந் தலைப்பின் கீழ்த் தேவார ஒளி நெறியிற் காணலாகும். அவ் வினாவிடை விளக்கங்களுள் முக்கியமானவை சில கீழ்க் காட்டுவாம்.

இன்பம் எது ? :—சிற்றம்பலம் மேய இறைவன் கழல் ஏத்தும் இன்பந்தான் இன்பம்.

செல்வம் எது ? :—சிற்றம்பலம் மேய செல்வன் கழல் ஏத்தும் செல்வந்தான் சேல்வம்.

சோல் எது ? :—இறைவனே ! உனை நாடோறும் போற்றும் சொல்லே சோல் (ஆகும்).

தவம் எது ? :—சம்பந்தப் பெருமானது தமிழில் வல்லவருடைய அடியைப் பேணுதலே தவமாம்.

தோண்டு எது ?:—இறைவனுக்காக மலர் சுமந்து மலர் தூவுதலே தோண்டு.

போருள் எது ? :—இறைவன் கழலைப் போற்றுதலே போருள்.

வாழ்த்து எது? :—இறைவனை வாழ்த்துதலே வாழ்த்து.

அடியார் யார் ? :—வீழிமிழலையைப் பரவும் அடியாரே அடியார்.

ஆதர்கள் யார் ? :—அடியார் தம் பண்பை இகழ்பவர் ஆதர்.

உயர்ந்தோர் யார் ? :—இறைவனை அலர் கொண்டு உரைவிரிப்போரே (போற்றுவோரே) உயர்ந்தோர்,

கண்ணுடையார்கள் யார் ? :—திருநாகேச்சுரம் கண்ணினாற் காண வல்லரே கண்ணுடையார்.

தக்கார் யார்? :—பிரமபுரம் என்னுந் தலத்தைச் (சீகாழியை) மனத்தில் எப்போதுந் தரித்தவரும், பிரமபுரத் தீசன் தாள் பணிவோருமே தக்கார்.

தத்துவ ஞானத் தலைவர் யார்? :—யார் 'அரவார் அரையா! அவுணர் புரமூன்றெரி செய்த சரவா!' என் கிறார்களோ அவர்கள் தத்துவ ஞானத் தலைவர்கள்.

தலையானர் யார்? :—காழியைத் தலையினால் வணங்கின வர்களும், சிற்றம்பலத்தைத் தலையினால் வணங்கினவர் களும் தலையானர்கள்.

தவமுடையோர் யார்? :—கானப்பேர் - என்னுந் தலத் தைத் தலையினால் வணங்கினார்கள் தவமுடையார்கள்.

தோற்றினர் யார்? :—கூற்றுதைத்த பெருமானைப் போற்றினவர் தோற்றினராவர்.

நல்லர் யார்? :—நாதன் நாமம் 'நமச்சிவாய' என்பதை ஓதுபவரும், சம்பந்தப் பெருமானது பாடல்களை எழுதுந் தொழிலை மேற்கொண்டவரும் நல்லவர்.

புண்ணியர் யார்? :—வலஞ்சுழி நாதனை ஏத்தி யிருப்பவர் புண்ணியர்.

பெரியார் யார்? :—இறைவனை அடங்கா ஆசையில் ஏத்துவார், பேசுவார், விரும்புவார்-பெரியார்

பெருந் தவத்தோர் யார்? :—விற்குடி வீரட்டம் பிரி விலாதிருப்போர் பெருந் தவத்தோர்.

பேயரிற் பேயர் யார்? :—ஆமாத்தூர் அம்மான் எம் பெருமான் என்று ஏத்தாதார் பேயரிற் பேயர்.

மெய்த் தவத்தவர் யார்? :—திருவீழிமிழலையான் திரு வடியைச் சித்தம் வைத்தவரே மெய்த் தவத்தவர்.

விழுமியோர் யார்? —தவறாது ஏகம்பத்தைத் தொழு வோர் விழுமியோர்.

## 175. வினை [442]

வினையானது ஆக்கையைப்பற்றி வாழுவது, சூழு வது, நிற்பது; வினை அரிப்பது, எரிபோன்றது, கடியது,

கூட்டத்தது, கொடியது, சீற்றத்தது, திண்ணியது, தீயது, தீராதது, நலிவது, பந்திப்பது, பழகினது, பழையது, பற்றுவது, பொருவது, மலிவது, முந்துவது, முன்னையது, வருவது, வலியது, வெய்யது. இறைவனே என்று அவரையே நாடி நிற்பின் வினை ஓடிப்போம். வினை தீர்வதற்கு இறைவனை வழிபடுதலே வழி.

## 176. விசயன் [9,443-444]

தலைப்பு-6 'அரசர்கள்', 75-'சிவனும் விசயனும்' பார்க்க

## 177. வேதம் [445-457]

[தலைப்பு-146 'மறையும் வேதமும்' பார்க்க.]

## 178. வேள்வி-ஆகுதி-எரியோம்புதல் [458]

அந்தணர் எரி மூன்றும் ஓம்பும் சீலம் உடையார்; கேடிலா வேள்வி செய்பவர்; மந்திர வேள்வியும் மறையொலியும் நீங்காதவர்; குறைவிலார்; அவர்கள் தங்கள் கையால் அகிற் கட்டையை எரியிலிட்டு ஆகுதி செய்வார்கள். ஆகுதியின் புகை வானிற் செல்ல மழை பொழியும். வேதத்தைப் போற்றிப் புகழ்பெற்ற வேதியர்களுடைய வேள்விச் சாலையின் மணங் கமழ் தூபப் புகை சோலை மிசைப் படரும், வானில் எழுந்து அற்புதமாக மேகம் போற் பரவும், மேகங்களில் தோயும், விண்ணை மறைக்கும், வானுலகை மூடி யிருளாக்கும். வேதமும் வேள்வியும் ஆயினர் இறைவர்; வேதமும் வேள்வியும் இறைவருக்குக் குடைபோலும். வேள்வி சோலைகளிற் செய்யப்படும். மறையில் விதித்த விதிக்கு மாறுதலின்றி வேதியர் செய்யும் வேள்விச் சாலையில் மந்திரங்களும் வேதமும் ஓவாது ஓதப்படும். சிறந்த வேத வேள்வியில் எங்கணும் விண்ணவர்கள் நறுமணம் வீசும் மலர்களைத் தூவுவார்கள். மறைவழியே அறிவின் வழியே புல்லைப் பரப்பி நெய், சமிதை இவைகளைக் கையிற் கொண்டு, எரியில் வேள்வி செய்து உலகத்தை மிகவும் காக்கும்.

மறையோர்களும், வேள்வியின் பயனாக ஊரில் யாதொரு தீமையும் வாராது இன்பமே நிலைக்கும் படியாகச் செய்யும் மாதவர்களும் வாழும் ஊர் திருவீழிமிழலை. முனிவர்களும் மறையோர் கூட்டமும் ஓமம் வளர்த்த புகை மேலேசென்று மதியை மூடி, வானை மறைத்துப் பரவி நிறையும் ஊர் கோச்சைவயம் (காழி). கற்றவழியே எரியோம்பிக் கலியின் தீமை வாராது காக்கும் பெரியோர், வேள்விச்சாலை யமைத்து எரியோம்பும் சிரியோர் வாழும் ஊர் தில்லை. முனிவர்களின் ஓமம் பொலியும் ஊர் கோகரணம். வேத ஒலியும் வேள்வியும் நீங்காத ஊர் திருவேட்களம். வேள்விப் புகையால் வானம் இருட்கொள்ளும் ஊர் திருவெண்காடு. வேதியர் வேள்வியின் மறையொலி ஓவாத பதி பாம்புரம். அமணர் வேத வேள்வி செய்யாதவர். தக்கன் செய்த வேள்வி ஐவேள்வி, பெரு வேள்வி எனப்பட்டுளது.

## 179. வைதற்சொற்கள் [459]

கலதி, கள்வன், தீயான், நீசர், மாபாவிகள், பிச்சன், மூடர் என்னுஞ் சொற்கள் உபயோகப்பட்டுள.

## 180. சீவராசிகள் [465], [460-465]

வையகத்துள்ள உயிர்கள் எண்பத்து நான்கு லட்சம் (84,00,000) யோனி பேதங்களை உடையன.

### I ஊர்வன [460]

(I) சிலந்தி:—இறைவன் ஒரு சிலந்தியைச் சோழ ராஜனாகும்படி அருளினார்.

(II) தேள்:—தேவூர் என்னும் தலத்தில் தெருவில் தேள், அரவு அதிகம் எனச் சொல்லப்பட்டுளது.

(III) பாம்பு:—இரவிற் சஞ்சரிக்கும். மலைகளில் நிறைந்திருக்கும். மலைச்சாரலில் இயங்கும், ஆடும், ஊரும், இரைதேடும், புற்றில் ஒடுங்கும், தேரையை உண்ணும், இடிக்கு அஞ்சிப் புற்றில் ஒளியும், தழல் உமிழும், விஷத்தைக் கக்கும்; அழல் வாயை உடையது. படத்தை உடை

யது, படத்திற் புள்ளிகளை உடையது, ஐவாயை உடையது, கோடுகளைக் கொண்டது, மணியைக் கொண்டது, வளைந்த பற்களைக்கொண்டது, விஷத்தை உடையது, வெங்கண் கொண்டது, கோபங்கொண்டது, கொல்லுங் குணத்தது, நீண்டுள்ளது, வேகமாய்ச் செல்லுவது. நாகம் உமிழ்ந்த மணி சுடும். குழல், யாழ்முரலும் இன்னிசையால் புற்றில் பாம்புகள் ஒன்றுகூடும்.

கரும்பாம்பு உண்டு; மிளிரும் பொன்னிறப் பாம்பு உண்டு; ஐந்து படங்களுடன் கூடிய பாம்புகள் உண்டு; புள்ளிகள் உள்ள பாம்புகள் உண்டு; பெரிய யானையை விழுங்கக்கூடிய பாம்புகளும் உண்டு. பாம்பு உமிழும் மணி கரிய இருளை விலக்கிப் பேரொளியை வீசும்.

பாம்பின் விரிபடம்:—காந்தள் மலருக்கு உவமை.

படங்கொண்ட நாகம்:—கோடல் மலருக்கும் மாதர் அல்குலுக்கும், தேவி (பார்வதியின்) அல்குலுக்கும் உவமை.

பாம்பின் முள்எயிறு:—குரவம் அரும்புக்கு உவமை.

உலகைச் சுமக்கும் ஒரு பாம்பு. திரிபுரம் எரித்த போது நாணாக அமைந்தது ஒரு பாம்பு. திருமால் பள்ளி கொள்வது ஒரு பாம்பின்மேல்; அந்தப் பாம்பு ஐவாயது. அழல்வாயது, படங்கொண்டது, பொறி வாய்ந்தது, பைங் கண்ணது, மணி கொண்டது, வெந்தொழிலது. திருப் பாற்கடல் கடையக் கயிறுயது ஒரு பாம்பு; அந்தப் பாம்பு விஷாக்னி வீசுவது, சினம் மிக்கது, பரிய உருவது, பொறி வாய்ந்தது, ஒளிகொண்டது. சிவபிரான் அணிந்துள்ள பாம்புகளைப்பற்றி வேறிடத்திற் கூறப்பட்டுளது. [தலைப்பு 36-4, 37-3 பார்க்க.]

II நீர் வாழ்வன—சேற்றில் வாழ்வன [461]

1. ஆமை:—கருநிறத்தது, சேற்று நீரில் இருக்கும். இதன் அகடு (வயிறு) நிலாப்போல வெண்ணிறத்தது. சிவபிரான் அணிந்துள்ள ஓட்டுக்குரிய ஆமை (கூர்மாவதார ஆமை)—அழகாமை, "இள ஆமை, முற்றலாமை குற

ளர்மை, எழிலாமை, வரியாமை"—எனக் கூறப்பட்டுளது; தலைப்பு 36-1 பார்க்க.

2. தவளை:—மலர் மதுவை வாய் நிறையப் பருகும்.

3. தேரை:—ஆரைக்கீரை சாய மிதிக்கும். சிறு பறவைகளை ஈப்போன்றவையை) உண்ணும். பாம்புக்குத் தேரை இரையாகும்.

4. நண்டு:—இது நாரைக்கு இரையாகும்; நாரை யைக் கண்டால் அஞ்சி ஓடிப்போம். நண்டை உண்ண வேண்டி நாரை செந்நெல்லின் நடுவே வந்திருக்கும். வாய்க் கால் பொருந்திய மடைகளில் நண்டு இருக்கும்.

5. மீன்:

(i) ஆரல் மீன்:—நாரைக்கும் தாராவுக்கும் உண வாகும். நாரை குளந்தோறும் உலாவி ஆரலைவாரி உண் ணும். (IA) இறவு-இருமீன் நீர்ப்பூக்கள் கிழியும்படி வயல் நீரிற்பாயும்.

(ii) கண்டல் மீன்:—கழிகளிற் காணலாகும்.

(iii) கயல்:—இதன் மூக்கு பொன்னிறம். மாதர்கள் நீரிற்குடைந்தாட அங்குள்ள கயல்கள் குதிகொள்ளும். வயல் நீரில் கயல்கள் உலவும். கயல், வரால், சேல், வாளை முதலிய மீன்கள் வயலிற் குதிகொள்ளும். பொய்கையிற் கயலும் வாளையும் மிளிரும். கயல் விளிப்ப (அழைக்க) இளவாளைகள் வரும். கயலும் இளவாளையும் செருச் செயும். கயலும் சேலும் செருச்செய்யும். கயல் பாயப் புள் இரியும். எருமைகள் படிதரக் கயல் இரிதரும். கயல் பாய்வதால் தடத்தருகில் உள்ள முயல் ஓடும். கயல் பாயக் கழுநீரும், குவளையும், தாமரை மொட்டும் மலரும். குதித்து நீர்மேல் விழுந்த கயலை விழிக்கு உவமையாகச் சொல்லி யுள்ளார். தேவியின் கண்ணுக்கும் மாதர்களின் கண்ணுக் கும் கயல்மீன் உவமை கூறப்பட்டுளது. கயற்கொடி (பாண்டியனது கொடி) கூறப்பட்டுளது.

(iv) கெண்டை:—குருகு இதைக் கவர்ந்து உண் ணும். கெண்டையை இரையாகக் கொண்டு நாரை விளை யாடும். தாழையின் நிழலைக் குருகெனக் கருதி அஞ்சித் தடத்தில் உள்ள கெண்டை தாமரைப் பூவில் மறையும்.

கெண்டை மடுவிலும் வயலிலும் பாயும். கெண்டை பாய்வதால் சுனையில் நீலமலர் (நீலோற்பலம்) மொட்டு அலரும். மாதர்களின் கண்ணுக்குக் கெண்டை உவமையாகக் கூறப்பட்டுளது.

(v) கெளிறு:—கெளிறுடனிருந்து மணல் கெண்டி நாரை விளையாடும்.

(vi) சுறு:—சுறு கடலிலும், கழியிலும் இருக்கும். கடல் அலைகளிற் சுறு அலைபட்டுக் கரைக்கு வரும். குருகு சுறவ மேய்ந்துண்ணும்.

(vii) சேல்:—சேல், கயல், வரால், வாளை இவை வயல் நீரிற் பாயும், உலவும்; சேலும் வாளையும் வயலில் உலவும், பொருதல் செய்யும். செங்கயலொடு சேல் செருச் செய்யும். சேலும் வாளையும் குதிகொள்ளும். கடலருகே சேல் மிளிரும். சேல் உகளுவதால் நீலமலர் (நீலோற்பலம்) வளரும். தேவியின் கண்ணுக்கும் மாதர்களின் கண்ணுக்கும் சேல் உவமை கூறப்பட்டுளது.

(viii) மகரம்:—கடலில் வாழும். மகரக்கொடியோன் மன்மதன்.

(ix) மீன் (பொது):—மீன்கள் வயல் நீரிற் பிறழும். கழியிலும் திரையிலும் உலாவி உகளும். கழிக்கரையிற் கிடைக்கும் மீன்களை அமணர்கள் கவர்வார்கள். வலையோடு மீன்களை வாரிப் பரதர் நாட்டில் எங்கும் கொண்டு வந்து சேர்ப்பர். மடுக்களில் மீன் பாய அங்குள்ள செழுங் கமலம் தேன்பாய மொட்டலரும். நாரையைக் கண்டால் மீன்கள் இரிந்து ஓடும். பள்ள மீன்களை இரைகொள்ளப் பறவைகள் உழலும்.

(x) வரால்:—கரு நிறத்தது; கயலுடனும் சேலுடனும் வயலிற் பாயும், உகளும், குதிகொள்ளும்; வாளையுடனும் கயலுடனும் நீரில் உலவும், கொள்ளம் பூதூரிற் 'பருவரால் உகளும்'—என்றுள்ளார்.

(xi) வாளை:-பொய்கையில் வாளையுங் கயலும் மிளிரும். வாளைகள் நீளமாயிருக்கும். மடுவில் விளையாடும். அரிந்த வயலில் தாமரை தேன் சொரிய வாளை அதைக் குடித்துக்

களித்துக் கருஞ்சகடம் இளகக் கரும்பு இரியப் பாயும். தாமரை மலர் சாய இளவாளை விண்ணளவு குதிகொள்ளும். கமுகங்கனி உதிர மடல் விரிய வாளை குதிகொள்ளும். இளமேதிகள் நீரிற் படிய கன்னி (இள) வாளை குதிகொள்ளும். இளவாளைகள் இரிய எருமைகள் நீரிற் படிதரும். வாளைகளோடு செங்கயல் குதிகொள்ளும். சேலும் வாளையும் குதிகொள்ளும். வாளை துள்ளி வயலிற் பாயும். வாளை நதி வழியே வந்து வயலிற் பாயும். நாளி...கனி (தெங்கம் பழம்) உதிர வாளை குதிகொள்ளும்; அதனால் மலர் மது நாற விரியும். வாளை பாய்வதால் நீலமலர் வாய் நெரிந்து மணம் வீசும். மாதர்கள் பொய்கை நீரிற் பாய்ந்து குடைய வாளைகள் மடையிற் பாயும். கிடங்கில் மாங்கனி விழ வாளை போய்ப் பொய்கையில் வைகும். கரும்பு தின்ற எருமைகள் வாவியிற் படிதர இளவாளைகள் வெறித்து வயலிற் பாயும். வயலில் வாளையும் சேலும் பொரும். கயலும் வாளையும் செருச்செயும். சேல், வாளை, கயல், இவை கிளையுடன் வயலில் வாழும். காவிரி வயலிற் பாய வாளை குண்டகழியிற் பாயும் ஓசை வளர்கின்ற ஊர் கொச்சைவயம் (காழி).

## III பறவைகள் [462]

1. **அன்றில்** :—நீண்ட பனைமரத்திற் கூடுகட்டி வாழும்; கழிக்கானலில் பெடையுடன் வாழும்; பெடையுடன் துணை பிரியாது வாழும். தூதுக்கு எடுத்த பறவைகளுள் ஒன்று.

2. **அன்னம்** :—இதன் கால் செந்நிறம், நிறம் பொன்னிறம், சிறை மெல்லியது. இது குளிர் பொழில்களிலும், பொய்கை, தண் கானல் முதலிய இடங்களிலும் (பெடையுடன்) வாழும். நுண் மணல்மேல் வைகும். பொய்கையில் வாளைகள் இரிய எருமை படிதர இள அன்னம் ஆலும். தாமரை யிலையாகிய குடையின்கீழ் நெற் கதிர்கள் சாமரம் வீசத் தாமரைத் தவிசில் தன் இளம் பெடையைப் புல்கி மகிழ்ந்து வீற்றிருக்கும்; திரைகள் வீசத் துயிலும் வண்டு யாழ் வாசிக்கத் தன் இளம் பெடையைப் புல்கி மகிழ்ந்

திருக்கும்; செந்தாது உதிர வெண் தாமரை மலர் மீது நடை பயிலும். கன்னிப் பெடையைப் புல்கிக் காஞ்சி மலர்ச் சின்னம் ஆலும். பெடையொடு புல்கி விளையாடும். மெல்லிய மடநடையை உடையது. அதனால் தேவியின் நடைக்கும் மாதர்கள் நடைக்கும் அன்ன நடை உவமை கூறப்பட்டுளது. சிவபிரானது முடிதேடும் பொருட்டு பிரமன் எடுத்த உருவம் அன்னப் பறவையின் உருவம். இது 'வென்றிப் பறவை' எனக் கூறப்பட்டுளது. அன்னம் பூசித்த தலம் சீகாழி, இது தூதுக்கு எடுத்த பறவை களுள் ஒன்று.

3. ஆந்தை:—மரப் பொந்திற் கூட்டமாய் இருந்து பாடும். "ஆந்தையின் விழி" சிறு பூதத்தர்களின் விழிக்கு உவமை கூறப்பட்டுளது.

4. கபோதகம் :—(புறு)-கால் பவள நிறம். உடல் கருமை வாய்ந்த செழுமையது. இதுவும் தூதுக்கு உரித் தாக எடுத்த பறவைகளுள் ஒன்று.

5. கருடன் :—சிறகுடன் கூடிய அழகிய பறவை. வெல்லும் ஆற்றலை உடையது. வெல் பறவை எனக் கூறப் பட்டுளது. திருமாலுக்கு வாகனமும் கொடியும் ஆகும்.

6. கழுகு :—கழுகுகள் கரி காலன; காட்டில் வசிப்பன; குடர்களைப் பிடுங்குவன; சம்பாதி-சடாயு கழுகுகள். சிவபிரானது முடி தேட பிரமன் எடுத்த உரு 'கழுகு' என்று இரண்டு இடங்களிற் கூறப்பட்டுளது.

7. காகம் :—கழனிகளிற் சூழ்ந்து பறக்கும்.

8. கிளி:—பசிய நிறத்தது. சிறை யுடையது. பொழில்களில் மல்கும். கோதி உண்ணும். விசும்பிற் பறக்கும். சொற் பயிலும், கொஞ்சும், பண்போன்ற மொழி களைப் பேசும். இறைவன் நாமங்களை ஓதும். உயர்ந்த பனை மீது இருக்கும். வீடுகளிற் கூட்டில் வளர்க்கப்படும். சோலை களில் கிளிகள் குயிலொடு பயிலும். குயில்பாட அதன் அயலில் உள்ள கிளி அப்பாடலைப் பயிலும். கிளியின் மொழி அழகும் இனிமையும் வாய்ந்தது. அதனால் தேவி

யின் மொழிக்கும் மாதர்கள் மொழிக்கும் கிளிமொழி உவமை கூறப்பட்டுளது. பிள்ளைக் கிளி பசியினால் துள்ளிக் கூவ அதனைப் பிரிய மனம் வராது தாய்க்கிளி புறத்தே போய்த் தினைக்கதிரைக் கொண்டு வந்து பிள்ளையின் வாயிற் புகட்டும். பொழில்களிற் கற்றுக் கொடுக்கப்படும் அறுபத்து நான்கு கலைகளையும் ஆங்குள்ள கிளிகள் பயிலும். பொழில்களில் மறை ஓதுவதைக் கேட்டு அப் பதங்களைக் கிளிகள் பயிலும். அங்ஙனம் கிளிகள் பதங்களை ஓதப் பக்கத்திருந்த விடைக்குலமும் அவைகளிற் பயிற்சி அடையும். உறவுக் கிளிகள் மறைகளை ஓதுவதிற் பிழைகள் இருந்தால் தெரிந்த கிளிகள் அப் பிழைகளைத் திருத்தும். மறையொலியுடன் வானவர்கள் இறைவனை ஏத்தக் கிளிகள் அவ்வொலிகளைப் பயிலும். பண்டிதர்கள் பயின்றோதும் ஓசை கேட்டுக் கிளிகள் வேதஞ் சொல்லும். வேத ஒலியாற் கிளி சொற் பயிலும். கன்னிப் பெண்கள் பொழில் களில் உள்ள கிளிகளுக்குச் சொல் பயிற்றுவார்கள். கிளி தூதுக்கு உரிய பறவைகளுள் ஒன்று. 'கிளியே! இங்கேவா! உனக்கு உண்ணத் தேனும் பாலும் தருவேன்; இறைவன் திருநாமத்தை எனக்கு ஒரு கால் உரையாய்' எனத் தலைவி வேண்டுகின்றாள். கிளிகள் தினை உண்ணச் சென்றால் (கானவர்) மகளிர் மலைச் சாரலிற் கிடக்கும் மணிகளாலும் கவண் கல்லாலும் அவைகளை ஓட்டுவார்கள். வேட மகளிர் பரண் மீதிருந்து கிளிகளை "ஆயோ" எனக் கூவி ஓட்டு வார்கள். கிளி விருத்தம் என்னும் சைன நூல் ஒன்று கூறப்பட்டுளது. கிளிக்குக் கிள்ளை, தத்தை என்னும் பிற பெயர்கள் கூறப்பட்டுள.

9. குயில்:—அழகியது, மரக்கொம்புகளில் இருந்து குயில் கூவும். புணர் குயில் ஆலும். கடப்ப மரக் கவட்டின் இடையே புணரும். குளிர்ந்த கமுகஞ் சோலையிற் குயில்கள் ஆலும். குயில்களும் கிளிகளும் ஒன்று பயிலும். பாடுங் குயிலின் அயலில் இருந்து கிளிகள் பயின்றேத்தும். குரவம் பொழிலிலும் மாதவி மரத்திலும் குயில்கள் சேரும். மாமரத்தின் இளந்தளிர்களைக்கோதி யாருக்கும் இனிதாகக்

குயில்கள் பாடும். பொழில்களில் மாந்தளிர்களையும் வாச மலர்களையும் குயில்கள் கோதும். குயிலின் குரல் இனிமை கொண்டது, குழலின் இசை கேட்டுக் குயில் பெடையுடன் பாடும், இன்னிசை பாடும். குயிலின் பாடலைக் கேட்ட வண்டு தானும் முரலும் குளிர்ந்த இசையிற் குயில் பாடக் கேட்ட பெடை வண்டு தானும் முரலும். வண்டு இசை முரலுவதைக் கேட்டுக் குயில் அதைத்தானும் பயிலும் வண்டின் இசை கண்டு குயில் கூவும். பாடற்குயில்கள் சோலைகளிற் பயிலும். நடமயில் ஆலக் குயில் கூவும். குயிலின் மென்மொழி மாதர்களது மொழிக்கும் தேவியின் மொழிக்கும் உவமை கூறப்பட்டுளது. குயில் தூதுக்கு எடுத்த பறவைகளுள் ஒன்று.

10. குருகு:—வெண்ணிறத்தது. கரிய அடியையும் பசுங் காலையும் உடையது. வாய் கூரியது. தாழை வெண் மடலைத் தனது இளம் பெடை யெனக் கருதி ஏழைக் குருகு புல்கும். மடல்விரிந்த கோணலான தாழை மலரின் நிழலைக் குருகு என அஞ்சித் தடங்களில் உள்ள கெண்டை மீன்கள் தாமரைப்பூவில் மறையும். குருகு புன்னை மரத்தில் பெடையுடன் வதியும். பைங்கானலில் நீர்த் துறைகளில் இரை தேரும்; மேய்ந்து உண்ணும். ஆரல்மீன்கள், கெண்டை, சுறவம் இதற்கு உணவு. அகன்ற கழனிகளில் சிறகு உலர்த்தும்; கழி, கானல், குளிர் பொய்கை, வயல், கழனி, குளிர் சோலை முதலாய இடங்களில் இருக்கும் அன்றில் வேறு, குருகு வேறு, நாரை வேறு, என்பது "இளங் குருகே! கழி நாராய்! குரம்பை வாழ் முயங்கு சிறை அன்றில்காள்" என 60 ஆம் பதிகத்திலும் "அன்னங்காள்! அன்றில்காள்! மடநாராய்! கானல் நவில் குருகே!—என 321—ஆம் பதிகத்திலும் வருவதால் தெரி கின்றது. குருகு தூதுக்கு எடுத்த பறவைகளுள் ஒன்று.

11. கூகை (கோட்டான்):—சுடுகாட்டில் வசிக்கும், முரலும், அலறும். ஓமை, கள்ளி, வாகை, முள்ளில் முதலிய மரங்களில் இருக்கும். உயர்ந்த மரக்கொம்பி விருந்து அலறும். இடிக்கு அஞ்சி மலையினின் றிறங்கிச்

கூகைக்குலம் ஓடித் திரியும். மாதர்களில் அறிவிலிகளை "கூகையம் மாக்கள்" எனக் கூறப்பட்டுளது.

12. கொக்கு :—பொழிலில் இருக்கும். கொக்கின் உருவம் எடுத்த குரண்டாசுரன் இறகைச் சிவபிரான் சூடியுள்ளார்.

13. சாதகம் :—உயர்ந்த மரப்பாளையில் இருக்கும்.

14. சேவல் :—செஞ்சூட்டை உடையது. கண்பு (சம்பங் கோரை) அகத்தில் இருக்கும். குறவர் இதை உண்பர்? இது வாரணம் எனவும்படும். தூதுக்கு இதுவும் உரித்தாக எடுக்கப்பட்டுளது.

15. தாரா :—குளக்கரையில் உலவி ஆரல் மீன்களை வாய் நிறைய உண்டு வயல்களில் வாழும். தாரா பூசித்த தலம் பூந்தராய் (காழி) தாரா தூதுக்கு உரிய பறவைகளுள் ஒன்று.

16. நாரை :—கழியருகும், கடலருகும், கானருகும், வயலருகும், குட்டத்திலும், குழிக்கரையிலும், பொய்கைத் தடத்தருகும் இட்டத்துடன் இரைதேரும், காண அழகாயிருக்கும், செங்காலுடையது, பகுவாயை உடையது, நெருங்கிய மென்சிறகுடையது. வண்டல் மணலைக்கெண்டி விளையாடும். குளமுலவி வயல் வாழும். கெண்டையும் ஆரல் மீனும் இதற்கு இரை. இது இரை தேரவரின் மீன்கள் அஞ்சி இரியும். செந்நெல் நடுவே இருந்து நண்டுகளை உண்ண இரை தேடும். நாரையைக் கண்டால் நண்டுகள் இரியும். சேற்று நீரில் உள்ள ஆரல் மீன்களை நாரை வாரி உண்ணும். நாரை தன் பெடையுடன் துணை பிரியாது வாழும். தூதுக்கு எடுத்த பறவைகளுள் இது ஒன்று.

17. பகன்றில் :—பூசித்த தலம் (சண்பை) சீகாழி.

18. பருந்து :—மாமிசம் உண்ணும். வானிற்பறக்கும். பாறு, சேனம் என்பன பிறபெயர். சிவபிரானது முடியைத் தேடிய பிரமன் எடுத்த உரு பருந்தின் உரு என்றுங் கூறப்பட்டுளது.

19. **பறவைகள்** :—குளிர்ந்த பொய்கை மாட்டுப் புள்ளினங்கள் உலவும்; கமுகம் பழத்தை இரவிலும் நுகரும். மாமரத்திலிருந்து காய்கள் கவணெறிகற் போலச் சுனையில் விழப் பறவைகள் கரை சேர இரியும். பறவைகள் பொழிலில் துயில் கொள்ளும். தாமரை மேற் புள்ளினங்கள் வைகி யெழும். சிறு பறவைகள் (ஈ முதலிய) தேரையின் வாயில் அகப்பட்டிருக்கும் பொழுதும் பூவில் உள்ள நறுந்தேனைச் சுவைத்து இன்புறலாம் என ஆசையுடன் கருதும். (நாரை போன்ற) பகுவாய்ப் பறவைகள் பள்ளங்களில் உள்ள மீன்களை இரையாக உண்டுழன்று நாடோறும பொழில்களைச் சேரும். பறவைகள் தத்தம் பெடையொடும் விளையாடும். பொய்கைகளிற் பூவும் புள்ளும் பொலியும். நாரை, குருகு போன்ற பறவைகள் பசுங்கோட்டுப் புன்னை மரத்தில் தங்கும். பொய்கையில் கயல் பாயப் புள் இரியும்; மலர்கள் விரிவதால் புள் இரியும். முரலும் பறவைகள் இசை செய்யும். கருடன் "வெல்பறவை" எனப் பட்டுளது, மாதர்களின் மொழிக்கு மயில், குயில், கிளி (மொழிகள்) உவமை கூறப்பட்டுள.

புள்ளினம் பூசித்த தலம் பூந்தராய் (காழி) பறவைகள் தூதுக்கு உரியனவாக எடுக்கப்பட்டுள; 60, 321 எண்ணுள்ள பதிகங்களைப் பார்க்க.

20. **பூவை** :—அழகிய வாயை உடையது. சொன்னதை அறிந்து சொல்லும் அறிவை உடையது. தூதுக்கு உரிய பறவைகளுள் ஒன்று. குளிர் பொய்கை மாட்டுச் சேரும். கூடங்களில் வளர்கின்ற பூவைகள் நல்ல மறைகளை ஓதும். மடந்தையர் பூவைக்கு (இறைவன்) புகழைப் பாடச் சொல்லிக் கொடுப்பார்கள்.

21. **மயில்** :—வசீகரச் சோதியும் அழகும் உடையது. இதன் பீலி தழைத்திருக்கும். தோகை வீச்சு உடையது. பீலியில் சேல் போன்ற கண்களின் உருவம் நிறைந்துள்ளது. மேகங் கவிழ்ந்த பொழில்களில் மயிலின் ஆடல் மலியும். பேரி முழங்கினால் மேகமுழக்க மெனக்

கருதிக் களித்துச் சோலைகளில் உள்ள மயில்கள் ஆடும். கடல் முழங்க மயில் நடமாடும். மேகம் முழவென முழங்க மயில் ஆடும். கடல் முழங்கும், வண்டு பாடும், மயில் ஆடும். வண்டு பாடும், மயில் ஆடும், புன்னை பொன் கொடுக்கும். வண்டு பாடும் மயில் ஆலும். மேகம் முழவென முழங்கும், வண்டு பாடும், மயில்கள் பல நடமாடும். பொழிலில் தோகை மயிலாட வண்டு பாடும். மயிலாலக் குயில் கூவும். மயில் தனது பெடையைப் புல்கி மா நடம் ஆடும். பெடையைப் புல்கி மயில் கூட்டங்கள் ஆடும், ஆலும்; பொழில்களில் மயில் கோதும். பொழில்களிலும், மலைச்சாரல்களிலும், மாளிகையின் சூளிகையின் மேலும் மயில்கள் ஆலும். மயிலும் குயிலும் அன்னமும் கிளியும் பொழில்களில் ஆலும்; மாதர் குரலுக்கு உவமை கூறப் பட்ட பறவைகளுள் மயில் ஒன்று. மாதர்களின் சாயலுக்கும், இயலுக்கும் தேவியின் சாயலுக்கும் இயலுக்கும் (தோகை) மயில் உவமை கூறப்பட்டுளது. தேவியின் நடைக்கும் மாதர்களின் நடைக்கும், மயில் நடை உவமை. திருப்புத்தூர் என்னுந் தலத்தில் மயில்கள் தெருக்கள் தோறும் இன்புற்று உலவின எனக் கூறப்பட்டுளது. மயில் முருகபிரானது ஊர்தி, மஞ்ஞை, கலவம், கலவை, தோகை—மயிலின் பிற பெயர்கள்.

22. வண்டு :—தலைப்பு 163—பார்க்க.

## IV விலங்குகள் [463]

1. அரி (சிங்கம்):—மலைக் குகையில் வாசம் செய்யும். மலைச் சாரலில் திரியும். இடி முழக்கத்தைக் கேட்ட சிங்கம் தானும் குமுறும். அறையும் சிங்கத்தின் இடிபோன்ற குரலைக் கேட்டு யானை அஞ்சி இரிந்து ஓடி மனம் பயந்து குகைகளிற் பதுங்கும். குகையினில் தூங்கிக் கொண்டிருந்த சிங்கம் அமைதியற்றுக் கோபித்து எழுந்திருப் பதைக் கண்ட யானை இரிதரும். தான் உள்ள இடத்திற் சிங்கம் இரத்தத்தைப் பரப்ப யானை அதை உணர்ந்து ஓடி ஒளியும். யானையின் மத்தகத்தில் (அறைவதால்) சிங்கத் தின் நகங்கள் மத்தகத்திற் புகுவதால் முத்துக்கள்

உதிரும். யானையின் வெண் மருப்பைக் கீழ்ந்து அதிலுள்ள குருதியைச் சிங்கம் உண்ண அம்மருப்பிலுள்ள முத்துக்கள் உதிரும். மலையில் வில்லேந்திய வேடர்கள் வழியில் வருவார்களாதலால் அவ்வழியில் வரச் சிங்கமும் அஞ்சும். கயிலை, காளத்தி, கோகரணம், ஈங்கோய்மலை, திருநணா - பவானி, கொடுங் குன்றம் (பிரான்மலை), முதுகுன்றம்— இங்கு சிங்கங்கள் உலவினது கூறப்பட்டுளது. சிவபெருமான் சிங்க உரித்தோலுடை புனைந்துள்ளார். மங்கையர் தம் அரை (இடை)க்குச் சிங்கம் உவமை கூறப்பட்டுளது. அரி, அரிமா, ஆளரி, கோளரி, வாளரி, சீயம், மடங்கல்- சிங்கத்தின் பிற பெயர்கள்.

2. ஆடு :—'ஆடுபோல நரை'-என உவமை கூறப்பட்டுளது.

3. ஆளி:—கடிய குரலுடைய களிறும் பிளிற இடிபோன்ற கொடிய குரலுடன் மலைச்சாரல்களின் பக்கங்களில் ஆளித் திரள்கள் சாரும். ஆளியின் வருகையை உணர்ந்த யானை வழியெல்லாம் தூளி எழ ஓடி ஒளியும். மத்தக்களிறு மலையைக் குத்தி மலைக் குகையிற் பதுங்கி வைகும். யாளி வாகனமாகும். அண்ணாமலை, கொடுங்குன்றம், கயிலை, முதுகுன்றம் என்னும் இடங்களில் ஆளி இருந்தது கூறப்பட்டுளது.

4. ஆன்(பசு):—இறைவன் அபிடேகத்துக்கு ஐந்து பொருளைத் தரும். இவை "ஆனஞ்சு" எனப்படும்: (நெய்) பால், தயிர், வெண்ணெய், திருநீறு போலும்). பசுக் கூட்டங்கள் மழைக்கு அஞ்சி மலைச்சாரலில் ஒதுங்கி நிற்கும். பசு (தருமதேவதை) சிவபிராற்கு வாகனம். (ஆன்ம நாயகராதலால்) சிவபிராற்குப் "பசுபதி" என்று பெயர். பசு- சிரேஷ்டமான உயிராதலின் 'வாழ்க ஆனினம்' என வாழ்த்தப்பட்டுளது.

5. எருது:—இதன் அடி துடி போலிருக்கும். குரல் இடிபோலிருக்கும். உழுதற்கு உதவும். பொழிலில் தாம் கேட்டுணர்ந்த மறைகளைக் கிளிகள் ஓதப் பக்கலிலுள்ள விடைக் குலங்கள் அவை தமைப் பயிலும். எருதுக்குப்

பிறபெயர்கள இடபம், ஏறு, சே, பகடு, புல்ம், பெற்றம், பெற்று, விடை-என்பன.

6. எருமை:—இதற்கு 'மேதி'—என்று பெயர். இடையர் இல்லங்களில் எருமை தனது கன்றைப் புல்கிப் பயிலும். எருமை சுனை நீரிற் படியும்; அந்த அதிர்ச்சியில் கயலும் வாளையும் இரியும், இள அன்னம் ஆலும். தெங்கின் பழம் விழும் ஓசை கேட்டு அஞ்சி இளமேதி ஓடி வயலிற் கதிர்களை உழக்கும். கரும்புகளை முறித்துத் தின்று எருமைகள் குளங்களிற் படிய இள வாளைகள் அஞ்சி வயல்களிற் பாயும். காலையில் செந்நெற் கதிர்களை மேய்ந்து மேதிகள் பழனங்களிற் பயிலும். எருமைகள் வயல்களில் மேய்புலத்து இடறப் பவளம் ஒளி வீசும். வெருண்ட எருமை வள்ளையின் வெள்ளைக் கொடிகள் அறுபட ஓடிக் குளநீரிற் படியும். கனைத்த மேதி (காணாது போனது) வந்து சேர வேண்டி ஆயன் தன் கையில் உள்ள குழலை ஊத எருமைகள் அனைத்துஞ் சென்று மலைச் சாரலில் திரண்டு சேரும்.

7. எலி:—"எலியின் தொழிற் பாட்டு" என்றொரு சைன நூல் உளது போலும்.

8. கரடி:—மலைச் சாரலில் திரியும்; பன்றிக் கூட்டங்களுடன் திரியும். இரவில் திரியும். அடியார்களுக்குக் "கரடியும்" கெடுதல் செய்யாது எனச் சுவாமிகள் கூறுகின்றார்.

9. கறவைக் குருளைகள்:—பசுங் கன்றுகளும் எருமைக் கன்றுகளும் வாசலில் உள்ள பலாமரத்தின் பழங்களைத் தின்று விளையாடும்.

(9-A.) கன்று:—கன்றால் விளாமரத்தைக் கிருஷ்ண பகவான் (திருமால்) எறிந்த விஷயம் சொல்லப்பட்டுளது.

10. குதிரை:—திருக்கேதாரம் என்னுந் தலத்தில் (இறைவனை வணங்கக்) "குதிரை முகத்தார்" சேர்வார்கள் எனச் சொல்லப்பட்டுளது. சூரியனுக்கு எழு குதிரைகள் பூட்டிய தேர் உண்டு. இறைவர் குதிரையை விரும்பாது எருதையே தனது வாகனமாக உவந்துகொண்டார்.

11. குரங்கு:—ஊகம் - கருங்குரங்கு; கருவிரல்களை உடையது. முசு-கரியமுகத்தை உடைய குரங்கு. மந்தி செம்முகம் உடையது.

(i) குரங்குகள் பலா, மா, வாழை எனப்படும் முப்பழங் களை உண்பது:—கரு முசுக்கள் பழம் நிறைந்த மரங்களில் ஏறி மூங்கில்மேற் பாயும். குரங்குக் கூட்டங்கள் பொழில் களில் உள்ள மரமீதேறிப் பழங்களை உண்டு நீரில் விளை யாடும். கருமந்திகள் கூட்டமாகச் சென்று பலப்பல கனி களை நிரம்ப உண்டு மலையகம் அதிர விளையாடும். கோபம் மிஞ்சின மந்தி மரத்திலேறிப் பழங்களைச் சிந்தும். மந்தியும் கடுவனும் சோலையில் உள்ள பலவிதப் பழங்களையும் உண் ணும். மந்திகள் கிளைகிளைகளாய்ப் பாய்ந்து கீறி உண்டு உதிர்த்த பலாப்பழங்களைக் கடுவன் உண்டு குதிக்கும். மரங்களில் ஏறி மாம்பழங்களையும் பலாப்பழங்களின் சுளை களையும் கீறி முசு தினந்தோறும் தன் இனத்துடன் உண்டு குதிக்கும். நறுமணங் கமழும் பலாப்பழங்களைப் பலாமரத்தில் ஏறிக் கொண்டுவந்து மந்தி உண்டு குதிக் கும். தித்திக்கும் மாம்பழத்தைப் பறிக்கக் கொம்பைத் தாழ்த்தும். வாழைப்பழந் தின்னுங் கருத்தொடு மேலே வாழைக் கனிக்குலையைப் பார்த்துக்கொண்டே மரத்தினின் றிறங்கும். மலைச்சாரலில் தன் மகவுடன் வந்த மந்தி வாழைக் கனிக் குலையை உண்ணும். குள்ள மந்தி தாறு டைய வாழை மரத்தின் கனிகளை உண்டு தன் இனத்துக் குரங்குகள் விலகி ஓடப் பாயும்.

(ii) குரங்குகளின் கூத்தும் விளையாட்டும்:—மந்தியும் ஊகமும் மலையகத்தே குதித்து விளையாடும்; மலர்ச் செடி களில் உள்ள மலர்களை உதிர்க்கும்; பொழில்களில் மந்திகள் பாய்வதால் தேன் துளி சிந்தும். பழமுள்ள மரங்களில் ஏறிக் கருமுசு மூங்கிலிற் குதிக்கும். காவிரித் திரையை உந்தி எதிர்வரு மந்தி மலர்களைச் சிந்தும். மலைச்சாரலிற் கருவிரல் ஊகமும் கடுவனும் மான்கள் அச்சமுறக் குதித்து விளையாடும். குரங்குகள் கூட்டமாய்ப் பயிலும். கடுவ னொடு ஊடிய மந்தி தன் மகவைக் கையில் ஏந்தி மூங்கிலிற்

பாய மலேமீதேறும். சேற்றருகே கயலும் இளவாளேயும் சண்டை செய்ய அதனைப் பார்த்திருக்கும். மந்தி மலேச் சாரலில் தன் ஆணுெடு திரியும். மந்திகள் தென்னே மரங் களின் இடையே பாய்ந்து வாழைக் கொத்துக்களே அறுத்து மாமரத்தின்மீது ஏறும். கமுகம் பாளேயில் பாயும் மதுவை வாய் மடுத்து மந்தி குதித்தாடும். மந்தி பாய்வதால் பூக்கள் சரேலெனச் சொரிந்து மணம் வீசும். மந்திகள் திரிந்து கொண்டே இருப்பதால் 'மந்தி போல் திரிந்து' என உவமை கூறப்பட்டுளது. குரங்குகள் மரங் களிலேறி மடுக்களிற் பாயும். மந்தி குதி கொள்ளுவதால் மாம்பழத்திலுள்ள தேன் கிழியும். வண்டு கீதம் பாடிஞல் மந்தி அதைக் கேட்டுக் கூத்தாடும். வாழைப் பொழில் மந்திகளுக்கு உகந்த இடம். மூங்கில் வளர் சாரல்களில் ஊகங்கள் விளேயாடும். மலேச்சாரல்களில் மந்திகள் வந்து கூத்தாடும். மலேகளில் உள்ள நீண்டுயர்ந்த மூங்கில்கள் வளேயப் பாயுங் கடுவன் நீண்ட மூங்கிலின் மேல் நிருத்தம் செய்யும்; அதைக் கண்டு வேடுவர் தம் இனத்தாரைக் கைமறித்தும் கூவியும் அழைப்பர். திருகல் மூங்கில் சிறிதே வளேவதால் அதிகமாய் வளேயாததால்-சிறு மந்திகள் இள மூங்கில்மேல் இருந்து நடம் செய்யும்.

(iii) குரங்கும் மேகமும்:—மேகங்கள் கவிழப் பொழில் களில் மந்திகள் கூடி மூங்கில் மேலேறி மேகங்களேப் பற்றிப் பார்க்கும். மழை வருதலேக் கண்ட மந்தி தன் மகவுடன் மலேக் குகையிற் புகும். மாதர்கள் நடமாட, முழவம் அதிர, மழைதான் வந்து விட்டதென்று அஞ்சிச் சில மந்திகள் மனங் கலங்கி மரங்களிலேறி மேகத்தைப் பார்க்கும்.

(iv) குரங்கும் பூசையும்:—வகைவகையான மலர்கள் பல கொண்டு வந்து மந்தி திருமுதுகுன்றில் தொழுது வணங்கியதாகக் கூறப்பட்டுளது. மந்தி-கடுவன்-இரண்டும் திருவலிதாயத்தில் பூசித்து வணங்கின—என்பதும் தெரி கின்றது. ஊகம், கடுவன், கோகிலம், திரங்கல் முகவன், மந்தி, முசு-இவை குரங்கின் பெயர். முகத்தில் திரை

(மடிப்பு) இருப்பதால் 'திரங்கல் முகவன்' என்று குரங்குக்குப் பெயர்.

(11-A):—சிங்கம்—'அரி' என்பதைப் பார்க்க.

(12) நரி:—காட்டில் திரியும். சுடலையிற் காணலாம்; பொரிபடு முதுகை உடையது.

(13) நாய் :—காட்டு வேட்டைக்கு உதவுவது.

(14) நாவி:—இதனிடமிருந்து "சாந்து" கிடைக்கும்; தொண்டர்கள் அதை அபிடேகத்துக்கு உரிய பொருளாக உபயோகப்படுத்துவர்.

(14-A) பசு :—'ஆன்' என்பதைப் பார்க்க.

(15) பன்றி :—பன்றிகள் - மயிலுடன் - மலைச்சாரலில் திரியும். பன்றிகள் கூட்டமாய்ச் சாரலில் இழிந்து திரியும். பன்றியின்திரள் - (மான்-கரடி - ஆனைக் கூட்டங்களுடன்) இரவில் மலைச்சாரலில் திரியும். பன்றிகள் (மான்கள், அரிகள், யானைகள் போல) மலைக்குகைகளில் வாசஞ் செய்யும். பன்றிகள் உழுத கதிர் மணிகள் மலையெங்கும் இருளகல ஒளிவீசும். அத்தகைய மணிகளை வேடர்கள் ஒருங்கு குவிப்பர். கலப்பைகொண்டு உழுவார்கள் போலப் பன்றிகள் பூழ்தியைக் கிளைத்து மணிகளைச் சிந்தும். பன்றி, மான், கிளி, இவை தினை உண்ண வந்தால் கவண்கல்லாக மணிகளை வீசி வேடமகளிர் அவைகளை விலக்குவர். கேழல் துட்ட மிருகமாயினும் அடியார்களை நலியாது.

சிவபிரான் அணிந்துள்ளன 'ஏனவெண்கொம்பும்' (மருப்பும்), 'ஏனத்து எயிறும்', 'ஏனமுள்ளும்'. சிவபிரான் அருச்சுனனோடு செய்த லீலையில் காட்டில் துரத்திச் சென்றது பன்றியை, சிவபிரானது திருவடியைக் காணத் திருமால் "பன்றியின்" உருவெடுத்தார்; அந்த உரு நீல மலைபோலும் பெரிய உரு; அவ்வுருவுடன் நிலமெலாம் அகழ்ந்து உழுதுசென்றார். வராக அவதாரத்தில் திருமால் எடுத்தது வெள்ளைப் பன்றியின் உருவம்.

பன்றியின் பிறபெயர்கள்:—ஏனம், கேழல், சூகரம், வராகம்.

16. புலி :—மடுக்கரையில் குகைகளில் வாசஞ் செய்யும். புலி சினங்கொண்டு மலையெலாம் இரைதேடும். காற்றினால் வேங்கைமரத்துப் பூக்கள் பாறையின்மேல் உதிர அங்குப் படுத்துள்ள வேங்கை (புலி) அதைக் கண்டு சினங்கொள்ளும். சில வேடர் வரும் வழியில் புலியும் வர அஞ்சும். புலி கொடிய மிருகமாயினும் அடியாரை நலியாது. சோழன் கொடி புலிக்கொடி. புலி பூசித்த தலம் திருநணு (பவானி) வியாக்கிரபாத முனிவர் (புலிக்கால் அண்ணல்) புகலியில் (காழியில்) பூசித்தார். புலியின் பிறபெயர்கள் : உழுவை, புண்டரிகம், வேங்கை.

17. மான் :—பன்றித்திரள், கரடி இவைகளுடன் இரவில் மான்கள் மலைச்சாரல்களில் இழிந்து திரியும். கிளி, பன்றி இவைகளுடன் தினை உண்ணப்போகும். கலைமான்கள் கானலின் நிழலில் களிப்புடன் வாழும். காட்டிலே திரியும். பெண்மான்களைப் புல்கிக் கலை (ஆண் மான்கள்) பயிலும், துயிலும், கருங்குரங்குகளுடன் ஆண் குரங்குகள் குதித்துத் திரிவதைக் கண்டு மான்கள் அஞ்சும். குளம்பு படியக் கலைமான் துள்ளும். மான்கள் மலைக்குகையில் வாசஞ்செய்யும். வளர்கின்ற இளங் கொழுங் கொடிகளை மான்கள் கறித்துத் தின்னும். மான் கன்றுகள் துள்ளும். மான் பூசித்த தலம் திருநணு (பவானி). துர்க்கைக்கு கலைமான் வாகனம். மாதர்களுக்கும் (பார்வதி) தேவிக்கும் மான் உவமை கூறப்பட்டுளது. மாதர்கள் விழிக்கும், சிதேவியின் விழிக்கும், மங்கையர்க்கரசியின் விழிக்கும் தேவி (பார்வதி)யின் விழிக்கும் மான்விழி உவமையாகக் கூறப்பட்டுளது.

18. முயல் :—தடங்களின் அருகே முயல் ஓடத் தடத்தில் உள்ள கயல்மீன்கள் பாயும். முடக்கால் முயல் பூசித்துப் பேறுபெற்ற தலம் திருப்பாதிரிப்புலியூர்.

19. யானை : (1) பிடி :—மாதர்களின் நடைக்கும் பார்வதி தேவியின் நடைக்கும் பிடி(பெண்யானை)யின் நடை உவமை கூறப்பட்டுளது.

2. யானை :—(i) இருக்கும் இடம், திரியும் இடம், திரியும் வகை.

யானைகள் கூட்டமாய்ச் மலைச்சாரல்களில் திரியும், இரவிலும் திரியும், குகையில் வாசம் செய்யும். இரை தேரச் சாரல்களில் திரியும், பெண்யானையுடனும் கன்றுடனும் திரியும். கரி இரவில் வழி தெரியாது திகைத்துப் பிடியுடனும் கன்றுடனும் மலையடி வாரத்தைச் சேரும். சிங்கத்துடன் மதகரி சாரல்களில் திரியும். வழிதப்பிப்போன பிடியைக் காணாது ஆண்யானை ஓடி அழைத்துத் திரிந்து சாரலில் உறங்கும். மலைக் குகைகளில் களிறும் பிடியும் கூடி விளையாடும். யானைகள் கானலில் திரியும்.

(ii) இரை தேடுதல்—உணவு

குகையில் வசிக்கும் பெரிய யானை மலைச்சாரலில் இரைதேரும். மலையில் உள்ள நெருங்கிய பொழிலில் குளிர்ந்த சந்தனமரத்துத் தளிர்களைத் தின்று குலவிப் பிடி தன் கன்றினொடு விளையாடும். பச்சை மூங்கிலின் முளையை வாரி யானை தன் பிடியின் வாயிற் கொடுக்கும். பிடிகள் இளங்கொழுங் கொடிகளைக் கறித்தெழும். கரிகள் கழைகளை (மூங்கில்-கரும்பு) நுகர்தரும்.

(iii) யானையின் தன்மை :—யானையின் கூட்டம் மூங்கில்களை முறித்துச் சுனை நீராடும். யானை அருவிக்கு அஞ்சி இரியும். பெரிய யானையையும் விழுங்கும் பாம்புகள் உள. யானை மருப்பொடு போர் புரியும். யானை சொரிந்த மதச்சேறு தெருவெலாம் நிறையும். நுனியைப் பற்றி யானை தாழ்த்திவிட்ட பலத்த மூங்கில் விசையொடு மேலே போய்க் காளமேகத்தைக் கீறும். மலையிற் சில வேடர்கள் வரும் வழியிற் செல்ல யானைகளும் அஞ்சும்.

(iv) யானையைப்பற்றிய செய்திகள் :—யானைக்கு மணி கட்டுவர், யானையின் குரல் இடிபோற் கடியது. இராவணனது தடக்கை யானையின் கைக்கு உவமானமாகக் கூறப்பட்டுளது. ஐம்புலன்கள் யானைக்கு ஒப்பிடப் பட்டுள; தொண்டர்கள் ஐந்துகளிறுகளையும் (புலன்களையும்) அடக்க வேண்டும். சமணர்கள் மதகரி போலத்

திரிந்தனர் எனப்பட்டுளது. வாழைக் குலை மதயானையின் கைக்கு உவமிக்கப்பட்டுளது. யானையின் வெண்மருப்பு (தந்தம்) தென்னம் பாளைக்கும், மடலார் தாழைக்கும் ஒப்பிடப்பட்டுளது. யானை மருப்பு (காவிரி) யாற்று வெள்ளத்திலும் அருவி வெள்ளத்திலும் அலையுண்டு வரும். யானை ஓர் அஞ்சத்தக்க பிராணியாயினும் அது அடியார்களை ஒன்றும் செய்யாது. (பிரபுக்கள்) யானைமேல் ஏறி உலாவுவர்.

(v) யானை பூசித்தல் :—சாரலில் உள்ள வேங்கையின் பூங்கொத்துக்களை முறித்துப் பறித்துத் தனது மத்தகம் பொலிய ஏந்திச் சென்று பிடியுங் களிறும் குறும்பலாவில் (திருக்குற்றாலத்தில்) வணங்கின. நீரும் மலரும் வேண்டி யானை தன் கொம்பால் மேகத்தைக் குத்திப் பணி செய்த தலம் கோட்டாறு. பிடிகள் தன் பின்னே வரக் கான யானை தன் கையில் மலர்களைத் தழுவிச்சென்று காலையில் தடத்தில் முழுகி விதி முறை வழிபட்ட தலம் கானப்பேர்; அங்கு பிடி தனது கையால் அலகிடக் கான யானை வழி பட்டது. மத்தயானை வழிபாடு செய்த தலம் மதிமுத்தம் (திலதைப்பதி). யானை அருள்பெற்ற தலம் ஆனைக்கா.

(vi) கணபதி தோற்றம் :—சிவபெருமான் யானையாக வும் தேவி பிடியாகவும் உருவெடுத்து யானைமுகப் பெரு மானைத் தந்தனர்,

(vii) பிற விஷயங்கள் ;—(1) திருமால் ஒரு யானையின் கொம்பை முறித்தனர். (2) 'ஆனையினுன்' எனச் சேரன் குறிக்கப்பட்டுளான் (3) கோச் செங்கட் சோழன் யானைப்படை கொண்டவன் (4) ஆளிக்கும் அரிக்கும் யானை அஞ்சுவதை 'ஆளி', 'அரி' என்னுந் தலைப்புக்களின் கீழ்ப் பார்க்க.

20. வெருகு-காட்டில் உலவும்.

21. சீவராசிகள் (பொது)

(i) இரவில் திரிவன :—பன்றி, மான், கரடி, ஆனை.

(ii) அஞ்சத்தக்கன :—சிங்கம், புலி, யானை, கேழல், கரடி, நாகம்.

## V. மனிதர்கள் [464]

(i) **இழிந்தோர்** :—கூகை யன்ன மாக்கள்; நமன் தமர்; நீசர்; பாக்கியப் படகில்லார்; பொய் மிகுத்த வாயர்.

(ii) **கடவுளை வணங்காதார்** :—பெருமானது சீரும் செல்வமும் ஏத்தாதார்; சிதடர்: சிவன் எனப் பேணி உள்ளங் கலந்து பணி செய்யாத பாவிகள்.

(iii) **கற்றோர்** :—கலைகளிற் கருத்துடையோர், தெய்வ மறை நாவர், பண்டிதர், மறை கலை யெல்லாம் கற்றநல்லார்.

(iv) **கொடையாளர்** :—கரத்தல் இல்லாத கையார்; கலி கடந்த கையார்; கொடை ஓவார்: புயல் போற் கொடை யாளர்; வெய்யமொழி தண் புலவருக்கு உரைசெயாதவர்.

(v) **பெரியோர்** :—எல்லாம் ஆய்ந்து ஞானம் எய்திய நல்ல உத்தமர்; அறநெறி நிரம்பினர்; நடுவுணர் பெருமையர்; பொய், வினை, குற்றம் இவைதமை நாசமாக்கு மனத்தார்; மறை சொலும் வழிசெல்லும் மனிதர்கள்; மெய்யர்.

(vi) **வேற்றுத் திசையினர்** :—வேற்றுத் திசைகளிலிருந்தும் இசைவல்லோர் வந்து இசைபாட அதன் இலக்கணத்தை உணர்வார்-வேதாரணிய வாசிகள்.

## 181. செபம் : ருத்ராக்க மாலை [466]

சிவபெருமான் எலும்பு மாலையோடு ருத்ராக்க மாலையும் தரித்துள்ளார். நாவுக்கு உற்ற தொழில் அஞ்செழுத்தோதுதல். உள்ளன்போடு இறைவனை நினைந்து அவர் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்பதைக் கையில் ருத்ராக்கமாலை கொண்டு பெரியோர் எண்ணுவர். ஐந்தெழுத்தின் செபத்தின் பயனை 'ஐந்தெழுத்து' என்னும் 17,48-ஆம் தலைப்புக்களிற் பார்க்க,

திருச்சிற்றம்பலம்.

---